# வரலாற்றுத்தரவுகளில் அகம்படியர்கள்

★ பதிவுகள் ★ குறிப்புகள்

★ செய்திகள் ★ மேற்கோள்கள்

தொகுப்பு

இரா.உமாமகேஸ்வரி அரசு

இனியாள் வெளியீடு

வாய்மேடு

வேதாரணியம்

Book Title : Varalatru Tharavukalil Agambadiyarkal
(Agambadiyars in Historical data)
Compiled By : R.Umamaheswari Arasu
Language : Tamil
Page : 316
First Edition : December - 2021
Layout : Tamil Alai
Chennai - 600086
Mobile: 9486838801
Published by : Iniyal Veliyedu
Contact : +918903622397
email : umaarasu2016@gmail.com

Book Availabe : S.Bala Murugan Agamudayar,
Organizer, Agamudayar Aran,
12/239, West Manjanakarar Street,
New Ayakudi (Po) - 624 613.
Palani (TK) Dindugal Dt)
Cell: 9442938890, 6382266931
Price : 370./-

நூல் தலைப்பு : வரலாற்றுத்தரவுகளில்
அகம்படியர்கள்
தொகுப்பு : இரா.உமாமகேஸ்வரி அரசு
முதல் பதிப்பு : டிசம்பர் - 2021
மொழி : தமிழ்
பக்கங்கள் : 316
நூல் வடிவமைப்பு : தமிழ் அலை ஊடக உலகம்,
சென்னை - 600 086,
அலைபேசி : 94868 38801
வெளியீடு : **இனியாள் வெளியீடு**
தொடர்பு : +918903622397
மின்னஞ்சல் : umaarasu2016@gmail.com
நூல் கிடைக்குமிடம் : சோ.பாலமுருகன் அகமுடையார்
தலைமை ஒருங்கிணைப்பாளர் அகமுடையார் அரண்.
12/239, மேற்கு மஞ்சனக்காரர் தெரு,
புது ஆயக்குடி (அஞ்சல்) 624613
பழனி (வட்டம்), திண்டுக்கல் மாவட்டம்
தொடர்பு எண்: 9442938890, 6382266931
விலை : ரூ. 370/-

# அணிந்துரை

## எம்.ஜெகநாதன், BE

பழந்தமிழர் குடியாம் அகமுடையார்குடி பல்வேறு சிறப்புக்களைத் தன்னகத்தே கொண்ட முதுகுடி. இந்தக்குடியின் தொடர்புடைய வரலாறு இதுவரை விரிவானதாக ஏதும் எழுதப்படவில்ல. இந்தப் பின்னணியில், இவ்வினத்தைப் பற்றிய வரலாற்றுச் செய்திகள், குறிப்புகள், பதிவுகள், மேற்கோள்கள் ஆகியவற்றைத் தமிழ் மற்றும் ஆங்கில நூல்களின் வழி ஆழமான வரலாறு மற்றும் சமூகவியல் பார்வையுடன், நூலாசிரியர் தொகுத்து தந்திருக்கிறார்.

ஒரு ஆய்வுமாணவன் செய்ய வேண்டியதை தனிமனிதராக நூலாசிரியர் மேற்கொண்டுள்ளார் என்பதை, நூலின்வழி அறிய முடிகிறது. தமிழகம் மட்டுமல்லாது தென்னிந்தியா முழுமையும், இலங்கை சார்ந்தும், ஒரு விரிவான தளத்தில் பல்வேறு அறிஞர் பெருமக்களின் கூற்றுக்களை நூலாசிரியர் தொகுத்துள்ளார்.

அகமுடையார் குடி காலஓட்டத்தில் அடைந்த வளர்ச்சி, போர்மரபிலிருந்து வேளாண் நோக்கிய நகர்வு, அகராதிகள், கல்வெட்டுகள் பட்டயங்கள் வெளிப்படுத்தும் அகமுடையார் தொடர்புடைய வாழ்வியல், ஆகியவற்றை வரலாற்றுத் தரவுகள் தெளிவுபடுத்தும், இடைக்கால வரலாறு தொடர்புடைய அறிஞர்களின் பார்வையின் ஊடாக விரிவாக விளக்குகிறார்.

நூலில் இடம்பெறும் தலைப்புகள், அறிவியல் மற்றும் உளவியல் பூர்வமாக வரிசைப்படுத்தித் தரப்பட்டுள்ளது. குறிப்பாக வரலாற்று ஆளுமைகளின் மேற்கோள்கள்

ஒவ்வொரு தலைப்பும் அது விவரிக்கும் பொருள் சார்ந்து முத்தாய்ப்பாக அமைந்துள்ளது.

செய்திகளைக் கவனமாகக் கையாண்டு, நடுநிலைமனதோடு வரலாற்றறிவு மற்றும் மானிடவியல் புரிதலோடு இந்த நூலை ஆசிரியர் தொகுத்துள்ளார்.

இந்த நூலில் ஒவ்வொரு தலைப்பும் எதிர்காலத்தில் ஒரு தனிநூலாக எழுதிட தூண்டும் வகையில் ஆழமான தகவல்களைச் சுருக்கமாகத் தந்துள்ளார்.

இந்த நூலில், அறிஞர்களின் பார்வையில் அகமுடையார் தொடர்பான விளக்கம், உட்பிரிவுகள், பட்டங்கள், போர்மரபு, வேளாண் நகர்வு, அடிக்கட்டுமானம் போன்றவை ஆழமாகவும், அகலமாகவும் விளக்கப்பட்டுள்ளது. அத்துடன் சகோதரத்துவமும், சகவாழ்வும் ஒரு தொலைநோக்கு பார்வையில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

குலத்தெய்வ வழிபாடு மற்றும் பழக்க வழக்கங்கள் ஆகிய தலைப்புகளில், தரவுகளைத் தாண்டி களஆய்வில் வெளிக்கொண்டு வரவேண்டிய தகவல்கள் நிறைய உள்ளது. கனம் அல்லது கணம் மற்றும் வலங்கைப் பற்றிய பார்வை வரலாற்றில் புதிய வெளிச்சத்தைக் காட்டக் கூடியதாக உள்ளது.

அகமுடையார் போன்ற ஒரு பெரும் சமுதாயத்தின் வரலாற்றைச் சொல்லும்போது பெரும் ஆளுமைகளின் துணைநின்று சொல்லுவது பொருத்த முடையதாகத் தோன்றுகின்றது. நூலாசிரியரின் முயற்சி பாராட்டுக்குரியது. இந்த நூல் எதிர்காலத்தில் ஆய்வுப்பணி மாணவர்களுக்கு ஒரு வழிகாட்டியாய் அமையும் என்பதில் ஐயமில்லை.

அன்புடன்

**எம்.ஜெகநாதன்,** BE

PACE அறக்கட்டளை நிறுவனத்தலைவர்,

அண்ணாநகர்,

சென்னை- 40.

## பொருளடக்கம்

**அணிந்துரை**

**என்னுரை**







# சமர்ப்பணம்

**த**மிழக, தென்னிந்திய சூழலில், வரலாறு, தொல்லியல், மானிடவியல், சமூகவியல் பார்வையில் அகம்படியர்கள் பற்றிய விரிவானதொரு ஆய்வுரைகள் ஏதும் ஆய்வாளர்களால் முன்வைக்கப்படவில்லை. ஆங்கிலேயர் ஆட்சியில், சென்னை அருங்காட்சியத்தின் அன்றைய கண்காணிப்பாளர் திரு.எட்கர் தர்ஸ்டன் அவர்களின் (தமிழில் முனைவர் திரு.க.ரத்னம் அவர்கள் மொழிபெயர்பில்) தென்னிந்தியக் குலங்களும், குடிகளும் நூலைத்தவிர இதர ஆய்வுநிலையில், அகம்படியர்கள் பற்றிய செய்திகள்யின்றியே அவை அமைதியாகக் கடந்து செல்லும் தன்மையே காணப்படுகிறது. இலங்கை வரலாற்றில் திரு.எச்.டபிள்யு காட்ரிங்டன் (Humphrey willam cardington) மத்தியகால இலங்கையில் செல்வாக்குப் பெற்ற தமிழகப் படையாக அகம்படிப்படையினைக் குறிப்பிடுவதும் கவனிக்கத்தக்கது.

தமிழக சூழலுக்கு மாறாக இலங்கையின் வரலாறு, தொல்லியல், சமூகவியல் தளங்களில் அகம்படியர்கள் பற்றி மிகவும் விரிவானதாக அமையாவிட்டாலும் தொடர்புடைய தகவல்களை விளக்கிச் செல்லும் தன்மையைக் காணமுடிகிறது. அந்த வகையில் இலங்கையைச் சேர்ந்த தொல்லியல், வரலாறு, சமூகவியல் தளங்களில் அகம்படியர்கள் பற்றி எடுத்துரைத்த அறிஞர் பெருமக்களான திருவாளர்கள்.

1. முனைவர் பேராசிரியர் திரு.சி.பத்மநாதன், அவர்கள்.

2. முனைவர் பேராசிரியர் திரு.கார்த்திகேசு இந்திரபாலா, அவர்கள்.

3.முனைவர் பேராசிரியர் திரு.ஆ.வேலுப்பிள்ளை, அவர்கள்.

4.முனைவர் பேராசிரியர் திரு.எம்.பி.ஆரியபாலா, அவர்கள்.

5.முனைவர் பேராசிரியர் திரு.சி.க.சிற்றம்பலம், அவர்கள்.

6.முனைவர் பேராசிரியர் திரு.ஸ்டான்லி ஜெயராஜா தம்பையா, அவர்கள்.

7.முனைவர் பேராசிரியர் திரு.கார்த்திகேசு சிவத்தம்பி, அவர்கள்.

8.தமிழறிஞர் தென்புலோலியூர் திரு.மு.கணபதிப் பிள்ளை அவர்கள்.

9.யாழ் வரலாற்றுக்கழக இணைச்செயலாளர் திரு.வே.க.நடராசா, அவர்கள்.

10.எழுத்தாளர் சிங்கள அறிஞர் திரு.லயனல்சரத், அவர்கள்.

11.எழுத்தாளர் அறிஞர் திரு.க.சண்முகலிங்கம், அவர்கள்.

12.வரலாற்றாசிரியர் திரு.பல்லவராசசேகரம், அவர்கள்.

13.பேராசிரியர் அறிஞர் திரு.எ.ஜெயரத்னம்வில்சன், அவர்கள்.

14.போர்த்துக்கீசிய வரலாற்றாசிரியர் திரு.ஜோல்டன்பிடர்மேன் (zolton Biedermann) அவர்கள்.

15.முனைவர் பேராசிரியர் திரு.டபிள்யு.ஐ.சிரிவீரா, அவர்கள்.

ஆகிய பெருமக்களுக்கு இந்நூலைச் சமர்ப்பிக்கின்றேன்.




# என்னுரை

"வரலாற்று முற்காட்சியோடு ஒரு சமுதாயத்தின் தோற்றத்தையும், படிமுறை வளர்ச்சியையும் அறிய முயல்வது வரலாற்று ஆசிரியனது ஆர்வம். தனது ஆராய்ச்சியின் விளைவாக வரலாற்று ஆசிரியன் ஒரு சமுதாயத்தின் கருத்துப் படிமத்தை உருவாக்குகிறான். பழங்காலச் சான்றுகளைக் கையாளும் பொழுது தற்கால நிலைகளால் அவன் பாதிக்கப்படுகிறான். தற்கால மக்கள் குழுக்கள் தங்கள் எதனோடு ஒன்றி நிற்பதென்று பழமையில் தேடுகிறார்கள். சிதறிக்கிடக்கும் பல தன்மைகளில் ஏதாவதொன்றோடு ஒவ்வொரு குழுவும் ஒன்றிக்கொள்கிறது. இது கோணல்படிமமாகும். பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்தில் நமது பழமை என்று நமது வரலாற்றாசிரியர்கள் கண்டறிந்த பழமைதான் நாம் ஒன்றிக்கொள்ள வேண்டிய பழமை என்று நாம் கருதிவிட்டால் நமது காட்சி மிகவும் சிற்றெல்லையுடையதாக ஆகிவிடும். வரலாறு, மக்கள் அனைவராலும், அவர்களது செயல்கள் முழுமையாலும் உருவாக்கப்படுகிறது என்பதை உணர்ந்தால்தான் நமது பழமையை ஸ்தூலமான உண்மைப்படிவமாக நமது மனத்தில் உருவாக்க இயலும்".

ரொமிலா தாப்பர்,

"வரலாறும், வக்கிரங்களும்".

இந்திய தமிழக சூழலில் மானிடவியல், சமூகவியல், வரலாறு ஆகியவற்றில் இனம், இனம் தொடர்பான செயல்பாடுகள், இவற்றை எடுத்துரைத்து தமிழிலும், ஆங்கிலத்திலும் பல்வேறு நூல்கள் எழுதப்பட்டுள்ளன. சிலை எழுபது, ஏரெழுபது, ஈட்டி எழுபது என்று தொடங்கி பின்பு பல்வேறு சமூகங்களுக்கான நூல்கள் பலவாறு எழுதப்பெற்றுள்ளது. ஆங்கிலேயர் ஆட்சியில் எழுதப்பெற்ற மாவட்ட கெஜட்டியர்கள் (District Gazetteers) அந்தந்த மாவட்டங்களில் உள்ள குலங்களைப் பற்றிச் சிற்சிலக் குறிப்புகளைத் தந்துள்ளது. திரு.எட்கர் தர்ஸ்டன் அவர்களின் தென்னிந்தியக் குலங்களும் குடிகளும் (Castes and tribes of southern india) என்ற ஏழு தொகுதிகள் அடங்கிய நூல் தென்னிந்தியா முழுவதுக்குமான பல்வேறு இனங்களைப்பற்றிய செய்திகளை விரிவுபடுத்தித் தருகிறது.

காலனிய சூழலில், குறைவான வசதிகளைக் கொண்டு மிகப்பெரிய இனஇயல் நூலாக எழுதப்பட்டுள்ள அந்நூல் பின்னர் எழுந்த மானிடவியல், இனவியல் தொடர்பான பல்வேறு நூல்களுக்கு ஆதாரமாக அமைந்தது. இந்தப் பின்னணியில் அகம்படியர் தொடர்பான ஆய்வு நூல்களும் குறிப்பிட்டச் செய்திகளைத் திரும்பக் கூறுவதாக அமைந்ததே தவிர விரிவானதாக ஏதும் அமைந்திடவில்லை.

அகம்படியர் அல்லது அகமுடையார், துளுவ வேளாளர் பற்றிய பல்வேறு அறிஞர்களின் நூல்களில் குறிப்புகளாகவும், மக்கள் தொகை கணக்கெடுப்புகளில் சிற்சில பதிவுகளாகவும், இதழ்களில் வெளிவந்த ஆய்வுக் கட்டுரைகளில் நேரடியான அல்லது மறைமுகமான செய்திகளாகவும், இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை, தென்னிந்தியக் கல்வெட்டுத்தொகுதிகள், எபிகிராபிகா இன்டிகா, புதுக்கோட்டைச் சமஸ்தான கல்வெட்டுகள், தமிழ்நாடு அரசின் தொல்லியல்துறையின் வெளியீடுகள், கல்வெட்டு, ஆவணம் போன்ற இதழ்கள் ஆகியனவற்றில் இடம் பெற்றுள்ள பதிவுகளின் வழி அகம்படியர்களின் வரலாற்றினை முழுமையாகத் தொகுக்கும் அளவிற்குச் சான்றாதாரங்கள் கிடைக்கின்றன. ஆனால் அகம்படியர் அல்லது அகமுடையார் தொடர்பான வரலாறுகள் இதுவரை முழுமையாகத் தொகுப்பதற்கான எவ்வித முயற்சியும் நடைபெறவில்லை. அதற்கானதேவையும் அவர்களுக்கு

 

ஏற்படவில்லை என்றே இதுநாள்வரை கருதி வந்தனர். ஆனால் சூழல் அப்படிப்பட்ட தேவைகளை உணர்த்தியுள்ளது.

தொண்டமானார் குருமூர்த்தி என்பவரால் எழுதப்பட்ட "அகம்படியர் மரபு விருத்தாந்தம், மூவரசர் குல விளக்கம்" என்ற நூல் பற்றிய மேற்கோள் குறிப்புகள் சில நூல்களில் காணப்படுகிறது. ஆனால் அந்நூல் கிடைத்திடவில்லை. அதேபோல் துளுவ வேளாளர் பற்றிய நூல்களும் வந்துள்ளது. முனைவர் திருமதி ஆர்.பத்மினி அவர்களின் "துளுவவேளாளர் தோற்றம் மற்றும் வரலாறு" என்ற முனைவர் பட்ட ஆய்வேடும், செல்வி வெ.அ.நாகரத்தினம் அவர்களின் "கோவை மாவட்ட அகமுடையார் (தேவர்) குலமரபும் பண்பாடும்" என்ற முனைவர்பட்ட ஆய்வேடும் அண்மைக் காலங்களில் வெளிவந்தவையாகும்.

தேவர்முரசு ஆண்டியப்பத்தேவர் அவர்களின் "அகமுடையார் வரலாறு," வழக்கறிஞர் திரு.புலமை வேங்கடாசலம் வன்னியர் எழுதிய "அகமுடையார் வரலாறு", மறையூர் திரு.வீராச்சாமி அகமுடையார் எழுதிய "அகமரபும் ஆதிக்குடியும்" போன்ற நூல்கள் பாராட்டத்தக்க முன்முயற்சிகள் ஆகும்.

இதுமட்டுமல்லாமல், சில தனிநபர்களின் முன் முயற்சியால் பல்வேறு வரலாற்று நூல்கள் மற்றும் தரவுகள் சேகரித்தல், நவீன இணைய வசதிகளைப் பயன்படுத்துதல் போன்றவை முன்னெடுக்கப்படுகின்றன. இந்த வகையில் அகமுடையார் அரண் திரு.சோ.பாலமுருகன் குறிப்பிடத்தகுந்தவர். அகமுடையார் ஒற்றுமை (www.agamudayarotrumai.com) என்ற இணையதளம் பல்வேறு தொல்லியல் சான்றுகளை வெளியிட்டது.

வரலாறு, மானிடவியல், தொல்லியல், சமூகவியல் மற்றும் இலக்கியம் ஆகிய பிரிவுகளில் அறிஞர்களால் முன்வைக்கப்பட்ட அகம்படியர் தொடர்புடைய தரவுகள் இங்கு தொகுத்தளிக்கப்படுகிறது. இது அகமுடையார் தொடர்பான முழுமையான வரலாற்று நூல் அல்ல, அறிஞர்களின் முடிவுகளை வகைப்படுத்தி ஆய்வு நோக்கில் முறையான தகவல்களை மட்டும் தொகுத்து அளித்துள்ளேன்.

காலத்தால் பின்னோக்கிச் செல்லச்செல்ல ஏதோ ஓர் புள்ளியில் அல்லது மூலத்தில் பல்வேறு சமூகங்கள் ஒன்றுபடுகின்றன அல்லது எதிர்காலத்தை நோக்கிய பரிணாம வளர்ச்சியில் சமூக, பொருளாதார, வாழ்வியல் மற்றும் புவியியல் காரணிகளால் ஒன்றிலிருந்து மற்றொன்றாக சமூகங்கள் பிரிகின்றன என்ற மானிடவியல், சமூகவியல் கருத்தாக்கத்தை உள்வாங்கியே இந்நூல் தொகுக்கப்பட்டுள்ளது.

இந்நூலில் அகம்படியர் அல்லது அகமுடையார் இனத்திற்கு ஒன்றிற்கு மேற்பட்ட பெயர் வடிவங்கள் நடைமுறையில் உள்ளதை உரிய சான்றாதாரங்கள் கொண்டு எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. தொல்லியல் மற்றும் இலக்கிய அகராதிகள் தரும் பொருள் விபரங்கள் பட்டியலிடப்பட்டுள்ளது. அகம்படியர் என்பதற்கான விளக்கத்தை அறிஞர்களின் பார்வையின் அடிப்படையில் விளக்கப்பட்டுள்ளது.

கேரளா மற்றும் இலங்கையில் உள்ள அகம்படியர் பற்றிய தரவுகள் எம்மாதிரியான முடிவுகளைத் தருகின்றது என்பதுடன், அகமுடையார்களிடம் காணப்படும் உட்பிரிவுகள், பட்டப்பெயர்கள் போன்றவற்றை, உரிய துணைநூல்கள் வழி சொல்லப்பட்டிருக்கிறது.

போர்மரபிலிருந்து வேளாண் தொழில் நோக்கிய சமூக நகர்வும், அகம்படிய போர்மரபுப் பின்னணியில் எழுந்த அரசுகள், அத்துடன் கல்வெட்டுகள், சாசனங்களில் நிலை கொண்டுள்ள அகம்படிய இன வரலாற்றுநாயகர்கள் ஆகியன சுருக்கமாக உரிய ஆதாரங்களுடன் கொடுக்கப்பட்டுள்ளது. குலத்தெய்வ வழிபாட்டு முறைகள் கொடுக்கப்பட்டுள்ளது, அவை பெரும்பகுதி வாய்மொழி ஆதாரங்களின் அடிப்படையிலேயே அளிக்கப்பட்டுள்ளது.

கனம் மற்றும் கணம் சார்ந்து கனத்ததோர் அகம்படியர் என்பதற்கான தோற்றுவாய்கள் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. வரலாற்றில் அகம்படியர்கள் சக சமுதாயத்திரனரோடு கொண்டுள்ள இணக்கமான உறவையும், சக சமுதாயத்தினரால் அகமுடையார்கள் அடைந்த நலன்களும், சகோதரத்துவத்தின் அவசியமும் இறுதியில் வலியுறுத்தப்பட்டுள்ளது. பண்பாட்டு நிலையில், அகம்படியர்களின் பழக்க வழக்கங்கள், எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

சமூக வரலாறுகள் நூல்பிடித்தது போன்ற குறிப்பிட்ட எல்லைக்குள் எழுதிடமுடியாது. பூமிக்கு மேல் இலைகளோடும் கிளைகளோடும் இடைவெளியில் தெரியும் மரங்கள் பூமிக்கு கீழ் வேர்களோடு வேர்களாக பின்னியுள்ளது. அதுபோல்தான் மானிடம் சார்ந்த இனங்களின் வரலாறும்.

நூலினை மிகவும் ஆர்வத்துடன் படித்து, அணிந்துரை வழங்கிய, அகமுடைய ஒற்றுமை மற்றும் கல்வி வளர்ச்சிக்கு தொடர்ந்து தனது பங்களிப்பை நல்கி வருவதுடன், அமைப்பு ரீதியிலான கட்டமைப்புகளை ஏற்படுத்தி அகமுடையார் சமுதாயத்திற்கு இன்றைய குறிப்பிடத்தக்க வழிகாட்டிகளுள் ஒருவராக விளங்குகின்ற திருமிகு.மா.ஜெகநாதன் B.E., அவர்களுக்கு எனது நிறைவான நன்றிகளை சமர்பிக்க கடமைப்பட்டுள்ளேன்.

குலத்தெய்வங்கள் தொடர்புடைய தகவல்களைத் தந்துதவிய திரு.இரா.ச.இமலாதித்தன் அவர்களுக்கும், கணினி வழி அச்சேற்றித்தந்த தமிழ் அலை நிறுவனத்திற்கும் எனது நெஞ் சார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக்கொள்கிறேன். மேலும் இந்நூல் ஆக்கத்திற்கு உதவிய அனைவருக்கும் எனது நன்றிகளை உரியதாக்குகிறேன்.

அன்புடன்

**இரா.உமாமகேஸ்வரி அரசு**

# 1. அகம்படியர், அகமுடையார் பெயர் வழிவங்கள்

"இவர்கள் அரண்மனையில் முதன்மைத்தன்மை உடையவராகக் கருதப்பெற்றனர். அகம்படி முதலிகள் என்று அழைக்கப்பெற்றனர். அரசரின் மெய்க்காப்பாளராக இருந்து அவருடைய இரகசியங்களைக் காத்தனர். இன்று அகமுடியார், அகமுடையார், அகம்படியார் என்று மாறி முதலியார் என்று சேர்ந்து சாதிப்பெயராகக் குறிக்கப்படுகின்றனர்."

– டாக்டர் திரு.அ.கிருட்டினன்.
"கல்வெட்டில் வாழ்வியல்" நூல்.

அகம்படியர், அகம்படியார், அகமுடியார், அகமுடையார், அகமுடையான், அகமடியர், அகம்மடியர், அகம்படவன், அகம்படையன், அகம்படியன், அகமுடையன் ஆகிய அனைத்துச் சொற்களும் அகமுடையார் என்ற இனக்குழுவைக் குறிப்பதாகும். கல்வெட்டுகளில் அகம்படியர் என்று வழங்கி வந்த சொல் காலப்போக்கில், இந்த இனக்குழு அடைந்த வளர்ச்சியின் அடையாளமாக அகமுடையார் என்று இன்று வழக்கில் நிலவி வருகிறது. இவ்வினத்தினரை அகம்படியர் என்றும், அகமுடையார் என்றும் சுட்டப்படுவது பல்வேறு இலக்கியம் மற்றும் வரலாற்று நூல்களில் பதிவுகளாக இடம் பெற்றுள்ளது.

அகமுடையான் என்பது அகம்படியான் என்பதன் திரிபாகலாம், அந்தத் திரிபும் பாமரவழக்கில் ஏற்பட்டவொன்று. அகம்படியார் பற்றி இந்நாட்களில் வழங்கும் கருத்துக்குச் சாசனக் குறிப்புகள் ஆதாரமாக அமையவில்லை. சாசனங்கள் குறிப்பிடும்

அகம்படியார் படைவீரர்களாகவே காணப்படுகின்றனர் என்று பேராசிரியர் திரு.சி.பத்மநாதன் அவர்கள் தனது "இலங்கைத் தமிழ்ச்சாசனங்கள்" எனும் நூலில் பதிவு செய்கிறார். அத்துடன், மத்திய காலத் தமிழகத்தின் இராணுவ அமைப்புகள் சீர் குலைந்தபின் வன்னியர், செங்குந்தர் என்போரைப்போல அகம்படியரும் வேறு தொழில்களில் ஈடுபாடு கொண்டனர். ஆயினும் ஒரு தனியான சமூகப்பிரிவாக அவர்கள் நெடுங்காலம் நிலைபெற்றுள்ளனர் என்றும் சுட்டிக்காட்டுகிறார்.

இவ்வினத்தினர், அகமுடையர், அகம்படியர் என்று அழைக்கப்பட்டனர் என்பதாக பேராசிரியர் டாக்டர் சி.இலக்குவனார் அவர்கள் தனது "என் வாழ்க்கைப் போர்" தொகுதி I (பக்கம் 38) நூலில் பதிவு செய்கிறார்.

சரித்திரச்செம்மல் திரு.ச.கிருஷ்ணமூர்த்தி தனது திருவோத்தூர் (செய்யாறு) வரலாறு நூலில், இவர்கள் அகம்படி ஐமுடையான், ஐம்பொடியான், அகமுடையார் என்று இன்று மாறியுள்ளது என்று குறிப்பிடுவதுடன் (பக்கம் 46,203) இவர்கள் அகம்படியர் என்றும் அகம்படியமுதலிகள் என்றும் அழைக்கப்பட்டனர் என்பதாகக் குறிப்பிடுகிறார். மேலும் இதே ஆசிரியர் தனது "தொல்லியல் நோக்கில் காஞ்சிபுரம் மாவட்டம்" என்ற நூலில் "காஞ்சி நகரிலும், காஞ்சியைச் சுற்றிலும், துளுவ வேளாளர்கள் மிகுதியாக தற்போதும் உள்ளார்கள். தொழுவ வேளாளர் என்றும் சில சாசனங்களில் இருப்பதை அவதானிக்க வேண்டும். அகம்படி முதலிகள் எனவும் இவர்கள் அழைக்கப்பட்டுள்ளனர் என்பதாகப் (பக்கம் 25) பதிவு செய்கிறார்.

இவர்கள் அகம்படியர் என்றும், அகமுடையார் என்றும் அழைக்கப்படுகின்றனர் என்று குறிப்பிடுகிறது, "இராமநாதபுரம் மாவட்டம்" நூல் (பக்கம்: 103, மணிமேகலை பிரசுரம்). திருமதி. வள்ளி சொக்கலிங்கம் அவர்கள் எழுதிய "திருப்பத்தூர்" என்னும் நூலில் (பக்கம்: 18,19)அகமுடையார்களைப் பற்றி இவ்வாறு குறிப்பிடுகிறார்.

"அகம்படையர்கள் : இவர்கள் சேர்வைக்காரர்கள் என்றும், அகம்படியர் என்றும், அகமுடையார் என்றும், அகம்படையார் என்றும் அழைக்கப்படுகிறார்கள். இவர்கள் திருப்புத்தூரில் எண்ணிக்கையில் அதிகமாக வசிக்கின்றனர்கள். கி.பி.17ஆம் நூற்றாண்டின் இறுதியில் சிவகங்கைச் சீமையை ஆண்ட மருதுபாண்டியர் அகம்படையர் வகுப்பில் உதித்தவர்களே".

“இராமநாதபுரம் மாவட்ட வரலாற்றுக் குறிப்புகள்” என்ற நூலில் திரு.எஸ்.எம்.கமால் மற்றும் நா.முகம்மது செரீபு, இவ்வினத்தைப் பற்றிக் குறிப்பிடும் போது (பக்கம்: 136),

“அகம்படியர் என்றும், அகமுடையார் என்றும், இவர்கள் அழைக்கப்படுகின்றனர். பத்து பதிமூன்றாவது நூற்றாண்டைச் சேர்ந்த ராஜராஜன், ராஜேந்திரன், குலோத்துங்கன் ஆகிய சோழ மன்னர்களது கல்வெட்டுகளில் அகம்படி, அகம்படி முதலி, அகம்படியப் பெண்டு என்ற வழக்காறுகள், திருச்சி, தஞ்சை, தென்ஆர்க்காடு மாவட்டங்களில் காணப்படுகின்றன” என்று பதிவு செய்கிறார்.

சாகித்ய அகாதமியின் “இந்திய இலக்கியச் சிற்பிகள்” நூல் வரிசையில் கரந்தை தமிழ்வேள் உமாமகேஸ்வரனார் வரலாற்றை எழுதிய பேராசிரியர் திரு.சங்கரலிங்கம் பிள்ளை சாம்பசிவனார் இவ்வினத்தைப்பற்றி இவ்வாறு குறிப்பிடுகிறார் (பக்கம்: 21,22),

அன்பும், பண்பும், ஆன்ற பெருமையும் பெற்ற அஃகமுடைய வேளாளர் குடியும் ஒன்றாகும். இவர்களில் ஒரு பிரிவினர் அகம்படியர் என்றழைக்கப்படுகின்றனர். அஃகம் (நெல் முதலான கூல வகைகள்) உடையர் என்பதே அகமுடையார், வாணிகம் செய்து பொருள் ஈட்டி அவற்றை வறியவர்க்கு வழங்கும் வள்ளல் மனம் (நல்ல அகம்) படைத்திருந்தமையால் அகம் உடையார், அமைச்சர் முதலான அரசுப்பணிகளில் அமர்ந்து அரசனுக்குத் துணை செய்ததுடன் போர்க்காலங்களில் அரண்மனையிலேயே தங்கியிருந்து (அகம்படிந்து) புறத்தே சென்ற படைகளுக்கு வேண்டிய உதவிகளைச் செய்தமையால் அகம்படியர், அகத்திற்குப் படிவரேயன்றிப் புறத்திற்குப் (வீரத்திற்கு) படியும் பண்புடையவரல்லர், எனவே அகம்படியர் இப்படி பலகாரணங்களைப் பட்டியலிடுகிறார்.

வரலாற்றாசிரியர் திரு.மீ.மனோகரன் அவர்கள் தனது “மருதுபாண்டிய மன்னர்கள்” நூலில் (பக்கம்: 585, 587, 588) அகம்படியர் என்றும், அகமுடையார் என்றும் அகமுடையார்களைக் குறித்திட பயன்படுத்துகிறார். தமிழ் நாடு சட்டப்பேரவை நடவடிக்கைகள் 1973, பணித்துறை வெளியீட்டிலும் அகமுடையாரைக் குறித்திட “அகமுடியர்” என்ற பதம் பயன்படுத்தப்பட்டுள்ளது. மூவேந்தர் குல தேவமார் சமூக வரலாறு எழுதிய திரு.P.முத்துதேவர் அகமுடையாரைக் குறித்திட (பக்கம்: 125) “அகமுடியர்” என்ற

பதத்தினையும் பயன்படுத்துகிறார். அரசினர் கீழ்த்திசைச்சுவடிகள், "கொங்கு மண்டல வரலாறுகள்" பதிப்பில் (பக்கம்: 122) அகமுடையான் என்பதனைக் குறிக்க ஆமிடியான் என்றபதம் பயன்படுத்தப்பட்டுள்ளது.

திருமதி.சரஸ்வதி வேணுகோபால் அவர்களின் "நாட்டுப்புறப் பாடல்களில் சமூக ஒப்பாய்வு" நூலில் (பக்கம்: 18, 21) அகமுடையார் சாதியின் பெயர் பேச்சு வழக்கில் "அகமடியார்" என்றாகியுள்ளது என்று குறிப்பிடுகிறார். "ஆவணங்களில் காரைக்கால்" நூலாசிரியர் முனைவர் திரு.சே.முருகேசன், அவர்கள் (பக்கம் 27) அகமுடியர் என்று அகமுடையாரைக் குறிப்பிடுகிறார்.

இனங்கள், பிரிவுகள், ஒத்தப் பெயர்கள், துணைப் பெயர்கள், பட்டங்கள் என்ற ஆங்கில நூலின் ஆசிரியர் திரு.குமார் சுரேஷ் சிங் (Communities, Segments, Synonyms, Surnames, and Titles by Kumar Suresh Singh, Page: 1826) தேவர் என்பதற்கு ஒத்தப் பொருளுடைய சொல்லாக (Synonyms) அகம்படி, அகமுடையார், அகமுடியன், அஃகம்படி என்று பதிவு செய்கிறார். புலவர் சுந்தர சண்முகனார் தனது "கெடிலக்கரை நாகரிகம்" எனும் நூலில் (பக்கம் 518, 519) அகம்படியர் என்றும், அகமுடையார் என்றும் இவ்வினத்தைக் குறித்திட இரண்டையும் பயன்படுத்துகிறார்.

பிரிக்கப்படாத இந்தியாவில் போர்ச் சமூகங்கள் என்ற நூலில் "அகமுடையார் என்பவர்கள் அகம்படியர் என்றும் அறியப்படுகிறார் என்று குறிப்பிடப்படுகிறது. (Agamudayar also Known as Agampadiyar in Martial Races of Undivided India Page : 275, by Vidya Prakash Tyagi).

திரு.க.த.திருநாவுக்கரசு அவர்களின் "முதலாம் இராசராச சோழன் நூல்" அகமுடையார் என்னும் ஒரு பிரிவினர் அக்காலத்திய (சோழர்) தமிழ்ச் சமுதாயத்தில் எழுச்சியுற்றிருந்தனர். அவர்கள் அகம்படி முதலிகள் என்று கல்வெட்டுக்கள் சுட்டுகின்றன என்பதாகப் பதிவுசெய்கிறது.

யாழ்பாணம் தொல்லியல் கழகம் மூலம் வெளியிடப்பட்ட எபிகிராபிய தமிளிகா என்ற நூல் "ஆர்க்காடு, புதுக்கோட்டை மற்றும் மதுரைப் பகுதிகளில் வசித்துக் கொண்டிருந்த இந்த சமூகத்தைச் சேர்ந்தவர்கள் அகம்படியார், அகமுடி, அகமுடியார் என்று பலவாராக அறியப்பட்டனர்" என்று (Epigraphia Tamilica Volume I, Part-1, page : 16, by Jaffna Archaeological Society) பதிவு செய்கிறது.

இந்தியாவில் அகமுடையார் அல்லது அகம்படியர் சாதியினர் என்று இவர்களை சிலோன் இலக்கியப்பதிவேடு (Ceylon Literary Register 1933, Page: 387) என்ற ஆங்கிலச்சஞ்சிகை குறிப்பிடுகிறது.

அகம்படியர் என்போர் அகமுடையார் என்றும் அறியப்படுகிறார்கள் என்றும், இவர்கள் அரச மாளிகையில் சேவையாற்றுவோர் என்றும் பதிவுசெய்கிறது தமிழ் ஸ்டெடிஸ் இதழ் (Tamil Studies, Volume 3, 1983 by International Institute of Tamil Historical Studies).

அகமுடையார் என்பதற்கு அகம்படியர் சாதியைச்சார்ந்தவன் என்று பொருள் தருகிறது, சென்னைப்பல்கலைக் கழகத் தமிழ்ப்பேரகராதி (Tamil Lexicon).

"தென்னிந்தியக் குடிகளும் குலங்களும்" என்ற நூலைத் தமிழில் எழுதிய திரு.ந.சி.கந்தையா அவர்கள், அகமுடையாரின் ஒரு பிரிவினர் அகம்படியர் எனப்படுவர், என்று குறிப்பிடுவதுடன் அகம்படியர் என்பதற்கு அகமுடையர் என்பதையே விளக்கமாகத் தருகிறார்.

திரு.எஸ்.எஸ்.பாண்டியன் சேர்வை அவர்களை ஆசிரியராகக் கொண்டு "தமிழ்நாடு அகம்படியர் முன்னேற்ற சங்க" வெளியீடான "அகம்படியர் குரல்" என்ற இதழில் அகமுடையார் ஒற்றுமை ஓங்குக என்ற முழக்கத்துடன், அகம்படியர் மற்றும் அகமுடையார் என்ற இரண்டு சொல்லையும் பயன்படுத்தி வெளியிடப்பட்டுள்ளது.

அல்லயன்ஸ் (1989) வெளியீடான கதைக்கோவை தொகுதிII இல் (பக்கம் : 250) அகமுடையர் என்பதற்கு அகம்படியர் என்று பொருள் தருகிறது.

1951ஆம் ஆண்டு மக்கள் தொகைக்கணக்கெடுப்பு அறிக்கை (Census of India 1951) இல் தென்ஆர்க்காடு, வடஆர்க்காடு மற்றும் செங்கல்பட்டு மாவட்டங்களில் சாதிப்பெயர்கள் பற்றிய அகராதியில் (Glossary of Caste Names) அகமுடையர், அகமுடைய பிள்ளை, அகமுடைய முதலியார், அகமுடைய வெள்ளாளர், அகம்படியர், சேர்வை அகம்படியர், சேர்வை முதலியார், துளுவ வெள்ளாளர், துளுவ வெள்ளாள முதலியார், தேவர், உடையார், தொழுவர், துளுவ போன்றன பட்டியலிடப்பட்டுள்ளது.

1951 ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு அறிக்கைகளில் (Census of India-1951, Glossary of Caste Names)

இவர்கள் அகம்படியர் என்றும், அகமுடையார் என்றும் அகமுடியர் என்றும் அகம்மடியர் என்றும் ஒன்றுக்கு மேற்பட்ட பெயர்களில் பதிவுசெய்யப்பட்டுள்ளனர். உதாரணத்திற்கு கோட்டைப்பத்து அகமுடையார் என்ற பிரிவு திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் கோட்டைப்பத்து அகமுடையார் (Kottai Pathu Agamudaiyar) என்றும், இராமநாதபுரம் மாவட்டத்தில் கோட்டைப்பத்து அகம்படியர் (Kottai Pathu Agambadiyar) என்றும் தஞ்சாவூர் மாவட்டத்தில் கோட்டைப்பத்து அகமடியர் (Kottai Pathu Agamadiar) என்றும் ஒரே பிரிவு மூன்று விதமாகப்பதிவு செய்யப்பட்டுள்ளது.

அதேபோல் செங்கல்பட்டு மாவட்டத்தில், அகம்படிய முதலியார் (Agambadia Mudaliar) என்றும், வடஆர்க்காடு மாவட்டத்தில் அகமுடைய முதலியார் (Agamudaya Mudaliar)என்றும் பதிவு செய்யப்பட்டுள்ளது. இராமநாதபுரம் மாவட்டத்தில் அகம்படிய தேவர் (Agambadiya Thevar) என்றும் தஞ்சாவூர் மாவட்டத்தில் அகமடிய தேவர் (Ahamadia Devar) என்றும், பதிவு செய்யப்பட்டுள்ளது.

செங்கல்பட்டு மாவட்டத்தில் அகமுடைய வேளாளர், (Agamudaiya Vellalar) என்றும், தஞ்சாவூர் மாவட்டத்தில் அகமடிய வேளாளர் (Ahamadiya Vellalar) என்றும் பதிவுகளாக இடம் பெற்றுள்ளது. செங்கல்பட்டு மாவட்டத்தில் சேர்வை அகம்படியர் என்றும் இராமநாதபுரம் மாவட்டத்தில் சேரூவாரர் அகம்படியர் (Seruvarar Agambadiar) என்றும் பதிவுகள் காணப்படுகிறது.

அதேபோல் ஆந்திர மாநிலம் நெல்லூர் மற்றும் சித்தூர் மாவட்டங்களில் அகமுடையார் (Agamudaiyar) என்றும், கர்நூல் மாவட்டத்தில் அகமுடியர் (Agamudiyar) என்றும் கிருஷ்ணா மாவட்டத்தில் அகமுடி (Agamudi) என்றும் பதிவுகளைக் காணமுடிகிறது. செங்கல்பட்டு, திருச்சிராப்பள்ளி மாவட்டங்களில் அகம்படியர் என்றும் அகமுடையார் என்றும் (Agambadiyar, Agamudaiyar) இராமநாதபுரம் மாவட்டத்தில் அகம்படியர், அகமுடியர் (Agambadiyar, Agamudiar) என்றும், தஞ்சாவூர் மாவட்டத்தில் அகமடியர் (Ahamadiyar) என்று பதிவுகளைப் பார்க்க முடிகிறது.

அதேபோல் செங்கல்பட்டு மாவட்டத்தில் துளுவ வேளாளர் (Thuluva Vellalar) என்றும், திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் தொழுவ வேளாளர் (Thozhuva Vellalar) என்றும் வட ஆர்க்காடு

மாவட்டத்தில் துளுவ வேளாள முதலியார் (Thuluva Vellala Mudaliar) தொழுவேளாள (Thozhuvellala), நாயக்கர் தொழுவ வேளாளர் (Naiker, Thozhuva Vellalar) என்றும், தென்ஆர்க்காடு மாவட்டத்தில் தொழுவர் (துளுவா) (Thozhuvar (Thuluva) என்றும், தஞ்சாவூர் மாவட்டத்தில் தொழுவ வேளாளர் (Thozhuva Vellalar) தொழுவர் (Thozhuvar) தொழுவபிள்ளை (Thozhuva pillai) என்றும், இராமநாதபுரம் மாவட்டத்தில் தொழுவ வேளாளர் (Thozhuva Vellalar) துளுவ வேளாளர் (Thuluva Vellalar) என்றும் பதிவுகளைப் பார்க்க முடிகிறது. எல்லா மாவட்டங்களிலும் முதலியார், தேவர், உடையார், பிள்ளை தேசிகர் போன்றவை இடம்பெற்றுள்ளது. தமிழ்நாடு மட்டுமின்றி நெல்லூர், சித்தூர், பெல்லாரி, குண்டூர், கர்நூல், மலபார் ஆகிய மாவட்டங்களில் தேவர் (Thevar / Devar) குறிக்கப்பட்டுள்ளது. அத்துடன் முதலியார், உடையார், குறிக்கப்பட்டுள்ளது. மலபார் மாவட்டத்தில் தேவர் என்பதுடன் தரகன் (Tharakan) என்பதும் குறிக்கப்பட்டுள்ளது.

வரலாற்றுப் பேரவை வெளியிட்ட, தொல்லியல் அறிஞர் டாக்டர் திரு.இரா.நாகசாமி அவர்களின் தமிழ்நாட்டு வரலாற்றுக் கருத்தரங்கு (தொகுதி5, பக்கம்:257) நூல் அகம்படியர்களை அகம்மடியர் என்று பதிவுசெய்கிறது. திரு.க.நெடுஞ்செழியன் அவர்களின் சமூகநீதி என்ற நூல் பக்கம்:92 இல் இவர்களை அகமடியர் என்றும், டாக்டர் கோ.சீனிவாசவர்மா அவர்களின் “கிளை மொழியியல்” நூல் இவர்களை அகமுடியர் என்றும் பதிவுசெய்கிறது.

திரு.ந.சிதம்பரசுப்பிரமணியன் அவர்களின் மண்ணில் தெரியுது வானம் என்னும் நூலில் அகமுடையார்களை அகமடியர் என்றே குறிப்பிடப்படுகிது.

அகம்படியர் என்ற இனக்குழு, அது அடைந்த வளர்ச்சிக்கு ஏற்ப அகமுடையார் என்றும், பாமரவழக்கு, வட்டாரவழக்கு இவற்றின் தாக்கத்தால் பலவாராகத் திரிந்து வழங்கிவந்துள்ளது என்பது இதுகாரும் பார்த்தத் தரவுகளிலிருந்து அறியமுடிகிறது.

★★★

# 2.
# அகம்படியர் விளக்கம்

"அகம்படியார் ஓர் போர்மரபு இனத்தின் பெயர், பிற்காலத்தில் அது ஒரு சாதியின் பெயராக ஆகிவிட்டது."

– நொபொரு கராஷிமா,
வரலாற்றுப் போக்கில் தென்னகச் சமூகம்
சோழர் காலம் (850–1300)

அகம்படியார், அகமுடையார் பற்றிப் பல்வேறு விளக்கங்கள் இலக்கியம் மற்றும் வரலாற்று நூல்களில் தரப்பட்டுள்ளது, அவை விரிவானதாக அமைந்திடவில்லை. தமிழக, இந்திய சூழலில், வரலாறு, தொல்லியல், மானிடவியல், இனவரைவியல் ஆகியவற்றில் ஆங்காங்கே சிற்சில குறிப்புகளாக அகம்படியர் பற்றித் தரப்பட்டுள்ளன. ஆங்கிலேயர் ஆட்சியில் திரு.எட்கர் தர்ஸ்டன் அவர்களின் "தென்னிந்தியக் குலங்களும் குடிகளும்" தொகுப்பில் அகமுடையார் பற்றிய விரிவானப் பதிவினை பார்க்க முடிகிறது. அதற்குப் பிறகு வந்த பல்வேறு நூல்களுக்கு அதுவே மூல நூலாக அமைகிறது.

கல்வெட்டாய்விலிருந்து அகம்படியர் பற்றிய குறிப்புகளை ஜப்பானிய ஆய்வாளர் திரு.நொபொருகராஷிமா, கல்வெட்டு / தொல்லியல் ஆய்வாளர்கள் திரு.ஏ.சுப்பராயலு, திரு.இரா. நாகசாமி, டாக்டர் திரு.அ.கிருட்டினன், திரு.தி.ந.சுப்பிரமணியன்,

திரு.சி.கோவிந்தராசன், திரு.ஆர்.திருமலை அய்.ஏ.எஸ்.,(ஓய்வு), திரு.இல.தியாகராசன், திரு.ச.கிருஷ்ணமூர்த்தி, போன்ற அறிஞர்கள் ஒரு சில குறிப்புகளின் வழிப் பதிவுசெய்து சென்றுள்ளனர்.

இதேபோல், தமிழ் அகராதிகள் தொகுத்தவர்களும் அகம்படியர் பற்றிய குறிப்புகளைத் தந்துள்ளனர். தமிழ் இலக்கியம், தமிழக வரலாறு ஆகியத் துறைகளில் புகழ்பெற்ற அறிஞர்களான திரு.மா. இராசமாணிக்கனார், திரு.நீலகண்டசாஸ்திரி, திரு.கே.கே.பிள்ளை, திரு.சோமலெ, பேராசிரியர் சி.பத்மநாதன், திரு.தென்புலோலியூர் கணபதிப்பிள்ளை, திரு.மீ.மனோகரன் போன்ற அறிஞர்கள் தந்துள்ள குறிப்புகள் சற்று ஆழமானதாக உள்ளது.

எபிகிராபியா இன்டிகா தொகுதி 7 (Epigrahia Indica Vol. VII) பக்கம் 164 இல் அகம்படி என்பதற்கு மெய்க்காவல் என்று குறிப்பிடப்படுகிறது. வரலாற்றறிஞர் திரு.மா.இராச மாணிக்கனார் தனது "தமிழ் இனம்" (செல்வி பதிப்பகம் காரைக்குடி) பக்கம் 12 இல்,

"ஆட்சிமுறை அமைந்த பின்னரே நகரங்களிலும் சிற்றூர்களிலும், இக்காலத்தைப் போலவே அலுவல் காரணமாக அலுவல் பெயர்கள் வழங்கலாயின. அரசு செய்பவன் அரசன், அரசன் மெய்க்காப்பாளராக இருப்பவர் அகம்படியர், மறம் வீரம், வீரத்தை உடையவர் மறவர், படையை ஆட்சி புரிந்தவன் படையாச்சி.." என்று பதிவு செய்கிறார். இதே கருத்தைத் தமிழகம், நேற்று, இன்று, நாளை நூலின் ஆசிரியர் (காசி இல்லம், அரும்புக்கோட்டை, பக்கம்: 40,139) திரு.இரத்தினசாமி நாடார் சின்னச்சாமி அவர்களும்,

"அரசியல் சுற்றம் காரணமாகச் சில பிரிவுகள் தோன்றின

அரசு புரிபவன் அரசன், அவனது மெய்க்காப்பாளன் அகம்படியன்"

என்று குறிப்பிட்டுச் செல்கிறார்.

அகம்படியர் என்பது தொழிலால் வந்தடைந்த பட்டப் பெயராகக் கொள்வார் டாக்டர் திரு.சிரஞ்சீவி அவர்கள், தனது புதுக்கோட்டை சமஸ்தான வரலாறு நூலில். இந்த மெய்க்காவல் பணியைச் சோழர் ஆட்சியில் திறம்பட மேற்கொண்டப் படையினர் வேளைக்காரப் படையினர் என்று அழைக்கப்பட்டனர். வேளைக்காரப்படை அரசன் உயிர்காக்கும்

மெய்க்காவல் படை என்கிறார் டாக்டர் ஆறு அழகப்பன் (நூல்: தமிழ்ப்பேழை பக்கம்13,41). “பண்டைய ஈழம்” நூலின் ஆசிரியர் திரு.வே.க.நடராசா அவர்கள் வேளைக்காரப்படையினர் அரசனைப் பாதுகாக்க உறுதிபூண்ட நம்பிக்கை வாய்ந்த ஒரு மெய்க்காப்புப் படையினராவர் (பக்கம் 23) என்று குறிப்பிடுகிறார்.

வேளைக்காரர்கள் என்பவர்கள் அரசனுக்கு அணுக்கத்திலேயே நின்று அவனுக்குத் தொண்டு செய்தவர்கள் ஆவார்கள். மன்னனுக்கு விளையக்கூடிய எந்த வகையான இன்னல்களையும் ஊறுகளையும் வேளைக்காரர்கள் தாமே ஏற்றுக்கொள்வார்கள் என்று திரு.டாக்டர் கே.கே.பிள்ளை அவர்கள், தனது “தமிழக வரலாறு, மக்களும் பண்பாடும்” (பக்கம்: 304 306) நூலில் பதிவு செய்கிறார். வேளைக்காரர் என்போர், சோழர் படையில் ஒரு பிரிவினர் என்பார் பேராசிரியர் திரு.எ.சுப்பராயலு அவர்கள்.

கண்ணினைக்காக்கும் இமைபோல அரசற்குக் காலத்தில் உதவிபுரியும் வீரரும் முற்காலத்தில் இருந்தனர் என்று குறிப்பிடும் திரு.ரா.பி.சேதுப்பிள்ளை அவர்கள் (தமிழர் வீரம்) அவர்களை வேளைப்படை என்று குறிக்கிறார். மேலும் அவர் அந்த வேளைப்படையினரை அணுக்கப்படையினர் என்றும், உற்றவிடத்து உயிர் வழங்கும் பெற்றியர் என்றும், உடுக்கையிழந்தவன் கைபோல இடுக்கண் வந்த வேளையில் ஏன்று உதவிய அவ்வீரர் வேளைக்காரர் என்று அழைக்கப்பெற்றனர் என்கிறார். தஞ்சைச்சோழமன்னர் சேனையில் வேளைக்காரப்பட்டாளம் ஒன்று சிறந்து விளங்கிற்று என்றும் தெரிவிக்கிறார்.

வேளைக்காரப் படையினரைப் பற்றி திரு.டாக்டர். மா.இராசமாணிக்கனார் அவர்கள், “வேளைக்காரப்படை என்பது அரசனுக்கு ஆபத்து வரும் வேளையிலும், நாட்டுக்கு ஆபத்து வரும் வேளையிலும் தம் உயிரையும் மதியாமல் போர் புரியும் வீரர்களைக் கொண்டது. தேவைப்பட்ட போது வந்து உதவிபுரியும் நிலைப்படையே இது. இன்னது செய்யத்தவறினால் இன்னவாறு மடிவோம் என்று சபதம் செய்து கொண்ட வீரரே வேளைக்காரர் எனப்பட்டனர். இவர்களுள் சிலர் ஊர்களைப் பாதுகாத்தனர், சிலர் திரிசூல வேளைக்காரர் என்ற பெயரில் கோவில்களைக் கண்காணித்தனர்.”

வேளைக்காரப் படையினர் பாண்டியனிடம் ஆபத்துதவிகள் என்று பெயர் பெற்றனர் என்று பதிவு செய்கிறது தமிழ்நாட்டு வரலாறு பாண்டியப்பெருவேந்தர் காலம் நூல் பக்கம் 81 இல். மேலும் அதிரடிப் போராளிகளாக இயங்கிய மெய்க்காப்பாளர்கள் பாண்டியப்பெருவேந்தனைச்சுற்றிக் காலமெல்லாம் நின்று காவல் காத்தனர். அத்துடன் பாண்டிய மன்னனிடம் தனிப்பட்ட நன்றியுணர்வு கொண்ட போர்வீரர்களான இவர்களைத் தென்னவன் ஆபத்துதவிகள் என்றும், முனை எதிர் மோகர் எனவும் அழைத்ததாகப்பதிவு செய்கிறது.

வேளைக்காரர் என்பவர் அரசருக்கு வேளைப்படி உரிய பணியைச் செய்வதாக ஏற்றுக்கொண்டு அவ்விதம் செய்ய இயலாதபோது உயிரைமாய்த்துக்கொள்வதாக விரதம் பூண்டவர். வீரமும் விசுவாசமும் நிறைந்த படையினர் என்று தென்னிந்தியக் கோயிற்சாசனங்கள் பக்கம் 1495இல் குறிப்பிடுகிறது.

ஆபத்து வேளையில் அஞ்சல் என்று அருள்புரியும் முருக வேளை வேளைக்காரப்பெருமாள் என்று அருணகிரிநாதர் குறிப்பிடுவதை திரு.ரா.பி.சேதுப்பிள்ளை அவர்கள் தனது தமிழர்வீரம் நூலில் பதிவுசெய்கிறார். மன்னனுடன் எப்பொழுதும் உடனிருந்து அவன் உயிருக்கு ஆபத்து நேருங்கால் தம் உயிரையும் கொடுத்து காக்கும் வீரர்கள் வேளைக்காரர் எனப்படுவார் என்று குறிப்பிடும் ஆ.பத்மாவதி மற்றும் டாக்டர் இரா.நாகசாமி (தொல்லியல் கருத்தரங்கு தொகுதி 1) அவர்கள், இவர்கள் பெரும்பாலும் அரசமரபைச்சேர்ந்தவர்களாகவே இருப்பர் என்றும் பதிவு செய்கின்றனர்.

“யாழ்ப்பாண அரசு” என்ற ஆங்கில நூலின் ஆசிரியர் (The Kingdom of Jaffna Part-I, Pages 73) திரு.எஸ்.பத்மநாதன் அவர்கள் வேளைக்காரர் மற்றும் அகம்படியர்களைப் பற்றிக் கீழ்க்கண்டவாறு பதிவு செய்கிறார்.

இலங்கையின் தமிழ் குடியேற்றங்களில், இராணுவச் சமூகங்களின் குடியேற்றமும் உள்ளடங்கியது, என்பதோடு அதில் வேளைக்காரர் மற்றும் அகம்படியர் மிகவும் முக்கியமான இராணுவக் குடியேற்றங்களாகும். வேளைக்காரர் தென்னிந்தியாவின் நிலையான அரசு சார்ந்த போர் வீரர்களின் தொகுதியாகும். எந்தச் சூழ்நிலையிலும் தம் உயிர் கொடுத்து அரசரையும் அவர் உயிரையும் பாதுகாத்துப் பணிசெய்வேன் என்ற சபதத்துடன் பணியாற்றும் இராணுவ வீரர்களாவர்.

தங்களின் தீவிர அரச விசுவாசத்தாலும், சண்டையிடும் தரத்திலும் தனித்துவமிக்க படையினரான இவர்கள், அரசனின் மெய்க்காவல் படையினராகவே பயன்படுத்தப்பட்டு வந்தனர். சோழர் படையில் மிகவும் திறன்மிகுந்த, போர்புரியும் ஆற்றல் மிக்க, படையினராக இந்த வேளைக்காரர்கள் இருந்துள்ளனர்.

பல குருநில மன்னர்கள், சிற்றரசர்கள், வேளைக்காரப் படையினராக இருந்துள்ளனர். வாணர்கள் என்ற வாணதிராயர்கள், வாணகோவரையர்கள், வேளைக்காரார்களாக இருந்துள்ளனர். வாணவம்சத்து இளவரசி மூன்றாம் இராஜராசனின் மனைவி வேளைக்காரி என அழைக்கப்பட்டார். வேளைக்காரப்படை "சிறுதனம்" "பிள்ளைகள் தனம்" மற்றும் "பரிவாரக்கொந்தம்" ஆகியவற்றை உள்ளடக்கியது.

அரசனின் மெய்க்காவலர்கள், தம் உயிரைக்கொடுத்து அரசனின் உயிர்காக்கும் வீரர்கள் அகம்படியார் எனப்பட்டனர், என்று குறிப்பிடுகிறார் "பல்லவராச்சியம்" எனும் இலங்கை வரலாற்று நூலாசிரியர் திரு.பல்லவராசசேகரம். மெய்க்காவலர் என்பது அணுக்கர் என்றும், வாசல் மெய்க்காப்போர், பரிவார மெய்க்காப்போர் என்றும் மூன்று வகையாக "தமிழர் போரியல்" நூலில் அதன் ஆசிரியர், புலவர் செந்துரைமுத்து பதிவு செய்கிறார். அவர்கள் முறையே அரசனையடுத்து நிற்பவரும் அரண்மனைவாயிலில் நிற்பவரும், அரசன் வெளிச்செல்லும் போது உடன் வருபவர்களும் ஆவார் என்றும் பதிவுசெய்கிறார்.

இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை 1956–57ஆம் ஆண்டின், கல்வெட்டு எண்.154 மற்றும் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையின் வெளியீடான நாகப்பட்டினம் மாவட்டக் கல்வெட்டுகள் பக்கம் 204 மற்றும் 205 இல் அகம்படி நியாயம் என்ற சோழர்களின் முக்கியமான படைப்பிரிவைப் பற்றிக் குறிப்பிடுகிறது. இந்த அகம்படி நியாயம் என்ற படைப்பிரிவில் அடங்கியுள்ள படையினர் அல்லது உட்பிரிவினராக,

1. வேட்டைக்காரர்,

2. தெரிந்த வில்லிகள் (தேர்ந்தெடுக்கப்பட்ட வில்வீரர்கள்),

3. அணுக்க வில்லிகள் (அரசர் அல்லது தளபதியின் நெருக்கத்தில் பணியாற்றும் வில்வீரர்கள்),

4. இராஜராஜன் வேளைக்காரர் (மெய்க்காவலர்),

5. இராஜேந்திர சிங்கன் வேளைக்காரர் (மெய்க்காவலர்),

6. (குலோ)த்துங்க சோழன் வேளைக்காரர் (மெய்க்காவலர்),

7. குதிரைச்சேவகர் (குதிரை வீரர்),

8. சேனாதிபதிகள் (சேனாதிபதி),

9. தண்டநாயகம்.

ஆகிய ஒன்பது உட்பிரிவுகளையுடையதாக மேற்கண்ட கல்வெட்டு குறிப்பிடுகிறது. அகமுடையார் வரலாற்றில் இந்தக் கல்வெட்டு மிகவும் குறிப்பிடத்தக்கது. அகம்படி, அகம்படியார், வேளைக்காரர், அணுக்கர் / அணுகச்சேவகம், சேவகர் / சேர்வை (குதிரைச் சேவகர்) படைத்தலைமை, படைத்தொகுதி ஆகிய அனைத்துடனும் அகம்படியரின் தொடர்பினை விளக்கிக் காட்டுகிறது. இதேபோன்று 1.கோயிற்கொத்து (அரண்மனைப் பரிவாரங்கள்), 2.யானை வீரர்கள், 3.குதிரை வீரர்கள் அடங்கிய அகம்படி நியாயம் என்ற படைப்பிரிவினரைப் பற்றி இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை 433/1924 ஆம் ஆண்டின் கல்வெட்டு மற்றும் எபிகிராபிகா இன்டிகா தொகுதி 21 (Epigraphia Indica, vol.-21) இன் பல்லவராயன் பேட்டைக் கல்வெட்டும் குறிப்பிடுகிறது.

மூவேந்தர்கட்கு அமைந்த படைத்தலைவர்கட்குப் படைமுதலி, தண்டநாயகன் சேனைமுதலி என்று வழங்கப்பட்டதைப் புலவர் திரு.செந்துரைமுத்து அவர்களின் தமிழர் போரியல் நூல் சுட்டிக்காட்டுகிறது.

படைத்தலைவருக்குப் படைமுதலி, தண்டநாயகன், சேனைமுதலி, சேனாதிபதி, சமந்தன் என்ற பெயர்கள் வழங்கின என்று "பழந்தமிழராட்சி" (பக்கம் 55) தெரிவிக்கிறது. டாக்டர் மா.இராசமாணிக்கனார், "தமிழகஆட்சி" என்ற நூலில் சேனைத்தலைவன் ஆட்சிக்குழுவில் இடம் பெற்றிருந்தான். பிற்காலச்சோழர் படைத்தலைவன் தண்டநாயகன் என்று அழைக்கப்பட்டான். ஆவூர் உடையார் என்பவன் ஒரு தண்ட நாயகன், அவன் ஜயங்கொண்ட சோழ மண்டலத்தை ஆண்டுவந்தான் அச்சொல் படைத்தலைவனையும் சில இடங்களில் குறிக்கிறது என்று பக்கம் 54 இல் பதிவு செய்கிறார்.

பெரும்படையார் என்ற படை அமைப்பை, தண்டல்நாயகம் செய்வார் என்ற படைத்தலைவர், போர்க்களத்தில் வழிநடத்தினார் என்று, தமிழ்நாட்டு வரலாறு பாண்டியர் பெருவேந்தர்காலம் நூல் பக்கம் 82இல் தெரிவிக்கிறது.

தமிழ்நாட்டு வரலாறு சோழப்பெருவேந்தர் காலம் (முதற்தொகுதி நூல்) பக்கம் 436இல் சோழர் படையில் இடம்பெற்ற முக்கிய உட்பிரிவுகளாக 1.ஆனையாட்கள் அல்லது ஆனைப்பாகர், 2.வில்லிகள், 3.அந்தளகத்தார், 4.குதிரைச்சேவகர், 5.அணுக்கர், 6.பரிவாரத்தார், 7.வேளைக்காரர் மற்றும் வேளைக்காரப்படை, 8.திருமெய்க்காப்பர், 9.வடுகக்காவல், 10.பழம்படைகள் ஆகியவற்றைக் குறிப்பிடுகிறது.

வேளைக்காரன் அகம்படை பிடித்தப் பல்லாயிரவர் என்ற படையினரைப் பற்றி, வரலாறு மற்றும் தொல்லியல் ஆய்வாளர் திரு.ஆர்.திருமலை அய்.ஏ.எஸ்., அவர்கள் "தி பாண்டியன் டவுன்ஷிப்" என்ற ஆங்கில நூலின் பக்கம் 176, 177இல் கீழ்க்கண்டவாறு பதிவு செய்கிறார்.

"வேளைக்காரன் அகம்படை பிடித்தப் பல்லாயிரவர் என்பவர் தமக்கு இறப்பு, துன்பம், நேர்ந்தாலும், எல்லா காலங்களிலும் திருவல்லீஸ்வரன் திருக்கோயிலையும், அதன் தேவதான கொடைகளையும், அங்கு சேவைக்குரியவர்களையும், சொத்துக்களையும், சிவப்பிராமணர்களையும், கலைஞர், தச்சர், கொல்லர், காவல்பணி செய்பவர் என்று அனைவரையும் தன்பாதுகாப்பில் காபந்து செய்பவர்கள். அவ்வாறு பாதுகாப்பினை வழங்கும் பொழுது மாய்ந்து போனவர்களுக்கு உதிரப்பட்டி என்ற நிலதானம் வழங்கியதோடு, நிலவரி நீக்கம், யானையின் மூலமும் மற்றும் மாலையிட்டும் மரியாதை செய்யப்பட்டனர்." என்று பதிவு செய்கிறார். படைவீரர்களுக்கு வீரபோகம், படைப்பற்று என்ற வகையில் நிலங்கள் வழங்கப்பட்டன. இவற்றிலிருந்து பெறப்படும் வருவாய் அவ்வீரர்களின் ஊதியமாகும் என்று தமிழ்நாட்டு வரலாறு சோழப்பெருவேந்தர் காலம் நூல் குறிப்பிடுகிறது.

இவ்வேளைக்காரன் அகம்படைபிடித்தப் பல்லாயிரவர் என்பதில் படைபிடித்தப் பல்லாயிரவர் என்று குறிப்பு வருவதால் இவர்கள் பத்தாயிரத்துக்கு மேற்பட்டவராக அறிய முடிகிறது. இவர் குறிப்பிடும் வலங்கை வேளைக்காரர்கள் நாயகம் செய்யும் ஸ்ரீ இராஜராஜ தேவர் குதிரைச்சேவகர் என்ற குறிப்பு நாகப்பட்டினத்தில் செயல்பட்ட அகம்படிநியாயம் என்ற அகம்படிப் படையினரோடு ஒப்பிடத்தக்கது.

அரண்மனையிலும் அரசுப்பணியிலும் அரசர்க்கு மெய்க்காப்பாளராகவும், முதன்மைத் தன்மையுடையவராகவும்

விளங்கியவர்கள் அகம்படிமுதலிகள் என்று குறிப்பிடுகிறது, "தமிழ்நாட்டு வரலாறு சோழர் பெருவேந்தர் காலம்" இரண்டாம்பகுதி நூல் (பக்கம் 46 தமிழ் வளர்ச்சித் துறை வெளியீடு), மேலும் இதேநூலில் அகம்படியர் பற்றிய பதிவு கீழ்க்கண்டவாறு இடம்பெற்றுள்ளது.

"அகம்படியர் என்றும், அகம்படி முதலிகள் என்றும் அழைக்கப்பட்ட இவர்கள் மன்னர்களின் படைப்பிரிவுகளில் முதன்மை பெற்றவர்களாக விளங்கினர். அகம்படி முதலிகள் அரசுப்பணியிலும், அரண்மனைப் பணியிலும் சிறப்பிடம் அளிக்கப்பட்டிருந்தனர். அவர்கள் அரசர்களின் மெய்க்காப்பாளராகப் பணிபுரிந்து அவர்களின் உடலையும் உயிரையும், உடமைகளையும் காத்தனர். அவர்களுடைய சிறப்பான பணிக்கு வீரபோகமாக நிலம் கொடையாக அளிக்கப்பட்டது. அகம்படியாருக்கு பலசிறப்புரிமைகள் வழங்கப்பட்டன".

அரண்மனைகள் மட்டுமின்றி திருக்கோயில்களையும் மெய்க்காப்பாளர்கள் பாதுகாத்து வந்துள்ளார் என்பதை வித்துவான் திரு.வே.மகாதேவன் அவர்களின், "சிவபாத சேகரனின் தஞ்சைக் கல்வெட்டுகள்" நூல் (பக்கம்: 17) கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறது.

"திருக்கோயில் (தஞ்சைப்பெரிய கோயில்) பாதுகாவல் பணிபுரிந்தவர் மெய்க்காப்பாளர் ஆவார். இராஜேந்திரன் கல்வெட்டொன்று கேரளாந்தகன் வாயில் திருமெய்க்காப்பாளர் எனவும், இராசராசன் வாயில் திருமெய்க்காப்பாளர் எனவும் கூறுதல் கொண்டு இவ்வலுவலர்கள் கோயிலில் ஆங்காங்காங்கிருந்து திருக்கோயிலை பாதுகாத்து வந்த அலுவலராதல் பெறப்பெறும்."

சோழப்பெருவேந்தன் முதலாம் இராஜராஜ சோழன் தன்தற்காப்பின் பொருட்டு மெய்க்காப்பாளரையும், குதிரைப்படை ஒன்றினையும் தன்னோடு வைத்திருந்தனன் என்பதைப் "பரிவார மெய்க்காப்பாளர்" "உடனிலைக் குதிரைச் சேவகர்" என்பதைக் கொண்டு உய்த்துணரலாம் என்கிறார், தமிழ் விரிவுரையாளர் திரு.L.உலகநாதன் பிள்ளை (நூல்: முதலாம் இராஜராசசோழன், பக்கம்: 38) மேலும் அவர் இவன்பால் மெய்யுறைபூண்ட வீரர்படையும் இருந்தது அது உத்தமசோழத்தெரிந்த அந்தளகத்தாளர் என்பதால் விளங்கும் (அந்தளகம் மெய்யுறை - Coat of mail) என்கிறார். உடனிலைக் குதிரைச் சேவகர் என்பதைக்

குதிரையேறிய மெய்க்காவலர் என்று குறிப்பிடுகிறார் அறிஞர் திரு.தி.நா.சுப்பிரமணியன் (கல்வெட்டுச்சொல்லகராதி).

அகம்படியர் என்பதற்குச் சேனைக்கு உரியவர் என்று குறிப்பிடுகிறார் "தமிழ் சங்கங்களின் வரலாறு" (பக்கம் 12) நூலாசிரியர் திரு.அர்த்தனாரீஸ்வர சிதம்பரனார். "கடவுளின் கோவிலுள் தொண்டு செய்தாற் போலவே, அரசர் கோவிலுள் (அரண்மனையுள்) தொண்டு செய்தவர் அகம்படியர் எனப்பட்டனர். எனவே மன்னனின் மெய்க்காவலரும் அகம்படியர் என்று அறியப்பெறும்" என்று இராமநாதபுரம் மாவட்ட வரலாறு (பக்கம் 89) நூலாசிரியர் திரு.சோமலெ தெரிவிக்கிறார். வரலாற்றாசிரியர் திரு.அ.கிருட்டிணன் தனது "கல்வெட்டில் வாழ்வியல்" நூலில் (பக்கம் 109) அகம்படியர்கள் அரசனது மெய்க்காப்பாளர்களாக இருந்தனர், அரண்மைகளில் அரசனை ஒட்டியே வாழ்ந்தனர், அரசனின் மறைபொருளைக்காத்தனர். பின்னர் இதுவும் சாதிப்பிரிவாக மாறியது என்று பதிவு செய்கிறார்.

தென்னிந்தியா மற்றும் இலங்கைத் தொடர்பாக ஆங்கிலத்தில் வெளிவந்த பல்வேறு நூல்கள் அகம்படியர் என்பதற்குக் கீழ்க்கண்டவாறு ஒன்றுக்கொன்று தொடர்புடைய பலவகையான பொருள் விளக்கத்தைத் தருகிறது. அவைகள்,

1. நிலப்படை (Land Force) – A Concise History of Ceylon : by Cyril wace Nicholas & Senarat Paranavitana.

2. நிலைப்படை (Standing Army) – Kerala State Gazetteer .

3. இராணுவப்படை (Military Forces) – Ceylon Journal of Science : Anthropology Sections.

4. வீரர்களைக் கொண்ட சமூகம் (Community of warriors) – India through the Ages.

5. மெய்க்காவலர்கள் (Body Guards) – Keralolpatti.

6. அரசர்களுடன் வந்து பாதுகாப்பு அளிப்பவர்கள் (Ceremonial escort for the Kings) – The Nawab's Tears by Ajitmani.

7. அரசர்களுக்குச் சேவைபுரிபவர்கள் (Retainers) – The Political structure of early medieval south india.

8. போர்வீரர்கள் (Warriors) – Budhism Among Tamils in Precolonial Tamilagam and Ilam.

*9.* *பரிவாரம்* *(*Retinue) – Transactions of the Indian History Congress.

*10.* *அரசர்களோடு உடன் செல்பவர்கள்* (Duty of following the King) – The cult of Teyyam and Hero worship.

*11.* *அரசமாளிகைகளில் சேவையாற்றுவோர்* (Service in the sanctuary of Inner apartments of Palace) – Ceylon Journal of Science : Anthropology Section G-vol-1-2.

*12.* *நம்பிக்கையான சேவகர்* (Trusted Servants) – Journal of the Royal Asiatic Society of Srilanka volume : 35.

*13.* *கூலிப்படைப்பிரிவினர்* (Mercenary forces) – History of Srilanka, by W.I.Siriweera.

*14.* *படைப்பிரிவினர்* (Corps) History of Srilanka.

*15.* *சேனை* (Senava) - Selalihini Sandesa.

*16.* *தங்க உடைவாள் / குத்துவளோடு அரசரைச் சுற்றி நின்று பாதுகாப்பு அளிப்பவர்கள்* (Ran Siriban) – Selalihini Sandesa.

*17.* *அரச பாதுகாவலர்கள்* (Royal Escort) – The Nawab's Tears.

*18.* *அரசகாவலர்* (Royal Guard) - (Dis) Connected Empires.

*19.* *இராணுவ தளபதி* (Captains of Military) – Journal of the Royal Asiatic Society of Srilanka – vol 35.

*20.* *தற்கொலை படையினர்* (Suicide squad) – Al-Hind, The Slavic King and the Islamc conquest.

*சோழர்காலத்தில் தமிழ்ச்சமூகத்தில் அகமுடையார் என்னும் பிரிவினர் எழுச்சியுற்றிருந்தனர் என்று பதிவு செய்கிறார் திரு.க.த.திருநாவுக்கரசு அவர்கள் தனது "முதலாம் இராசராச சோழன்" நூலில்.*

*சிலோனின் சுருக்கமான வரலாறு என்ற ஆங்கில நூல் அகம்படிப்படைகள் இரண்டாம் பராக்கிரமபாகு ஆட்சிக் காலகட்டத்தில் மிகவும் முன்னிலையில் இருந்த படையினராகவும், இப்படை கடற்படையிலிருந்து வேறுபட்ட நிலம் சார்ந்த படையாக விளங்கியது என்பதைக் கீழ்க்கண்டவாறு பதிவு செய்கிறது.*

By Parakramabahu-II, Among the military forces, those named " Agampadi" figure Prominently in the records of the Period. They are contrasted with the naval forces and seem to have been territorial Units. Naval forces (Navani) as opposed to Land forces (Agampadi) are mentioned in the Nikaya sangraha (A Concise

History of Ceylon: From the Earliest Times to the Arrival of the Portuguese in 1505. by Cyril Wace Nicholas, Senarat Paranavitana).

*மேலே கண்ட கருத்தை தொடக்கம் முதல் (பொ.ஆ.) 1505 வரையிலான சிலோன் வரலாறு என்ற ஆங்கில நூலும் பதிவு செய்கிறது. பொலநுருவா காலகட்டத்தில் இருந்ததைப்போல் இறுதிவரை அகம்படிப்படைகள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த படையினராக விளங்கியது என்பதை* Agampadi Corps Continued to be an important Institution up to the end of the Period as it was in the Polannaruva Kingdom *என்று பதிவு செய்கிறது. அத்துடன் இதேநூல் இலங்கையில் சில தனிநபர்களுக்கு நிலத்தின் மீதான பாரம்பரிய உரிமையை உறுதிசெய்த "மடவளை" சாசனம், பத்து அகம்படியர்களின் முன்னிலையில் அவ்வாறான உரிமையை உறுதி செய்ததாகக் குறிப்பிடுகிறது.* (History of Ceylon : From the earliest times to 1505. by Hemchandra Ray).

*அகம்படியர்கள் நம்பிக்கைவாய்ந்த படையினராக அரண்மனைக்குள் பணியாற்றியதையும், படைப்பிரிவின் தளபதிகளாகச் செயல்பட்டதையும், இலங்கைக்கான இராயல் ஆசியாட்டிக் சொஸைட்டியின் இதழ் தெரிவிக்கிறது.* (Journal of the Royal Asiatic Society of Srilanka – volume 35, by Royal Asiatic Society of Srilanka-1992)

*அரண்மனைக்குள் சேவைபுரிபவர்களான அகம்படியர்கள், இராணுவப்படையினராக* (Military Force) *இருந்தனர் என்பதைச் சிலோன் அறிவியல் இதழ்பதிவு செய்கிறது.* (Ceylon Journal of Science : Anthropology Section – volume 1-2; 1928).

*ஒரே தன்மையுடைய போர்சமூகமாக அகம்படியர்கள் பரிணாமம் பெற்றதைக் காலத்தின் ஊடான இந்தியா என்ற ஆங்கில நூல் பதிவு செய்கிறது.* (India Through the Ages: History, Art. Culture and Religion – Volume I. by G.Kuppuram).

*சேரநாட்டில் சாவர்* (Chavers) *என்ற தற்கொலைப்படையினர், அகம்படியர்களாக, அரசர்களின் பாதுகாப்பிற்காக உடன் செல்பவர்கள் என்று நவாப்பின் கண்ணீர் என்ற ஆங்கிலநூல் கீழ்க்கண்டவாறு பதிவு செய்கிறது.* The Chavers were usually deployed as Akampati or Ceremonial escort for the King or his notables when they moved about in state (The Nawab's Tears by Ajitmani)

*தொடர்புடைய பேரரசு என்ற இலங்கைத் தொடர்பான ஆங்கிலநூல் இலங்கையில் செயல்பட்ட தென்னிந்தியப்படைப் பிரிவினர்களில், உயர்திறன் மிக்க போர்புரியும் படையினராக*

(Elite Troops in war) நெட்டி அகம்படிப் படையினரைக் குறிக்கிறது. அத்துடன் அரசப் பாதுகாப்பு படையினராக (Royal Guards) இராச அகம்படிப் படையினரைப் பதிவு செய்கிறது. ((Dis) Connected Empires: Imperial Portugal Srilankan Diplomacy and making of a Habsburg Conquest in Asia. by Zoltan Biedermann).

இந்திய வரலாற்றுப் பேரவையின் நடவடிக்கை தொடர்பான நூல் கேரளாவில் சமோரியன் அரசர்களுக்கு மெய்க்காவல் படையினராகச் செயல்பட்ட அறநோத்து (அறங்கோட்டு) ஸ்வரூபம் குடும்பத்தைச் சார்ந்த மூத்த கிளையின் கடனமன்ன இளையவகையில் வள்ளோத்திரி அகம்படிப்படையாகச் செயல்பட்டதைப் பதிவு செய்கிறது. "Katanna manna Ilayavakayil Valloti is stated as akampati (Escort/Retinue) of the Zamorin" – Proceeding of the Indian History Congress by Indian History Congress – 2001. தமிழர்களிடையே பௌத்தம் தொடர்பான ஆங்கிலநூல் இலங்கையின் ஆரம்பகாலத்தில் நிலைகொண்ட தமிழ்ப்படையினர்களைக் குறிப்பிடும்போது அவர்களை அகம்படிப் படையினராகக் குறிக்கிறது.

"One of the earliest references to the Presence of Tamil Warriors called AKAMPATI on the island" – Budhism Among Tamils in Precolonial Tamilagam and Ilam. by A.Velupillai).

கேரள மாநில கெஜட்டியர் அகம்படிப்படையை நிலைப்படையாகக் (Standing Army) குறிப்பிடுகிறது.

முனைவர் திரு.க.ரத்னம் அவர்கள் மொழிபெயர்த்த தென்னிந்தியாவின் மிகப்பெரிய இனஇயல் நூலான "தென்னிந்தியக் குலங்களும் குடிகளும்" நூலின் ஆசிரியர் திரு.எட்கர்தர்ஸ்டன் அவர்கள்,

"அகமுடையார் என்ற பெயர் பல பொருள் தரும் அகம் என்ற வேர்ச்சொல்லிலிருந்து வந்தது. அகம் என்பதன் பல பொருள்களில் வீடு என்பதும், நிலம் என்பதும் அடங்கும், அச்சொல் உடையார் என்ற விகுதி பெற்று வீடுடையார், நிலமுடையார் என்பது போல உரிமையை உணர்த்தும். அகமுடையார் என்ற சொல்லாக்கமும் அத்தகையதே, அச்சொல் "அகம்" என்பதன் மற்றொரு பொருளான உள்ளே என்பதன் பொருளமைய அகம்பாடியன் எனப் பொருள் கொள்ளப்பட்டு அரசர்களின் அரண்மனை, கோயில்கள் ஆகியவற்றில் உள்ளே காரியம் பார்க்கும் அதிகாரி எனப்பொருள் கொள்ளக்கூடியதாகவும் உள்ளது" என்று பதிவு செய்கிறார்.

*அகம்படி, அகம்படி முதலி என்னும் சொற்கள், சோழர் அரண்மனை நிர்வாகத்தில் மற்றும் படைப்பிரிவுகளில் பணியாற்றிய முதன்மை அலுவலர் / அதிகாரிகளைக்* (Chief Officers, Commanders) *குறிப்பிட வழங்கப்பட்டவை ஆகும். இத்தகைய பதவிகளில் பணியாற்றிய வீரர்கள் இருந்ததைக் கல்வெட்டுகள் மூலம் அறியமுடிகிறது என்ற குறிப்பைத் தருகிறார் "கங்கை கொண்ட சோழபுரம் கல்வெட்டுகள்" (பக்கம்: 179) நூலாசிரியர் டாக்டர் இல.தியாகராஜன் அவர்கள்.*

*அகப்பரிவாரத்தில் பணியாற்றினோர் பிற்காலத்தில் அகம்படியர் எனப்பட்டனர் என்கிறார் "ஆரியதிராவிடரும் அழிந்து போன தமிழ்ச்சங்கங்களும்" நூலின் ஆசிரியர் (பக்கம்: 28) திரு.ஜகன்நாதன் துரை அவர்கள். "அரசனது செல்வ வாழ்க்கைக்கு ஏற்பப் பரிசனங்கள் இருப்பார். அரசனுக்கு அணுக்கர் பலர் இருப்பர், அரசனது அலுவல்களைப் பார்க்க பலர், இவர் அகப்பரிவாரம் ஆவர்" என்ற குறிப்பைப் "பெரியபுராண வரலாறுகளும் முதுமொழி வெண்பாக்களும்" நூலின் (அண்ணாமலைப் பல்கலைக்கழகம் 1999) ஆசிரியர் திரு.க.மா.வெங்கட்ராமையா தருகிறார்.*

*அகப்பரிவாரம் என்பதற்கு அரண்மனைக்குரிய பணிமக்கள் என்பார் "கல்வெட்டுகள் காட்டும் கலைச்சொற்கள்: சோழர்காலம்" நூலாசிரியர் (பக்கம் 270) டாக்டர் திரு.ஆர்.கே.அழகேசன் அவர்கள். அகப்பரிவாரம் என்பதற்கு அரண்மனை பணியாளர் குழுவில் ஒன்று என்று குறிப்பிடுகிறார் திரு.ஒய்.சுப்பராயலு (தமிழ்க் கல்வெட்டுச் சொல்லகராதி).*

*"கல்வெட்டுக்கலைச்சொல் அகரமுதலி" நூலின் ஆசிரியர் திரு.சி.கோவிந்தராசன் அவர்கள் (மதுரை காமராஜர் பல்கலைக் கழகம்) அகப்பரிவாரம் என்பதற்கு அரண்மனையில் பணிசெய்யும் அதிகாரிகளுள்ளிட்ட குழுவினர், அந்தரங்க பணியாளர்கள் என்று பதிவு செய்கிறார்.*

*அரசனின் அரண்மனைப் பணிகள் அனைத்தையும் மேற்பார்வையிட அதிகாரிகள் இருந்தனர். அந்த அதிகாரிகள் திருவாசல்முதலி என்றும், அகப்பரிவார முதலி என்றும் அழைக்கப்பட்டனர். அரசருக்கு அருகில் இருந்து வேலையைச்செய்யும் பணியாளர்களை மேற்பார்வையிடும் அதிகாரியை "மாளிகைத்தனம்" என்றனர் என்று "தமிழ்நாட்டு வரலாறு பாண்டியர் பெருவேந்தர் காலம்" நூல் பக்கம் 105*

இல் பதிவு செய்கிறது. அரசனின் பரிவாரத்தினை (The Chief's entourage of the house) அகப்பரிவாரம் அல்லது அகம்படி என்று குறிப்பிடுகிறார் "பாண்டியன் டவுன்ஷிப்" (The Pandiyan Township Vol-2 Page 191) ஆசிரியர் திரு.ஆர்.திருமலை அய்.ஏ.எஸ் (ஓய்வு) அவர்கள். அகப்பரிவார முதலிகள் என்பதற்கு அரசனின் சொந்தப் பணியை மேற்கொண்ட அதிகாரிகள் என்று டாக்டர் சி.செல்வராஜ் அவர்கள் தனது "தமிழ் ஆட்சிச் சொற்கள்" நூலில் குறிப்பிடுகிறார். மேலும் அவர் அகப்பரிவாரம் என்பதற்கு அந்தரங்கப் பணியாளர்கள் என்கிறார்.

டாக்டர் இல.தியாகராஜன் அவர்கள் தனது "கங்கைகொண்ட சோழபுரம் கல்வெட்டுகள்" நூலில் அகப்பரிவாரம் பற்றிக் கீழ்க்கண்டவாறு பதிவு செய்கிறார்.

அரண்மனையின் அகப்பகுதியைக் (உட்பகுதி) காவல் காப்பதற்கு என அகம்படி, கைக்கோளர், அகப்பரிவாரத்தார் என்னும் வீரர்கள் மற்றும் அதிகாரிகள் கூட்டம் இருந்துள்ளது. (பக்கம்: 48) மேலும் அவர், சோழர் காலத்தில் பரிவாரத்தார், அகப்பரிவாரத்தார், கைக்கோளர், நியாயத்தார், சிறுதனம், பெருந்தனம் என்னும் பல நிலைகளில் இராணுவத்தினர் பணியாற்றியதை அறிகிறோம் என்று பதிவுசெய்கிறார் (பக்கம் 59). மேலும் அவர் பெரிய அகப்பரிவாரம் என்பது அரசன், அரசியரோடு உடன் செல்லும் அதிகாரிகள், அமைச்சர்கள், படைவீரர்கள், பணியாளர் ஆகியோர் கொண்டகுழு ஆகும். இத்தகைய பரிவாரம் கங்கைகொண்ட சோழபுரத்தில் இருந்ததைக் கல்வெட்டுகளால் அறிய முடிகிறது என்று குறிப்பிடுகிறார் (பக்கம் 192).

இரண்டாம் இராஜாதிராஜனின் 13ஆம் (கி.பி.1179) ஆட்சியாண்டு, கொறுக்கை (மாயவரம் வட்டம்) வீரட்டானேஸ்வரர் கோயில் கல்வெட்டு (கல்வெட்டு ஆண்டு அறிக்கை 228/1971) பெரிய அகப்பரிவாரப் பெண்டுகளில் ஒருவரான அரையன் உமையாழ்வி என்ற பெண்மணியைப்பற்றிக் குறிப்பிடுகிறது. இவர் இவ்வூர் கோயிலுக்கு இறைத்திருமேனியைச் செய்தளித்து, கொடையும் அளித்ததை அறிய முடிகிறது.

"தமிழ் கல்வெட்டுகள் வெளிச்சமிடுகின்ற அரிய உண்மைகள்" என்ற நூலில் அதன் ஆசிரியர் முனைவர் திரு.வஞ்சியூர் க.பன்னீர்செல்வம் அவர்கள் அகம்படியர் பற்றிக் கீழ்க்கண்டவாறு பதிவுசெய்கிறார்.

திருக்கோயில்கள் மற்றும் அரண்மனைகளில் பணிபுரிந்தவர்களுக்கு அகம்படி முதலிகள் என்று பெயர் வழங்கி வந்துள்ளது. இவர்கள் அரண்மனையில் அணுக்கத்தொண்டு செய்துள்ளதால் அகம்படியர் என்ற பெயரில் அழைக்கப்பட்டுள்ளனர். அத்துடன் ஒரு நாட்டிலுள்ள நிலவியல் பிரிவில் நிர்வாகம் செய்தவர்களுக்கும் அகம்படி முதலிகள் என்ற பெயர் வழங்கிவந்துள்ளது. உதாரணத்திற்கு அகம்படி முதலிகள், அகம்படி சேனை முதலிகள், அகம்படி தனமுதலிகள், அகம்படி மறமுதலிகள் என்பவர்களையும், மண்டலங்களில் பணிபுரிந்தவர்களுக்கு மண்டல முதலிகள் என்றும், படைப்பிரிவில் பணியாற்றியவர்களுக்கு படைமுதலிகள் என்றும் பெயர் ஏற்பட்டதாக பக்கம் 236 மற்றும் 237இல் குறிப்பிடுகிறார்.

முதுபெரும் கல்வெட்டறிஞர் திரு.இரா.நாகசாமி அவர்கள் பதிப்பித்த மதுரை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு (வரலாற்றுப் பேரவை வெளியீடு) பக்கம் 66 இல் தமிழ்நாட்டின் தொல்குடிகளில் ஒன்றான அகமுடைய இனத்தார் வீரமும் தாளாண்மையும் உடைய இனக்குழுவினராகும் என்று குறிப்பிடுகிறது. அத்துடன்

“அகம்படி எனில் உள்தொண்டு என்று பொருள், அகம்படியர் உள்தொண்டு செய்வோர், அஃதாவது மன்னனது அரண்மனைக்கண் அவனது அணுக்கச்சுற்றமாக இருந்து ஊழியஞ்செய்வார்” என்று பதிவுசெய்யப்பட்டுள்ளது. “சங்க கால மறவர் ஒரு சமூகவியல் பார்வை” எனும் நூலின் (பக்கம்: 19) ஆசிரியர், டாக்டர் திரு.சு.முத்தையா அவர்கள் அகம்படியர் அரசர் அவையில் அகம்படித்தொண்டு செய்து வந்தவராவர், மெய்க்காப்பாளராக அணுக்கத்தொண்டு செய்பவர்களாக இவர்கள் இருந்ததாகப் பதிவு செய்கிறார்.

அணுக்கத்தொண்டு என்பதற்கு நெருங்கிய நிலையில் செய்யும் தொண்டு என்று டாக்டர் சு.சாமி ஐயா தனது சிவஞான முனிவரின் காஞ்சிப்புராணம் ஓர் ஆய்வு எனும் நூலில் குறிப்பிடுகிறார். அரசர் முதலியோரிடம் நெருங்கிப் பணிபுரிவோர், அந்தரங்க ஊழியர் அணுக்கர், அணுக்கியர் எனப்பட்டதாக வரலாற்றாய்வாளர் திரு.தி.ந.சுப்பிரமணியன் (கல்வெட்டுச் சொல்லகராதி) அவர்கள் குறிப்பிடுகிறார். அணுக்கர், அணுக்கியர் என்போர் அந்தரங்க ஊழியர் என்பார் திரு.ஏ.வேலுப்பிள்ளை தனது சாசனமும் தமிழும் நூலில். அணுக்கர், அணுக்கச்சேவகம் என்பதற்கு

தனிச்செயலாளர் (Personal Secretary) என்று விளக்கம் தருகிறார் "தமிழில் ஆட்சிச் சொற்கள்" நூலில் அதன் ஆசிரியர் டாக்டர் சி.செல்வராஜ்.

வீரசோழ அணுக்கர் என்பதற்கு சோழர்படைப் பிரிவுகளில் ஒன்று என்றும், வீரசோழ அணுக்கன் என்பதற்கு சோழராட்சியில் கோயில் காவலுக்காக நியமிக்கப்பட்ட வீரர் என்று கல்வெட்டுத்துறை பேராசிரியர் திரு.எ.சுப்பராயலு (தமிழ் கல்வெட்டுச்சொல்லகராதி) குறிப்பிடுகிறார்.

அணுக்கர் என்போர் வேளைக்காரர்கள் போன்ற ஒருவகைப் படைப்பிரிவினராக தெரிகிறது. இவர்கள் பெரும்படை, மகாதந்ரர், மற்றும் மகாசேனை என்று பலவகையாகக் குறிக்கப்படுகிறார்கள், ஒட்டுமொத்த இராணுவத்தில் சேர்க்கப்பட்டவர்கள் ஆவர் என்பதை இலங்கை வரலாற்றாசிரியர் திரு.எஸ்.பத்மநாதன் அவர்கள் எழுதிய "யாழ்ப்பாண அரசு" எனும் நூல் தெரிவிக்கிறது. மேலும் அவர் அணுக்கர் என்பதை தனது பெயர் அல்லது பட்டப்பெயருடன் சில இளவரசர்கள் அல்லது சிற்றரசர்கள் சூடிக்கொண்டதாகத்தெரிகிறது. இவர்கள் நம்மக்கள் என்று குறிக்கப்படுவதால் சோழ இளவரசர்களாக இருந்திருப்பார்கள் என்கிறார்.

இலங்கையில் மதிரிகிரியா (Madirigiriya)-இல் உள்ள இராஜேந்திர சோழன் கல்வெட்டு, பெரும்படை அணுக்கர் திருக்கோயிலுக்கு வழங்கிய கொடைபற்றிக் குறிப்பிடுகிறது. (Page 47, 49, The kingdom of Jaffna by S.Pathmanathan).

ஓசூர் அருள்மிகு சந்திரசூடேஸ்வரர் திருக்கோயில், வரலாறும், வழிபாடும் நூலாசிரியர் திரு.இரா.இராமகிருட்டிணன் (பக்கம்: 74) "வீரசோழ அணுக்கர் என்பார், சோழர் காலம் முதல் மெய்க்காவலராக இருந்தனர் என்று குறிப்பிடுவதுடன் இவர்கள் கோயில் ஆட்சிக்குழுவிலும், அங்கம் வகித்தனர்" என்றும் பதிவு செய்கிறார்.

சோழர் காலத்து அதிகாரிகளாக வீரசோழ அணுக்கன் என்ற பெயரில் காடன் மேல்வாயில், இளையாழ்வான் திருவிடைமருதூடையான் போன்றோர்களை திரு.இரா.ப.கருணானந்தன் (பக்கம்: 111) வேதாரணியம் நூலில் குறிப்பிடுகிறார்.

முதற்குலோத்துங்கனின், அதிகாரியாக விளங்கிய வீர அணுக்கன் மீது "வீர அணுக்கன் விசயம்" என்ற பெயரில் நாடக நூல் ஒன்று இயற்றப்பட்டது. இதனை இயற்றியவர் பூங்கோயில்

நம்பி ஆவான். உடுமலைப்பேட்டை கடத்தூர் அர்ச்சுனேஸ்வரர் கோவில் கல்வெட்டு அக்கோயிலுக்கு தூண்செய்தளித்த "அகம்படி வீரசோழ அனங்ககூற்றன்" என்பவனைக் குறிப்பிடுகிறது.

இராஜராஜசோழன் "அணுக்கபீமர்" என்ற படைப்பரிவினைக் கொண்டிருந்ததாகவும் அதன் தளபதியாக 'விடங்கன்' என்பவர் இருந்ததாகவும், இந்த விடங்கன் திருக்கழுக்குன்றம் அருகில் வீரபுரம் என்ற ஊரில் எழுந்தருளியுள்ள உச்சீசுவரர் கோயிலுக்கு உச்சி காலத்தில் அமுதுபடைக்க நிலம் தானமாக அளித்துள்ளான் என்பதைக் கல்வெட்டு காலாண்டிதழ் (எண் : 95, அக்டோபர் 2013) பதிவு செய்கிறது.

"கங்கைகொண்ட சோழபுரம் கல்வெட்டுகள்" நூலில் சோழர்கால அணுக்கியர்கள் பற்றி டாக்டர் இல.தியாகராஜன் பதிவு செய்கிறார். அதில் மன்னரிடம் பணியாற்றிய அணுக்கியர் பெயரில் அணுக்கி திரிபுவனமாதேவிப் பேரங்காடிப் பற்றிய குறிப்பினைத் தருகிறார். அத்துடன், கங்கைகொண்ட சோழபுரம் பிரகதீஸ்வரர் கோயில் கருவறை மேற்குச் சுவரில் இரண்டாம் குலோத்துங்கன் கால கல்வெட்டில் இக்கோயிலில் பல கைப்படை என்ற கட்டடப்பகுதியையும், கூத்தாடும் தேவரையும் செய்தளித்த செம்பிகுல மாணிக்கத்தார் என்ற அணுக்கியர் பற்றிய குறிப்பினையும் (பக்கம்: 105) தருகிறார். இராஜாதிராஜனிடம் அணுக்கியாகப்பணியாற்றிய பல்லவன் பட்டாலி நங்கையர் என்பவர் திருவிழிமிழலைக் கோயிலுக்கு பொன்வேய்ந்த செய்தியைப் பக்கம்:161 இல் பதிவு செய்கிறார்.

திரு.ஜான் பெர்ஹூசன் என்பவரின் "1983 இல் சிலோன்" என்ற ஆங்கில நூலில் கோயில் மற்றும் அரண்மனையில் எந்தவொரு காரியம் பார்பவர்கள் அகம்படியர் ஆவர் என்று குறிப்பிடுகிறது (பக்கம்: 461) (Ceylon in 1983 by John Ferguson).

ஆய்வாளர் பமேலா ஜீ.பிரைஸ் எழுதிய காலனிய இந்தியாவில் அரச பதவியும், அரசியல் நடைமுறைகளும் என்ற நூலில் அகம்படியர் என்பதற்கு அரண்மை சேவைக்கான வீரர்களைத் தரும் படை வீரர் சாதி என்று குறிப்பிடுகிறார். (A warrior caste allied with maravars, providing persons to service on palace staff (Page XIV).

இந்த அகமுடையார் பெயரே விளக்குவது போல் இவர்கள் அரசனின் பாதுகாவலராகவும், அரண்மனையின் பாதுகாவலராகவும் இருந்தனர் என்கிறார். "திரு.பி.எஸ்.பலிகா" தனது புதுக்கோட்டை மாவட்ட விபர நூலில் (The Agamudaiyars,

As The name indicates, Palace guard or kings guard by B.S.Baliga in Madras district Gazetteers – Pudukkottai District – Page 216)

*திரு.ஆனந்தபாண்டியன் அவர்களின் வளைந்த தண்டுகள் என்ற நூலில் அகம்படியர் என்பவர் வீரப்பாரம்பரியத்தைக் கொண்டுள்ள முதன்மையானச் சாதி என்று குறிப்பிடுகிறார்.* (Agambadiyar A Predominant caste in the southern Tamil Country commonly as bearing a warrior heritage along with kallar maravar, page 283, "Crooked stalks": Cultivating virtue in south India by Anandpandiyan).

*இலங்கை கல்வெட்டறிஞர் திரு.எ.வேலுப்பிள்ளை அவர்கள் தனது "இலங்கைத் தமிழ்க் கல்வெட்டுகள்" எனும் நூலில் (பக்கம் 32,33,34) அகம்படி என்போர் அரண்மனைக்குள் சேவையாற்றுவோர் என்று குறிப்பிடுவதுடன், அகம்படிப்படை என்பது மிகவும் சக்திவாய்ந்த ஒன்று என்றும் பதிவு செய்கிறார்.* (The word "Akampati" means service in inner Apartment of the palace …… In History of Ceylon, 'Agampati corps' were very powerful at about time, A.Velluppillai – Ceylon Tamil inscriptions).

*அகம்படியர் அரசனின் அரண்மனையின்கண் சேவையாற்றுவோர் என்றும், அரசனின் மெய்க்காவலர் என்றும், அதற்காக நிலங்களைப் பெற்றனர் என்றும் குறிப்பிடுகிறார் திரு.A.ஜெயரத்னம் வில்சன் தனது "இலங்கை தமிழ்த் தேசியம்" (பக்கம்:18) என்ற ஆங்கில நூலில்.*

*இலங்கைத் தமிழரின் ஒரு இன அடையாளப் பரிணாமம் என்ற ஆங்கில நூலின் ஆசிரியர் திரு.கார்த்திகேசு இந்திரபாலா அவர்கள் அரசர் உறையும் அரண்மனையில் மெய்க்காவலராகவும், பாதுகாவலராகவும் தோன்றிய இவர்கள் பின்னர் ஒரு இராணுவ போர்மரபு சாதியாகப் பரிணாமம் பெற்றனர் என்று குறிப்பிடுகிறார்.* (Page:243, The Evolution of an Ethnic identity The Tamils in Srilanka (300 to BCE to 1200 CE by Karti Kesu Indrapala).

*படைப்பிரிவில் அங்கம் வகிப்பதற்கென்று உருவான சாதிகளில் ஒன்றாக அகம்படியர்களைக் குறிப்பார், சமூகநீதி நூலின் ஆசிரியர் திரு.கா.நெடுஞ்செழியன் (பக்கம்:92).*

*திரு.கே.வி.கிருஷ்ண ஐயர் எழுதிய கோழிக்கோடு சமோரியன் பற்றிய நூல் அகம்படிஜனம் என்பதற்கு மெய்க்காவலர்* (Body Guard) *என்று குறிப்பிடுகிறது* (Page 101, The Zamorins of calicut from The Earliest to AD1806 by K.V.Krishna Aiyar) *அதேபோல் பி.ஜே. ஜெரியன் எழுதிய வில்லியம் லோகன்ஸ் மலபார் மானுவல்*

நூலும் அகம்படி என்பதற்கு மெய்க்காவல் என்று பதிவு செய்கிறது (Page 723, Williamlogans Malabar Manual by P.J.Cherian).

இதேபோல் பிலிப் பி.ஜரிலி என்ற ஆய்வாளர், அரசனின் பரிவாரமாக அகம்படி என்பதைக் குறிப்பிடுகிறார். அத்துடன் அகம்படிப்படையினர் அரசனைப் பாதுகாப்பதன் பொருட்டு சாவினையும் ஏற்பது என்ற உறுதிமொழியோடு மன்னரின் அகம்படிப்பிரிவில் சேர்ந்தனர். இந்த வழக்கம் சேர மன்னர் காலத்திலிருந்து இருப்பதையும் இவ்வாசிரியர் பதிவு செய்கிறார். (When The Body becomes all eyes paradigms Discourse and Practices of Power in Kalarippayattu, A South Indian Martial Art. by Phillip B. Zarrilli)

கம்ப இராமாயணம், சுந்தரகாண்டம், பாசப்படலம், (பாடல் எண்: 5743) பாடலுக்கு உரை எழுதிய திரு.வை.மு.கோபாலகிருஷ்ணர் கீழ்க்காணும் பாடலில் வரும் அகம்படி வீரர்கள் என்பதற்கு உரிமைத்தொழில் செய்யும் வீரர்கள் என்றும், போர் செய்வோருக்கு வேண்டும் உதவிகளைச் செய்யும் வீரர்கள் என்றும் குறிப்பிடுகிறார்.

“நுகம் படுதேர் அவை நூற்று இருகோடி,
யுகம் பிறிது ஒன்று வந்து உற்றது என்ன
அகம்படு காவில் அரக்கர்கள் இன்னம்
அகம்படிவீரர்கள் ஐ இரு வெள்ளம்..”

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி2 இல் பக்கம் 646 இல் அகமுடையார் பற்றிய குறிப்புப்பாடல் இடம் பெற்றுள்ளது.

“குகன்தனையீன்ற பச்சைக் குயிலகத்துற்ற வாற்றால்
அகமுடையவர் களென்று மவனியிலுதித்த சீரால்”

அகமுடையார்கள் முருகனை (குகன்) ஈன்ற பார்வதி தேவியின் வயிற்றில் தோன்றிய வம்சத்தவர்களாகக் குறிக்கப்பெறுகிறது. கழக வெளியீடான சிற்றிலக்கிய சொற்பொழிவுகள் (பேராசிரியர் பதின்மர் சொற்பொழிவு) நூல், தேவியின் (பராசக்தியின்) பரிசனங்களாக பயிரவர், யோகினிகள், பதாகினிகள், இடாகினிகள், சாதகர்கள் ஆகியோருடன் அகம்படியர்களையும் குறிப்பிடுகிறது.

பதினொன்றாம் திருமுறைக்கு உரை எழுதிய சி.அருணை வடிவேல் முதலியார், பாடல் எண்.2இல் “பிறையணிந்த துப்பர்க்

குரிமைத்தொழில் புரிவோர்'' என்பதில் உரிமைத்தொழில் என்பதற்கு அகம்படித்தொண்டு, அணுக்கத்தொண்டு என்று விளக்கம் தருகிறார்.

திருவொற்றியூரான் அடிமை என்னும், திரு.த.ப.இராமசாமிப்பிள்ளை அவர்களால் பதிப்பிக்கப்பெற்ற "கிருஷ்ண எசுர்வேதம் தைத்திரீய சங்கிதை'' என்ற நூலில் அதன் ஆசிரியர் வேதமொழி பெயர்பாளர் காசிவாசி உயர்திரு. சிவானந்த யதீந்திர சுவாமி அவர்களின் சரித்திரச் சுருக்கத்தில்.

மலை மண்டலம், கொங்கு மண்டலம் எனவும், அகநாடு, மலைநாடு, சேரநாடு எனவும், குடதிசை எனவும், வழங்கப்பெறும் சேரமண்டலத்தை யாண்ட சேரமன்னர்களின் குலத்தைச் சார்ந்த பழங்குடியாகிய அகமுடையத் தேவர் குடிகள் (பக்கம்: 8) என்றும்,

சேர அரசனான சேரமான் பெருமாள் நாயனாரின் குலம் இக்குலமே (அகம்படியர்) யென்பதையுங் காண்க. இச்சேரமான் பெருமாள் நாயனார், பரமசிவனுக்கு அகம்மடித் தொண்டில் மிகச்சிறப்புற்றவராதலின் இக்குலத்தார்க்கு அகம்படியர் என்னும் மாபெருஞ் சிறப்புப் பெயரும் வந்ததாமென்க.

மதுரைச் சுந்தரானந்தரும், மீனாட்சியும் அகம்படிச்சேர மன்னன் கிளையிற்றோன்றியவர்களே யாவர் (பக்கம் 9).

சென்னையில் வசித்த சென்னியப்பன் என்னும் அகம்படித்தேவரே பச்சையப்ப முதலியாராவர். இவரின் மரபினர்களே, பொன்னேரி முதலியார், பூந்தமல்லி முதலியார் மற்றும் பிரபுடதேவர், வல்லாளன் என்பவர்களும் இம்மரபினர்களே (பக்கம் 10) என்று பதிவு செய்யப்பட்டுள்ளது. மேலும் இதே பதிப்பாசிரியர் பதிப்பித்த "சாமவேத சங்கீதை பூர்வார்ச்சிகம், சாயணபாடியம்'' என்ற வேதமொழிபெயர்ப்பு நூலிலும் பக்கம் : 3 இல்

பழந்தமிழ் வாணரென்று பாரெலாங் கூற நிற்க (20)
மொழிந்திடு மூவேந்தர்தம் முதற்குடி தன்னிற்றோன்றி,
யிழந்திடா தவர்த மக்கு வினியபே ரரசு தந்த
வீரரென் றுரைக்க நிற்கும் விறன்மிகு குடியா மிஃதைச்
சீரிய வறிஞர் தாமுஞ் செப்புவர் சிறப்பதாக
வாரியர் பகுப்பாற் றோன்றா <u>வகமுடையார்க</u> ளென்று
பூரிய மிவர்க ளின்றேற் போனது தெரியா தன்றே

இங்கிவர் குலமே யிந்திர குலமென விசைப்பர் மேலோ

ரெங்கிவர் பெருமை தன்னை யாமெடுத்தியம்ப லா°............ (23)

என்ற அகமுடையார்கள் பற்றிய பதிவினைக் காணமுடிகிறது.

திருவாவடுதுறை ஆதீன வித்துவான் திரு.க.வச்சிரவேல் முதலியார் தனது திருமூலர் திருமந்திரம் உரையில் "அகத்திற்கு படிந்து நிற்பது அகம்படி எனப்பட்டது என்று குறிப்பிடுவதுடன் "திருஅகம்படியரே" என்பதற்கு அழகிய சித்தமுடைய பரிவாரங்களாம் என்கிறார்.

திரு.உமாபதிசிவாச்சாரியர் எழுதிய "கோயிற்புராணம் மூலமும் உரையும்" நூலில் அகம்படிமைப் பதினாராயிரவர் துதி குறிப்பிடப்பட்டுள்ளது. அதில் அகம்படியர் சிறப்பு விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

"மல்குபுகழ் நடராசன் வளர்கோயில கலாது

பல்கிளை ஞருடனுரிமைப் பணிசெய்யும் பரிவினராய்க்

கல்விகளின் மிகுமெல்லைக் கருத்தினரை நிருத்தனருட்

செல்வமலியகம்படிமைத் திரலினர்தம் பதம் போற்றி"

மிகுத்துச் சொல்லுஞ் சிவகீர்த்தியையுடைய நடேசமூர்த்தியின் சிவதர்மம் வளரும் திருக்கோயிலை நீங்காமல் பலகிளைஞருடைய தங்களுக்கமைத்த ஊழியன்களைப் பரிவுடனே செய்யும் பக்திமான்களும் கல்விகளினாலே மிகுந்த நிலையான கருத்தையுடையவர்களும் தம்பிரானாருடைய அருளாகிய சம்பத்து மிகுந்த ஞான வீரத்தையுடைவர்களுமாகிய திருவகம்படியரான பதினாறாயிரவர் திருவடிகளைப் போற்றுகின்றேன்.

திருக்களர் மு.சுவாமிநாத உபாத்தியாயர் எழுதிய சைவ சமயமும், தமிழ்பாடையும் என்னும் நூலில் (பக்கம்: 1) அகம்படியர்களை, "பரமசிவனுக்கு வழி வழி அகம்படித் தொண்டு பூண்டொழுகும் அகம்படியர் மரபு" என்று குறிப்பிட்டு அகம்படியருக்கும் சைவத்திற்கும் திருக்கோயிலுக்குமான தொடர்பை உறுதிபடுத்துகிறார்.

**உள்வீட்டுக்கோயில் சேவகர்**

உள்வீட்டுக் கோயில் சேவகர் என்பவர் அரண்மனையில் பணிபுரிந்தப் போர் வீரர் என்று குறிப்பிடுவதுடன் இவர்களை

அகம்படியர் அல்லது மனைமகன் என்று குறிப்பிடுகிறார், "நடுகற்கள்" என்ற நூலின் ஆசிரியர் சரித்திரச்செம்மல் திரு.ச.கிருஷ்ணமூர்த்தி அவர்கள். இதனை கி.பி.889 ஆண்டைச்சேர்ந்த கழுகுமலையில் (கோவில்பட்டி) கிடைக்கும் முற்காலப்பாண்டியர் கால நடுகல் கொண்டு அவர் குறிப்பிடுகிறார். இதில் ஆய்குல மன்னன் கருநந்தனுக்கும் கோமாறஞ் சடையன் என்ற பாண்டிய மன்னனுக்கும் இடையிலான போரில் எட்டி மன்னனான மங்கல ஏனாதி சார்பில் பங்கேற்ற பூந்தண்மலி வினையத் தொழுகுரன் என்பவரும் பேரெயில் குடிச்சாதன் நக்கன் என்பவரும் உள்வீட்டுக் கோயில் சேவகராக அறியப்படுகிறார்கள்.

**மனைமகன்**

கி.பி.8 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சிவமாரனாகிய கொங்கணி அரசனுடைய வரதம்பட்டி நத்தமேடு நடுகல்லில் மனைமகன் என்பது குறிப்பிடப்படுவதைச் சரித்திரச் செம்மல் திரு.ச.கிருஷ்ணமூர்த்தி தனது நடுகற்கள் என்ற நூலில் குறிப்பிடுகிறார். மேலும் அவர் சேவகன் என்பதற்குப் பதில் மனைமகன் என்ற இச்சொல் வந்துள்ளதாகவும் குறிப்பிடுகிறார். அத்துடன் மனைமகன் என்ற சொல்லே சோழர் காலத்தில் அகம்படியார், அல்லது அகம்படிமுதலி என்று மாறியது போலும், என்றவாறு பதிவு செய்கிறார்.

பழங்காலத்தில் அரண்மனை அந்தப்புரக் காவலில் அகம்படியர் இருந்துள்ளனர். பிற்காலச் சோழர்கள் அதிகாரிகளாக எத்தனையோ அகம்படியர் இருந்துள்ளனர் என்று பதிவு செய்கிறார், சரித்திரச் செம்மல் திரு.ச.கிருஷ்ணமூர்த்தி ("கல்வெட்டுகளில் ஊரும் பேரும்" பக்கம்68) அவர்கள்.

**ஏழகப்படை**

கி.பி.பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பாண்டிய நாட்டில் நடைபெற்ற பெரியதோர் போரிலிருந்து, ஏழகம், ஏழகத்தார், ஏழகப்படை முதலியன அறியப்படுகிறது. இலங்கையைச் சேர்ந்த தமிழறிஞர், திரு.தென்புலோலியூர் கணபதிப்பிள்ளை அவர்கள் தனது "வான்மீகியார் தமிழரே" எனும் நூலில் பக்கம் 22 இல் இப்படைப்பற்றிக் கீழ்க் கண்டவாறு குறிப்பிடுகிறார்.

"மறப்படையுடன் ஏழகப்படை சிறைப்பட்டு விழத்தடிந்து" எனவரும் பகுதியும், ஏழகத்தினைக் குறிப்பிடுவதாய் "ஏழகப்படை"

கொண்டதாய் உள்ளது. இந்த ஏழகப்படை உண்மையில் பாண்டிய நாட்டுப்படையாகும். இந்தப்படையில் இருவகை இருந்ததென ஊகிக்கலாம். ஒன்று, வெளியே பிற புலங்களுக்குச் சென்று தாக்குகின்ற படை அது மறப்படை அல்லது புறப்படை, மற்றையது "அகப்படை" அது உள்நாட்டிலிருந்து வெளிநாட்டார் தாக்குதல்களைத் தடுத்து நாட்டினைக் காப்பாற்றும் படை.

இப்படையினரின் வழித்தோன்றல்களே மறவர் என்றும், அகம்படியர் எனவும் குறிக்கப்பட்டனர் எனக் கொள்ளலாம். இந்த ஏழகத்தார் பாண்டியநாட்டு ஏழகத்தார் எனக்குறிக்கப்படுவதால் அவர்கள் பாண்டிநாட்டில் மட்டுமின்றி வேறு இடத்திலும் இருந்து வந்தார்கள் என்பது தெரிகின்றது. இதே கருத்தை திரு.சா.கணேசன் அவர்கள் கலைமகள் இதழில் எழுதிய ஏழகப்படை என்ற கட்டுரையின் மூலம் பிரதிபலிக்கிறார். அதில்

காரைக்குடியை ஒட்டிய ஒரு சிற்றூர் "கழனிவாயில்" இங்கு ஓர் பாழடைந்த பெருமாள் கோயில் உள்ளது. இந்த ஊர் மிகவும் பழமையானது. இவ்வூர் கோட்டையும், கொத்தளமும் அங்காடியுமாய் விளங்கியது. இங்கு ஒரு பெரும்படை இருந்தது. இந்தப்படையின் பெயரைக் கேட்டாலே எதிரிகள் திடுக்கிடுவார்கள். அந்தப்படைக்கு ஏழகப்படை என்று பெயர். 12ஆம் நூற்றாண்டுக்கு முன் வரையில் இந்தப்படை ஈடும் இணையுமற்றுத் தனிப்புகழ் கொண்டு விளங்கியது.

வணிகர்கள் வாழ்ந்தப் பகுதிக்கு ஏழகப்பெருந்தெரு என்று பெயராகும். இங்குள்ள பெருமாள் கோயிலுக்கு ஏழகப்பெருமாள் விண்ணகரம் என்பதே திருநாமம். இதற்கு வீரபாண்டியபுரம் என்ற மற்றொரு பெயரும் ஏற்பட்டது. அதனால் இதை ஏழகப்பெருந்தெருவான வீரபாண்டியபுரம் என்றோ, ஏழகச்சக்ரவர்த்திப் பெருந்தெருவான வீரபாண்டியபுரம் என்றே இணைத்துக் குறிப்பிடுவது சாசன வழக்காகிவிட்டது. இங்கே வசித்த நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் தொகை நிலையில் ஐந்நூற்றுவர் என்றும், வகைநிலையில் ஏழுவகையார் அல்லது ஏழகத்தார் என்றும் குறிப்பிடப்பெற்றார்கள். அவருள் ஒரு வகையினரான வயிரவன் கோவிலாருக்கு ஏழகப்பெருந்தெருவான வீரபாண்டியபுரமுடையார் என்றே கோத்திரப் பெயர் வழங்கி வருகிறது.

பாண்டிய நாட்டுப்படை இருவகையாக அமைக்கப்பட்டிருந்தது. ஒன்று மறப்படை அதாவது (Offensive force) வெளிப்போந்து

தாக்குகிறவர்கள். மற்றொன்று அகப்படை அதாவது (Deffensive force) உள்நின்று வெளியார்தாக்குதலைத் தடுத்து நாட்டைக் காப்பவர்கள். அவ்விருவகையினர் சந்ததியார்களே இன்று மறவர் என்றும், அகம்படையர் அல்லது அகம்படியர் என்றும் முறையே குறிக்கப்பெறும் குலத்தினராக வேண்டும்.

அந்த அகப்படையின் மிக்க ஆற்றல் கொண்ட பகுதி இங்கே வைக்கப்பட்டிருந்தது. ஏழகத்தில் இருந்த காரணத்தால் அந்தப்படைக்கு ஏழகப்படை என்று பெயர்வழங்கி வந்திருக்கிறது". என்று பதிவு செய்கிறார்.

ஏழகத்தார் என்பவர்கள் ஒரு போர் மரபுச்சாதி என்று பேராசிரியர் திரு.எ.சுப்பராயலு அவர்கள் "தமிழ்க்கல்வெட்டுச் சொல்லகரதியில்" குறிப்பிடுகிறார். ஏழகத்தார் என்பதற்குப் படை வகுப்பாருள் ஒரு வகையார் என்று சென்னைப் பல்கலைக்கழகத் தழிழ்ப் பேரகராதி குறிப்பிடுகிறது. பொதுஆண்டு 1180 இல் திருவேடகத்தில் சோழர்படைகளை எதிர்த்து வீரபாண்டியனின் பாண்டியப் படையில் ஏழகப்படைகளும், மறவர் படைகளும் வியத்தகு வீரசூரச் செயல்களாற்றி முழுமூச்சுடன் போர்செய்து அழிந்ததாகப் பன்மொழிப்புலவர் திரு.கா.அப்பாத்துரையார், தனது தென்னாட்டுப் போர்க்களங்கள் நூலில் பதிவுசெய்கிறார். மேலும் அவர் பொது ஆண்டு 1202 இல் மூன்றாம் குலோத்துங்கனின் பாண்டியநாட்டின் மீதான படையெடுப்பில் மட்டியூர், கழிக்கோட்டைப் போர்களில் பாண்டியன் ஏழகப்படையும், மறப்படையும் புறங்காட்டி ஓடின என்று ஏழகப்படையின் அழிவுகளையும் பதிவுசெய்கிறார். இந்த மட்டியூர் கழிக்கோட்டை என்பது பிரான் மலைக்கு அருகில் அமைந்ததாக திரு.சா.கணேசன் குறிப்பிடுகிறார் (பிள்ளையார்பட்டி தலவரலாறு). அகம்படியர்களைக் காவல்படையினர் என்று பதிவு செய்கிறார். திரு.கருமுத்து தியாகராஜன் அவர்கள் தனது வான்புகழ் வள்ளுவர் நூலில் (தொகுதி 46, பக்கம் 158).

அகப்படை என்பதை நம்பகமான படை, அந்தரங்க சேனை என்று குறிப்பிடுகிறது செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி (பக்கம்: 43). "போரியல் : அன்றும், இன்றும்" நூலின் ஆசிரியர் திரு.தங்கன்கந்தசாமி, (பக்கம் 49,55,57) அவர்கள் உட்பகை போக்கி, உள்நாட்டு காவலுக்குரிய அகப்படை என்றும், மேலும் அமர் வேலையிலும், அமைதிப் பொழுதிலும் அல்லும் பகலும் பணியாற்றக் கூடியது என்று குறிப்பிடுகிறார். அத்துடன் நிலைப்படை நிறுத்தப்பட்ட நகர் படைவீடு

என்றும், அகப்படை நிறுத்தப்பட்ட பகுதி படைப்பற்று என்று குறிக்கிறார். அகப்படையை மூலப்படையாக குறிப்பிடுகிறது, ஆறுமுக நாவலரின் சூடாமணிநிகண்டு. வில்லிபாரதம் ஆரண்ய, விராட உத்தியோக பருவதங்கள் தொகுதி 2 இல் (ஆசிரியர் திரு.கே.இராசகோபாலச்சாரியார்) தமது அகப்படை என்பதற்குத் தமக்குச் சொந்தமான மூலப்படை என்று குறிப்பிடப்படுகிறது.

இராகவன் அரங்கராஜன் எழுதிய "திவாய்மொழி பேருரையாளர் நம்பிள்ளை உரைத்திறன்" நூலில் அகப்படை என்பது அந்தரங்கமான சேனை என்று குறிப்பிடப்படுவதுடன், பழையபடியார் அகம்படி வைத்த அரசு என்றும் குறிப்பிடப்படுகிறது. திரு.கிருஷ்ணசாமி பாண்டுரங்கன் எழுதிய பண்டைத்தமிழர் போரியல் வாழ்க்கையும் தற்காலப்போர் நடவடிக்கையும் எனும் நூலில் (பக்கம் 199) தொல்படை என்பதை மூலப்படை என்று குறிக்கிறார். திருமதி சசிவள்ளி அவர்கள் எழுதிய பண்டைய தமிழர் தொழில்கள் நூலில் (பக்கம்: 204) அரசனைச்சூழ்ந்து வரும் பெரிய சேனைவீரர் மூலப்படை எனப்படும் என்று குறிப்பிடுகிறார்.

இந்த மூலப்படை வாழையடி வாழை போல மன்னர்க்குப் படைத் தொழிலாற்றும் மறக்குலத்தினர் என்றும், பரம்பரையாற் பெற்ற பேராண்மையும், மனத்தின்மையும் உடையவர் என்றும், பகைவரது வெம்மையைத் தாங்கி நிலைகுலையாது நின்றுபோரிடும் தம்மையர் என்றும் பதிவுசெய்கிறார். டாக்டர் ரா.பி.சேதுப்பிள்ளை அவர்கள், மேலும் இத்தகைய மூலப்படையைத் தொல்படை என்று திருவள்ளுவர் குறிப்பிடுவதாகவும் சுட்டிக்காட்டுகிறார்.

அகத்தார் என்பதற்கு அரண்மனையைச் சேர்ந்தவர் என்றும், அகம்படி என்பதற்கு அகம்படிச் சாதியைச் சேர்ந்த வீரர் என்றும், அகம்படியார் என்பதற்கு அகம்படி இனத்தைச் சேர்ந்தவர் என்றும், அகப்பரிவாரம் என்பதற்கு அரண்மனை பணியாளர் குழுவில் ஒன்று என்றும், அகம்படிமற முதலி என்பதற்கு அகம்படி மறவர் என்ற வீரர்களுக்குத் தலைவன் என்றும் விளக்கம் தருகிறார் கல்வெட்டியல் பேராசிரியர் திரு.ஒய்.சுப்பராயலு அவர்கள் (தமிழ்க் கல்வெட்டுச் சொல்லகராதி, முதல் தொகுதி சாந்தி சாதன). மேலும் அவர் அணுக்கர் என்பதற்கு நெருங்கிய ஊழியர் என்றும், அணுக்கப்பிள்ளை என்பதற்குப் பாண்டியர் ஆட்சியில் அரசு அலுவலர் என்றும் குறிப்பிடுகிறார்.

இலங்கைக் கல்வெட்டு அறிஞர் திரு.சி.பத்மநாதன் அவர்கள் தனது இலங்கைத் தமிழ்ச் சாசனங்கள், ஈழத்து இலக்கியமும் வரலாறும் போன்ற நூல்களில் அகம்படியர் பற்றிய விரிவான ஆய்வுரைகளை வழங்கியுள்ளார். அவர் தனது இலங்கை தமிழ் சாசனங்கள் நூலில் (பக்கம் 262 இருந்து 265 வரை) அகம்படியர் பற்றி இவ்வாறு பதிவு செய்கிறார். அகம்படியர் என்பது தமிழர் சமுதாயத்தில் ஒரு சமூகப் பிரிவினரின் பெயராக வழங்கி வருகின்றது. இலங்கையில் அவர்கள் வெள்ளாளர் என்போரில் ஒரு பிரிவினராவர். மத்திய காலச் சாசனங்கள் பல படைகளிற் சேவைபுரிந்த அகம்படி என்னும் ஒரு பிரிவினரைப்பற்றி குறிப்பிடுகின்றன. அவர்கள் அரசப்படைகளிலும் ஆலயங்களிலும் சேவைபுரிந்தனர். பிற்காலச் சோழர்கள் இராணுவத்தில் அகம்படி நியாயம் என்னும் படைப்பிரிவுசிறப்பிடம் பெற்றிருந்தது. ஆயிரத்தளி அரண்மனையில் அரசு குடும்பத்தவர் தங்கியிருந்த பொழுது அங்குள்ள படைகளில் அகம்படி நியாயம் முதன்மை நிலையில் விளங்கியது என்பதைப் பல்லவராயன் பேட்டைக் கல்வெட்டின் மூலம் அறியமுடிகிறது.

பாண்டியரின் படைகளிலும் அகம்படி என்னும் படைப்பிரிவினர் சேவை புரிந்தனர். அகம்படி முதலிகளில் ஒருவனான உதையன் புவனசிங்கதேவன் ஏற்படுத்திய அறக்கட்டளைகள் பற்றிய பல சாசனக் குறிப்புகள் உள்ளன.

இலங்கையிலும் அரசப்படைகளில் அகம்படியர் ஒரு பிரதானமான பிரிவாக அமைந்திருந்தனர். பன்னிரண்டாம் நூற்றாண்டு முதலாக அவர்களைப் பற்றிய குறிப்புகள் நூல்களிலும் சாசனங்களிலும் காணப்படுகிறது.

அகம்படியார் என்போர் மாளிகைகளிலும், வீடுகளிலும் பணிபுரியும் மக்கள் என்ற கருத்து நவீன காலத்தில் அழுத்தம் பெற்றுள்ளது. அகமுடையான் என வழங்கும் சொல் இக்கருத்து உருவாகி நிலை பெறுவதற்கு ஓரளவில் ஏதுவாகிவிட்டது.

அகமுடையான் என்பது அகம்படியன் என்பதன் திரிபாகலாம், அந்தத்திரிபும் பாமர வழக்கில் ஏற்பட்டவொன்று. அகம்படியார் மாளிகையிலும் மனையகத்தும் குற்றேவல் புரிகின்ற பணிமக்கள் என்ற கருத்து அகராதிகளின் தொகுப்பாசிரியர்களுக்கும் ஏற்புடையதாகிவிட்டது.

அகம்படியர் பற்றி இந்நாட்களில் வழங்கும் கருத்துக்குச் சாசனக் குறிப்புகள் ஆதாரமாக அமையவில்லை. சாசனங்கள் குறிப்பிடும்

அகம்படியார் படைவீரராகவே காணப்படுகின்றனர். மத்திய காலத் தமிழகத்தின் இராணுவ அமைப்புகள் சீர்குலைந்த பின்னர் வன்னியர் செங்குந்தர் என்போரைப் போல அகம்படியரும் வேறு தொழில்களில் ஈடுபாடு கொண்டனர். ஆயினும் ஒரு தனியான சமூகப்பிரிவாக அவர்கள் நெடுங்காலம் நிலைப்பெற்றனர்.

அகம்படி என்னும் சொல்லை அஹன் என்னும் சமஸ்கிருதச்சொல்லும் படி என்னும் தமிழ்சொல்லும் சேர்ந்து உருவாகிய கூட்டு மொழியாகக் கொள்ளமுடிகின்றது. அஹன் என்னும் சொல் நாள் என்பதைக் குறிக்கும், சேவைக்கு ஈடாக வழங்கும் ஊதியம் படி எனப்படும். எனவே தங்கள் சேவைக்கு நாட்கணக்குப்படி ஊதியம் பெற்ற ஒரு படைப்பிரிவினர் அகம்படி என்ற குழுப்பெயரைப் பெற்றனர் எனக்கருதலாம்.

சோழர் காலத்தில் நிலவிய அரசு தொடர்புடைய பல்வேறு அதிகாரிகள் பற்றிய விபரங்களை தமிழ்நாட்டு வரலாறு சோழப்பெருவேந்தர் காலம் முதல் தொகுதி பக்கங்கள் 422, 423 எடுத்துரைக்கிறது.

“அரசருடன் நேரடித்தொடர்பில் பல அதிகாரிகள் இருந்தனர், அரசப் பணிகளை நடத்தவும், அரசமாளிகை தொடர்பான பணிகளைச் செய்யவும் பலவகைப் பணியாளர்கள் அரசரோடு இருந்தனர். அவர் ஏவும் பணிகள் அனைத்தையும் செய்யும் தனிச்செயல் அலுவலராக திருமந்திர வோலை என்பவர் இருந்தார். அரசரின் தனிப்பணியாளர்கள் பரிவாரம் என்ற பெயரில் குறித்தமையையும் இந்நூல் பதிவு செய்கிறது. பரிவாரம் என்பது அலுவலர் பலர் அடங்கிய பணியாளர் தொகுதியாகலாம் என்றும் இந்நூல் குறிப்பிடுகிறது. அதிகாரிகள் பற்றிக் குறிப்பிடும் இடங்களில், அதிகாரிகள் மற்றும் உடன் கூட்டத்து அதிகாரிகள் நிருவாகத்தின் தலைமைப் பொறுப்பில் இருந்தனர். இவர்களே உயரதிகாரம் பெற்ற முதன்மை அலுவலர்கள், இவ்வதிகாரிகள் அரசருக்கான பணிகளைச்செய்தனர், இவர்கள் மூலமாகவே அரசாணைகள் இடப்பட்டு செயல்பாட்டுக்குக் கொண்டுவரப்பட்டது என்று மேற்காணும் நூல் தெரிவிக்கிறது.

சோழர் படைநிர்வாகத்தில் நிலவிய படைப்பிரிவுகளை மேற்படி நூல் பட்டியலிடுகிறது.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆனையாட்கள் | 6. | பரிவாரத்தார் |
| 2. | வில்லிகள் | 7. | வேளைக்காரர் மற்றும் வேளைக்காரப்படை |
| 3. | அந்தளகத்தார் | 8. | திருமெய்க்காப்பாளர் |
| 4. | குதிரைச் சேவகர்கள் | 9. | வடுகக்காவல் |
| 5. | அணுக்கர் | 10. | பழம்படைகள் |

இதில் மெய்க்காப்பாளர், அணுக்கர், பரிவாரத்தார், வேளைக்காரப்படை, குதிரைச் சேவகர், பழம்படைகள், வில்லிகள் ஆனையாட்கள் என்று எல்லாவற்றிலும் அகம்படியர்கள் இருந்ததைக் கல்வெட்டுக்கள் மற்றும் இலக்கிய சான்றுகளுடன் ஒப்பிட்டு அறிய முடிகிறது. பல்லவராயன்பேட்டை மற்றும் நாகப்பட்டினம் காயரோகணர் கோயில் கல்வெட்டுகள் வழி மேற்படி படைப்பிரிவுகளில் அகம்படியர் இருந்தததை உறுதிசெய்ய முடிகிறது.

கோவை மாவட்ட அகமுடையார் குலமரபும், பண்பாடும் என்ற முனைவர்பட்ட ஆய்வேட்டின் ஆசிரியர் செல்வி வெ.அ.நாகரத்தினம் அவர்கள், தனது ஆய்வில் அகம்படியர்களைப் பற்றி இவ்வாறு பதிவு செய்கிறார்.

“சேர வழியினரான இம்மக்கள் தங்கள் மன்னராட்சி வீழ்ச்சியுற்றதும் பல்வேறு இடங்களுக்குச் சென்று (மலையமான், சேர்வை உடையார் போன்ற பெயர்களைத் தங்களுக்கு வைத்துக்கொண்டனர்) அங்குள்ள மன்னர்களிடம் மெய்க்காவலராக இருந்து நன்மதிப்பைப் பெற்றனர். அத்துடன் மெய்காவலராகவும், அகப்பரிவாரமாகவும் இருந்து அவர்களின் உயிர்களையும் உடமைகளையும் காத்தனர். மேலும் இவர்கள் தம்கோட்டை மதில்காத்து போரிட்டவர் என்றும், அகம்படி என்ற சொல்லுக்கு மெய்க்காவல் என்று பொருள் என்றும் குறிப்பிடுகிறார்.

கல்வெட்டாய்வாளர் பேராசிரியர் டாக்டர் திரு.இல. தியாகராஜன் தனது வேட்டவலம் வரலாறு என்ற நூலில் (பக்கம்: 87) “அகம்படி முதலிகள் என்போர் அரசர்களின் கீழ் இராணுவம் மற்றும் சிவில் துறைகளில் பணியாற்றிய அரசாங்க உயர் அதிகாரிகள் என்பது புலனாகிறது. இத்தகைய பிரிவினரின் வழி வந்தவர்கள் இப்பகுதியில் வாழ்கின்ற இன்றைய அகமுடை

முதலியார் இனமக்கள் எனத் தெரிகிறது" என்று பதிவு செய்கிறார்.

கிரிபாசங்கர் மாத்தூர், பினோத் சி.அகர்வால் ஆகியோர் எழுதிய குடிகள், குலம், விவசாயிகள் (Tribe, Caste, Peasantry by Kripa Shankar Mathur & Binod C.Agarwal) நூலில் (பக்கம்: 128) அகம்படியர் பழங்கால அரசுகளின் வழிவந்த போர் வீரர்கள் என்று குறிப்பிடுகின்றனர். தென்னிந்திய நாணயங்கள் தொடர்பான ஆங்கில நூலொன்றில் ஆசிரியர் (Coins of South India by Elliot w.sir) அகமுடையார்களைப் பற்றி (பக்கம் 43 இல்) இவ்வாறு குறிப்பிடுகிறார்.

The Agambadayan ………… are probably descended from the ancient land holders of the country. The word Agam being the Tamil for Land., equivalent to Northern Bhoomia. …………….. and the occupation of the caste is said to be attendance in kings palaces and pagoda ………………. They are thus enumerated among the Royal guard of the Raja.

நீண்டகாலமாக அகம்படியர்கள் காவல்பணியில் இருந்ததைச் சென்னைப்பகுதியின் முந்தைய வரலாறு என்ற ஆங்கில நூல் ஆசிரியர் திரு.கே.வி.இராமன் (The Early history of the madras by K.V.Raman, Page-145) அவர்கள் பதிவுசெய்கிறார். அதில் விஜயநகர சயன உடையார் ஆட்சிக்காலத்தில் திருவெற்றியூர் பகுதியில் படவூர் தலைவனின் அகம்படியர்களான காளிங்கராயன், சேதிராயன், ஆதித்தன் மற்றும் இதர அகம்படியர்கள் தங்கள் காவல்பணியை ஏதோ காரணத்தினால் திடீரென பார்க்கத் தவறியதால் அமைதிக்கு பங்கமும், கொலையும் கொள்ளையும் ஏற்பட்டதாகக் குறிப்பிடுகிறார். மேலும் இவர்கள் நீண்ட காலமாக இப்பகுதியின் காவல் பணியை மேற்கொண்டிருந்தனர் என்றும் குறிப்பிடுகிறார்.

ஐவர்ராசாக்கள் கதை என்ற நெல்லை மாவட்டத்தைக் கதைக்களமாகக் கொண்ட நாட்டுப்புற இலக்கியத்தில் ஊர்வலத்தில் வந்த படையினராக உள்ளுடையார், அகம்படியர் துறைக்காரர், எட்டர் என்று அகம்படியினர் படையினராகக் குறிப்பிடப்படுகின்றனர். (பாடல் எண்.680.681 ஐவர் ராசக்கள் கதை).

திரு.ஞா.தேவநேயப்பாவாணர் எழுதிய பழந்தமிழராட்சி என்ற நூலில் (சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்) அரசர் மற்றும் அரண்மனை சார்ந்த சுற்றத்தை விரிவாக விளக்குகிறார். அதில்

அரசச்சுற்றம், மெய்க்காவலர், உடன் கூட்டம், அணுக்கர், பரிவாரம், படைகள், வாயில்கள், வேளைக்காரப்படை ஆகியவற்றை குறிப்பிட்டு அதன் முக்கியத்துவத்தை உணர்த்துகிறார். அவர் குறிப்பிடும் அரசச் சுற்றங்களானவை.

1. அரசனுடைய ஆட்சிக்கு அடிப்படைத் துணையாயிருந்த அதிகாரச் சுற்றம் ஐம்பெருங்குழு : இது அமைச்சர், புரோகிதர், படைத் தலைவர், தூதுவர், ஒற்றர் அடங்கிய குழு

2. எண்பேராயம் : 1. கரணத்தியலவர் (கணக்கர்), 2. கருமவிதிகள் (அரசாணையை நிறைவேற்றும் அதிகாரிகள்) 3. கனகசுற்றம் (பண்டாரம் என்னும் பொக்கிழச் சாலையதிகாரிகள்) 4. கடைகாப்பாளர் (அரண்மனை வாயிற் காவலர்) 5. நகரமாந்தர் (நகரப் பெருமக்கள் அல்லது வணிகப் பெருமக்கள்) 6. படைத்தலைவர் 7. யானை மறவர் 8. இவுளிமறவர் (குதிரைச் சேவகர்) ஆகிய எட்டுபேர்கள் அடங்கிய பெருந்தொகுதி எண்பேராயம் எனப்படும்.

3. உறுதிச்சுற்றம் : அரசனின் நன்மையையும், உடல் நலத்தையும் கவனிக்க குறிப்பிட்ட படைத்தலைவர், நிமித்தகர், மருத்துவர், நட்பாளர், அந்தணர் ஆகியோர் இதில் இருந்தனர்.

4. அரசியல் பொறுப்புச் சுற்றம் : அரசனில்லாத அல்லது அவன் நோய் வாய்ப்பட்ட சமயத்தில் அரசியலை கவனிக்கும் குழு

5. மாளிகை நாயகம் : அரண்மனைக் காரியங்களை மேற்பார்வை செய்பவன்

6. திருமுகக்கணக்கு: அரண்மனைக் கணக்கெழுதுபவர்

7. அகப்பரிவாரம் : அரண்மனை வேலையாட்கள்

8. அணுக்கச்சேவகர் : அரசனோடு நெருங்கிப்பணி செய்பவர்

9. உழைச் சுற்றாளர் : அரசனுக்கு பக்கத்தில் நின்று ஏவல் கேட்போர்

10. அகவர் : பாசறையில் அரசனை துயிலுணர்த்துபவர்

11. அடையாளக்காரர் : அரசனுக்கு குடை முதலியன பிடிப்பவர்

12. படையுள் படுவோன் அல்லது சின்னமூதி : அரசனுடைய ஆணைகளை அவ்வப்போது கானமூதிப் படைகட்டு தெரிவிப்பவன். அவனுக்கு படைக்கிழவன், சிறுக்கன், படைச்சிறுக்கன், படைச்சிறுபிள்ளை என்றும் பெயருண்டு.

13. கட்டியங்காரன் :அரசன், அரண்மனைக்கு வெளியே செல்லும் போது அரசனின் பரிவாரத்துக்கு முன் சென்று அவன் வருகையை கூறுபவன்

14. உடன் கூட்டம் அல்லது உழையர் : அரசன் தலைநகரிலிருக்கும் போதும், நாடுகாவல் மேற்கொள்ளும் போதும் அவனோடு கூடவேயிருக்கும் அரசியல் வினைக் கூட்டமாகும். அவருள் அதிகாரிகளாயிருப்பவர் உடன் கூட்டத்ததிகாரிகள் எனப்படுபவர்.

15. பரிவாரம் : வினையாற்றும்போது அரசனைச் சூழ்ந்திருக்கும் பரிவாரம் அ). ஏவற் பரிவாரம் ஆ). காவற் பரிவாரம் இ). வினைப்பரிவாரம் எனமுத்திறம்பட்டிருக்கும்.

16. கருமிகள் அல்லது கன்மிகள் : அரசியல், அல்லது அரண்மனைத் தொடர்பான உணவு, உடை, உறையுள், உண்கலம், ஊர்திகள், தட்டுமுட்டுக்கள், முதலிய பல்வகைப்பொருள்களையும், பணியாட்களையுங் கொண்டு ஆக்கு வித்து அரசாணைகளை நிறைவேற்றும் தலைவர் இவர் ஆக்கவினைத் துணையர். இவரை ஏவி நடத்துவோர் கரும விதிகள்.

17. படைகள் : நிலப்படை, கடற்படை என இருவகைப்படும்.

18. நிலப்படை : கரிப்படை, பரிப்படை, தேர்ப்படை, காற்படை என்று நான்கு வகைப்படும்.

19. கடற்படை : விற்படை, வாட்படை, வேற்படை என மூவகைப்படும்

20. யானைமறவர் : ஆனையாட்கள், ஆனைப்பாகர், குஞ் சரமல்லர், அத்திமல்லர் எனப்படுவர்

21. குதிரை மறவர் : இவளிமறவர் என்றும் குதிரைச் சேவகர் என்றும் கூறுவர்.

22. மூலப்படை : இது தொல்படை என்பர், வாழையடி வாழையாக இருந்து வருவது, எவ்வகை ஊற்றையும் பொருட்படுத்தாததும் இறப்பிற்கு அஞ்சாததும், போரையே

விரும்புவதும், அரசனைக்காக்க உயிர் ஈவதும், வென்றே மீள்வதும் தொல்படையின் இயல்பாகும்.

23. நிலைப்படை : மூலப்படை தலைநகரிலும், பிறநகரங்களிலும் புதிதாய் வெல்லப்பட்ட பகைவர் நாட்டிலும் நிறுத்தப்பெறும். அவை நிலைப்படை எனப் பெயர் பெறும். நிலைப்படை நிறுத்தப்பட்ட நகர், படைவீடு என்றும், நிறுத்தப்பட் நிலப்பகுதி படைப்பற்று என்றும், அது குடியிருக்கும் வீட்டுத்தொகுதி படைநிலை என்றும் பெயர் பெறும்.

24. படைக்கலங்கள் : அமைதிகாலத்தில், மெய்க்காவற்படை, பரிவாரப்படை, நிலைப்படை ஆகிய படைகள் கையாளும் படைக்களங்கள் தவிர மற்றப் போர்க் கருவிகளெல்லாம் ஆயுத சாலையில் வைக்கப்படும்.

25. அரசனின் தற்காப்பு : அரசனுக்கு கட்டிட வகையிலும், காவல் வகையிலும் சிறந்த தற்காப்பு வசதிகள் ஏற்பட்டிருந்தன.

அ) கட்டிட வகைகள் : கள்வரும், பகைவரும் ஏறுதற்கரிய மதிலும், பகைவரைத்தொலைவிலேயே காண்பதற்கு கோபுரமும், பகைவன் தலைநகரை முற்றுகையிடும் போது நொச்சிப்போரும், இயலாததாயின் மறைந்து வெளிப்படற்குரிய சுருங்கையும், உரிய பாதுகாப்பாய் இருந்துள்ளது.

ஆ).காவல் வகைகள் : அரசனுக்கான காவல் மெய்க்காவல், வேளைக்காரர் என இருவகைப்படும்.

26. மெய்க்காவலர் : அணுக்கர் எனவும், வாசல் மெய்க்காப்போர் எனவும், பரிவாரமெய்க்காப்போர் எனவும் மூவகையர் ஆவர்

அ) அணுக்கர் : அரசனை நெருங்கி நின்று பாதுகாப்பவர்

ஆ). வாசல் மெய்க் காப்போர் : அரண்மனைவாயில்களில் நின்று பாதுகாப்பவர் (வாசல் மெய்காப்போரினின்று வேறாக வாசல் காப்போர் என்றும் சிலர் இருந்துள்ளனர்)

இ) பரிவார மெய்க் காப்போர் : அரசன் அரண்மனைக்கு வெளியே செல்லுங்கால் சூழ்ந்து சென்று பாதுகாப்பவர் குறிப்பு: பரிவாரத்தார் சோழப்படைப்பிரிவுகளில் ஒன்று என்று குறிப்பிடுகிறார் திரு.ஒய்.சுப்பராயலு (தமிழ்க் கல்வெட்டுச் சொல்லகராதி தொகுதி 2, பக்கம் 405) “சிவ பாத சேகரனின்

தஞ்சைக் கல்வெட்டுகள்" நூலாசிரியர் திரு.வி.மகாதேவன், சோழராட்சியில் மூலப்பரிவாரம்டேருன ஜனநாதத் தெரிந்த பரிவாரத்தார், ஜனநாதத் தெரிந்த பரிவாரத்தார், மும்முடிச்சோழத் தெரிந்த பரிவாரத்தார், என்று பலவகைப் பரிவாரத்தார்களைக் குறிப்பிடுகிறார். "கல்வெட்டுகள் காட்டும் கலைச் சொற்கள்" நூலின் ஆசிரியர் திரு.அழகேசன், கேரளாந்தகத் தெரிந்த பரிவாரத்தார் என்பதைக் குறிப்பிடுகிறார். சோழர் ஆட்சியில் திரு மெய்க்காப்பார் நூற்றுப்பதினெட்டுக் காசும், அணுக்க வாசலின் திருமெய்க்காப்பார் எட்டுக்காசும், கேரளாந்தகத் தெரிந்த பரிவாரத்தார் போன்றோர்களை திரு.ஏ.வேலுப்பிள்ளை தனது சாசனமும் தமிழும் நூலில் பதிவு செய்கிறார்.

27. வாயில்கள் : அணுக்கவாயில், இடைவாயில், தலைவாயில், புறவாயில் எனப் பல வாயில்கள் உண்டு.

28. வாசல் காப்போர் : அணுக்க வாசல் காப்போர், கேரளாந்தக வாசல் காப்போர் எனப் பலதிறத்தார்.

29. நடைப்பெருவாயில் : எப்போதும் அரண்மனைத் தலைவாயிலில் இருந்து பாதுகாப்பு அளிக்கும் ஒரு படைத்தலைவர்.

30. பரிவாரத்தார் : பரிவாரமெய்க்காப்போரினினும் வேறாகப் பரிவாரத்தார் என்று சில படைப் பிரிவுகளிருந்தன. கேரளாந்தகத் தெரிந்த பரிவாரத்தார் நிகரிலிச்சோழ தெரிந்த உடனிலைக் குதிரைச்சேவகர் எனப் பரிவாரத்தாரில் காலட்படை மற்றும் குதிரைப்படையைச் சார்ந்தோர் இருந்துள்ளனர். மூலப்படையைச் சேர்ந்த பரிவாரத்தார் மூலப்பரிவாரம் எனப்பட்டது. மூலப்பரிவார விட்டேறு என்பது மூலப்பரிவாரத்துள் கருவி (ஈட்டி) பற்றிய பிரிவாகும்.

31. வேளைக்காரப்படை : அரசன் மீது அளவற்ற அன்பும், பக்தியும் உடைய சிற்றரசர்களும், படைத்தலைவர்களும் அவனுக்கு இடுக்கண் நேர்ந்தபொழுது உடுக்கை இழந்தவன் கைபோல் உதவ வேண்டுமென்னும் விருப்பம் கொண்டு அவ்வாறு உறுதிமொழி ஏற்றுக்கொள்வார். அரசனுக்கு துன்பம் நேராமல் உதவுவதுடன், அரசனுடன் இருப்பதும் அவர்கள் வழக்கம். வேளையில் வந்து உதவுவதால் அவர்கள் வேளைக்காரர் எனப்பட்டனர். வேளைக்காரப் படைக்குள் வலங்கை, இடங்கை பிரிவுகளும், சிறுதனப் பெருந்தனப்

பிரிவுகளும் இருந்தன. பாண்டியனுடைய வேளைக்காரர்களுக்கு தென்னவன் ஆபத்துதவிகள் என்று பெயர்.

*32. தலைநகர் பாதுகாப்பு :* மதிலரண், நிலவரண், நீரரண், காட்டரண், மலையரண் என்று ஐவகையரண்களுள் பலவற்றைக் கொண்டிருந்தது.

இதுகாரும் பார்க்கப்பட்ட தரவுகளிலிருந்து அகம்படியர் என்போர் போர்மரபு, இராணுவத் தன்மைகொண்ட படைத்தொகுதியினராக அறியமுடிகிறது. இவர்கள் அரசுக்காவல், அரண்மனைக்காவல், மெய்க்காவல், நிர்வாகம், ஆட்சி, அரசு என்று பல நிலைகளில் தொடர்புடையவர்களாக இருந்து பின்னர் ஒரு சமூகமாக நிலைபெற்றுள்ளனர்.

★★★

# 3.
# சேரநாட்டில் அகம்படியர்கள்

"கேரளத்தில் நம்பூதிரி பிராமணர்கள் குடியமர்ந்த காலத்தில் அந்நிலப் பகுதியினை ஆண்டுவந்தவர்கள் நாயர்கள். தென்கன்னடத்தைச் சேர்ந்த கடம்ப மன்னனான மயூரவர்மனின் ஆதரவால் முதன் முதலில் கேரளத்துக்கு வந்த பிராமணர்கள் (நம்பூதிரிகள்) அங்கு போர் மறவர்களாக வாழ்ந்த நாயர்களின் ஒரு பிரிவினருடன் உறவின் முறை ஏற்படுத்திக்கொண்டனர்."

பக்தவத்சல பாரதி
பக்கம் 176, தமிழர் மானிடவியல்.

சேரநாடு தெற்கிலிருந்து வடக்காக வேணாடு, குட்டநாடு, குடநாடு, கொண்கான நாடு ஆகியவற்றை உள்ளடக்கியதாகும். கொண்கானநாடு, துளுநாடு என்றும் வழங்கப்பெற்றது. சேரநாடு செந்தமிழ் மொழிவழங்கிய நிலமாக இருந்து பின்னர் தமிழ் சிதைந்து மலையாளமாயிற்று. இடைக்காலத்தில் சேரநாட்டுப்பகுதிகளில் தோன்றிய கல்வெட்டுகளில் மக்களும் ஊர்களும் எவ்வாறு தூய செந்தமிழ்ப் பெயர்களாக விளங்கிற்று என்பதைச் "சேர மன்னர் வரலாறு" நூலில் ஒளவை திரு. சு.துரைசாமிப்பிள்ளை அவர்கள் கீழ்க்கண்டவாறு தெளிவுபடுத்துகிறார்.

பரோலா என்னுமிடத்துக் கல்வெட்டு அவ்வூரைப் புலவேர்வாயில் எனவும், திருவன்னூரிலுள்ள கல்வெட்டு அவ்வூரைத் திருமுன்னூரெனவும், இருஞாலக்குடாவிலுள்ள கல்வெட்டு அதனை இருஞாலக்கூடல் எனவும், கடலூண்டி என்னுமிடத்துக் கல்வெட்டு அவ்வூரைத் திருமண்ணூரெனவும் வழங்குவது போதிய சான்றாகும் என்கிறார். அத்துடன்,

சேரநாட்டின் வடபகுதியில் எழில்மலையைத் தன்னகத்தே கொண்டிருந்த நாட்டை கொண்கானநாடு என்று தமிழ் மக்கள் வழங்கினர். எழில்மலையைச் சொல்லத்தெரியாத பிறமக்கள் அதனை எலிமலையென்று வழங்கி அந்நாட்டை எலிநாடு என்று கொண்டு பின்பு அதனை மூசிகநாடு என்று வடமொழிப்படுத்திக் கொண்டனர். சேரர்களின் வடஎல்லையாக வானவாசிநாடு விளங்கிற்று அதனை ஆட்சிபுரிந்தவர்கள் கடம்பர் என்போர். இப்போதுள்ள கோவா (Goa) வானவாசிநாட்டில் அடங்கிய பகுதியாகும். கோவா என்பது கூபகம் என்ற பழம் பெயரின் திரிபாகும். அந்த வானவாசிநாட்டில் வானியாறு என்ற ஆறு ஓடுகிறது. இந்த வானியாறு கடலோடு கலக்கும் இடத்தில் உள்ள ஊர் ஹோனவார் (Honawar) இவ்வூரின் பழம் பெயர் வானவாறு ஆகும். இந்த வானியாறு சேரவாறாயிற்று அந்த சேரவாறே சாராவதியெனவாயிற்று, தோகைக்கா என்ற பழம் பெயர் ஜோக் என்றாகி அவ்விடத்தில் சாராவதி 850 அடி உயரத்திலிருந்து நீர்வீட்சியாக மேலைக்கடல் நோக்கி ஓடுகிறது. வடகன்னடம் பாட்கல் (Batkal) கல்வெட்டு அவ்விடத்தை பாழிக்கல் என்றும், கொண்கானத்தின் வடக்கு வேளிரது வேளகம் இன்று (Belgaum) பெல்காம் ஆகியிற்று.

தெற்கில் பொதிய மலையிலிருந்து வடக்கு நோக்கி செல்லும் மேற்குத் தொடர்ச்சி மலைத்தொடர், எழில்மலை, குதிரைமலை, பொதியமலை, நாஞ்சில்மலை, அயிரைமலை, நேரிமலை உள்ளிட்ட பல மலைகள் புலவர்கள் பாடும் புகழினை பெற்றன. எழில்மலையைச் சப்தசயிலம் என்றும், குதிரை மலையைச் சஞ்ச பருவதம் என்றும் வடமொழியாளர் வழங்குவார். குதிரைமலையைக் குதிரை மூக்கு (Gudramakh) என்று அங்குள்ளவர் அழைப்பார்.

சேரர்களுக்குரிய சிறப்புப் பெயர்களாக வானவரம்பன், வானவன், குட்டுவன், குடக்கோ, பொறையன், இரும்பொறை, கடுங்கோகோதை போன்றவற்றை குறிப்பிடும் திரு ஔவை துரைசாமிப்பிள்ளை அவர்கள் சேரலர், சேரல், சேரமான்

என்பதனைப் பொதுப்பெயர் என்றும், வானவன் என்பதற்கு வானமலையையுடையவன் என்றும், வானவரம்பன் என்பதற்கு வானமலையை வரம்பாக உடையவன் என்றும் பொருள்தருகிறார்.

பன்மொழிப்புலவர் திரு கா.அப்பாத்துரையார் அவர்கள், தனது கொங்குத்தமிழக வரலாறு நூலில் வேள், வேளீர் தொடர்புடைய பட்டங்களாக நம்பி, நம்தம்பி, நம்பியார் (கேரள மக்கள்திறக் குருமார்) நம்பூதிரி (நம்பித்திரு),தம்பிரான் (திருவாங்கூர் அரசன் தந்தை மரபு), எம்பிரான்திரி, (எம்பிரான்திரு), சமூதிரி (சாமிதிரு) போன்ற மலையாள நாட்டுப் பட்டங்களைச்சுட்டுகிறார்.

சேர்வைக்காரர் எனும் சொல் சாதாரணமாக அகம்படியர் சாதியினரின் பட்டப்பெயர் அது, என்று மட்டும் அறியப்பட்டு வந்துள்ளது எனக் குறிப்பிடும் “மருது பாண்டியமன்னர்கள்” நூலாசிரியர் திரு.மீ.மனோகரன் அவர்கள், அதற்கு மேற்கோளாக திரு.ஜெ.எச்.நெல்சனின் கூற்றை “The ordinary agnomen or titular name of an Ahambadiyar is serveikaran” – J.H.Nelson, The Madura Country- A manual Part-I, என்பதாகச் சுட்டிக்காட்டுகிறார்.

அத்துடன் “மறவர் சாதி விளக்கம்” எனும் ஓலைச்சுவடியில் அகம்படியர்களின் சாதிப்பட்டம் பற்றிக் குறிப்பிடும்போது “அகம்படியருக்கு எல்லாம் சேர்வைக்காரன் என்று சொல்கிறது என்றும் சுட்டிக்காட்டுகிறார். சேர்வைக்காரன் என்பதற்குப் படைத்தளபதி எனக் குறிக்கிறார் திரு.எட்கர் தர்ஸ்டன் தனது ‘தென்னிந்தியக் குலங்களும் குடிகளும்’ (தொகுதி3) நூலில். அத்துடன் அது அகமுடையார்கள் குடிக்கொள்ளும் பட்டப்பெயராகவும் பதிவுசெய்கிறார் (தொகுதி: 1).

பேரரசர்களின் பிரதிநிதியாய் உள்ளவர்களை அரையர்கள் என்று அழைத்தனர். பல்லவர் காலத்து அரையர்கள், பல்லவ அரையர்கள் (பல்லவராயர்), சோழர் காலத்து அரையர்களைச் சோழ அரையர்கள் என்று அழைத்ததாகக் குறிப்பிடுகிறது தமிழ் முரசு புதுக்கோட்டை மாவட்டச் சிறப்பிதழ் (31.07.1999).

சேர அரசர் – சேர அரையர் (அரசர்) – சேர வரையர், என்பது காலப்போக்கில் சேர்வைக்காரர் எனத்திரிந்து வழங்கலாயிற்று எனக் குறிப்பிடுகிறார் வழக்கறிஞர் திரு.புலமை வேங்கடாசலம் அவர்கள் (அகமுடையார் வரலாறு). சேரர் அவை என்பதைக் குறிப்பிட்டு அவை காலப்போக்கில் சேர்வை என்றாயிற்று என்றும் குறிப்பிடுகிறார்.

“சேர நாடு ஒரு காலத்தில் எட்டுச்சிறு நாடுகளாகப் பிரிந்திருந்தது, மன்னர் எண்மரும் தனித்து நிற்பின், பகைவர் தம்மை வெல்வதற்கு எளிதாகும், என்றெண்ணி, தம்மில் ஒன்றுபட்டு ஒருவர் முடிவேந்தராக ஏனையோர் அவர்களுக்குத் துணைவராகப் பிரிவின்றி ஒழுகுதல் வேண்டும் என்று முடிவு செய்து அவ்வொற்றுமைக் குறிப்புத் தோன்ற ஏனை எழுவர் முடிப்பொன்னால் ஆரம் செய்து மார்பில் அணியாகப்பூண்டனர்.

இதை கருத்துட் கொண்டு எண்மரும் கூடியிருந்து ஆராயும் அரசியல் குழு எண்பேராயம் எனப்பட்டது. இந்த எண்பேராயம் முதலில் சேர மன்னர்கள் எண்மரைக் கொண்டு தோன்றியதால் மற்றயத் தமிழ் வேந்தர்கள் அதே பாங்கில் அமைத்துக் கொண்ட அரசியல் குழுவை முதலில் சேரர் அவை என்றழைத்தனர், சேரர் அவை காலப்போக்கில் சேர்வை என்றாயிற்று” என்பதனையும் அவர் குறிப்பிடுகிறார்.

சேர அரையர், சேரர் அவை, சேர்வை, சேர்வைக்காரர் என்ற அகம்படியர்களின் மரபுத்தொடர்ச்சியை உறுதிப்படுத்தும் வகையில் “மருதுபாண்டிய மன்னர்கள்” நூலாசிரியர் திரு.மீ.மனோகரன்,” சேலம் மாவட்டத்திற்கு ஆதியில் இவர்கள் (அகம்படியர்) சேரநாடாகிய கேரளத்திலிருந்து வந்திருக்கக்கூடும் என்ற கருத்து பரவலாக நிலவுவதாகச் சொல்லப்படுகிறது என்று குறிப்பிடுகிறார்.

சேர மன்னர்களுக்குச் சேரர் என்று பெயர் ஏற்படக்காரணம் என்ன என்பதை, “சேரர் வரலாறும் பழனி மலைவாழ் பழங்குடி மக்களும்” நூலாசிரியர் திரு.ஆதி.பாலசுந்தரன் அவர்கள், சிந்து வெளி நகரங்களில் பெரிய களஞ்சியங்களைக் காத்து வந்தவர்களே சேர அரச மரபினர் என்பார்கள், ஏனென்றால் அக்களஞ்சியங்களைத் திராவிட மொழியில் சேர் என்பார்கள், “சேர்” என்பதைப் பகுதியாக்கி, “அர்” என்பதைப் பலர் பால் விகுதி சேர்த்து, “சேரர்” என வழங்கலாயிற்று எனக்கருத இடமுண்டு.

பழங்காலத்தில் சேரநாடு குஜராத் வரை பரவியிருந்தது, நூற்றுவர் கன்னர் எனப்படும் சதகர்னிகர் தமிழகத்து வடபகுதியை ஆண்ட சேரமன்னர்கள் என்று சொல்லப்படுகிறது. மேலும் சேரன் தீவு என்று இலங்கைத்தீவைச் சேரரை முதன்மைப்படுத்தி குறிப்பிடுவதையும், கடல் கொண்ட குமரிக் கண்டத்தின் எஞ்சிய

தொடர்ச்சியாகவும் சேரநாட்டின் பகுதிகளைக் குறிப்பிடுவதை, மேற்காணும் ஆசிரியர் பதிவு செய்கிறார்.

கடற்கரை என்னும் பொருளையுடைய சேர்ப்பு என்ற சொல்லிலிருந்து சேரன், சேரல், சேரலன் என்ற சொற்கள் பிறந்திருக்கலாம். சேர் என்பது ஒன்று சேர்வது எனப்பொருள்படும். எனவே மணற்பொற்றைகள் அல்லது மணல் சேர்ந்த கடற்கரை என்பதைச் சேர் என்பது குறிக்கும் என்று முனைவர் இரா. தெய்வம் அவர்கள் தனது "மூவேந்தர்களின் குடிச்சிறப்பு" எனும் நூலில் குறிப்பிடுகிறார்.

அத்துடன் சேரர் அல்லது சேரலர் என்னும் அரச மரபினர் பன்னெடுங்காலமாக ஆண்டுவந்தனர். சேரர் என்ற சொல்லே காலப்போக்கில் கேரளா என மாறி வழங்கலாயிற்று என்றும் பதிவுசெய்கிறார்.

சேரர்களை அகநானூறு கெழுதடக்கை வெல்போர் வானவன் என்னும் பதிற்றுப்பத்து வில்லோர் மெய்ம்மறை என்றும் பாராட்டுவதை மேஜர் கதிர் மகாதேவன் அவர்கள் (பழந்தமிழர் வீரப்பண்பாடு) பதிவுசெய்கிறார். பாணர் அல்லது வாணர் (Banas) கேரள மரபிலும், புராண மரபிலும், தென்னகம் முழுதாண்ட மாவலி அல்லது மகாபலிச்சக்கரவர்த்தியின் மரபினர், இவர் பண்டு தமிழகம் எங்கும் பரவியிருந்தனரோ என்று கருத இடமுண்டு என்கிறார் பன்மொழிப்புலவர் கா.அப்பாத்துரையார் அவர்கள் (கொங்குத்தழிழக வரலாறு).

இப்படி சேரர் மரபுத்தொடர்ச்சிக் கொண்ட சேர்வை, சேர்வைக்காரர் என்ற அகமுடையார்களின் சாதிப்பட்டப் பெயர்கள் பின்னாளில் வேறுசில பொருள் தரும் நிலையில் அந்தந்தக் கால அரசியல், சமுதாயச் சூழலில் விளங்கி வந்துள்ளது.

சேர வழியினரான இம்மக்கள் தங்கள் மன்னராட்சி வீழ்ச்சியுற்றதும் பல்வேறு இடங்களுக்குச் சென்று மலையமான், சேர்வை, உடையார் போன்ற பெயர்களைத் தங்களுக்கு வைத்துக் கொண்டனர். அங்குள்ள மன்னர்களிடம் மெய்க்காவலராக இருந்து நன்மதிப்பைப் பெற்றனர் என்று பதிவு செய்கிறார், கோவை மாவட்ட அகமுடையார் குலமரபும், பண்பாடும் என்ற முனைவர் பட்ட ஆய்வேட்டின் ஆசிரியர் செல்வி. வெ.அ.நாகரத்தினம் அவர்கள்.

மலையன் என்பது மலைகளின் தலைவன், சேரநாட்டின் தலைவன் எனப் பொருள்படும். நிகண்டுகளிலும், அகராதிகளிலும் "மலையமான்" என்பது சேரர்களின் பட்டப் பெயர்களுள் ஒன்றாகக் காணப்படுகிறது. மலையமான், மலாடு என்றச் சொற்கள் முறையே சேரன், சேரநாடு என்பவற்றைக் குறிக்கின்றன. மலையர் குடியில் மலையமான் திருமுடிக்காரி என்பவன் சிறந்து விளங்கினான் என்பார் முனைவர் இரா.தெய்வம் (மூவேந்தர்களின் குடிச்சிறப்பு).

சேரர் குடியின் கிளைக்குடியைச் சேர்ந்தவர்களுள் சிலர், மேற்குப்பக்கத்தில் தங்கள் நாட்டை விரிவாக்க இயலாமையால் கிழக்கில் திரும்பி வடஆர்க்காடு, தென்னார்க்காடு மாவட்டங்களாக இப்போது உள்ள பகுதிகளை வென்று அங்கு குடியேறியதாகக் குறிப்பிடும் டாக்டர் மொ.அ.துரை அரங்கசாமி (சங்ககாலச் சிறப்புப்பெயர்கள்) அவர்கள். அவ்வாறு வந்தவர்கள் பெண்ணையாற்றங்கரையில் உள்ள திருக்கோவலூரை ஆண்ட மலைமான்களாக விளங்கியதைப் பதிவுசெய்கிறார்.

சேரர், அதியர் போன்ற குடிகள் கிளைத்த மழவர்குடியும் சேரர் தொடர்புடையதாகத் தோன்றுகிறது. சேரர்களுக்கு மெய்க்காவலர்களாக விளங்கிய மழவர்கள் என்ற மிகப்பழைய குடியும், கிழக்கே குடிபுகுந்து பாடி அமைத்து தங்கிய பகுதி மழபாடி என்று விளங்கிற்று என்பதையும் டாக்டர் திரு.மொ.அ.துரை அரங்கசாமி குறிப்பிடுகிறார்.

பாண்டிய நாட்டில் கானப்பேரெயில் என்னும் பெருங்கோட்டை பற்றிச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடும். அக்கோட்டையின் தலைவனான குருநிலமன்னன் வேங்கைமார்பன் என்பவன் இருந்துள்ளான். பெருவீரனான இவனை வெற்றி கொண்ட பாண்டியன், கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி என்னும் உயரிய பெருமையை அடைந்தான். இந்தக் கானப்பேரெயிலுக்கு அணித்தாக ஏழெயில் என்னும் கோட்டை ஒன்று இருந்ததையும் அதனைச் சோழன் நலங்கிள்ளி கைப்பற்றியதையும் திரு.ரா.பி.சேதுப்பிள்ளை குறிப்பிடுகிறார். (தமிழகம் ஊரும் பேரும்). இந்த வேங்கை மார்பன் சேரன் வழிவந்தவன் என்பார் மறையூர் இரா.வீராச்சாமி அகமுடையார் (அகமரபும், ஆதிக்குடியும்) அத்துடன் வேங்கை என்னும் பெயர்தாங்கிய அகம்படியர்கள் வேங்கை முனீஸ்வரனை குலத்தெய்வமாகக் கொண்டு இன்றும் வாழ்ந்து வருவதையும் அவர் பதிவு செய்கிறார்.

இலங்கைத் தமிழ்ச்சாதிகள் என்ற வகைப்படுத்தலில் மலையாள அகம்படியார் என்பவரையும் குறிப்பார் "யாழ்ப்பாண வைபவ கௌமுதி" (பக்கம்:108) நூலின் ஆசிரியர் திரு.க.வேலுப்பிள்ளை அவர்கள்.

கேரளாவில் அருள்மிகு ஐயப்பன் அவதாரத்தோடும், திருக்கோயிலோடும் தொடர்புடைய பனந்தரன் என்ற பந்தள அரச குடும்பத்திற்கும், பாண்டிய நாட்டில், மதுரைக்கு மேற்கே சின்னமனூரில் வாழ்ந்து வந்த அகமுடையாருக்கும் சென்ற நூற்றாண்டின் தொடக்கம் வரை கொள்வினை, கொடுப்பினையுடன் திருமண உறவுகள் இருந்ததாக பதிவுசெய்கிறார். மு.அம்பிகாபதி (இலக்கியத்தரவுகளில் மகளிர் பதிவுகள், பக்கம்:133) அவர்கள். மேலும் அவர் இன்றும் நம்பூதிரிகள் திருமணத்தில் அகம்படியர் என்னும் மெய்க்காவலர்கள் பங்கு கொள்கின்றனர் என்பதைச் சுட்டிக்காட்டி இவர்கள் சேரவம்சத்தினராக இருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது என்றும் பதிவு செய்கிறார். இதன் தொடர்ச்சியாகவே 27.03.1994இல் மதுரை தமுக்கம் கலையரங்கத்தில் நடைபெற்ற தமிழ்நாடு அகம்படியர் முன்னேற்றச் சங்கத்தின், இரண்டாவது மாநில மாநாட்டிற்கு, பனந்தாளி அரசப்பரம்பரையைச் சேர்ந்த ஐயப்பன் வழித்தோன்றல், பந்தளம் திரு.இராமச்சந்திர தம்பிரான், சிறப்பு விருந்தினராக அழைக்கப்பட்டார்.

திருவாங்கூர் தொல்லியல் வரிசை தொகுதி 45 (1927) "அகம்படி" என்பதற்கு மெய்க்காவலர் என்று பதிவுசெய்கிறது. (Travancore Archaeological Series Vol-4-5). மலபார் நாயர்களின் மானுடவியல் என்ற நூலை எழுதிய ஆய்வாளர் திரு.எப். பவ்செட் அவர்கள் அகம்படி ஜனம் என்பதற்கு மெய்க்காவலர் என்று பதிவு செய்கிறார். (Agampadi Janam (Body-guard) (Anthropology of Nayars of Malabar by F.Fawcett, Page:284).

திரு.கே.பி.பத்மநாபமேனன் மற்றும் திரு.டி.கே. கிருஷ்ணமேனன் எழுதிய கேரளவரலாறு (History of Kerala by K.P.Padmanabha Menon and T.K.Krishna Menon) (Page: 85) அகம்படி என்பதற்கு மெய்க்காவல் என்றும், அகம்படியர் என்பதற்கு அரசர்களின் மெய்க்காவலர் என்றும் பதிவுசெய்கின்றது.

திரு.பி.ஜெ. ஜெரியன் அவர்கள் எழுதிய வில்லியம் லோகன்ஸ் மலபார் மானுவல் என்னும் நூலில் நாயர் பாதுகாப்புப்படையை அகம்படிப் (The Nayar guards (The Agambadi) Poured in from all directions)

படையாகச் சுட்டிக் காட்டுகிறார். (Williamlogan's Malabar manual by P.J.Cherian, Page:316)

திரு.கே.வி.கிருஷ்ண ஐய்யர் எழுதிய கோழிக்கோடு சமோரியன் என்னும் ஆங்கில நூலில், அகம்படியர் என்பதற்கு மெய்க்காவலர் என்று குறிப்பிடுகிறார். (The Zamorins of Calicut from the earliest Times to AD 1806. Page 101). மேலும் அவர் கேரளாவில் நாயர்கள் அரசர்களின் மெய்க்காவலராக, அகம்படிப் படையாக செயல்பட்டனர் என்பதைக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார். (பக்கம் 38).

"At certain places on the way, he is joined by kilakkumnat Nampiti, Nedungnad Pata Nayar, Karakkattu muttavan or Kavalappara Nayar, Vittikkattu Nayar or Kannampra Nayar and Kannanur pata Nayar or Trikkatiri Nayar, who perform Akampadi duty.

தங்களின் அரசனின் மெய்க்காவல் உள்ளிட்ட அகம்படி இராணுவச் சேவைக்கு ஈடாக நாயர்கள் நிலங்களைப் பெற்றதையும், அத்துடன் பணிக்கர் உள்ளிட்ட சிறப்புப் பட்டங்களைப் பெற்றதையும் திரு.ஜான் லேன்டி எர்ட்மேன் என்ற ஆய்வாளர் எழுதிய இந்தியாவில் கலைகளுக்கு ஆதரவு என்ற ஆங்கில நூல் பதிவு செய்கிறது. (Art patronage in India: Methods, Motives and Markets by Joan Landy Erdman, Page:99).

தங்கள் உயிரை ஈந்து தனது தலைவனின் உயிர்காக்கும் அகம்படி மெய்க்காவல் படையினரின் சிறப்பை திரு.பிலிப் பி.ஸரிலி என்ற ஆய்வாளர் "உடல் எல்லாம் கண்களாக மாறும்போது" என்னும் ஆங்கில நூலில் (When the body becomes all Eyes by Philip B.Zarrilli, Page : 39) கீழ்க்கண்டவாறு பதிவு செய்கிறார்.

"சேரர் ஆட்சிக் காலத்திலிருந்து வழக்கில் உள்ள மரபு மற்றும் அமைப்பின்படி, தனக்குத் தகுதி வாய்ந்த ஆயுதப்பயிற்சி முடித்த இளைஞர் இராணுவப்பணிக்காக உள்ளூரிலேயோ, மாகாணத்திலேயோ அல்லது ஆட்சியாளரிடமோ அவர்களின் அகம்படிப் பரிவாரத்தில் சாவினை ஏற்பதுவரை அரசச்சேவை என்ற உறுதிமொழியோடு சேர்க்கப்படலாம்." மலையாள இலக்கிய ஆய்வு என்ற ஆங்கில இதழ் அகம்படி என்பதற்கு நாயர் போர்வீரர்கள் என்று குறிப்பிடுகிறது. (Malayalam literary survey by Kerala Sahitya Academy – 1988, Page 68).

கொடக்காடு மாப்பிடச்சேரி கோயிலில் அகம்படி நாயர்கள் இரண்டாம் மரியாதைக்குரியவர்களாகச் சிறப்பிக்கப்பட்டதை

ஆய்வாளர் பி.இராதாகிருஷ்ணன் சுட்டிக் காட்டுகிறார். (Peasant struggle, Land Reforms and social changes Malabar – 1836 -1982 Page 160).

நாயர்கள் அகம்படி என அழைக்கப்படுகின்றனர். இது அரசர்களிடம் அவர்கள் பணியில் இருந்ததை வெளிப்படுத்துகிறது என்று பதிவு செய்கிறது நாட்டுப்புறவியல் தொடர்பான நூல் (Folklore Vol. 12,13,14 (December-November, 1973. West Bengal Public Library).

குண்டர்ட் இன் கேரளோர்ப்பதி அகம்படி என்பதற்கு மெய்க்காவல் என்று குறிப்பிடுகிறது. (Keralolpatti by Herman Gundert). தெய்யம் வழிபாடும், நாயகன் வணக்கமும் என்ற நூல் நாயர்களை அகம்படியாகக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறது.

Nairs are called 'Akampati' which reveals their duty of following the King (The cult of Teyyam and Hero worship in Kerala by K.K.N.Kurup) , இதே கருத்தை Folk-lore என்ற நூலும் பதிவு செய்கிறது.

பத்தாயிரம் போர்வீரர்களைக் கொண்ட நிலைப்படையாக அகம்படிப்படை இருக்கலாம் என்பதைக் கேரளா மாநில கெஜட்டியர் பதிவு செய்கிறது (Kerala State Gazetteer by Adoor K.K.Ramachandra Nair).

அகம்படி ஃகோகாசீ (Akampati Quakassi) என்று அமாத்தூர் பணிக்கர் (Amaththoor Panikker) அழைக்கப்பட்டதை மலப்புரம் மாவட்ட கோயில்கள் என்ற நூல் குறிப்பிடுகிறது. (Temples of Malappuram District by S.Jeyashankar).

சேரர் மரபுத்தொடர்ச்சிக் கொண்ட சாவர் (Chavar) என்ற படைப்பிரிவினர் இருபத்தைந்து போர்வீரர்களை உள்ளடக்கிய தொகுதியினர் அகம்படிப்படையினராக அரசர்களுக்கு பாதுகாப்பு வழங்கியதை நவாப்பின் கண்ணீர் என்ற ஆங்கில நூல் அலியராமராயர் தொடர்பான கட்டுரைப்பகுதியில் பதிவுசெய்கிறது. இதில் சாவர் என்ற தற்கொலைப்படையினர் அகம்படியர்களாகக் காவல் பணிமேற்கொண்டதை "The chavers were usually deployed as Akampati or Ceremonial escort for the Kings or his notables when they moved about in state" (The Nawab's Tears by Ajitmani) என்பதாகச் சுட்டிக்காட்டுகிறது.

பிந்தய சேர அரசர்கள் காலத்தில் இந்த சாவர் படை அமைப்பு கேரளாவில் புகழ்பெற்று விளங்கியதை இந்திய வரலாறு தொடர்பான இதழ் சுட்டிக்காட்டுகிறது. அத்துடன், தங்கள் இளவரசர் கொல்லப்பட்டால் அந்த இளவரசரின் அகம்படிப்

படையினரானவர்கள் எதிரிமுகாமில் படுகொலையையும் பேரழிவையும் ஏற்படுத்தி தங்கள் வஞ்சகத்தைத் தீர்த்துக் கொள்பவர்கள் என்றும் பதிவு செய்கிறது. (Journal of Indian History : Golden Jubilee volume by T.K.Ravidran).

அறநோத்து ஸ்வரூபத்தைச் (Aranottu Swarupam) சேர்ந்த கடன்னமன்ன இளைய வகையில் வள்ளோத்திரி (Katannamanna Ilaya vakayil vallati) அகம்படிப்படையாகச் செயல்பட்டு சமோரியன் அரசர்களின் மெய்காவல் படையினராக விளங்கினர் என்பதை இந்திய வரலாற்றுப்பேரவை நடவடிக்கைகள் தொடர்பான நூல் பதிவுசெய்கிறது. (Transactions of the Indian History congress volume-61, Issue-I).

"கௌத்துநாடு வரலாற்று புவியியல்" என்ற தலைப்பில் கோழிக்கோடு பல்கலைக்கழக முனைவர்பட்ட ஆய்வாளர் திரு.கே.பி.இராஜேஷ் அவர்கள் சமர்பித்த ஆய்வேட்டில் நாயர் இராணுவ அமைப்பு பற்றியும், அவர்கள் அகம்படி காரியக்காரர்கள், நிழல், லோகர் என்ற பெயர்களில் ஆட்சியாளர், அரசர்களின் மெய்காவலர்களாகவும், ஆட்சி நிர்வாகத்திலும் பங்கேற்றதைப்பதிவு செய்கிறார். அதில் அவர்,

ஆயிரம் நாயர் மற்றும் அகம்படி காரியக்காரர் நிழல், லோகர் போன்ற பலவகைப்பட்ட இராணுவத்தினர் கோளஸ்வரூபம் என்ற அமைப்போடு இணைந்திருந்ததையும், ஆயிரம் நாயர் என்ற இராணுவப்பிரிவு ஆட்சி அதிகாரத்தின் குறியீடாகவும் குறிக்கப்படுவதையும் சுட்டிக்காட்டுகிறார். அகம்படி காரியக்கார் நிழல் என்போர் நாடுவழி என்ற நாட்டுத் தலைவர்களை நிழல் போன்று உடன்வந்து பாதுகாப்பு அளிக்கும் அமைப்பாகும்.

கொடன் கொத்து (Kodan Gottu) நாயர் என்பவர்கள் அகம்படிக்காரியக்காரர்கள் என்று அழைக்கப்படுபவர்கள், அவர்கள் உதயவர்மன் கோளத்திரி போன்றவர்களுக்கு உடன்வந்து பாதுகாப்பு அளிப்பவர்கள். இவர்கள் கோளத்திரிகளின் தலைமை இராணுவ (Chief Commanders)தளபதியாக விளங்கினர். அதனால் நிலங்களின் மீது சடங்கு உரிமைகளைப்பெற்றனர் என்று பதிவுசெய்கிறார்.

கோழிக்கோடு பல்கலைக்கழக ஆய்வாளர் எ.பி.கிரிஷ்மலதா அவர்களின் முனைவர் பட்ட ஆய்வேடான "வல்லுநாடு வரலாற்று புவியியல்" என்ற ஆய்வேட்டில் கேரளாவின் வல்லுநாடு பகுதியில் உள்ள பல்வேறு வியாபார வணிக சமூகங்களைப்

பற்றிக் குறிப்பிடுகிறார். அதில் தரகன் என்ற வியாபாரிகளைப் பற்றிக் குறிப்பிடுகிறார். இவர்கள் அகமுடையார் சமூகத்திலிருந்து வந்தவர்கள் என்றும், தரகு மற்றும் வியாபார நடவடிக்கைகளில் ஈடுபடுபவர்கள் என்பதையும் பதிவு செய்கிறார். (Historical Geography of Valluvanad – University of Calicut by A.P.Greeshmalatha Pages : 149, 150).

நாயர்கள் முதல் முதல் மலபாரின் மேல் படையெடுத்துக் குடியேறிய திராவிட இனத்தவர்களாகலாம், அவ்வாறு வெற்றி கொண்டவர்கள் ஆட்சிப் பொறுப்பாளர்களாகவும், நில உரிமைக்குரிய பண்ணையார்களாகவும் தங்களை நிலைநிறுத்திக் கொண்டவர்களாதல் வேண்டும் என்று இந்நாயர்களைப்பற்றி எட்கர் தர்ஸ்டன் தனது தென்னிந்தியக்குலங்களும் குடிகளும் நூலில் பதிவுசெய்கிறார். மேலும், நாயர்களைப் பற்றிக் கீழ்க்கண்ட விபரங்களை எட்கர் தர்ஸ்டன் விளக்கிச்செல்கிறார்.

அரசர்களோடு உடனுறைபவர்களாக வாழும் இவர்களுள், சிலர் அரசனுடைய உறவினர்களான பெருமக்களுடனும், ஊதியம் பெறும் ஆட்சித்தலைவர்களுடனும் தங்கி இருப்பார். நல்ல திறமை கைவரப்பெற்ற இவர்கள் நற்குடிமக்களாகவும், கருதப்படுகின்றனர். இவர்கள் ஏழுவயதுச் சிறுவர்களாக இருக்கும்போதே படைக்கலப் பயிற்சிக்காக களரியில் சேர்க்கப்படுகின்றனர். இவர்கள் முளிகளையும், மூட்டுகளையும், உடல்நுட்பம் அறிந்தவர்கள் நல்லெண்ணெய் போட்டு நீவி விரும்பிய வண்ணம் அவை செயல்படத் துணை செய்கின்றனர். இதனால் இவர்கள், நெகிழ்ந்து இயலும் உடற்கூறு வாய்க்கப்பெற்றவர்களாக உடலில் எலும்பே அற்றவர்கள்போல் அதனை முன்னும் பின்னும் பக்கவாட்டிலும் மேலும், கீழுமாக அவர்களுடைய எதிரிகள் வியக்கும்படியாக இயக்க ஆற்றல் பெற்றுள்ளனர்.

நாயகர்கள், தங்கள் உயிரை துச்சமென மதித்து அரசரின் மானத்தைக் காக்க தங்கள் உயிரை எப்பொழுதும் தரமுன்வரக்கூடியவர்கள். வேறெந்த நாட்டவரும் படைக்கலப்போர் நுட்பத்திலும், கைலாவகத்திலும் இவர்களை விஞ்ச இயலாதபடி, படைக்கலம் ஏந்திப் போரிடுவதிலேயே இவர்கள் மகிழ்ந்தவர்களாக உள்ளனர். இவர்கள் எப்பொழுதும் தங்கள் படைக்கலன்களான வாள், வில், அம்பு, கேடயம், ஈட்டி ஆகியவற்றைத் தங்களோடு சுமந்தபடித்திரிவர்.

நாயகர்கள் அரசர்களின் முடிசூட்டு விழாவின்போது அரசர்முன் சமைத்த சோறு பெருமளவில் குவித்து வைக்கப்பட்டிருக்கும். 300, 400 படைவீரர்கள் தாங்களாகவே முன்வந்து அரசர் சிறிது உண்டபின் தம்கையிலிருந்து தரும் சோற்றினை ஒவ்வொருவரும் பெற்றுச்செல்வர். இச்சோற்றை உண்பவர்கள், அரசர் இறக்கும் நாளில் தீப்பாய்ந்து அவரோடு உயிர்துறப்பர். அரசர் போர்களத்தில் புண்பட்டுவீழ்வாராயின் இவர்கள் தங்கள் கடமையாகக்கருதி உயிரை தப்பாது ஈவர். பிறநாடுகளில் பயணிகள் பிரம்பையும், கைத்தடியையும் எடுத்துச் செல்வது போலச் சிறிதும் அஞ்சாதவர்களாக உறையில் இடப்படாத தங்கள் வாள்களைச் சுமந்தவர்களாக திரிவர். தங்களின் வாளின் பிடியானது இடைக்கச்சையில் இருக்கப் பளபளக்கும் கத்திமுனை தோள்களுக்கிடையே மேலே நீட்டியபடி நடந்து செல்வர்.

ஆதியில் உண்மையில் நாயர்களாக இருந்தவர்கள் போர்ப்படைப்பிரிவினைச் சேர்ந்தவர்களாகவும், நிலவுடைமையாளர்களாகவும், இருந்து கொண்டு படையில் பணியாற்றியவர் என்பதில் ஐயமேதும் இல்லை. பின்னர் பல்வேறு தொழில் முறைச்சாதியினரும், வணிகரும், புதிதாகக் குடியேரியவர்களும், தங்களை நாயகர்கள் என்று அழைத்துக்கொண்டனர். இப்பகுதியில் ஆண்ட அரசர்களும் குருநிலத் தலைவர்களும் தங்களுக்கு சிறப்பாகத் தொண்டுபுரிந்த தனிப்பட்டவர்களையும், வகுப்பார்களையும், நாயர் என்றத்தகுதிக்கு உயர்த்தியுள்ளனர்.

ஆரியர்களின் குருதிக்கலப்பால் நாயர்களின் உடற்கூறுகளில் மாற்றம் ஏற்பட்டன. இது நாயர்களும் பிறபகுதியில் உள்ள திராவிடர்களுக்குமான உடற்கூறுகளில் வேறுபாட்டை எடுத்துக்காட்டியதாகவும் எட்கர் தர்ஸ்டன் பதிவு செய்கிறார்.

மஹாபலியின் மக்கள் என்ற நூலில் அதன் ஆசிரியர் திரு.வையவன் ஒன்பதாம் நூற்றாண்டு தொடங்கி பதினோராம் நூற்றாண்டுவரை குலசேகரவர்மாவின் தலைமையில் குலசேகரவம்சத்தின் இரண்டாம் சேர சாம்ராஜ்யத்தின் ஆட்சி சேரநாட்டில் நடைபெற்றது என்கிறார். மேலும் அவர் பொ.ஆ.999 இல் தொடங்கிய சேரநாட்டின் மீதான, சோழர் படையெடுப்பு 11ஆம் நூற்றாண்டு வரை நீடித்ததாகவும். இதன் விளைவாக சமூக பொருளாதார அரசியல் ரீதியாகப் பெரியப்பாதிப்புகளைச் சேரநாடு சந்தித்ததாகவும், ஜன்மி சம்பிரதாயம் எனப்படும் நிலப்பிரபுத்துவமுறை, மக்கத்தாயம் (தந்தைவழி மகன்

என்ற வாரிசுரிமை) மறைந்து மருமக்கத்தாயம் (தாய்வழி) சமுதாய அமைப்பு வலுப்பெற்றும், நாடு வழிகள் என்ற நாட்டுப்பிரிவினை நிர்வகித்தவர்கள் சுதந்திரமடைந்து பல சிற்றரசுகள் தோற்றம்பெற்றன என்றும் சுட்டிக்காட்டுகிறார்.

தமிழ் மற்றும் சமஸ்கிருதத்திற்குகிடையே கலந்துறவாடல், மலையாள மொழியின் பிறப்புக்கு காரணமாயிற்று. சமண பௌத்தர்களால் கேரளத்து தமிழ் பிராகிருதத்தின் செல்வாக்கிற்கு உள்ளானது நம்பூதிரிகளின் உறவாலும், செல்வாக்காலும், இனம் மற்றும் குருதிக்கலப்பு, நிலஉரிமை மாற்றம், சமய நிறுவனங்களின் ஆதிக்கம், தந்தைவழி சமூகத்தினின்று தாய்வழி சமூக அமைப்பாக மாற்றமடைதல் போன்றப் பல்வேறு காரணிகள், சேரநாட்டு பூர்வகுடிகளின் சமூக, அரசியல், வாழ்க்கையை மீளமுடியாத பெரும் மாற்றத்திற்கு உள்ளாக்கியது. இருந்தபோதிலும் சேரமன்னர்கள் மழவர் மெய்ம்மறை என்று அழைக்கப்படுதலும், சேரநாட்டில் இளையர் மழவர் போன்றோர் மெய்க்காப்பாளராக விளங்கினர் என்ற பழைய சேரர் மரபுத் தொடர்ச்சியைத் தாம் எதிர்கொண்ட வேறுபட்ட சமூக அரசியல் வாழ்விலும் அதன் எச்சமாக நாயர்கள் அகம்படிப் படையாகச் செயல்பட்டனர் என்பதாக முடிவு செய்யமுடியும்.

★★★

# 4.

# இலங்கையில் அகம்படியர்கள்

“இலங்கையில் அரசுப்படைகளில் அகம்படியர் ஒரு பிரதானமான பிரிவாக அமைந்திருந்தனர். பன்னிரண்டாம் நூற்றாண்டு முதலாக அவர்களைப் பற்றிய குறிப்புகள் நூல்களிலும், சாசனங்களிலும் காணப்படுகின்றன”

– பேராசிரியர், சி.பத்மநாபன்,
இலங்கைத் தமிழ்ச் சாசனங்கள்.

இலங்கையில் அகம்படியர்களின் வரலாற்றினை இலங்கையைச் சேர்ந்த பேராசிரியர் திரு.சி.பத்மநாதன், திரு.கார்த்திகேசு இந்திரபாலா, திரு.கணபதிப்பிள்ளை, திரு.ஏ.முத்துப்பிள்ளை, திரு.கார்திகேசுத் சிவத்தம்பி, திரு.ஆரியபாலா, திரு.க.சண்முகலிங்கம், திரு.க.செ.நடராசா, திரு.சி.க.சிற்றம்பலம், திரு.ஸ்டான்லி ஜெயராஜா தம்மையா, திரு.பல்லவராசசேகரம், திரு.லயனல்சரத், திரு.எ.ஜெயரத்னம் வில்சன், திரு.எ.வேலுப்பிள்ளை போன்ற அறிஞர் பெருமக்கள் தாங்கள் எழுதிய நூல்கள், கட்டுரைகள் ஆகியவற்றில் விளக்கமாகவும், குறிப்புகளாகவும் எடுத்துக்கூறிச் சென்றுள்ளனர்.

தமிழகத்தைவிட, இலங்கையில், அறிஞர்கள் அகமுடையர்களைப் பற்றிய செய்திகளை அதிகமாகவே குறிப்பிட்டுள்ளனர். மத்தியகால இலங்கை வரலாற்றில் சோழ

மன்னர்களின் படையெடுப்பாலும், பாண்டியர்களின் நேசமிகு உறவாலும், வணிகக்குழுக்களின் தொடர்பாலும் தமிழகத்திலிருந்து அகம்படியர்கள் இடம்பெயர்ந்து இலங்கைக்குச் சென்றுள்ளனர். அவ்வாறு சென்றவர்களின் ஒருபிரிவினர் அங்கேயே நிலைத்து பின்னர் சிங்கள அரசுகளின் படைப்பிரிவிலும், இலங்கையின் நிர்வாக அலுவல்களிலும் பங்கேற்றுள்ளனர். அதிலும் ஒரு பிரிவினர் அங்குள்ள மக்களோடு கலந்து இன மொழி அடையாளங்களை இழந்துள்ளனர். பிறகு அகம்படியர்கள் இலங்கையின் தமிழ் வெள்ளாளர்களில் ஒரு அங்கமாக மாறிப்போய் உள்ளனர். இலங்கையின் கல்வெட்டுகள் மற்றும் இலக்கியப் பரப்பில் அகம்படியர்கள் பற்றிக் குறிப்புகள் மிகுதியாகக் காணக்கிடக்கின்றன.

முதலாம் பராக்கிரமபாகுவின் காலத்தில் (1153-1186) வெளிநாடுகளுக்குப் படையெடுத்துச் சென்ற சேனைகளிற் பெருமளவிலான அகம்படியர்கள் அடங்கியிருந்தனர் என்று "நிகாய சங்கிரகய" என்னும் நூலில் சொல்லப்படுவதாக பேராசிரியர் திரு.சி.பத்மநாதன் தெரிவிக்கிறார். மேலும் அவர், "பராக்கிரமபாகுவின் அப்பந்த மண்டலிகரைப் பற்றி மகாவம்சம் குறிப்பிடுகிறது. அகம்படி முதலிகள் என்னும் தொடரை அப்பந்த மண்டலிக எனப் பாலிமொழியில் மொழிபெயர்த்துள்ளனர் என்று அறிஞர் சிலர் கொள்வார். நிசங்கமல்லன் காலத்துச் சாசனமொன்றில் வரும் அகம்படி மண்டலிகர் பற்றிய குறிப்பு இதனை உறுதி செய்கிறது. இலங்கையில் தம்பதெனிய, கம்பளை, கோட்டை ஆகிய இராசதானிகளின் காலங்களிலும், அரசப்படைகளில் அகம்படிகள் இருந்தனர்."

அகம்படிச் சேனை முதன்மை நிலையில் இருந்தது என்பதை "மயூரசந்தேசய" என்னும் நூல் மூலம் அறிய முடிகிறது. அது 14ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் எழுதப்பட்டது. அதன் பாயிரச் செய்யுள்களில் அரசர், அரசியர், என்போருக்கும் அகம்படிச் சேனைக்கும் கடவுளரின் ஆசி கிடைக்க வேண்டும்மென்று நூலாசிரியர் வாழ்த்துகின்றமைக் குறிப்பிடற்குரியது.

கோட்டைக்காலம் முடியும்வரை அகம்படிச் சேனை முக்கியத்துவம் கொண்டிருந்தது. சிலசமயங்களில் அகம்படிச் சேனையிலுள்ளவர்கள் நிருவாகச் சேவையிலும் ஈடுபட்டனர் என்பதைச் சாசனக்குறிப்புகள் மூலம் அறிய முடிகிறது. பரவணி ஆட்சியில் வழங்கப்பெற்ற நிலம் பற்றிய விபரங்களைக்

குறிப்பிடும் "மடவளைச்சாசனம்" தும்பத்துறையிலுள்ள பத்து அகம்படியரின் முன்னிலையிலே சிலாலேகஞ் செய்யப்பட்டது. நெட்டி அகம்படியர், மூலக அகம்படியர் என்னும் இருவகை அகம்படியர்களைப்பற்றித் "தம்பதெனி அஸ்ன" என்னும் நூல் குறிப்பிடுகிறது.

"மத்திய கால இலங்கையின் சமூகம்" என்ற ஆங்கில நூலின் ஆசிரியர் திரு.எம்.பி.ஆரியபாலா ("Society in Medieval Ceylon" by M.B.Ariyapala, Lecturer University of Ceylon, Page 162) இலங்கையில் அகம்படியர்கள் பற்றிக் கீழ்க்கண்டவாறு பதிவு செய்கிறார். அகம்படி என்பது கோயில் அல்லது அரண்மனைக்குள் சேவைபுரிபவர்கள். அவ்வாறு பணிபுரியும் ஒரு குறிப்பிட்ட சாதியினரைக் குறிப்பிட வடக்கு இலங்கையில் இந்த அகம்படி என்பது பயன்படுத்தப்பட்டது. பெரும்பகுதி வெளிநாட்டு போர்வீரர்களை உள்ளடக்கிய இவர்கள் சிங்கள அரசர்களிடமும் பணியாற்றினர் இவர்களில் நான்கு பிரிவினர்கள் குறிக்கப்படுகின்றனர்.

1. இராஜ அகம்படி (Raja Agambadi) : அரண்மனையில் பணியாற்றும் அரண்மனை வீரர்கள்.

2. முகுகால அகம்படி (Mukukala Agambadi) : வரியினங்களை வசூலிப்பவர்கள்.

3. நெட்டி அகம்படி (Netti Agambadi) : படைபிரிவுகளில் ஒன்று.

4. பல அகம்படி, (Bala Agambadi) : இராணுவக்குழுவினரோடுசெல்லும் வீரர்கள்.

இப்பிரிவினர்களை ஜோல்டன் பிடர்மேன் என்ற ஆய்வாளர் கீழ்க்கண்டவாறு விளக்குகிறார்.

1. நெட்டி அகம்படி, உயர்திறன் மிக்க இராணுவப்படையினர் (Elite troops in war).

2. இராஜ அகம்படி, அரசப்பாதுகாப்புப்படையினர் (Royal guard).

3. முகுகால அகம்படி, வேளாண் வரி வசூல் நிர்வாகப்பணி (Collections of agrarian taxes).

4. சிலோன் இலக்கியப்பதிவேடு (Ceylon Literary Registrar) ரன்சிரிபன் (Ransiriban) அகம்படி என்ற பிரிவினரைப் பதிவு செய்கிறது. இவர்கள் பராக்கிரமபாகு மன்னனை தங்க உடை

வாளோடும், குத்துவாளோடும் சூழ்ந்து நின்று பாதுகாத்தவர் (Agampadi girt with golden swords or daggers) என்று பதிவு செய்கிறது. நெட்டி அகம்படி, மூலக அகம்படி உள்ளிட்ட எட்டு தமிழ் சிங்கள தளபதிகள் நிறுவிய ஹாம்பலாவில் உள்ள நியன்ஹம்பயா விகாரா (Niyangampaya vihara in Gampala) பற்றி இலங்கை தமிழர்கள் என்ற நூல் குறிப்பிடுகிறது. (The Tamils of Srilanka Their history and Role by P.A.T.Gunasinghe)

அகம்படிச்சேனை, முதலாம் பராக்கிரம பாகுவினைத் தங்க உடைவாளோடு சூழ்ந்து பாதுகாத்ததையும், இவ்வகம்படிச் சேனையின் எண்ணிக்கை 24 இலட்சத்து 25,000 ஆக இருந்ததையும், நிகாய சங்கிரகயா எனும் நூல் குறிப்பிடுகிறது என்று பதிவு செய்கிறார், திரு.எம்.பி.ஆரியபாலா அவர்கள். இவர்கள் தென்னிந்தியாவைச் சார்ந்தவர்கள் என்று அறிஞர்கள் குறிப்பிடுவதையும் மேற்படி அறிஞர் சுட்டிக்காட்டுகிறார்.

இலங்கையைச் சேர்ந்த சிங்கள அறிஞர், இலங்கையின் இனப்பிரச்சினை தீர்வுக்கும், சமாதானத்திற்கும் பாடுபட்டவர். எழுத்தாளர், நாவல், சிறுகதையாசிரியர் “திரு.லயனல் சரத்” அவர்கள் எழுதிய “புராதன இலங்கையின் தமிழ் சிங்கள உறவுகள்” என்ற நூலில் அகம்படிச் சேனைகள் பற்றி விரிவாகக் பதிவுசெய்கிறார்.

தென்னிந்தியத் தமிழர்கள் இலங்கை மன்னர்களின் அழைப்பின் பேரில் அவர்களுக்கு ஒத்தாசைபுரியும் நோக்கத்துடன் இங்கு வந்து யுத்தம் புரிய நேர்ந்ததேயன்றி அவர்கள் சுயவிருப்பின் பேரில் யுத்தம்புரிய வரவில்லை. இரண்டாவது தாதோதிஸ்ஸன், நாலாவது அக்க போதி ஆகிய இரு மன்னர்களின் இருபத்தைந்து வருடங்கள் ஆட்சியில் இவ்விருமன்னர்களது அரசவையில் தமிழ் சேனாதிபதிகளே முக்கியப் பதவிகளை வகித்தனர்.

பொத்தக்குட்டன் என்ற தமிழர் அக்கபோதி மன்னரின் முதலமைச்சரும் ஆலோசகருமாக இருந்தார். பொத்த சாத்தன், மகாகந்தன் ஆகிய இருவரும் மன்னரின் முக்கிய அமைச்சர்களாகவும் விளங்கினர். இக்காலத்தில் நாட்டில் சமாதானமும், சுபீட்சமும் நிலவியதுடன், சமயரீதியிலும் வளர்ச்சி காணப்பட்டது. இந்தத் தமிழ் தலைவர்கள் புத்த விகாரைகளுக்கு வழங்கிய நன்கொடைகளை உற்று நோக்குகையில் இவர்கள் மாபெரும் நிலச்சொந்தக்காரர்கள் என்று புலனாகிறது. கிராமங்களில் சாதாரண போர் வீரர்களும் வசித்துள்ளதாக

*நம்பமுடிகிறது. முந்நூறு ஆண்டுகள் தொடர்ந்து நிலவிய இச்செயற்பாடுகாரணமாக அவர்களில் சிலர் சிங்களவர்களாக மாறினர்.*

*மானவம்மன் (கி.பி.684) எனும் இளவரசன் தென்னிந்தியாவிலிருந்து படையெடுத்து வந்த வேளையில், சிங்கள இனத்தைச் சேர்ந்த கத்ததத்தனுக்காக உயிரைத்துச்சமென மதித்து அவர்கள் போர் புரிய முன்வந்தனர். மானவம்மனின் படையும் பொத்தக்குட்டனின் தலைமையிலான சிங்கள தமிழ் நேசப்படையும் கடும்போர் புரிந்தன. இச்சமரில், சிங்கள மன்னரான கத்ததத்தன் இறக்க நேரிட்டதுடன் முதலமைச்சரான பொத்தக் குட்டன் தற்கொலை செய்து கொண்டான். இவ்வாறு இலங்கையின் ஆட்சியதிகாரம் தொடர்பாக அடிக்கடி சண்டையிட்டுக்கொண்ட அரசர்கள் தென்னிந்தியாவை நாடிச்சென்று குறிப்பிட்ட சில அரசர்களின் அனுமதியுடன் படைகளை இலங்கைக்கு அழைத்து வந்தனர். அகம்படிச் சேனைகள் என அழைக்கப்பட்ட இவர்களுக்கு தங்குமிடம் வசதியுடன் கூடிய பாதுகாப்பும் வழங்கப்பட்டது. இவ் அகம்படிச் சேனையினர் எச்சந்தர்பத்திலும் மன்னர் ஆணைப்படி யுத்தம் புரியத்தயாராக இருந்தனர். முக்கியத்துவம் பெற்ற வீரர்களும் இப்படையில் அடங்கியிருந்தனர் என்று அகம்படிச் சேனைகள் பற்றிய விரிவான குறிப்பினைத் தருகிறார்.*

*தமிழர்கள், இலங்கைச்சென்றதைப் பன்மொழிப்புலவர் திரு.கா.அப்பாத்துரையார் கீழ்க்கண்டஉதாரணத்துடன், தென்நாட்டுப் போர்க்களங்கள் நூலில் விளக்குகிறார். மதுரையில் முஸ்லீம் ஆட்சியால் அவதியுற்ற சமயம், தெலுங்குவீரர்பலர் தமிழகத்தில் வந்து வீரப்பணியாற்றியது போல தமிழர் பலர் இலங்கைக்குச் சென்று, தமிழரசர் கீழும், சிங்கள அரசர் கீழும் வீரத்தொண்டாற்றினர். இவர்களில் சிங்கள அரசரிடம் படைத்தலைவனாக அமர்ந்த சோழநாட்டுத் தமிழனான அழகக்கோனானே 1385இல் யாழ்ப்பாண அரசுக்குத் திறை கொடுக்க மறுத்து அதனை முறியடித்து அதன் மேலுரிமையை ஒழிக்கக் காரணமாயிருந்தான். இவனே பிற்பட்ட வீர அளகேசுரன் என்ற பெயருடன் சிங்கள அரசனானான். சில கல்வெட்டுகள் அவனை மலையாள நாட்டிலுள்ள வஞ்சிபுரத்திலிருந்து இலங்கை வந்ததாகக் குறிக்கின்றனர். ஆனால் சீன ஆதாரங்கள் அவனை சோழநாட்டுத் தமிழன் என்று கூறுகின்றன.*

"ஈழத்து இலக்கியமும், வரலாறும்" எனும் நூலில் பேராசிரியர் திரு.சி.பத்மநாதன் (பக்கம்: 194)" "ஹிங்குராக்தமன" என்ற ஊரிலுள்ள தமிழ்க் கல்வெட்டில் இலங்கை அரசன் இரண்டாம் கஜபாகுவின் ஆட்சிக்காலத்தில் "அகம்படிச்சகையர்" என்ற குழுவைச் சேர்ந்த மாந்ஞாளை என்ற இடத்தில் நிலத்தினை ஜீவிதமாகப் பெற்றிருந்த "உம்பிழ அயித்தன்" என்ற அகம்படியாரைப் பற்றிக் குறிப்பிடுகிறார். மேலும் அவர் வேளைக்காரர், பெரும்படை, அகம்படியர் முதலிய இராணுவப் பிரிவுகளைப் பற்றித் தமிழ்ச்சாசனங்களில் குறிப்புகள் வருகின்றன என்றும், நிசங்கமல்லனுடைய கல்வெட்டொன்று அகம்படிகளைப் பற்றிக் குறிப்பிடுவதையும் சுட்டிக்காட்டுகிறார். இலங்கைக்குச் சென்ற அகம்படியரில் ஒரு பிரிவினர் புத்தமதத்தைத் தழுவியதையும் கீழ்க்கண்டவாறு சுட்டிக்காட்டுகிறார்.

"இரண்டாம் கஜபாகுவினுடைய" மகாகிருந்தேகம் கல்வெட்டு அகம்படிப்பிரிவைச் சேர்ந்த உம்பிழ அயித்தன் என்பவன் புத்தஸ்தானத்திற்குக் கொடுத்த நன்கொடை பற்றிச் சொல்கின்றது. அவன் பௌத்தமதத்தைச் சேர்ந்தவனாக இருந்தான் என ஊகிக்கலாம். பதிமூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த "பதவியாவில்" உள்ள வடமொழிக் கல்வெட்டொன்று சேனாதிபதி ஒருவன் (பௌத்த) விகாரத்தினை அமைத்து அதனை வேளைக்காரவிகாரம் எனப்பெயரிட்டான் என எடுத்துரைக்கிறது. சில தமிழ்ப்படைப்பிரிவுகளான அகம்படியார், வேளைக்காரர் போன்றவற்றைச் சேர்ந்த சிலர் பௌத்தர்களாய் இருந்தனர் என ஊகிக்கலாம் என்று பதிவு செய்கிறார்.

சேண நாயகே, குலிசேணக, "அகம்படி சேனவா" என்று பலவகையான சேனைகளில் அகம்படியர்களைப் படைப்பிரிவினர்களாகக் குறிப்பிடுகிறது கொழும்பு பல்கலைக்கழக ஆய்வுரை (University of Colombo Review Volume 10).

இலங்கையில் போர்த்துகீசியப்பேரரசு ஆதிக்கம் பற்றிய ஆங்கில நூலின் ஆசிரியர் திரு.ஜோல்டன் பிடர்மேன் [(Dis) Connected Empires : Imperial Portugal, Srilankan Diplomacy, and the making of a Habsburg Conquest in Asia by Zoltan Biedermann. Page :171) அவர்கள் அகம்படியர்களானவர்கள் பிந்தய மத்தியகால இலங்கையில் நல்ல பயிற்சியைக் குறைவாகப்பெற்ற ஊரகப்படைகளுக்குத்

*துணையாக இராணுவ நிபுணத்துவம் பெற்ற வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட படையினராக அகம்படி அல்லது அகம்படியர் இருந்தனர் என்று பதிவு செய்கிறார். மேலும் அவர் அகம்படியர்களை மூன்று பிரிவுகளாகக் குறிப்பிடுகின்றார்.*

*1. நெட்டி அகம்படி* (Netti) *: உயர் சிறப்பு மிக்க போரிடும் இராணுவத்தினர்.*

*2. இராஜ அகம்படி* (Raja) *: அரசப்பாதுகாவலர்கள்*

*3. முகுகால அகம்படி* (Muhukala) *: வேளாண் தொடர்புடைய வரிவசூல் மேற்கொள்ளும் பிரிவினர்.*

*அரண்மனைகளிலும், ஆலயங்களிலும் சேவையாற்றக்கூடிய வகுப்பினராக அவர்கள் தோன்றியிருந்திருக்கலாம். பின்னர் அவர்கள் ஒரு சாதியினராக பரிணாமம் அடைந்தனர். நவீன காலத்தில் இந்தப்பெயரில் தென்னிந்தியாவில் ஒரு சாதியினர் இருப்பதையும் அவர்கள் ஆர்காடு புதுக்கோட்டை மற்றும் மதுரை பகுதிகளில் வாழ்ந்து கொண்டிருந்ததையும், அவர்கள் அகம்படியர் அகமுடி, மற்றும் அகமுடியர் என்று பலவாராக அறியப்படுவதையும் காணமுடிகிறது என்று குறிப்பிடுகிறது, யாழ்ப்பாண தொல்லியல் கழக வெளியீடான எபிகிராபிக தமிளிகா தொகுதி* I *பகுதி* I *பக்கம் 16.* (Epigraphica Tamilica Volume I, Part I by Jaffna Archaeological Society, 1971).

*இலங்கைத் தமிழரின் இன அடையாளப் பரிணாமம் என்னும் ஆங்கில நூலின் ஆசிரியர் திரு.கார்திகேசு இந்திரபாலா அவர்கள் அகம்படியர் பற்றிக் கீழ்க்கண்டவாறு பதிவு செய்கிறார்.* (The Evolution of an Ethnic identity : The Tamils in Srilanka (300 BCE to 1200 CE) by Karthikecu Intirapala, Page No.243)*"இந்த அகம்படியர் (அகம்படி) என்பவர்கள் தென்னிந்தியாவில் தோன்றிய மற்றுமொரு போர் வீரர் தொகுதியினர், இந்த போர் வீரர்கள் அரசர்களின் அரண்மனையில் மெய்க்காப்பாளர்களாக இருந்தவர்களாகத் தெரிகிறது. பின்பு ஒரு இராணுவச் சாதியாகப் பரிணாமம் பெற்றுள்ளனர்" என்று பதிவு செய்கிறார். சிங்கள மன்னர்களின் படைகளில் தென்னிந்தியாவைச் சேர்ந்த அகம்படியர், வேளைக்காரர் போன்ற படைவீரர் தொகுதியினர் இருந்ததை இலங்கைக்கான ராயல் ஆசியாட்டிக் சொசைட்டி இதழ் தொகுதி 11-15 குறிப்பிடுகிறது.* (Journal of the Ceylon Branch of the Royal Asiatic Society Volume 11-15).

இலங்கை வரலாற்றில் கோட்டை அரசர்களில் (கி.பி.1412-1597) ஏழாம் புவனேகபாகு, இந்தியாவிலிருந்து அகம்படியர்கள் மற்றும் இதர இராணுவ நிபுணத்துவம் பெற்றவர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்களை இலங்கையில் குடியமர்த்தியும், அவர்களுடன் தேர்ந்தெடுக்கப்பெற்ற இலங்கை குடும்பங்களிலிருந்து திருமண உறவுகளை ஏற்படுத்தியும், அவ்வாறு இந்தியாவிளிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்கும் தமது மக்களுக்கும் இடையே ஒரு இணைப்பை உருவாக்கியதாக ஜோல்டன் பிடர்மேன் தெரிவிக்கிறார். (Dis) Connected Empires: Imperial Portugal, Srilankan Diplomacy and the making of a Habsurg conquest in Asia).

இலங்கையில் தம்பதெனியா (Dambadeniya) ஹெம்போலா (Gampola) கோட்டே (Kotte) அரசர்கள் குறிப்பிட்டுச் சொல்லும்படியான எண்ணிக்கையில் அகம்படியர்களைப் படையில் வைத்திருந்ததாக பீட்டர் சாக், இரா.நாகசாமி, மற்றும் ஏ.வேலுப்பிள்ளை தெரிவிக்கின்றனர். (Baddhism among Tamils in Pre-Colonial Tamilagam and Ilam).

கடற் படையினரோடு அகம்படிப்படையினரும் இருந்ததைச் சிலோன் அறிவியல் இதழ் கீழ்க்கண்டவாறு பதிவு செய்கிறது.

The AGAMPADI were a military force, in the Nikaya Sangraha we find with the Navani Maha Senaga Usually said to be Seamen. Among the troops despatched abroad by Parakrama Bahu - I, Mukala Agampadi and Netti Agampadi appear in the dambadeni Asna – Ceylon Journal of Science: Anthropology Section volume 1-2 (1928).

இலங்கையில் தெமலா ஹட்பட்டு (Demala hatpattu)வைச் சேர்ந்த வாஃஹாஸ் (wagas) என்ற குலத்தினர் தம்மை அகம்படி வேளாளர் என்று கூறிக்கொண்டதைச் சிலோன் மக்கள் தொகைக் கணக்கெடுப்பு அறிக்கை 1921 குறிப்பிடுகிறது. (Census Publication: Ceylon by Lewis James Barnetson Turner). இலங்கையில் பராக்ரமபாகு (1153-1186) தொடங்கி கோட்டை காலம்வரை அகம்படிப்படையினர் சிறப்புற்றிருந்தனர் கடவுளின் ஆசி அரசர் மற்றும் அரச குடும்பத்தினர்களுக்கு மட்டுமின்றி அகம்படிப்படையினருக்கும் கிடைக்கவேண்டும் என்று நிகயசங்கிரகய (Nikaya Sangrahaya) குறிப்பிடுவது அகம்படிப்படையினர் கொண்டிருந்த முக்கியத்துவத்தையும், செல்வாக்கையும் உணர்த்துவதாக Acta Universitatis Upsaliensis – Historia Religionum volume -2-20 பதிவு செய்கிறது.

*இலங்கையில் அகம்படியர் செலுத்திய வரியாக "அகம்படிப்பணம்"* (Agampadippanam, which means the taxes paid by the Agampadi People) *என்ற வரியை, சிங்களச்சட்டங்களும், வழக்கங்களும் என்ற ஆங்கில நூல் சுட்டிக்காட்டுகிறது* (Sinhala Laws and Customs by Henry wijayakone Tambiah).

*இலங்கை வரலாற்றில் பிந்தய அனுராதபுரம் காலம் (கி.பி.691 -1017) தொடங்கி இலங்கை அரசுகளின் பாதுகாப்பிலும் போர்நடவடிக்கையிலும் தென்னிந்தியாவிலிருந்து இலங்கைக்கு வரவழைக்கப்பட்ட அகம்படிப்படையினர் மிகமுக்கிய பங்காற்றினார்கள் என்பதை திரு.டபில்யு.ஐ. சீரிவீரா சுட்டிக்காட்டுகிறார். (*History of Srilanka: From Earliest Times up to the sixteenth century by W.I.Siriweera). *இதே ஆசிரியர் தனது சிலோன் பொருளாதார நிலை* (Economic Conditions of Ceylon) *என்ற ஆய்வேட்டில் இலங்கையில் அகம்படியர் வசித்த அகம்படியர் வீதி என்பதையும் பதிவுசெய்கிறார்.*

*சிலோன் இலக்கியப் பதிவேடு* (Ceylon Literary Registrar 1973) *அகம்படியரில் உள்ள இராசகுலம் மற்றும் இராசவாசல் அகம்படியர்களைப் பற்றிக் குறிப்பிடுகிறது. அரண்மனைகளில் காவல்பணி புரிபவர்களை இராச அகமுடையார் என்று பதிவுசெய்கிறது. சிலோன் கல்வெட்டுகள் என்ற நூல் "அகம்படி பாராகமண்டலிகாஸ்"* (Agampadi-bharaka-mandalikas) *என்போர் அகம்படிப்படைகளுக்குப் பொறுப்பான மண்டல நிர்வாகிகள் என்று குறிப்பிடுகிறது. (*Inscriptions of Ceylon: Containing Pillar, Slab and rock inscriptions from 815 AD to 923 AD by Senarat paranavitana).

*"யாழ்ப்பாண அரசு" என்ற ஆங்கில நூலின் ஆசிரியர் திரு.எஸ். பத்மநாதன்* ("The kingdom of Jaffna" Part I by S.Padmanathan.) *அவர்கள் இலங்கையில் அகம்படியார்களைப் பற்றிக் கீழ்க்கண்டவாறு பதிவுசெய்கிறார்.*

*இலங்கைத்தீவில் சோழர் ஆட்சியில் பணியாற்றிய இராணுவத்தின் எஞ்சியவர்களே முதலாம் விஜயபாகு மற்றும், அவரைத்தொடர்ந்து அரசாட்சி புரிந்தவர்களிடம் இருந்திருந்த வேளைக்காரர் மற்றும் அகம்படி என்ற இராணுவத்தினர் ஆவர். இவர்கள் சோழர் ஆட்சி முடிவுக்கு வந்த பின்னர் இலங்கையின் சிங்கள அரசர்களின் படையில் பணியாற்றியுள்ளனர்.*

பொலனுருவா காலம் என்ற முதலாம் விஜயபாகு (1055 -1110) முதலாம் பராக்கிரம பாகு (1153 - 1186) மற்றும் நிஜங்கமல்லன் (1187-1196) ஆகிய காலகட்டத்தில் இலங்கையில் நடந்த குடியேற்றங்களில் தமிழ் இராணுவத்தினரின் குடியேற்றமும் அடங்கும். முந்தய காலத்தைவிட இந்தத் தமிழ் இராணுவத்தினர் அதிக பலத்தோடு காணப்பட்டனர். இதில் வேளைக்காரர்கள் மற்றும் அகம்படியர்கள் மிக முக்கியமான இராணுவசமூகமாகும். இவர்கள் இலங்கையில் முந்தய சோழர்கால ஆட்சியில் பணியாற்றிய இராணுவத்தினரின் வழித்தோன்றல்களாக இருந்திருந்தனர்.

இலங்கைத்தீவில் கஜபாகு மன்னன் ஆட்சியில் (1132 To 1153 AD) பௌத்த விகாரங்களுக்கு உம்பிழ அய்த்தன் என்ற அகம்படியன் நிலத்தைத் தானமாக வழங்கிய செய்தியை ஹிங்குராக்தமன கல்வெட்டு குறிப்பிடுகிறது.

கஜபாகு மன்னனுக்குப்பின் பராக்ரமபாகு மன்னனின் படையில் நூற்றுக்கணக்கான அகம்படியர்கள் இராணுவப்பணியில் இருந்துள்ளனர். இம்மன்னர்களின் சார்பில் வெளிநாட்டுப் படையெடுப்பில் போரிட்டுள்ளனர். அதற்குப்பின் நிஜங்கமல்லன் (1187-1196) படையிலும் அகம்படியர்கள் பணியாற்றியுள்ளனர். பின்பு வந்த சிங்கள அரசர்கள் அதிகமான அகம்படியர்களைப் படையில் வைத்திருந்தனர் என்று பதிவு செய்யும் திரு.எஸ். பத்மநாதன் அவர்கள், அகம்படியர்கள் ஒரே மாதிரியான போர்வீரர்களைக்கொண்ட சமுதாயமாக இருந்து காலப்போக்கில் அகமண சாதியாக வளர்ச்சியுற்றுள்ளனர் என்கிறார்.

அகம்படி அல்லது அகம்படி முதலிகள் என்பதின் பாலிமொழி வடிவமாக அப்பாந்தரா மண்டலிகா (Abbhantara Mandalika) என்பவர்கள் முதலாம் பராக்கிரமபாகு (1153 -1186) ஆட்சியில் பெரும் எண்ணிக்கையிலான படையினர்களுக்கு பொறுப்பான அலுவலர்களாக விளங்கினர் என்பதை Acta Universitatis upsaliensis historia Religionum நூல் பதிவுசெய்கிறது.

இலங்கையில் வையாபுரி ஐயரின் “வையப்பாடல்” என்ற உள்நாட்டு தமிழ் இலக்கியம், அந்நாட்டில் வாழ்ந்த குடிகளைக் குறிப்பிடும் பொழுது (பதிப்பாசிரியர் கலாநிதி திரு.க.செ. நடராசா, பக்கம் 40,43,56) அகம்படியர்களை

மலையகம் நல்லகம்படிய கோமுட்டியானோர்…………(43)
திட்டமுறு சாவகச்சேரி தன்னிற்
றிடமுடனே யகம்படியார் …………..(44)
(திடமுடன் அகம்படியார்)
குச்சிலிய ரகம்படியார் குறவர் மிக்க
கோபால ராகியதோர் குடிகள் தாமும் …...........……..(60)
அறிவுமிகு மகம்படியர் ரணிமிகுந்த கோவிடைய
ராணிக்காரர் ……….(95)

என்று நல் அகம்படியர், அறிவுமிகு அகம்படியார், திடமுடன் அகம்படியார் என்று அகம்படியார்கள் குணநலன்களைக் குறிப்பிடுகிறது.

கலாநிதி சி.க.சிற்றம்பலம் அவர்கள் பதிப்பித்த ‘யாழ்ப்பாண இராச்சியம்'' எனும் நூலில், இலங்கையில் டச்சுக்காரர்கள் வருகையின்போது உள்ளூர் நிர்வாகத்தில், வேளாளர், அகம்படியார் மட்டுமே நீடித்திருந்தனர் என்றும், உள்ளூர் சாதிப் பிரிவுகளுக்கிடையே சமத்துவத்தை நிலைநாட்ட நிருவாகப்பதவிகளை இவ்விரு சாதிகளுக்கு மட்டுமின்றி பிற சாதிப்பிரிவினருக்கும் நல்கியதாகப் பதிவு செய்கிறார்.

அகம்படியர்களின் வேளாண்மை நோக்கிய நகர்வை பல நூல்கள் பதிவு செய்கின்றன. தென்னிந்தியாவைப் போன்றே இலங்கை வரலாற்றிலும் இதுபோன்ற நகர்வைப் பல நூல்கள் எடுத்துக்காட்டுகிறது. அவ்வாறான நகர்வைப்பற்றிய குறிப்புகள், திரு.க.சண்முகலிங்கம் அவர்கள் எழுதிய “இலங்கையின் இன வரைவியலும், மானிடவியலும்'' எனும் நூல் (பக்கம்: 122) கீழ்க்கண்டவாறு பதிவு செய்துள்ளது.

18ஆம் 19ஆம் நூற்றாண்டுகளில் மேலும் ஐந்து குழுக்கள் வேளாளருடன் இணைந்தன. இக்குழுக்களும் பொருளாதார நிலையில் உயர்வு பெற்றிருந்தன.

(அ) அகமுடையர் : இவர்கள் அரண்மனைக் காவலர்கள், மெய்ப்பாதுகாவலர்கள், நிலங்களை மானியமாகப் பெற்றனர், யாழ்பாண அரசின் வீழ்ச்சிக்குப் பின் விவசாயத்தில் ஈடுபட்டனர்.

(ஆ) தனக்காரர் : இவர்கள் கோவில் சொத்துகளின்

பாதுகாவலர்களாக இருந்தவர்கள், யாழ்பாணத்திற்கு தெற்கே உள்ள காடுகளில் யானை பிடித்தல், யானைவர்த்தகம் என்பவற்றில் ஈடுபட்டனர்.

(இ) செட்டிகள் : இவர்கள் வர்த்தகம் செய்தனர்.

(ஈ) பரதேசிகள் : மதுரையில் இருந்து அரசர்களால் கொண்டுவரப்பட்டவர்கள், பலவிதத் தொழில்களில் திறன்மிக்கவர்கள், பரதேசிகள் என்றால் பிறதேசத்தவர்கள் என்பது பொருள்.

(உ) மலையாளிகள்: இவர்கள் கேரளத்தில் இருந்து வந்தவர்கள் அரசனிடமிருந்து சேவைக்காக நன்மை பெற்றவர்கள்.

கடைசியாக குறிப்பிட்ட மலையாளிகளை, மலையாள அகம்படியர் என்று இலங்கை ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர். நாயர், தீயர், பணிக்கர் இவர்களை மலையாள அகம்படியர் என்று கூறுவதுடன், அகம்படியர்களை அகம்படி வேளாளராக, யாழ்ப்பாண வேளாளரில் ஓர் உட்பிரிவாகக் குறித்துச்செல்கின்றனர். (யாழ் வேளாள குல உருவாக்கமும் அதிகாரத்துவமும் ச.தில்லை நடேசன் http://Karamponwordpress.com). "யாழ்ப்பாணம் சரித்திரம்" (பக்கம் 93) நூலாசிரியர் திரு.ஆ.முத்துப்பிள்ளை அவர்கள், இலங்கையில் கோபாலச்செட்டியார் என்ற அகம்படியர் பற்றிக் குறிப்பிடுகிறார். செட்டியார் என்பது அகம்படியர் சூடிக்கொள்ளும் பட்டங்களில் ஒன்று.

திரு.எ.ஜெயரத்னம் வில்சன் அவர்களின் "இலங்கைத் தமிழ் தேசியம்" என்னும் ஆங்கில நூல் (Srilankan Tamil Nationalism: Its origin and Development in the nineteenth and 20th Centuries by A.Jayarathnam Wilson. Page 18) 18 மற்றும் 19ஆம் நூற்றாண்டுகளில், வசதி படைத்ததினாலோ அல்லது ஆளும் வர்க்கத்திற்கு வசதிப்பட்டதாலோ இதர ஐந்து சாதிக்குழுக்களை வேளாளர்கள் தன்னுள் ஈர்த்துக்கொண்டனர். அதில் முதன்மையான சாதியாக இருந்தது, அகம்படியர் ஆவர். இவ்வகம்படியர்கள் அரசனின் மெய்க்காப்பாளராகவும், அரண்மனைக்குள் சேவையாற்றுபவராகவும் இருந்து அதற்கு ஈடாக நிலங்களைப் பெற்றவர்கள் என்று குறிப்பிடுகிறார்.

திரு.கென்னத்டேவிட் என்ற அறிஞர் எழுதிய புதுவசந்தம், தெற்காசியாவில் மாறுகின்ற அடையாளங்கள் என்ற ஆங்கில நூலில் (The New wind : Changing Identities in south Asia, Page 19) அகம்படியர்கள் வேளாளர்களாக அறியப்பட்டதையும் தேவர்,

அகம்படியர் என்று தம்மை அடையாளப்படுத்திக்கொண்டவர்கள் சின்னவேளாளர்கள் என்று அழைக்கப்பட்டனர் என்கிறார்.

சிலோன் கெஜட்டியர் (The Ceylon Gazetteer) என்ற இலங்கையின் ஆவணம், போர்மரபுச் சமூகமான அகம்படியர்களை, வேளாளர் சமூகமாகக் பதிவுசெய்கிறது. தனவைசியர், பூவைசியர், கோவைசியா என்ற பிரிவில், அகம்படியர், துளுவ வெள்ளாளர் உள்ளிட்ட 15 தமிழ்ச் சாதிகளைப் பூவைசியர் என்ற பிரிவில் மேற்படி கெஜட்டியர் குறிப்பிடுகிறது (பக்கம் 230). இதில் கார்காத்த வேளாளர், சோழிய வேளாளர், கொடிக்கால் வேளாளர், பண்டாரத்தார், நைனார், உடையார், கொந்தக வேளாளர், சவள வேளாளர், ரெட்டி, நத்தம்பாடி, மறவர், கள்ளர் பள்ளி, முதலிய இதர பிரிவினர்களையும் குறிப்பிடுகிறது.

இலங்கையானது நல்லுறவின் அடிப்படையிலும், ஒன்றையொன்று சார்ந்திருப்பதன் அடிப்படையிலும், தென்னிந்திய மக்களை, அகம்படியர் மற்றும் வேளைக்காரர்கள் என்று அறியப்படும் இராணுவக்குழுக்கள் வழியும், கடவுள் வழபாட்டின் வழியிலும் உள்வாங்கிக் கொண்டது என்று பதிவுசெய்கிறது, “இனங்களுக்கிடையிலான சகோதரச் சண்டையும், ஜனநாயகத்தகர்ப்பும்” என்ற ஆங்கில நூல் (Ethnic Fratricide and the Dismantling of Democracy, Page No.94).

“யாழ்ப்பாணம் தொன்மை வரலாறு” என்ற நூலில் அதன் ஆசிரியர் திரு.சி.க.சிற்றம்பலம் அவர்கள் இலங்கையில் சோழரின் நிருவாகத்தில் இராணுவமும் முக்கிய பங்கினை வகித்தமை பற்றித் தெரியவருகின்றது என்றும், அதில் மூன்றுகை மகாசேனை, வேளைக்காரர், அணுக்கர், அகம்படி போன்ற பதங்கள் இராணுவத்திற்குள் காணப்பட்டப் பல்வேறு பிரிவினரை எடுத்துக்காட்டுகின்றன என்று பதிவு செய்கிறார்.

இலங்கையில் ஹலாகம (Salagama) என்ற சிங்கள இனத்தோடு இலங்கை தீவுச் சென்ற அகம்படியர் ஒருகுழுவினர் கலந்ததாகச் சொல்லப்படுகிறது. ஹலாகம என்ற சிங்கள இனத்தின் ஒரு உட்பிரிவினர் ஹெவ்பன்னே (Hewapanne-militia)என்பவர் ஆவர். இவர்கள் இராணுவ, போர்மரபு கொண்டவர்களாக அறியப்படுகிறது. இப்பிரிவினரோடு அகம்படியர்களின் ஒருசாரர் மேற்கொண்ட திருமண உறவின் அடிப்படையில் அவர்களின் வாரிசுகள் அகம்பொடி (Agampodi) என்ற பட்டத்தைச் சூடிக்கொள்வதாகவும், இந்த ஹலாகம இனத்தினர் சோழமண்டல

மற்றும் மலபார் கடற்கரையிலிருந்து இலங்கைக்குச் சென்றவர்கள் என்றும், மேற்குக்கடற்கரை நம்பூதிரி பிராமணர்கள் என்றும், இவர்கள் இலங்கைக்கு புலம் பெயர்ந்தவுடன் சிங்களர்களாக மாறியவர்கள் என்றும் கூறப்படுகிறது. இவைகள் விரிவான ஆய்வுக்குரியவை. (Tamil migrations to Srilanga –Wiki Pedia)

படைத்தொகுதியினராக இலங்கைச் சென்ற அகம்படியர்கள், இலங்கையில் சோழர் செல்வாக்கு குன்றியவுடன், சிங்கள அரசுகளிடம் செல்வாக்கு பெற்ற படையினராக இருந்துள்ளனர். தென்னிந்தியாவில் வேளாண் நோக்கிய நகர்வு இருந்தபோதும் தங்களது தனித்த அடையாளத்தைத் தக்கவைத்துக்கொண்ட இவர்கள் இலங்கையில் ஒருபுறம் தமிழ் இன அடையாளத்துடன் அங்குள்ள வெள்ளாளர் பெருங்குழுமத்தின் அங்கமாக மாறிப்போய்யுள்ளனர். இன்னொருபுறம் தமது இன, மொழி அடையாங்களை இழந்து சிங்கள பெருங்குழுமத்தின் அங்கமாகவும் மாறிப்போய் உள்ளனர். இனக்குழுக்கள் இடம் பெயர்வு மற்றும் பரிணாமத்தில் இவையெல்லாம் சாத்தியப்படக் கூடிய நிகழ்வுகள்தான் என்பது அறிஞர்களின் முடிவாகும்.

**மலையகத் தமிழர்கள் :**

ஆங்கிலேயர்களின் காலனிய ஆட்சியில் இலங்கை இருந்தபோது அவர்களால் உருவாக்கப்பட்ட காப்பி உள்ளிட்ட தோட்டங்களில் குறைந்த கூலியில் மிக மோசமான சூழலில் வேலை செய்வதற்காக தமிழகத்திலிருந்து இலங்கைக்கு ஆசைவார்த்தை கூறி அழைத்துச்செல்லப்பட்டவர்களின் வம்சாவழியினர் மலையகத்தமிழர்கள் என்றும், இந்தியவம்சாவழித் தமிழர்கள் என்றும் அழைக்கப்படுகின்றனர்.

இவர்கள் பெரும்பாலும், திருச்சி மாவட்டம், புதுக்கோட்டை சமஸ்தானம், தஞ்சாவூர் மாவட்டம் (திருச்சிராப்பள்ளி சர்க்கிள்), செங்கல்பட்டு மாவட்டம், வடஆற்காடு மாவட்டம், தென்ஆற்காடு மாவட்டம் (வேலூர் சர்க்கிள்), சேலம் மாவட்டம், கோயம்புத்தூர் மாவட்டம், திருச்சி மாவட்டத்தின் சில பகுதிகள் (சேலம் சர்க்கிள்), மதுரை மாவட்டம், திருநெல்வேலி மாவட்டம், இராமநாதபுரம் மாவட்டம் (மதுரை சர்க்கிள்) ஆகிய பகுதிகளிலிருந்து திரட்டப்பட்ட தொழிலாளர்கள் ஆவர்.

தோட்டப்பயிர் செய்கையில், காப்பி, கொக்கோ, தேயிலை, தென்னை, ரப்பர் போன்ற தோட்டப்பயிர்கள் சார்ந்த

பெருந்தோட்டங்களில், மலைகளிலும் காட்டுப்பகுதிகளில் வேலைக்கு அமர்த்தப்பட்டவர்கள் ஆவர். அத்துடன் இவர்கள் துறைமுகம், இரயில்வே, பொது வேலைப்பகுதி உள்ளிட்ட அரசாங்க வேலையிலும் அமர்த்தப்பட்டிருந்தனர்.

இலங்கையில் மத்திய மாகாணம், ஊவா மாகாணம், சம்பிரகமுவ மாகாணம் ஆகிய மூன்று மலைப் பிரதேசங்களை உள்ளடக்கிய பிராந்தியம் மலையகம் என்ற பொதுப்பெயரால் வழங்கப்பட்டு வருகிறது.

1823 முதல் தென்னிந்தியாவிலிருந்து ஆசைகாட்டிக் கொண்டுவரப்பட்ட தொழிலாளர் பரம்பரை இன்றைவரை மலையகத்தின் ஆணிவேராகத் திகழ்கின்றன என்று பதிவுசெய்கிறார், திரு அந்தனிஜீவா தனது கண்டிமாவட்டத் தமிழர்களின் வரலாற்றுப்பதிவுகள் (மத்தியமாகாண தமிழ்ச்சாதித்திய விழா 2002) என்ற நூலில், அத்துடன் அவர் மலையகத்தில் வாழும் இந்திய தமிழரிடைய பிராமணர், வெள்ளாளர், அகம்படியார் கோனார், கள்ளர். தேவர், போன்ற 32 சாதிகள் வாழ்வதாகப் பதிவு செய்கிறார்.

மேலும் அவர் இலங்கையின் பெருந்தோட்டக்குடியிருப்புகளின் கட்டமைப்பு, தமிழக கிராமப்புரத்து கட்டமைப்பை ஒத்து இருப்பதாகக்குறிப்பிடுவதுடன், அவ்வமைப்பைக் கீழ்க் கண்டவாறு பதிவு செய்கிறார்.

“தோட்டத்தின் நடுநாயகமாக தேயிலைத்தொழிற்சாலையே கம்பீரமாகக் காணப்படும். அதனைச் சூழ தோட்ட அலுவலகங்களும், அலுவலர்களின் பங்களாக்களும் காணப்படும். அதில் முதல் வரிசை லயன்களில் பிள்ளை, அகம்படியார், முக்குலத்தோர், முதலியோர்கள் இடம்பெறுவார். இவர்கள் தோட்டங்களில் காணப்படும் சில கௌரவமான தொழில்களில் ஈடுபட்டவர்களாக அதாவது தொழிற்சாலை வேலை, கொழுந்தரைத்தல், அலுவலக சிப்பந்திகள் போன்றவற்றில் ஈடுபட்டனர். அத்துடன் தோட்டத்தில் கண்டக்கர், டீ மேக்கர், கங்காணி மற்றும் தோட்ட அலுவலர் மத்தியில் செல்வாக்குடையவர்களாக விளங்கினர்”.

மேலும் இவர், இலங்கையின் பொருளாதார நிலையினைத் தீர்மானிக்கும் முக்கிய சக்தியாக மலையகத்தொழிலாளர் சார்ந்த பெருந்தோட்டத்துறை அமைந்துள்ளதாகவும் சுட்டிக்காட்டுகிறார்.

*1827 ஆம் ஆண்டு இலங்கையில் இந்தியத் தோட்டத்தொழிலாளர்களின் மக்கள் தொகை 10,000 என்றும் இதுவே 1921 இல் 6,02,734 என்றும், 1961 இல் 9,49,684 என்றும் இலங்கை இந்தியர் சரித்திரச் சுருக்கம்" நூலில் அதன் ஆசிரியர் கலகா பெ.தங்கராசா (மாலதி பப்ளிசிங் ஹவுஸ் கண்டி 1968) தெரிவிக்கிறார். திரு கார்த்திகேசு சிவத்தம்பி அவர்களின் "இலங்கை மலையகத்தமிழரின் பண்பாடும் கருத்து நிலையும்" (உதயம் நிறுவன வெளியீடு) நூல் தமிழகத்திலிருந்து கொண்டுவரப்பட்ட 32 சாதிக் குழுமங்களின் பெயர்களைப் பட்டியலிடுகிறது. அதில்*

*1.அகம்படியர், 2.அம்பட்டர், 3.அம்பலக்காரர், 4.ஆசாரி, 5.இடையர், 6.ஒட்டர், 7.கம்மாளர், 8.கவுண்டர், 9.கள்ளர், 10.குயவர், 11.குறும்பர், 12.கோனார், 13.சக்கிலியர், 14.சாணார், 15.செட்டி (கோமுட்டி செட்டி, வளையற்செட்டி), 16.தேவர், 17.நாடார், 18.நாயர், 19.நாயுடு, 20.பள்ளர் தேவேந்திர பள்ளர், 21.பறையர்வள்ளுவப்பறையர், 22.பண்டாரம், 23.பொதுகை வண்ணார், 24.மறவர், 25.முத்துராசா, 26.முதலி, 27.செட்டியார், 28.வடுக வண்ணார், 29.வண்ணார், 30.வலையர், 31.வள்ளுவர், 32.வேளாளர் (அக்கா வீட்டில் பெண் எடுக்கும் வேளாளர், ஆறுநாட்டு வேளாளர், கொங்கு வேளாளர், கொடிக்கா வேளாளர், சோழிய வேளாளர்) இவர்களை உள்ளடக்கிய மலையகத் தமிழர்கள் இலங்கையின் மக்கள் தொகையில் 7.0 சதவிகிதம் உள்ளதாக அறிய முடிகிறது.*

*இலங்கைக்கு பெருந்தோட்டத் தொழிலாளர்களாக ஆங்கிலேயர்களின் ஆட்சியில் தமிழர்கள் சென்றதைப்போன்று, பிஜீதீவு, மொரிசியஸ், பர்மா, தென் ஆப்பிரிக்கா, ரியூனியன் ஆகிய நாடுகளுக்கும் சென்று அங்கும் இவ்வாறான இந்தியவழித் தமிழராக வாழ்ந்து வருகின்றனர்.*

*சிங்கப்பூர், மலேசியா சென்ற தமிழர்களில் அகம்படியர்கள் முக்கியமான குழுவினர் ஆவர். சிங்கப்பூர் தமிழ் சீர்திருத்தச்சங்கம் அங்கு அரசியல் முன்னெடுப்புகளில் முக்கியப்பங்காற்றியுள்ளது. இந்தத் தமிழ் சீர்த்திருத்தச்சங்கம் 1920களில் சிங்கப்பூர் அகம்படியர் சங்கத்திலிருந்து கட்டமைக்கப்பட்டதாக (*Contributions to Indian sociology – volume : 23 by Mouton (1989) *கீழ்க்கண்டவாறு தெரிவிக்கின்றது.*

Tamil Reform Association (TRA), an Organisation, founded in 1931, that was heavily influenced by the Dravidian nationalist Ideology of E.V.Ramasamy Naicker and the self Respect leagues of madras, originating in the Ahampadiyar sangam of Singapore (A depressed caste society) in the late 1920. The TRA was initially concentrated with the problems of caste prejudice, Brahmin dominance etc.,

முன்னேற்றம், சீர்திருத்தம் போன்ற பத்திரிக்கைகள் சிங்கப்பூரில் திராவிட இயக்கக்கொள்கைகளை முன்னெடுத்ததையும், இவைகள் தொடக்கத்தில் சிங்கப்பூர் அகம்படியர் சங்கத்தின் இதழ்களாக வெளிவந்தவை என்றும் Journal of Tamil Studies volume 2, issue 2 (International Association of Tamil Research -1970) தெரிவிக்கிறது.

★★★

# 5.

# அகம்படியாரில் காணப்படும் உட்பிரிவுகள் மற்றும் பட்டங்கள்

"Agamudaiyars are divided in to the following sub sects: Aivalinattan, Kottaipattu, Malainadu, Nattumangalam, Rojaboja, Rajakulam, Rajavasal, Kalian, Sani, Maravan, Tuluvan (cf. Tuluva Vellalar) and Servaikkaran."

Martial races of Undivided India
Vidya Prakash Tyagi.

பிரிக்கப்படாத இந்தியாவில் போர்மரபுச் சமூகங்கள் என்ற ஆங்கில நூல், அகமுடையார்கள் உட்பிரிவாக ஐவேலி நாட்டான், கோட்டைப்பற்று, மலைநாடு, நாட்டு மங்களம், இராஜபோஜ, இராஜகுலம், இராஜவாசல், கலியன், சனி, மறவன், துளுவன் (ஒப்பீடு துளுவ வேளாளர்) மற்றும் சேர்வைக்காரன் என்ற பிரிவுகளைக் குறிப்பிடுகிறது.

உலகத்தமிழ் வரலாற்று ஆய்வியல் நிறுவனத்தின், தமிழ் ஸ்டெடிஸ் (Tamil Studies, Volume-3, Page No.63 by International Institute of Tamil Historical Studies) என்ற ஆங்கில இதழில் சோழநாட்டு அகம்படியர்கள் என்று குறிப்பிட்டு அவர்களின் உட்பிரிவாக கோட்டைப்பற்று மற்றும் இரும்புத்தலை அகமுடையார் என்ற இருபிரிவுகளைக் குறிப்பிடுகிறது. இதில் தஞ்சாவூர் அகமுடையார்கள் தங்களை ஏழு நாட்டு அகமுடையார்கள் என்று அழைத்துக்கொண்டதையும் பதிவு செய்கிறது. கோட்டைப்பற்று என்பது கோட்டையில் வாழ்பவர்களைக் குறிப்பதாக தென்னிந்தியக்

குலங்களும் குடிகளும் நூல் தெரிவிக்கிறது. பாண்டிய நாட்டில் அகமுடையார்கள் கட்டிக்குளம் நாடு, மாறநாட்டுச்சீமை, அஞ்சூர் நாடு ஆகிய பிரிவுகளில் வாழ்வதாகவும்

இராஜகுலம், கோட்டைப்பற்று என்ற இரு பிரிவுகளுடன் பில்லூர் அகமுடையார் என்ற பிரிவையும், "மதுரை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு" நூல் குறிப்பிடுகிறது.

ராசவாசல், ராசகுலம், ராசபாசை, ராசபோகம் என்பன அகமுடையார் சாதியின் உட்பிரிவுகளாக உள்ளன என்று திரு.எட்கர் தர்ஸ்டன், தனது தென்னிந்தியக் குலங்களும் குடிகளும் (தொகுதி: 6) நூலில் குறிப்பிடுவதுடன், இராசவாசல் என்ற பெயர் அரசர்களிடம் பணியில் இருந்தவர்கள் என்பதைக் குறிப்பதுடன், அரசர்களோடு குடியுறவுடையவராக, அரசர் ஆதரவு பெற்றவர்களையும் குறிக்கும் என்கிறார் (தொகுதி: 1). வாசல் என்பதற்கு அரண்மனை வாசல் எனவும், அதன் பொறுப்பை வகிக்கும் அதிகாரி எனவும், வாசல்காரியம் மற்றும் வாசல் நிர்வாகம் என்பதற்கு வாசல் என்னும் அரண்மனை உத்தியோகம், அதை வகிப்பவன் வாசல் முதலி எனவும் பெறுவான் என்றும், வாசல் கணக்கன் என்பதற்கு அரண்மனைக் கணக்கன் என்றும் அறிஞர் திரு.தி.நா.சுப்பிரமணியன் அவர்கள் தனது "கல்வெட்டுச் சொல்லகராதி"இல் விளக்கம் தருகிறார்.

வாசல் காணிக்கை என்பதற்கு அரண்மனைக்கு மக்கள் செலுத்தும் காணிக்கை என்றும் இதனை வசூலிப்பவன் வாசல் காரியம் என்பவனாவான் என்பார் பேராசிரியர் திரு.சி.கோவிந்தராசன் அவர்கள் (கல்வெட்டுக் கலைச்சொல் அகரமுதலி). தேசிகர் என்ற அகமுடையாரின் உட்பிரிவையும் சில ஆய்வாளர்கள் தெரிவிக்கின்றனர்.

புதுக்கோட்டை சமஸ்தானம் தொடர்பான வரலாறு எழுதிய திரு.நிக்கோலஸ் பி டெர்க்ஸ் எனும் அறிஞர் (The Hollow Crown : Ethno history of an Indian kingdom by Nicholas B Dirks *(பக்கம்: 268)* மூன்று வகையான அகம்படியர்களைக் குறிப்பிடுகிறார்.

1. **உரியக்காரர் அகம்படியர்** (Uriyakarar Agampadiyar)

உரியக்காரர் என்பதற்குக் கடமைப்பட்டவர் என்று தமிழ்க் கல்வெட்டுச் சொல்லகராதி தொகுதி I பக்கம் 95 விளக்கம் அளிக்கிறது. இவர்களை அரண்மனைப் பாதுகாவலர் (Palace guard) என்றும் குறிப்பார்.

**2. கோட்டைப்பற்று அகம்படியர்** (Kottaipattu Akampatiyar)

*கோட்டை என்பதைக் காப்புடைய அரண் என்றும், பற்று என்பதற்கு நிலம், உரிமை நிலம், உரியநிலம், உரிமை என்றும் கல்வெட்டு அகராதிகள் பதிவு செய்கின்றன. மேலும் அகம்படியர்கள் அரண்மனைக் காவலர்கள், கோயிற்சேவகர் என்றும் மதிட்சேவகர் என்றும் அழைக்கப்பட்டுள்ளனர்.*

**3. பிள்ளையபேரான் அகம்படியர்** (Pillaiperan Akampatiyar)

*அணுக்கப்பிள்ளை என்பது பாண்டியர் ஆட்சியில் ஒரு அரச அலுவலர் என்றும், பிள்ளைகள்தநம் என்பது வேளைக்காரப்படையின் ஒரு பிரிவு, பிள்ளையார் என்பது இளவரசனையும், பிள்ளைகள் என்பது இளைஞர்களையும் குறிக்கும். (தமிழ்க் கல்வெட்டுச் கலைச்சொல்லகராதி தொகுதி* II *பக்கம் 430) படைத்தலைவன் தாநாசிப்பிள்ளை என்று அழைக்கப்பட்டதை திரு.எ.சுப்பராயலு (கல்வெட்டுச் சொல்லகராதி) சுட்டிக்காட்டுகிறார்.*

*தெற்கத்தி அகம்படியர் என்பவர்களை 1881 ஆம் ஆண்டு மக்கள் தொகைக்கணக்கெடுப்பு அறிக்கை பதிவுசெய்கிறது.* (Imperial census of 1881: Operations and Results in the Presidency of madras by Lewis molver G.Stokes).

*கோட்டைப்பற்று, சனி / சாணி போன்றவை அகம்படியாருள் ஒரு பிரிவினர் என்பார், தென்னிந்தியக் குடிகளும், குலங்களும் நூலாசிரியர் திரு.ந.சி.கந்தையா அவர்கள். கலியன் என்பதற்குப் படைவீரன், திருமங்கையாழ்வார், கலிபுருஷன் கடையுகத் தலைவன், சனி என்று அகராதிகள் பொருள் தருகின்றன. கலிபுருடன் என்பது சனியைக் குறிக்கும்.*

*திரு.கே.ஆர்.வெங்கட்ராம ஐயர் எழுதிய புதுக்கோட்டைச் சமஸ்தான மானுவலில்* (A manual of the Pudukkottai state, volume-I by K.R.Venkatarama Ayyar) *ஆறுவகையான அகம்படியர் பிரிவுகள் குறிப்பிடப்படுகிறது.*

*1. அஞ்சூர் அகம்படியன்கள்* - Anjur (Five Village) Ahambadiyans.

*2. கோட்டைபற்று அகம்படியன்கள் (கோட்டையைச் சார்ந்தவர்கள்)* Kottippatru (Attached to a fort) Ahambadiyans.

*இவர்கள் தஞ்சாவூர் அகம்படியர்கள் என்றும் அறியப்படுகிறார்கள்.*

*3.* *இராஜகுல (அரண்மனை) அகம்படியன்கள்* Rajakula (Palace) Ahambadiyans.

*4.* *அஞ்சு கோட்டை (ஐந்து கோட்டைகள்) அகம்படியன்கள்* - Anjukottai (Five fortresses) Ahambadiyans.

*5.* *கீழச்சீமை (கிழக்கு நாட்டு) அகம்படியன்கள்* Kilasimai (The Eastern country) Ahambadiyans.

*6.* *கோட்டைக்காடு (கோட்டையைச் சூழ்ந்த காடு) அகம்படியன்கள்* - Kottaikadu (Forest Surrounding a fort) Ahambadiyans.

மேலும் இந்த மானுவலில் அஞ்சூர் அகம்படியன்களிடம் காணப்படும் சில புறமணப் பிரிவுகள் கொடுக்கப்பட்டுள்ளது. அவை

*1.* *வல்லத்தராயன்* (Vallataraiyan)

*2.* பேவெட்டி (Peyvetti)

*3.* பேயாடி (Peyadi)

*4.* *வட்டாச்சி* (Vattacchi)

*5.* *சோழகன்* (Solagan)

*6.* *கஸ்தூரி* (Kasturi)

இத்துடன் கோட்டைப்பற்று அகமுடையான்கள் ஏழுபுறமணக்குழுக்களாகப் பிரிந்துள்ளனர் என்று பதிவு செய்கின்றது. அவற்றுள் சில

*1.* *பெருச்சாளி* (Peruchchali)

*2.* *மாலுக்கான்* (Malukkan)

*3.* *தம்பிரான்* (Tambiran) *(தம்பிரான் என்பதற்குத் தலைவன், சுவாமி என்று பொருள்).*

*4.* *குன்றான்டான்* (Kundrandan)

*"அகமுடையார் வரலாறு"* நூலில் அதன் ஆசிரியர் திரு.புலமை வேங்கடாசலம் வன்னியர் அவர்கள் தஞ்சாவூர் மாவட்டம் பேராவூரணிப் பகுதியில் காணப்படும் அகமுடையார்களின் பிரிவுகளாக நான்கு பிரிவுகளைக்குறிப்பிடுகிறார்.

*1.* *பதினொரு நாட்டு அகமுடையார்கள்*

*2.* *பதினெட்டு நாட்டு அகமுடையார்கள்*

3. ஐஞ்சு இரண்டு அகமுடையார்கள்

4. புண்ணியரிசி நாட்டு அகமுடையார்கள்

மேலும் அவர் பாண்டியநாட்டில், இராஜகுல அகமுடையார்களிடம் நிலவும் கீழமன்டு அகமுடையார்கள், மேலமன்டு அகமுடையார்கள் என்ற இரண்டு பிரிவுகளைக் குறிப்பிடுகிறார்.

"தமிழர் மானிடவியல்" எனும் நூலில் அதன் ஆசிரியர் திரு.பக்தவத்சலபாரதி அவர்கள் மதுரை மாவட்டம் ராஜாக்கூர் (மதுரை கிழக்கு வட்டம்) கிராமத்தில், வழிபாட்டின் அடிப்படையில் அகமுடையார்களிடம் நிலவும் இருபெரும் பிரிவுகளைக் கீழ்க்கண்டவாறு பக்கம் 260 இல் குறிப்பிடுகிறார்.

"ராஜாக்கூர் கிராமத்திலுள்ள அகமுடையர்கள் இருபெரும் வழிபாட்டுக் குழுவினராகப் பிரிகின்றனர். முத்துக்கருப்பத்தேவன் கூட்டத்தினர் வைணவக் கடவுளான அழகர்சாமியைக் கும்பிடுபவர்கள். இன்னொரு வழிபாட்டுக்குழுவினர் கருப்புத்தேவன் கூட்டத்தினர், இவர்கள் திருப்பரங்குன்றம் முருகன்சாமியைக் கும்பிடுபவர்கள். ஏறக்குறைய 300 தலைக்கட்டுகளைக் கொண்ட இரண்டு குழுவினரும் புறமணக்குழுவினராக அமைவதால் ஒவ்வொருவரும் அடுத்த குழுவிலிருந்து மணத்துணையைத் தேர்ந்தெடுத்து மணந்து கொள்கின்றனர்."

பேராவூரணி தாலுக்கா பற்றிய ஆய்வேட்டில் தஞ்சாவூர் அகமுடையார் சமூகம் பற்றிய குறிப்பில் பதினொருநாட்டு அகமுடையார், கோட்டைப்பற்று மற்றும் இருப்புத்தலை அகமுடையார் என்ற பிரிவினருடன் கீழ்க்கண்ட அகமுடையார் பிரிவுகளைக் குறிப்பிடுகிறது.

ஐந்து நாட்டு அகமுடையார்கள்: இவர்கள் பேராவூரணிப் பகுதிகளில் அத்தாணி, பெரம்பூர், விலான்குளம், சூரன்குடி, சங்கமங்களம், அம்மையாண்டி, திருவத்தேவன், குப்பத்தேவன் ஆகிய ஊர்களில் வாழக்கூடியவர்கள். இவர்களுக்குள் திருமண உறவுகள் மேற்கொள்கின்றனர்.

புண்ணியரசு நாட்டு அகமுடையார்கள்: தஞ்சாவூர் மாவட்டம் பட்டுக்கோட்டையை யொட்டியுள்ள அதம்பை, பாதரன்கோட்டை, காயாவூர் ஆகிய ஊர்களில் வாழக்கூடியவர்கள். அகமண உறவுக் கட்டுடையவர்களாக விளங்குகின்றனர்.

*1961 ஆம் ஆண்டு மக்கள் தொகை கணக்கெடுப்பு அறிக்கை* (Census of India 1961 - Volume IX, Madras Part VI, Village Survey Monographs II Kunnalur) *பக்கம் 14 இல் கிராமங்கள் பற்றிய ஆய்வில் தற்போதைய திருவாரூர் மாவட்டம் குன்னலூர் கிராமம் தொடர்பான ஆய்வறிக்கையில் அவ்வூர் அகமுடையார் பற்றிய குறிப்பில் அகமுடையார்களிடம் நிலவும் மூன்று உட்பிரிவுகளைப் பற்றிக் குறிப்பிடுகிறது. அவை முறையே,*

1. *கோட்டைப்பற்று அகமுடையார்*
2. *ஐவழிநாட்டான் அகமுடையார்*
3. *பிள்ளைபேர அகமுடையார்*

*குன்னலூரில் வாழும் அகமுடையார் அனைவரும் ஐவழிநாட்டு அகமுடையார் என மேற்படி அறிக்கை பதிவு செய்கிறது.*

*ஆங்கிலேயர் ஆட்சியால் நடத்தப்பெற்ற 1881 ஆம் ஆண்டு மக்கள் தொகைப் பற்றிய அறிக்கையில் அகமுடையார்களில் பல பிரிவுகள் பதிவுகளாக இடம் பெற்றுள்ளன. அவ்வறிக்கையில்* (CENSUS OF BRITISH INDIA - 1881, EYRE AND SPOTTISWOODE - LONDON) *உள்ள ஆங்கில வடிவத்திலேயே அந்தக் காலகட்டத்தில் வழக்கில் இருந்த அகமுடையார் தொடர்புடைய பதிவுகள் கீழே வழங்கப்படுகிறது.*

1. Agamudayan *(அகமுடையான்)*
2. Agamudaya *(அகமுடையா)*
3. Ambudian *(ஆம்புடியன்)*
4. Ichanur Boga Agamudiyan *(ஈசனூர் போக அகமுடியன்)*
5. Al Thuluvan *(அல்துளுவன்)*
6. Kilanattu Agamudian *(கீழ்நாட்டு அகமுடியன்)*
7. Kodapathi Agamudian *(கொடபதி (கோட்டைப்பற்று?) அகமுடியன்)*
8. Kodayur Agamudian *(கொடையூர் அகமுடியன்)*
9. Kottanuth Agamudian *(கொட்டனுத்து (கோட்டைக்காடு?) அகமுடியன்)*
10. Muthali Agamudian *(முதலி அகமுடியன்)*
11. Nasappu Agamudaiyan *(நசாப்பு அகமுடையன்) நாசம் என்பதற்கு நாயகம், தலைமை என்றும், நாசகன்மார் என்பதற்கு நாயகன்மார், தலைவன், பெரிய குடிகள் என்று பொருள்*

தருகிறது, தமிழ்க்கல்வெட்டுச்சொல்லகராதி.

12. Pinnar Agamudayan *(பின்னார் (பில்லூர்?) அகமுடையன்)*

13. Ponneriar Vellalan *(பென்னேரி வேளாளன்)*

14. Pulakara Agamudiyan *(பூலக்காரா (பிள்ளை பேரான்?) அகமுடியன்)*

15. Punthamalli *(பூந்தமல்லி (வேளாளர்)*

16. Ragar Agamudayan *(ராகர் (ராஜா?) அகமுடையன்)*

*(ராசகரம் என்பது அரண்மனையைக் குறிக்கும்)*

17. Rajavalai Agamudayan *(இராஜவலை (இராஜவழி) அகமுடையன்)*

18. Rajavasal Agamudayan *(இராசவாசல் அகமுடையன்)*

19. Rokkore Agamudayan *(ரக்கோர் (ராக்ஷஜ?) அகமுடையன்)*

20. Rasappa Agamudayan *(ராசப்பா (ராஜபோஜ?) அகமுடையன்)*

21. Sani *(சனி சானி அகமுடையன்)*

22. Servaikkaran *(சேர்வைக்காரன்)*

23. Servai *(சேர்வை)*

24. Surakkady Agamudayan *(சுரக்கடி (சூரக்குடி) அகமுடையான்)* சூரன்குடி நாடு என்பது பாண்டிய நாட்டில் அடங்கிய உட்பிரிவு.

25. Tevan *(தேவன்)*

26. Thevar *(தேவர்)*

27. Tholuvan *(தொழுவன்)*

28. Tholukai Vellalan *(தொழுகை வேளாளன்)*

29. Thuluva *(துளுவ)*

30. Tottakara Agamudian *(தோட்டக்கார அகமுடையன்)* தோட்டக்காடு என்பதற்குக் கொல்லைநிலம் என்றும், தோட்டம் என்பதற்குக் கிணற்றுநீர் இறைத்து பயிரிடும் நிலம் (கல்வெட்டுச்சொல்லகராதி) என்றும் பொருள் கூறப்படுகிறது. கோவைப்பகுதியில் வெற்றிலை பயிர்செய்யும் வேளாண் தொழிலில் ஈடுபட்ட அகமுடையார்கள் அந்த கொடிக்கால் விவசாயத்தில் முன்னேற்றம் கண்டனர். அதனால் இவர்கள் வெற்றிலைக்காரர் என்றும், தோட்டக்காரர் என்றும் அழைக்கப்பட்டதாக கோவை மாவட்ட அகமுடையார் குலமரபும் பண்பாடும் என்ற ஆய்வேடு தெரிவிக்கிறது.

31. Tular Vellalan *(துளர் வெள்ளாளன்)*

32. Uzhiya Vagupa Agamudiyan *(ஊழியவகுப்பு அகமுடையன்)*

33. Viroboja Agamudiyan *(வீரபோஜ அகமுடியன்)* போசர் என்பதற்கு அனுபோக உரிமை வாய்ந்தவர், சொந்தக்காரர் என்று பொருள். வீரபோஜ என்பதில் வீரபுத்திரர் என்போர் ஐநூற்றுவர் வணிகக்குழுவைச் சார்ந்த ஒரு வீரர் குழு என்றும் வீரபுரோகந் என்பது வீரர்களின் முதல்வர் என்று தமிழ்க் கல்வெட்டுச்சொல்லகராதி குறிப்பிடுகிறது. வீரமுஷ்டி, வீரபத்திரர் என்போர் கோயிலுக்குரிய சேனையின் வீரர்கள் என்று தென்னிந்தியக் கோயிற்சாசனங்கள் குறிப்பிடுகிறது.

34. Pottakattu Agamudaiyan *(பொட்டக்காட்டு - பொட்டல்காட்டு அகமுடையன்)* பொட்டை என்பது விளைநிலத்தின் பொதுப்பெயர் என்று தமிழ்க்கல்வெட்டுச் சொல்லகராதி குறிப்பிடும். பாண்டிய நாட்டுத் தஞ்சக்கூர், பொட்டைத்தஞ்சை என்று அழைக்கப்படுவதாகத் தென்னிந்தியக் கோயிற்சாசனங்கள் நூல் குறிப்பிடுகிறது. இங்கு வாணர்குல அரசர்கள் ஆட்சிபுரிந்தனர். அவர்கள் வழியினராக அகம்படியர் இன்றும் அங்கு அதிகமாக வசிக்கின்றனர்.

இதே மக்கள் தொகைப்பற்றிய அறிக்கையில் தெலுங்குமொழி வழங்கும் பகுதிகளில், அகமுடையார்களை,

1. Agamadi *(அகமடி)*

2. Agamudiyar *(அகமுடியார்)*

என்று பதிவு செய்துள்ளது. கன்னடமொழி வழங்கப்படும் பகுதிகளில் அகமடயர் (Ahamadayar) என்று பதிவு செய்துள்ளது. குமார் சுரேஷ் சிங் எழுதிய இந்தியக்குலங்கள் என்ற நூல் கர்நாடகாவில் தேவர் என்பதற்கான ஒத்தத் தன்மையுடைய பெயர்களாக அகமுடியன், அஃகம்படி மற்றும் அகம்படி என்பதைக் குறிப்பிடுகிறது.

மலையாளம் மொழி வழக்கத்தில் உள்ள பகுதிகளில் அகமுடையார்களை

1. Agamudiar *(அகமுடியார்)*

2. Ahamutti chetti *(அகமுட்டி செட்டி)*

என்றும் பதிவுசெய்துள்ளது.

*மத்திய மாகாணத்தில் குலங்களும் குடிகளும் என்ற நூலில்* ("The Tribes and castes of the central provinces of India" by Robert vane Russell) *அகமுடையார்கள் பெரும் வேளாண் குடிகள் என்று குறிப்பிடுகிறது. ஆங்கிலேயர் ஆட்சியில் மெட்ராஸ் சிப்பாய் படைப்பிரிவில் பணியாற்றிய அகமுடையார்கள் தங்கள் ஓய்வுக்குப் பிறகு மத்திமாகாணத்தில் தாங்கள் பணிபுரிந்த ஜபல்பூர் மற்றும் ராஜ்பூர் பகுதிகளில் தங்கிவிட்டனர் என்றும், இவர்களின் பட்டப்பெயராக பிள்ளை என்பதனையும் சுட்டிக்காட்டுகிறது.*

*மேலே குறிப்பிட்ட 1881 ஆம் ஆண்டு பிரிட்டிஷ் இந்திய மக்கள் தொகைக் கணக்கெடுப்பில், மக்கள் உச்சரிப்பு அல்லது பாமரத்தன்மையிலேயே அகமுடையார் தொடர்புடைய பிரிவுகளின் பெயர்கள் இடம்பெற்றுள்ளது. அவை அதே வடிவத்தில் ஆங்கில மொழிவழியில் மேலே கொடுக்கப்பட்டுள்ளது.*

*தென்னிந்தியக் குலங்களும் குடிகளும் நூல், தொகுதி ஆறு, பரிவாரம் என்ற அகமுடையார்களின் உட்பிரிவினைக் குறிப்பிட்டு, பரிவாரம் என்பது படைவீரர்களையும், மன்னர்களோடு ஆயத்தாராக உடன் வருவோரையும் குறிப்பதாகும். இவர்கள் முன்பு படைவீரர்களாக இருந்துள்ளனர் எனப் பதிவு செய்கிறது. பரிவாரங்கள் அகமுடையருள் ஒரு பிரிவினர் என்பார் "இந்தியாவில் யாதவர் குலங்கள்" என்ற நூலின் ஆசிரியர் திரு.எஸ்.ஆதினமிளகி.*

*திருபரிகலத்தார் என்பதற்குச் "சோழ அரசப்பரிவாரங்களில் ஒருசாரர்" என்றும் குறிப்பிடுவார். திரு.எ.சுப்பராயலு (கல்வெட்டுச் சொல்லகராதி) அவர்கள், பரிவாரம் என்பதற்கு அரசன் அரசியர்க்கு எப்போதும் உடனிருந்து பணிசெய்பவர்களின் தொகுதி என்பார் திரு.சி.கோவிந்தராசன் (கல்வெட்டுக்கலைச்சொல் அகரமுதலி) அவர்கள். தெரிந்தபரிவாரம் என்பதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட படையும் ஏவலரும் கொண்ட தொகுதி என்கிறது கல்வெட்டுச் சொல்லகராதி.*

*"உடையார் ஸ்ரீராஜராஜதேவர் மும்முடி*

*சோழத்தெரிந்த பரிவாரத்தார் ஆடவல்லாற்கு*

*வைத்த திருவிளக்குத் தந்த பசு*

*நாற்பத்தெட்டு" என்று தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதி இரண்டு பதிவு செய்கிறது. சனி / சானி என்ற அகமுடையார்களின்*

*உட்பிரிவை திரு.எட்கர் தர்ஸ்டன், தென்னிந்தியக் குலங்களும் குடிகளும் நூலில் குறிப்பிடுகிறார்.*

*1951 ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பு அறிக்கைகளில், மாவட்டங்களில் சாதிகள் பற்றிய அகராதியில்* (Census of India-1951, Glossary of Caste Names in Districts) *கீழ்க்கண்ட அகம்படியர் பிரிவுகளைச் சிலமாவட்டங்களில் இருப்பதாகப்பதிவு செய்கிறது.*

| | |
|---|---|
| 1. அகம்படிய முதலியார் | செங்கல்பட்டு மாவட்டம் |
| 2. அகமுடைய வேளாளர் | செங்கல்பட்டு மாவட்டம் |
| 3. சேர்வை அகம்படியர் | செங்கல்பட்டு மாவட்டம் |
| 4. மறவர் அகமுடியர் | திருச்சிராப்பள்ளி மாவட்டம் |
| 5. அகமுடைய முதலியார் | வடஆர்க்காடு மாவட்டம் |
| 6. கோட்டாங்கர் அகமுடியர் | இராமநாதபுரம் மாவட்டம் |
| 7. இராசகோபால அகம்படியர் | இராமநாதபுரம் மாவட்டம் |
| 8. சேருவாரர் அகம்படியர் | இராமநாதபுரம் மாவட்டம் |
| 9. அகமுடைய பிள்ளை | தென்ஆர்க்காடு மாவட்டம் |
| 10. அகமடிய தேவர் | தஞ்சாவூர் மாவட்டம் |
| 11. அகமடிய வேளாளர் | தஞ்சாவூர் மாவட்டம் |
| 12. கோட்டை பத்து தேவர் | தஞ்சாவூர் மாவட்டம் |
| 13. நாயக்கர் தொழுவ வேளாளர் | வடஆர்க்காடு மாவட்டம் |
| 14. தொழுவ பிள்ளை | தஞ்சாவூர் மாவட்டம் |
| 15. ஆர்காடு வேளாளர் | திருச்சிராப்பள்ளி மாவட்டம் |

*இலங்கையில் காணப்படும் பிரிவுகள் :*

*இலங்கையில் அகமுடையார்களின் உட்பிரிவாக நான்கு பிரிவுகளை பேராசிரியர் எஸ்.பத்மநாதன் அவர்கள் (வித்யோதய இதழ், தொகுதி 5, எண்.1& 2, 1972-1976) குறிப்பிடுகிறார். அவை.*

1. *இராஜ அகம்படியர்* (Raja)
2. *முககால அகம்படியர்* (Muhakala)

3. நெட்டி அகம்படியர் (Netti)

4. சால அகம்படியர் (Sala)

பல பலம் (Bala) அகம்படியர் என்ற பிரிவை திரு.எம்.பி.ஆரியபால அவர்கள் குறிப்பிடுகிறார். ஜலலிஹினி சந்தேஸ என்னும் நூல் நிகய சங்கிரகய மற்றும் தம்பதெனி அஸ்னா ஆகிய நூல்களின் வழி ரன்சிரிபன் அகம்படி, நெட்டி அகம்படி, முகுல அகம்படி மற்றும் இராஜ அகம்படி ஆகிய பிரிவுகளைப் பதிவு செய்கிறது (Salalihini Sandesa by Totagamuve Rahula). தங்க உடைவாள் அல்லது குத்துவாளோடு அரசனைச் சூழ்ந்துநின்று பாதுகாப்பு அளிப்பவர்கள் ரன்சிரிபன் அகம்படி (Ransiriban Agampadi) ஆவர் (Ceylon Literary Register -1933 Pages : 388, 528). உயர்திறன் மிக்க படைப்பிரிவில் (Elite troops) பணியாற்றியோர் நெட்டி அகம்படிப்படையினர் என்றும், அரசப்பாதுகாப்புப் படையினர் (Royal guard) இராஜ அகம்படிப்படையினர் என்றும், வேளாண் வரியினங்கள் தொடர்பான நிர்வாகப்பணியில் ஈடுபட்டவர்கள் முகுகால அகம்படியர் என்றும் அழைக்கப்பட்டதாக ஜோல்டன் பிடர்மேன் தெரிவிக்கிறார். (DIS) Connected Empires: by Zoltan Biedermann).

கோவை மாவட்ட அகமுடையார் (தேவர்) குலமரபும், பண்பாடும் என்ற முனைவர் பட்ட ஆய்வேட்டின் ஆசிரியர் வெ.அ.நாகரத்தினம் அவர்கள் கோவை பகுதிகளில் வாழும் அகமுடையார்கள் பற்றி விரிவான தகவல்களைத் தருகிறார். இதில் கூட்டம் என்ற பெயரில் அகமுடையார்களின், உட்பிரிவுகளைப் பதிவு செய்கிறார். அதில்,

இந்த கூட்டத்தினர் ஒரே இரத்தக்கலப்புடையவர்களாக, ஒரு மரபுடையவர்களாகக் கருதப்படுவர். கூட்டத்தின் பெயர், குலத்தெய்வத்தின் அடிப்படையிலும், செய்யும் தொழிலின் அடிப்படையிலும், தங்களின் முன்னோர்களின் பெயரிலும், இடம்பெயர்வதற்கு முன் வசித்த பழைய ஊர்களின் பெயராகவும் அமையும் என்பதைச் சுட்டிக்காட்டுகிறார்.

மேலும் செல்வி வெ.அ.நாகரத்தினம் அவர்கள் கோவைப் பகுதி அகமுடையார்களிடம் நிலவிவரும் கூட்டப் பெயர்களைக் கீழ்க்கண்டவாறு பட்டியலிடுகிறார்.

1. அக்கமார் கூட்டம்
2. அடைக்கங் கூட்டம்
3. அலங்கியத்தார் கூட்டம்
4. அழகன் கூட்டம்
5. ஆட்டையாங் கூட்டம்
6. ஆண்டிவளத்தான் கூட்டம்
7. ஆய்க்குடியான் கூட்டம்
8. ஆனைத்தேவன் கூட்டம்
9. இலைக்காரன் கூட்டம்
10. இராசிவளத்தான் கூட்டம்
11. இருளப்பசாமி கூட்டம்
12. இணை முக்கந்தன் கூட்டம்
13. உப்புபாளையத்தான் கூட்டம்
14. உளத்துக்கண்ணன் கூட்டம்
15. உளமாண்டி கூட்டம்
16. ஊர்க்காவன் கூட்டம்
17. ஊர்வழிக்காரன் கூட்டம்
18. எருமைக்காரன் கூட்டம்
19. எலிதின்னி கூட்டம்
20. எழுவக்காரியான் கூட்டம்
21. எமராசன் கூட்டம்
22. ஏணிக்காரன் கூட்டம்
23. ஓட்டவளத்தான் கூட்டம்
24. கஞ்சாங் கூட்டம்
25. கடலையண்ணன் கூட்டம்
26. கணக்கன் கூட்டம்
27. கணியூரன் கூட்டம்
28. கம்பளறிக்காரன் கூட்டம்
29. கருப்பனத்தான் கூட்டம்
30. கருவாயன் கூட்டம்
31. கரும்புத்தேவன் கூட்டம்
32. கரையான் கூட்டம்
33. கவுண்டத்தான் கூட்டம்
34. காடைக்கவுண்டன் கூட்டம்
35. காவடிக்காரன் கூட்டம்
36. காவேரித்தேவன் கூட்டம்
37. கிழவன் கூட்டம்
38. கின்னாரக்காரன் கூட்டம்
39. குத்தவச்சான் கூட்டம்
40. குமரத்தான் கூட்டம்
41. குயிலாங் கூட்டம்
42. கூடைக்கரையான் கூட்டம்
43. கொங்கநாட்டான் கூட்டம்
44. கொத்தார் கூட்டம்
45. கொள்ளுக்காட்டான் கூட்டம்
46. கோட்ட கூட்டம்
47. சந்தனத்தேவன் கூட்டம்
48. சரவணன் கூட்டம்
49. சாத்தான் கூட்டம்
(சாத்துரிலிருந்து வந்தவர்கள்)
50. சாராக்காரன் கூட்டம்
51. சிங்கிலி கூட்டம்
52. சீலம்பட்டியான் கூட்டம்
(உசிலம்பட்டியான்)

53. சுங்கத்தான் கூட்டம்
54. சுந்தராயி கூட்டம்
55. சூலுரான் கூட்டம்
56. சொக்கலான் கூட்டம்
57. சோண கூட்டம்
58. தம்பா கூட்டம்
59. தாசங் கூட்டம்
60. தாலி கூட்டம்
61. தெலுங்குவளத்தான் கூட்டம்
62. தொப்ப கூட்டம்
63. தொய்யான் கூட்டம்
64. நடுவளந்தான் கூட்டம்
65. நரியாங் கூட்டம்
66. நாசாவர்த்தா கூட்டம்
67. நல்லாத்தேவன் கூட்டம்
68. நாகாத்தான் கூட்டம்
69. பகவதி கூட்டம்
70. பச்சினத்தேவன் கூட்டம்
71. பிரமனை கூட்டம் (பிரான்மலை)
72. புக்களாங் கூட்டம்
73. புலவர் கூட்டம்
74. புழுக்கத்தான் கூட்டம்
75. பூசாரிக் கூட்டம்
76. பெத்தார் கூட்டம்
77. பெரியாண்டி கூட்டம்
78. பெருமாள் தேவன் கூட்டம்
79. பேரூரான் கூட்டம்
80. பேயன் கூட்டம்
81. பொசுங்கிளி கூட்டம்
82. பொத்தை கூட்டம்
83. பொயிலைதின்னி கூட்டம்
84. பொன்னுருக்கி கூட்டம்
85. மச்சக் கண்ணன் கூட்டம்
86. மசயாங் கூட்டம்
87. மச்சிக் கிழவன் கூட்டம்
88. மரம்புடுங்கி கூட்டம்
89. மலையாண்டி கூட்டம்
90. மலப்பழத்தான் கூட்டம்
91. மாசாணங் கூட்டம்
92. மீனாட்சி தேவன் கூட்டம்
93. மேளத்தேவன் கூட்டம்
94. முக்கந்தன் கூட்டம்
95. முக்கிலி கூட்டம்
96. முதியக்காரன் கூட்டம்
97. முருகத் தேவன் கூட்டம்
98. முனைப்புடுங்கி கூட்டம்
99. ரைட்டர் கூட்டம்
100. வண்டிக்காரன் கூட்டம்
101. வல்லியப்பங் கூட்டம்
102. வளத்தி கூட்டம்
103. வத்தனங் கூட்டம்
104. வற்றியம்மன் கூட்டம்

105. வயிரத்தேவன் கூட்டம்

106. வளமுத்தி கூட்டம்

107. வாத்தியார் கூட்டம்

108. வெல்லச்சி கூட்டம்

109. வேந்தன் கூட்டம்

110. வேந்தன் மொட்டை கூட்டம்

111. வேடப்பட்டி கூட்டம்

112. ஐயனார் கூட்டம்

இந்த கூட்ட முறைமை ஒழுங்கு முறையுடன் இருப்பதற்காக முக்கந்தா, தர்மகர்த்தா, பட்டாக்காரர், ஊர்த்தலைவர் ஆகியோர்களைக் கொண்ட பஞ்சாயத்து அமைப்பு முறை இவர்களிடம் காணப்படுவதாகவும் குறிப்பிடப்படுகிறது.

கவுண்டர் எனும் பட்டமுடையோர் கொங்கு நாட்டில் 64 பிரிவினர் இருப்பதில் அகமுடையார் கவுண்டரும் ஒரு பிரிவினராவர் என்று குறிப்பிடுவார் "மருதுபாண்டிய மன்னர்கள்" நூலாசிரியர் திரு.மீ.மனோகரன் அவர்கள் (பக்கம்: 586). அத்துடன் பாரமகால் (இன்றய தர்மபுரி மாவட்டம்) பகுதிகளில் ஆத்தூர், ஊத்தங்கரை, கிருட்டிணகிரி வட்டங்களில் அகமுடையாரிடையே ஐந்து நாடுகள் என்ற பிரிவு காணப்படுவதாகவும் (பக்கம்: 588) பதிவு செய்கிறார்.

அகமுடைய வேளாளர்களைப் பற்றிக் குறிப்பிடும் திரு.கே. எஸ். சிங் (People of India - Tamil Nadu, Volume XL - Part - III by K.S.Singh) (Page No.1614, 1621) அவர்கள், இவர்களிடம் உள்ள சிவகோத்ரம், விஷ்ணு கோத்ரம் பிரிவுகளைப் பதிவு செய்ததுடன் இவர்கள் முதலியார், நாய்க்கர் என்று தங்களை அழைத்துக் கொள்வதையும் குறிப்பிடுகிறார். அத்துடன் அகமுடைய முதலியாரின் இட அடிப்படையிலான உட்பிரிவே ஆர்காடு முதலியார் என்பதையும் பதிவுசெய்கிறார். மேலும் அகமுடைய வேளாளர்கள், உள்ளூரில் ஆர்காடு முதலியார் துளுவ வேளாளர், அகமுடையான், என்று அறியப்படுவதாகவும் குறிப்பிடுகிறார். இவர்களின் பட்டப்பெயர்களாக பிள்ளை, முதலியார் போன்றவற்றையும் சுட்டிக்காட்டுகிறார்.

அகமுடைய வேளாளர் கிறிஸ்த்தவர்களைப் பற்றிக் குறிப்பிடும் திரு.கே.எஸ்.சிங் அவர்கள், கோயம்புத்தூர், சேலம், ஈரோடு, திருச்சிராப்பள்ளி மாவட்டங்களில் அவர்கள் இருப்பைப் பதிவு செய்வதுடன் கோயமுத்தூர் மாவட்டம் கரிமுத்தாம்பட்டியில் போர்ட்சுகீசு மிஷனரிகள் மூலம் இவர்கள் கிறுஸ்த்துவ மதத்தைத் தழுவிய செய்தியும் அறிய முடிகிறது.

ஆவணங்களில் காரைக்கால் (1817 - 1870) எனும் நூலின் ஆசிரியர் திரு.சோ.முருகேசன் அவர்கள் பக்கம் 24இல் துளுவ வெள்ளாளர்களின் உட்பிரிவாக

*அ) புது முதலியார்*

*ஆ) பொன்னேரியார்*

*இ) கருங்குழி வெள்ளாழர்*

*ஈ) உள்ளூர் வெள்ளாழர்*

*என்ற நான்கு பிரிவுகள் காரைக்காலில் இருப்பதைப் பதிவு செய்கிறார்.*

*தொல்லியல் அறிஞர் திரு.இரா.நாகசாமி பதிப்பாசிரியராக வெளியிட்ட "சென்னை மாநகர் கல்வெட்டுகள்" நூலில் பக்கம் 198 இல், கி.பி.1778 ஆம் ஆண்டிற்குரிய கல்வெட்டில் திருப்பெரும்புதூர் திருமணம் அருணாசல முதலியார் மகன் முத்துமுனியப்ப முதலியார் கோயில் திருப்பணிகள் பற்றியச் செய்தியில் துளுவ வெள்ளாளரில் கண்ட மகாரிஷி கோத்திரம் என்ற கோத்திரப்பெயர் சொல்லப்பட்டுள்ளது. மேலும் இதே நூலில் பக்கம் 289 இல் கி.பி.1842 ஆம் ஆண்டிற்குரிய கல்வெட்டில் சென்னையிலுள்ள அருணாசலீசுவரர் கோயிலுக்கு ஜஸ்டி சு.முத்துசாமி முதலியார் வீடு ஒன்றைத் தானமாக அளித்த செய்தியில் துளுவ வெள்ளாளரில் பல்லவராய கோத்திரம் என்ற கோத்திரப்பெயர் இடம்பெற்றுள்ளது. இதேபோல் பொன்னேரி முதலியார் பிரிவில் கோத்திரப் பிரிவுகளாக,*

1. அச்சுதராய கோத்திரம்
2. அமிர்தராய கோத்திரம்
3. ஆனந்தராய கோத்திரம்
4. உத்தவராய கோத்திரம்
5. உத்தண்டராய கோத்திரம்
6. கணகவராய கோத்திரம்
7. கணகவேம்படிராய கோத்திரம்
8. கனவராய கோத்திரம்
9. கனியராய கோத்திரம்
10. காஞ்சிராய கோத்திரம்
11. காந்தவராய கோத்திரம்
12. காலிங்கராய கோத்திரம்

27. நைனராய கோத்திரம்
28. நரசிங்கராய கோத்திரம்
29. நாராயணராய கோத்திரம்
30. பல்லவராய கோத்திரம்
31. பிச்சவராய கோத்திரம்
32. புதியராய கோத்திரம்
33. புஷ்பகராய கோத்திரம்
34. புஷ்பகந்தவராய கோத்திரம்
35. பூர்வராய கோத்திரம்
36. பூவராய கோத்திரம்
37. பெரியபல்லவராய கோத்திரம்
38. மத்தவராய கோத்திரம்

| | |
|---|---|
| 13. குமாரராய கோத்திரம் | 39. மன்னவராய கோத்திரம் |
| 14. கேசவராய கோத்திரம் | 40. மணியவராய கோத்திரம் |
| 15. சதாசிவராய கோத்திரம் | 41. கேதவராய கோத்திரம் |
| 16. சிவராய கோத்திரம் | 42. முகுந்தராய கோத்திரம் |
| 17. சூரியராய கோத்திரம் | 43. வன்னியராய கோத்திரம் |
| 18. செல்வராய கோத்திரம் | 44. வசூதேவராய கோத்திரம் |
| 19. செல்வமன்னவராய கோத்திரம் | 45. வாமதேவராய கோத்திரம் |
| 20. சேஷவராய கோத்திரம் | 46. வாணவராய கோத்திரம் |
| 21. தர்மராய கோத்திரம் | 47. விசராய கோத்திரம் |
| 22. திருமலைராய கோத்திரம் | 48. விரிஞ்சராய கோத்திரம் |
| 23. தாமோதரராய கோத்திரம் | 49. வில்வராய கோத்திரம் |
| 24. திருநல்லவராய கோத்திரம் | 50. வீமனராய கோத்திரம் |
| 25. தென்னவராய கோத்திரம் | 51. ரகுபதிராய கோத்திரம் |
| 26. தேனவராய கோத்திரம் | 52. ஸ்ரீராமராய கோத்திரம் |

*என்று பலவகையான கோத்திரங்கள் சொல்லப்படுகிறது.*

*(இத்தகவலை எமக்களித்த திரு.சோ.பாலமுருகன் அகமுடையார் அரண் அவர்களுக்கு நன்றி.)*

*திரு.டி.பி.இராமச்சந்திர முதலியார், மைத்திக்சொசைட்டி காலாண்டிதழில்* (Quarterly Journal of Mythic Society, Volume X, 1982) (Pages : 289 to 292) *வாசித்தளித்த கட்டுரையில் துளுவ வெள்ளாளர்கள் அருகாமையில் உள்ள ஆர்க்காடு, பொன்னேரி, கண்ணமங்கலம், கானியம்பாக்கம், பூந்தமல்லி ஆகிய இடங்களில் குடியேறியவுடன், அந்தந்தக்குடியேறிய பகுதிகளின் பெயரால் அவர்கள் அழைக்கப்பட்டனர் என்றுபதிவுசெய்கிறார். அத்துடன் இவர்களின் உட்பிரிவு சேர்வை என்றும் அறியப்படும். சேர்வை என்ற இப்பிரிவினரின் தலைவர் சேர்வைக்காரர் எனப்பட்டனர் என்றும் பதிவு செய்கிறார்.*

*துளுவ வேளாளர்கள் ஆர்க்காடு முதலியார் என்றும் பூந்தமல்லி முதலியார் என்றும் தங்கள் வாழ்கின்ற இடங்களைச் சார்ந்து அழைத்துக் கொண்டனர் என்பதைக் காஞ்சிபுரம் மற்றும் திருவள்ளுவர் மாவட்ட கெஜட்டியர் தெரிவிக்கிறது.* (Gazetteers of India - Kancheepuram and Tiruvallur Disticts, vol-I, )

முனைவர் திருமதி ஆர்.பத்மினி அவர்களின் "துளுவ வேளாளர் தோற்றம் மற்றும் வரலாறு" முனைவர்பட்ட ஆய்வேட்டில் தொண்டை மண்டலத்தில் துளுவ வேளாளர்கள் 12000 குடிகளாகவும் (Clans) 24 கோட்டங்களில் வாழ்ந்ததாகக் குறிப்பிடுவதுடன், 64 நாடுகளில், 929 கிராமங்களாக இவர்கள் மேலே குறிப்பிட்ட 24 கோட்டங்களுக்குள் பிரிக்கப்பட்டிருந்ததாகக் குறிப்பிடுகிறார். மேலும் சோழப்பேரரசர் முதலாம் இராஜராசசோழர் காலத்தில் தமிழகத்தில் பல பகுதிகளில் இவர்கள் குடியேறியதாகவும், குறிப்பாக சோழமண்டலம், தொண்டைமண்டல பகுதிகளிலிருந்து 48000 குடும்பங்கள் நுலம்பாடி என்று தற்காலத்தில் கோலார் என்று அழைக்கப்படும் கர்நாடகப்பகுதிகளில் குடியேறி அங்கு வேளாண் விரிவாக்கத்திற்கு உதவியதாகக் குறிப்பிடுகிறார்.

**ஐவேலி நாட்டு அகமுடையார்கள் :**

வேலியும், காணியும், நிலத்தின் அளவைக்குறிக்கும் சொற்களாகும். அவைகளும் ஊர் பெயரிலே காணப்படும் என்று, தமிழக ஊரும் பேரும் நூலில் திரு.ரா.பி.சேதுப்பிள்ளை குறிப்பிடுவார், அதற்கு உதாரணமாக தஞ்சைநாட்டு ஐவேலி, ஒன்பது வேலி முதலிய ஊர்களைக் குறிப்பிடுகிறார். திருவாடுதுறை ஆதினச்செப்பேடுகள் நூலும் ஒன்பத்து வேலி, அய்வேலி ஆகிய ஊர்களைக் குறிப்பிடுகிறது. திருவாரூர் திருத்தலத்தின் சிறப்பினைக் குறிப்பிடுபவர்கள் கோயில் ஐவேலி, குளம் ஐவேலி, செங்கழுநீர்ஓடை ஐவேலி என்பார். அதனால் திருவாரூரை ஐவேலி என்றும் ஐவேலியாந்திருவாரூர் என்றும் குறிப்பிடுவார். தமிழ்நாட்டில் திருவாரூர் மாவட்டம் குடவாசல் வட்டத்தில் வடுகக்குடி ஊராட்சியில் ஐவேலி என்ற சிற்றூரும், விழுப்புரம் மாவட்டம் வானூர் ஒன்றியத்தில் ஒரு ஐவேலி என்ற ஊரும், சேலம், சங்ககிரிக்கு அருகில் ஐவேலி என்ற ஊரும் அமைந்துள்ளதை அறிய முடிகிறது. ஒன்பத்துவேலி சோழர்க்குரிய பழைய ஊர்களில் ஒன்று என்று குறிப்பிடுவார், புலவர் செ.இராசு தனது "தஞ்சை மராட்டியர் செப்பேடுகள் 50" என்ற நூலில். மேலும், தென்னார்காடு மாவட்டம் திருக்கோவிலூர் கல்வெட்டில் சோழன் "அன்பது வேலியின் அடைகுநர் காக்கும் ஒன்பது வேலி உடைய உரவோன்" என்று குறுப்பிடப்பெறுகின்றான் என்றும் பதிவு செய்கிறார். ஒன்பதுவேலி பின்பு ஒன்பத்து வேலியாகியது என்பதையும் சுட்டிக்காட்டுகிறார். காவிரிக்கு வடகரையில் உள்ள ஆயிரவேலி, ஆயிரூர் போன்ற இடங்களைப் பாண்டியன் தகடூர் அதிகமானை வீழ்த்திய இடமாக பன்மொழிப்புலவர் திரு.கா.

அப்பாத்துரையார், தனது தென்னாட்டுப் போர்க்களங்கள் நூலில் குறிப்பிடுகிறார்.

தம்பிக்கு நல்லான் கோட்டை ஸ்ரீமான் ரெங்கசாமித்தேவர் ஜீவியசரிதம் என்ற நூல் பக்கம் 59இல் ஐவேலிநாட்டு அகமுடையாரைப் பற்றிக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறது.

திருவெண்ணை நல்லூர் மற்றும் திருநாவலூரில் உள்ள திருக்கோயில்களுக்கு கீழ்க்கண்டவாறு ஐந்து வகையில் ஐந்துதைந்து வேலி நிலம் தானமாக அகமுடையார்களால் கொடுக்கப்பட்டுள்ளது. அவை

1. ஆட்கொண்ட தேவர் சந்திவிளக்குக்காக ஐந்துவேலி நிலமும்,

2. உச்சிகாலக்கட்டளைக்கு ஐந்து வேலி நிலமும்,

3. அர்த்தசாமக் கட்டளைக்கு ஐந்துவேலி நிலமும்,

4. தடுத்தாட்கொண்ட தேவர்க்கு ஊழியற்கு அன்னக்கட்டளைக்கு ஐந்துவேலி நிலமும்,

5. தேவாரக்கட்டளைக்கு ஐந்துவேலி நிலமும், இவ்வாறு ஐந்து ஐந்துவேலி தானம் செய்ததினால் அம்மரபினர் ஐவேலிநாட்டு அகமுடையார் என்று அழைக்கப்பட்டனர்.

ஐவழி நாட்டு / ஐவேலி நாட்டு அகமுடையார் என்ற பிரிவினர் டெல்டா மாவட்டங்களில் நாகப்பட்டினம், வேதாரணியம், திருத்துறைப்பூண்டி முத்துப்பேட்டை தம்பிக்கோட்டை பட்டுக்கேட்டை வரை கடற்கரையையொட்டியப் பகுதிகளில் செறிவுடன் வாழ்கின்றனர். 1961 ஆம் ஆண்டு மக்கள் தொகைக்கணக்கெடுப்பு அறிக்கையில் குன்னலூர் கிராமம் பற்றிய ஆய்வில் ஐவழிநாட்டு அகமுடையார் பிரிவினரின் இருப்பைப் பதிவு செய்கின்றனர். தம்பிக்கு நல்லான் கோட்டை (தம்பிக்கோட்டை) ஸ்ரீமான் ரெங்கசாமித்தேவர் ஜீவியசரிதம் எனும் நூல் “ஐவேலி நாட்டுப் பூவைசிய அகமுடைய வேளாளர்” என்று இப்பிரிவினரின் இருப்பைப் பதிவு செய்கின்றது.

இப்பிரிவினர் தகட்டூர் அருள்மிகு பைரவர், பரக்கலக்கோட்டை அருள்மிகு பொது ஆவுடையார், ஐயனார், வீரன், அங்காளம்மன் மாரியம்மன் திரௌபதியம்மன், இராவுத்தர் என்று பல்வேறு தெய்வங்களைக் குலதெய்வமாக வழிபடுகின்றனர். “வேட்டைக்காரர்கள், தெரிந்த வில்லிகள் (தேர்ந்தெடுத்த

வில்வீரர்கள்) அகம்படி அணுக்கவில்லிகள், இராஜராசன் வேளைக்காரர்கள், சேனாபதிகள், தண்டநாயகம்" ஆகியவர்களை உள்ளடக்கிய அகம்படி நியாயம் என்ற அரசப்படையினர் நாகப்பட்டினத்தில் நிலைகொண்டிருந்ததையும், பெருமாள் நம்பி பல்லவராயன் தலைமையிலான யானை வீரர்கள், குதிரைவீரர்கள் அரண்மனைப் படைவீரர்கள் உள்ளடங்கிய அகம்படி நியாயம், ஆயிரத்தளி (பழையாரை)யில் அரச குடும்பத்தை பாதுகாத்து நின்றதையும் இப்பிரிவினரோடு ஒப்புநோக்கத்தக்கது.

**கோட்டைப்பற்று அகமுடையார் :**

கோட்டை என்பதற்குக் காப்புடைய அரண் என்று தமிழ்க் கல்வெட்டுச் சொல்லகராதி குறிப்பிடுகிறது. கோட்டை வடமொழியில் துர்க்கம் என்று அழைக்கப்படும். காடு, மலை, நீர், ஆகியவற்றை இயற்கை அரணாகக் கொண்டு அமைக்கப்படும் கோட்டைகள் வனதுர்க்கம், கிரிதுர்க்கம், ஜலதுர்க்கம் எனப்பட்டன. இலக்கியங்கள், புரிசை, எயில் என்று கோட்டைகளைக் குறிக்கிறது. மதிட்சேவகர் என்பவர்கள் கோட்டைச்சுவரைக் காக்கும் வீரர்கள் என்றும், கோயிற் சேவகர் என்பது அரண்மனையைக் காக்கும் காவலர் என்றும் தமிழ்க் கல்வெட்டுச் சொல்லகராதி குறிப்பிடுகிறது. தம் கோட்டையின் மதில் காத்து போரிட்டவர் அகம்படியர் என்பார் திரு.அ.சம்பந்தமூர்த்தி.

சங்ககால போர் மரபில் மதிலும், அகழியும், காடும், மலையும் அரணாகச்சூழ்ந்த பகை அரசனுடைய தலைநகரை முற்றுகை இடுவது உழிஞைத் திணையாகும். முற்றுகையிட்டவனை எதிர்த்துத் தாக்கி அழிக்க முயல்வது நொச்சித் திணையாகும்.

காஞ்சிபுரத்தில் சோழர்களின் ஆட்சித்தேரை அணியுறச்செய்த அகமுடையாரில் ஒரு பிரிவினர் காஞ்சிபுரத்தைவிட்டு வெளியேறி தஞ்சைமாவட்டம் நீடாமங்கலத்திற்கு அருகில் உள்ள சிக்கப்பட்டு என்ற ஊரை அடைந்து அதன் அருகில் உள்ள கோட்டைகளைக் கைப்பற்றிக் கொண்டதாக திரு.புலமை வேங்கடாசலம் அவர்கள் (அகமுடையார் வரலாறு) தெரிவிக்கிறார். மேலும் அவர் நாளடைவில், கோயில் வெண்ணி, நீடாமங்கலம், கடம்பூர், ஒரத்தூர், கோட்டையூர், சித்தமல்லி, லாயம், கீழப்பூவாலூர், காளாச்சேரி ஆகிய பதினெட்டு கிராமங்களில் தங்கிய காரணத்தால் இவர்கள் பதினெட்டு கோட்டைப்பற்று அகமுடையார் எனப்பட்டனர் என்கிறார்.

பழையாரை, நீடாமங்கலம், மன்னார்குடி, பட்டுக்கோட்டைவரை செறிவாகவாழும் இந்தக் கோட்டைப் பற்று அகமுடையார் உள்ள ஊர்கள், கோட்டை என்ற பின்னொட்டோடு முடிகிறது. எடுத்துக்காட்டாக உள்ளிக்கோட்டை, பரவாக்கோட்டை, கூப்பாச்சிக்கோட்டை, ஆவிக்கோட்டை, மண்டலக்கோட்டை, பெரியகோட்டை, தளிக்கோட்டை, திருமக்கோட்டை, சுந்தரக்கோட்டை என்று கோட்டை என்ற பெயரிலேயே அழைக்கப்படுகிறது.

**இருப்புத்தலை அகமுடையார் :**

ஆவூரை தலைநகராகக் கொண்டு ஆண்ட சோழமன்னர்களிடம் அரசியல் அலுவலர்களாக இருந்து பிற்பட்ட காலங்களில் ஆவூருக்கு அருகில் உள்ள பட்டீஸ்வரம், பழையாரை, பம்பைப்படையூர், ஆரியப்படையூர், நூலாம்படையூர், நல்லூர், கிளியூர், கோவிந்தகுடி, சோழன் மாளிகை ஆகிய ஊர்களில் குடியேறியவர்கள் என்று வழக்கறிஞர் திரு.புலமை வேங்கடாசலம் அவர்கள் (அகமுடையார் வரலாறு) குறிப்பிடுவார்.

கரிகால் சோழனின் தாய்மாமனும் சங்கப்புலவருமான இரும்பிடர் தலையார் பிறந்த ஊர் இரும்பிடர்தலையாகும். அது இப்போது இரும்புத்தலை என வழங்கப்படுகிறது. இவ்வூர் சோழர் காலத்தில் ஆவூர் கூற்றம், வெண்ணிக்கூற்றம், பாம்புணிக்கூற்றம், நல்லூர்நாடு, கரம்பை நாடு, முடிசேர்நாடு ஆகிய உட்பிரிவுகளைக் கொண்ட நித்திய வினோத வளநாடு ஆகும்.

“தென்னிந்தியத்தமிழ்ச் சாசனங்கள்” உரையாசிரியர் வித்துவான் திரு.வ.தங்கையா நாடார் ஆவூர் கூற்றம் தஞ்சை சில்லா பாபநாசந் தாலுக்காவில் தேவாரப்பாடல் பெற்ற ஆவூரைத் தலைநகராகக் கொண்ட நிலப்பரப்பாகும் என்கிறார். மேலும் இரும்புத்தலை, விளத்தூர் முதலியன இக்கூற்றத்தில் உள்ளனவாக கல்வெட்டுகளில் காணப்படுகிறது என்று குறிப்பிடுகிறார் (பக்கம் 53,56). சோழர்கள் அரச மாளிகை இருந்த பழையாறை கும்பகோணம் தொடங்கி தஞ்சை, கரந்தை ஆகிய பகுதிகளை உள்ளடக்கிய டெல்டா மாவட்டங்களில் கிழக்கிலிருந்து மேற்காக இப்பிரிவினர் செறிவுடன் வாழ்கின்றனர்.

**நாட்டு மங்கள அகமுடையார்.**

சேது நாட்டிற்கு ராசேந்திர மங்கள நாடு என்றும்,

மங்கலநாடு என்றும் முன்பு பெயர்கள் வழங்கி வந்துள்ளது என்று குறிப்பிடும் "கிழவன் சேதுபதி" நூலின் ஆசிரியர் திரு.மீ.மனோகரன், செம்பிநாடு, ராசேந்திர மங்களநாடு என்பவை சேதுநாட்டோடு சோழர் தொடர்பை உறுதிபடுத்துபவை என்று குறிப்பிடுகிறார் (பக்கம் 24, 25). சிவகங்கைச் சீமைக்கு உட்பட்ட ஒருநாடாக மங்கலநாட்டை, மைத்திக்சொசைட்டி காலாண்டிதழ் குறிப்பிடுகிறது (The Quarterly Journal of the mythic society (Bangalore) Volume 97, Page:19).

"எட்டுகுடியும் இருவாட்சி, சீமையெல்லாம்

அஞ்சு கோட்டைபத்து அடர்ந்த குடிக்காடும்

வாழ்ந்த புகழ்படைத்த மங்கலனாடுகளும்"

என்று இராமய்யன் அம்மானையும் மங்கலநாட்டைக் குறிக்கிறது.

கங்கை கொண்ட சோழபுரம் என்ற ஆங்கில நூலில் அதன் ஆசிரியர் முனைவர் திரு.இரா.நாகசாமி அவர்கள் வீரராஜேந்திரனின் கல்வெட்டுகள் கொண்டு மங்கள நாடு என்பது அருள்மொழிதேவ வளநாட்டின் ஒரு உட்பிரிவாகக் குறிப்பிடுகிறார். இந்த அருள்மொழிதேவ வளநாடு என்பது தஞ்சை மாவட்டத்தில் கடுவயார் மற்றும் வெண்ணாற்றிற்கு இடைப்பட்டதாக திரு.ஆர்.திருமலை அவர்கள் (Collected Papers - page 94) குறிப்பிடுகிறார். (A Tract in Tanjavar District between Kaduvayar and Vennnar).

மங்கள நாடு பற்றி The Role of Feudatories in Pallava history என்ற நூலின் ஆசிரியர் திரு.எம்.எஸ்.கோவிந்தசாமி அவர்கள் சில தகவல்களைப் குறிப்பிடுகிறார். இம்மங்களநாடு, ஆர்வலர் கூற்றத்தில் இடம் பெற்றதாகும். ஆர்வலர் கூற்றம் என்பது மன்னார்குடி மற்றும் திருத்துறைப்பூண்டித் தாலுக்காக்களை உள்ளடக்கிய பகுதியாகும். மங்கள நாடல்வான் என்பவன் மங்கள நாட்டின் தலைவன். இவன் பல்லவ மன்னன் இரண்டாம் நந்திவர்மனின் கீழ் இருந்த சிற்றரசன் என்று குறிப்பிடுகிறார்.

இந்த ஆர்வலர் கூற்றத்தைச் சேர்ந்த மங்கள் என்ற ஊரினைச்சுற்றிய பகுதி மங்கள நாடு என்றுக் குறிப்பிடுகிறார். இவற்றிலிருந்து மங்கள நாடு என்பது சோழ நாட்டுப் பகுதியாகவும், சோழர் தொடர்புடைய சேதுநாட்டுப் பெயராகவும் இருப்பதை உறுதி செய்ய முடிகிறது. எனவே இந்த மங்கள

நாட்டைச் சேர்ந்த அகம்படியர், நாட்டுமங்கள அகம்படியர் என்று அழைக்கப்பட்டிருக்கலாம் என்று முடிவு செய்யலாம்.

கல்வெட்டு ஆண்டறிக்கை (ARE) கல்வெட்டு எண் 471ல் திருத்துறைப்பூண்டிக் கல்வெட்டு ஒன்றில் மங்களக்கிழான் என்பவர் குறிக்கப்படுகிறார். இவர் சைவமடம் ஒன்றிற்கான நிலதானத்தில் குறிப்பிடப்படுவதும், மங்களநாடு இப்பகுதியில் இருப்பதும், மங்கள், மங்களூர் என்ற ஊர்கள் இங்கு இருப்பது இன்னும் அகமுடையர்கள் இங்கு வாழ்ந்து வருவதும், நாட்டு மங்கள அகம்படியர் இதனடிப்படையில் பெயர் பெற்றிருந்தார் என்று முடிவு செய்திட வழிவகுக்கிறது.

### இராஜகுல அகமுடையார்

அகம்படியர்களில் இராஜகுல அகம்படியர் என்ற பிரிவினரின் பெயரே இவர்கள் ஆளும் தகுதியைப்பெற்ற பிரிவினர் என்பதைப் பறைசாற்றுகிறது என்று குறிப்பிடுகிறார் “மருதுபாண்டிய மன்னர்கள்” (பக்கம்: 587) நூலாசிரியர் திரு.மீ.மனோகரன் அவர்கள். இந்தப்பெயரில் கணிசமான மக்கள் தொகையில் தென்மாவட்டங்களில் இன்றும் வாழ்ந்து வருகின்றனர். இராசவாசல் அகமுடையர் என்பவர்கள் அரசர்களிடம் பணியில் இருந்தவர்கள், அரசர்களோடு குடியுறவுக் கொண்டவர்களைக் குறிப்பதாகவும், இராசபோச அகமுடையார் என்பவர்கள் அரசர்களோடு தொடர்புடைய அரசுவழிவந்த, அரசு செலுத்திய அகம்படியர்களைக் குறிக்கும் என்று பதிவு செய்கிறார், அகமுடையார் வரலாறு நூலாசிரியர் திரு.புலமை வெங்கடாசலம் வன்னியர் அவர்கள்.

இராஜகரம் என்பது அரண்மனை, அரசாங்கம் என்பதனையும், ராஜகாரியம் என்பது அரசனிடம் செய்யும் ஊழியம் என்பதையும் குறிப்பதாக கல்வெட்டுச் சொல்லகராதி குறிப்பிடுகிறது. வாசல் என்பது அரண்மனையையும் வாசல்காரியப்பேர் என்பது அரண்மனைவாசல் அலுவலர் என்பதையும் குறிக்கும்.

தி.நா.சுப்பிரமணியன் அவர்கள் ராசகாரியம் என்பது அரசாங்க ஊழியத்தையும், ராசகுலம் காணிப்பற்று என்பது ராஜகுடும்பத்தைச் சேர்ந்ததோர் அனுபோகத்தில் உள்ள நிலம் அல்லது கிராமம் என்றும், வாசல் என்பது அரண்மனை வாசல் மற்றும் அதன் பொறுப்பை வகிக்கும் அதிகாரி எனவும், ராஜசபை, அரசன் ஆஸ்தானம் என்றும், வாசல் காரியம், வாசல் நிர்வாகம் என்பவை வாசல் என்னும் அரண்மனை உத்தியோகம்

என்றும், அதை வகிப்பவன் வாசல் முதலி எனவும் பெறுவான் என்று குறிப்பிடுகிறார். ஆகவே இராச என்பது அரசன், அரசு தொடர்புடையதாகவும் அறியப்படுகிறது. இராசகுலம், இராச வாசல், இராசபோகம் என்பது அரசு செலுத்திய அகம்படியர் வழிவந்த அகமுடையார் பிரிவு என்று முடிவு செய்ய இயலும். வாசல் காரியபேர் என்பது அரண்மனை வாசல் அலுவலர் என்று குறிப்பிடுகிறது தமிழ்க் கல்வெட்டுச்சொல்லகராதி.

இராசகரத்தார் என்பது அரசாங்கத்தை குறிக்கும் என்று திரு.ஏ.சுப்பராயலு அவர்கள் கூறுகிறார். தென்காசி தாலுக்காவில் உள்ள புலியூர் என்ற ஊர் இராசகுல ராமநல்லூர் என்று அழைக்கப்பட்டதைத் தென்னிந்தியத் தமிழ்ச் சாசனங்கள் நூல், பக்கம் 247இல் குறிப்பிடுகிறது.

**மலைநாட்டு அகமுடையார்**

கோவை மாவட்ட அகமுடையார் (தேவர்) குலமரபும் பண்பாடும் என்ற தலைப்பில் பாரதியார் பல்கலைக்கழகம் பி.எச்.டி. பட்டத்திற்கு அளிக்கப்பெற்ற ஆய்வேட்டில், அதன் ஆசிரியர் செல்வி.வெ.அ.நாகரத்தினம் அவர்கள், இவர்கள் (அகமுடையார்) தங்களை சேரர் வழியினர் என்று கூறிக்கொள்கின்றனர் என்று பதிவு செய்கிறார். மேலும் சேர வழியினரான இம்மக்கள் தங்கள் மன்னராட்சி வீழ்ச்சியுற்றதும் பல்வேறு இடங்களுக்குச் சென்று (மலையமான் சேர்வை, உடையார் போன்ற பெயர்களைத் தங்களுக்கு வைத்துக்கொண்டனர்) அங்குள்ள மன்னர்களிடம் மெய்க்காவலராக இருந்து நன்மதிப்பைப் பெற்றனர் என்று பதிவு செய்கிறார்.

இவர்கள் அரசர்களின் மெய்க்காவல் அகப்பரிவாரமாய் இருந்து அவர்களின் உயிர்களை உடமைகளைக் காத்தனர். அகம்படி என்பதற்கு மெய்க்காவல் என்பது பொருள், திரு.அ.சம்பந்த மூர்த்தியின் வைகறைக் கரையிலே என்ற நூலின் வழி தம் கோட்டையின் மதில் காத்துப் போரிட்டவர் அகம்படியர் என்றும் பதிவுசெய்கிறார்.

மலை நாடாகிய சேரநாட்டிலிருந்து தமிழகத்தின் பிற பகுதியில் குடியேறிய அகம்படியர் மலைநாட்டு அகமுடையார் என்று அழைக்கப்பட்டார்கள் என்று குறிப்பிடுகிறார் வழக்கறிஞர் திரு.புலமை வெங்கடாசலம் அவர்கள். மேலும் சேரநாடு மலைகள் நிறைந்தநாடு ஆதலால் அது மலைநாடு எனப்பட்டது என்று குறிப்பிடுகிறார். சேரநாடு மலைநாடு எனவும்,

சோழநாடு புனல்நாடு எனவும், பாண்டியநாடு தமிழ்நாடு எனவும் இலக்கியங்களில் கூறப்படுகின்றன. சேரல் என்னும் மலைநாட்டை உடையவன் சேரலன் எனப்படுவான் என்று குறிப்பிடுகிறார் கவிராஜ பண்டிதர் இராமசுப்பிரமணிய நாவலர் (செந்தமிழ் தொகுதி 74).

இடைக்காலத்தில் தோன்றிய கல்வெட்டுகள் பலவும் சேரநாட்டை மலைநாடு எனவும், மலைமண்டலம் எனவும் குறிக்கின்றன. அதுவழியே நோக்கின் மலைநாடு மலைவளநாடு எனவும், மலைப்பால் நாடெனவும் கூறப்படும் இயைபு பெறுவதாயிற்று. அப்பெயர்கள் பின்னர் வேற்று மொழியாளரால் மலையாளம் என்றும், மலபார் என்றும் சிதைந்து வழங்கலாயிற்று. ஆதலால் அந்நாட்டவர் மலையாளிகளாயினர். அவரது மொழி மலையாளமாயிற்று என்று "சேரமன்னர் வரலாறு" நூலில் அதன் ஆசிரியர் ஔவை திரு.சு.துரைசாமிப்பிள்ளை அவர்கள் பதிவுசெய்கிறார். மலைநாடு என்ற வார்த்தை சேரநாட்டைக் குறிக்கக் கல்வெட்டுகளில் பயன்படுத்தப்பட்டுள்ளது. மலையான் பரிவாரம் என்பது மலையாளத்தாரைக் கொண்ட ஒரு படைப்பிரிவு என்றும், மலையாளன் என்பதற்கு மலைநாட்டான் என்றும், மலையர் என்பதற்கு மலையமான் குலம் என்றும் தமிழ்க்கல்வெட்டுச் சொல்லகராதி (சாந்தி சாதனா வெளியீடு) பொருள்தரும். குன்றுகள் நிறைந்த திருக்கோவலூர் வட்டாரமே சங்க காலத்தில் மலைநாடு எனப்பட்டது. மலைகள் நிறைந்த நாடு என்பது இதற்குப்பொருள். இப்பகுதியை ஆண்டவர்கள் மலையமான்கள். மலைநாடு என்பது மலையும், கடலும் சூழ்ந்த பரசுராமனால் ஆதியில் அமைக்கப்பட்ட இடமென்பார், இதனைச் சாந்திமத்தீவு என்றும் கூறுவர் என்று தென்னிந்தியத் தமிழ்ச் சாசனங்கள் நூல் குறிப்பிடுகிறது.

### டெல்டாவில் உள்ள அகம்படியார் பிரிவுகள்

தஞ்சை, நாகை, திருவாரூர் மாவட்டங்களை உள்ளடக்கிய டெல்டா மாவட்டங்களில், அகம்படியர்களின் முக்கிய உட்பிரிவான, ஐவழி நாட்டான், கோட்டைப்பற்று, இரும்புத்தலை ஆகிய பிரிவுகள் காணப்படுகின்றன. இத்துடன் பிள்ளை பேரான், பதினொரு நாடு, பதினெட்டு நாடு, புண்ணியரிசி நாடு, ஐந்து இரண்டு உள்ளிட்ட பிரிவுகளும் தஞ்சை பகுதியை மையமாகக் கொண்டது. நாகப்பட்டினம் மற்றும் பல்லவராயன் பேட்டை (மயிலாடுதுறை தாலுகா) கல்வெட்டுகள், யானை, குதிரை, கோயிற்கொத்து தெரிந்த வில்லிகள் ஆகியவை

உள்ளடக்கிய அகம்படி நியாயம் என்ற சோழர்கால முக்கியப் படைப்பிரிவைக் குறிப்பிடுவதும், இந்த அகம்படி நியாயம் ஆயிரத்தளி (பழையாறை) அரண்மனையில் அரசகுடும்பத்தினர் தங்கியிருந்த போது முதன்மை நிலையில் இருந்ததையும் ஆய்வாளர்கள் சுட்டிக்காட்டுகின்றனர். தஞ்சாவூர், கங்கை கொண்ட சோழபுரம் ஆகிய நகரங்களைத் தலைநகராகக் கொண்டு சோழர்கள் ஆண்டாலும் ஆயிரத்தளி என்ற பழையாறை நகரம் அரசகுடும்பத்தினர் உறையும் இடமாகவும், சோழர் ஆட்சியின் அதிகாரமிக்க மையமாகவும் தொடர்ந்து விளங்கியுள்ளது.

இந்த பழையாறையின் முக்கியத்துவம், மற்றும் ஆட்சி, பொருளாதாரம், சமூகம் இவற்றில் இந்த நகருக்கு இருந்த செல்வாக்குப் பற்றிப் புகழ் பெற்ற வரலாற்றாய்வாளர் ஆர்.சம்பகலட்சுமி அவர்கள் வர்த்தகம், கொள்கை மற்றும் நகரமயமாக்குதல் என்ற ஆங்கில நூலில் (Trade, Ideology and Urbanization - South India 300 BC to AD 1300 by R.Champakalakshmi) விரிவாகக் குறிப்பிடுகிறார். குடமூக்கு என்ற கும்பகோணம் மற்றும் ஆயிரத்தளி, நந்திபுரம், முடிகொண்ட சோழபுரம், ஆகவமல்லகுலகாலபுரம் என்று அழைக்கப்பட்ட பழையாறை, காவேரி மற்றும் அதன் துணை நதிகளான அரசலாறு, திருமலைராஜன் ஆறு, முடிகொண்டான் ஆறு ஆகியவற்றால் நல்ல வளமான பகுதியாகத் திகழ்ந்துள்ளது. திருக்கோயில்கள் தோற்றமும், அதனை மையப்படுத்தி நகர விரிவாக்கமும், அதில் அரசகுடும்பத்தினர், சோழ அதிகாரிகள், அரசர்களின் அகப்பரிவாரங்கள், உள்ளூர் வணிகர்கள், வெளியூர் வியாபாரிகள் என்று பல்வேறு தரப்பினரின் நடவடிக்கைகளால் நகர விரிவாக்கம் பெற்று வளமையுடன் விளங்கியுள்ளது.

பிரமதேய தேவதான குடியிருப்புகளும் எழுந்துள்ளது. பள்ளிப்படை கோயில்களும், படைவீடு, படையூர் என்ற இராணுவக் குடியிருப்புகளும் எழுந்துள்ளது. சோழர் காலம் முழுவதும் அதிகாரமிக்க இடமாக விளங்கிய பழையாறை பாண்டியர் படைஎடுப்புக்குப் பின்பு சோழர் ஆட்சிமுடிவில், 13ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அரசியல் வரலாற்றிலிருந்து காணாமல் போனதாக மேலே குறிப்பிட்ட வரலாற்று அறிஞர் செண்பகலட்சுமி அவர்கள் குறிப்பிடுகிறார்.

இவ்வாறு செல்வாக்குடன் திகழ்ந்த சோழர் ஆட்சியும், அதன் சமகால அதிகாரம் பொருந்திய பழையாறையும் சிதைவுற்றவுடன் அங்கு முக்கியத்துவம் வாய்ந்த படைப்பிரிவினரும் பலவாராக

சிதறி போய்யிருக்கவேண்டும், இதனை இலங்கை தமிழ்ச் சாசனங்கள் ஆசிரியர் திரு.சி.பத்மநாதன் அவர்கள் மத்திய கால தமிழகத்தில் இராணுவ அமைப்புகள் சீர்குலைந்த பின்னர் அகம்படியரும் வேறுதொழில்களில் ஈடுபாடு கொண்டனர் என்று குறிப்பிடுகிறார். அத்தகைய சூழலில் பலவாராகப் பிரிந்தவர்கள் பழையாறையிலிருந்து தஞ்சை நோக்கிய மேற்காகப்பிரிந்தவர்கள் இருப்புத்தலை அகமுடையார்களும் பழையாறையிலிருந்து மன்னார்குடி பட்டுக்கோட்டை என்று தெற்குநோக்கி இடம்பெறுபவர்கள் கோட்டைப்பற்று என்றும் திருத்துறைப்பூண்டி முத்துப்பேட்டை என்று தென்கிழக்காக உள்ளவர்கள் ஐவழிநாட்டு அகமுடையார் என்றும் இருப்பதைக் காணமுடிகிறது.

பழையாறையில் ஆரியப்படையூர், பம்பப்படையூர், புதுப்படையூர், மனப்படையூர் என்று நான்கு படையூர்களைக் குறிப்பிடுகிறார். (ராணுவ குடியிருப்புகள்) தொ.போ.மீனாட்சி சுந்தரனார் மற்றும் பி.வி.சதாசிவபண்டாரத்தார். (Palaiyaray the Chola Capital).

**பிள்ளைப்பேரான் பிரிவும், பிள்ளைப்பட்டமும் :**

பிள்ளை என்பது அகம்படியர்களின் ஒரு பட்டப்பெயர் என்பதை அறியமுடிகிறது. பிள்ளைப்பேரான் என்ற அகம்படியர்கள் உட்பிரிவைப் புதுக்கோட்டைச் சமஸ்தான வரலாறு நூலாசிரியர் (The Hollow Crown: Ethno history of an Indian Kingdom) திரு.நிக்கோலக்ஸ் பி.டெர்க்ஸ் குறிப்பிடுகிறார். 1960 ஆம் ஆண்டு இந்திய மக்கள் தொகைக் கணக்கெடுப்பு, கிராமங்கள் பற்றிய ஆய்வில் தஞ்சாவூர் (தற்போது திருவாரூர்) மாவட்டம் குன்னலூர் பற்றிய ஆய்வில் பிள்ளைப்பேரான் என்பதை அகம்படியரின் உட்பிரிவாகப் பதிவு செய்கிறது.

கல்வெட்டுகளில் பிள்ளைகள் என்பது இளைஞர்களைக் குறிப்பதையும், பிள்ளையார் என்பது இளவரசர்களைக் குறிப்பதையும் திரு.எ.சுப்ராயலு தனது கல்வெட்டுச் சொல்லகராதியில் குறிப்பிடுகிறார். “பிள்ளைகள் தனம்” என்பது வேளைக்காரப்படையில் ஒரு பிரிவாகும். முதலிப்பிள்ளை என்பதற்குத் தலைமை முதலிப்பதவியில் உள்ளவனுக்கு அடுத்தப்படியாக உள்ளவன் என்பார் திரு.தி.நா.சுப்பிரமணியன் (கல்வெட்டுச் கலைச்சொல்லகராதி). அணுக்கப்பிள்ளை, என்பதைப் பாண்டியர் ஆட்சியில் ஓர் அரச அலுவலர் என்றும்,

*தாநாகிப்பிள்ளை என்பதற்குப் படைத்தலைவன் என்றும் தமிழ்க் கல்வெட்டுச்சொல்லகராதி குறிப்பிடும்.*

*அகம்படியர் பிள்ளை என்ற பெயரினைத்தாங்கி வருகின்றனர் என்ற குறிப்பினைத் தருகிறார் மு.சி.பூர்ணலிங்கம் பிள்ளை (தமிழர், தனித்தமிழ் மாத வெளியீடு 1926 பிப்ரவரி மார்ச், திருச்சிராப்பள்ளி). பிள்ளையார் என்பது அரசனுடைய நெருங்கிய சுற்றத்தார்க்கும் நெருங்கிய தொடர்புடைய அரசியலதிகாரிகளுக்கும் வழங்கும் பொதுப் பெயர் என்பார் வ.தங்கையா நாடார், தனது தென்னிந்திய தமிழ்ச் சாசனங்கள் நூலில். சிறுபிள்ளை, சின்னப்பிள்ளை என்பதை அரண்மனைத் தொடர்புடைய பணியாளர்களாக சாசனச் சொல்லகராதி குறிப்பிடும். வேளிர் அல்லது வேள் குடியினர் அல்லது அதற்கு ஈடான சிறப்புப்பெற்றவர்கள் மன்னரால் சிற்றரசர் அல்லது இளவரசராகக் கருதப்பட்டு பிள்ளை என்றபட்டம் வழங்கப்பட்டனர் என்கிறார் திரு.கா.அப்பாதுரையார் அவர்கள் (கொங்குத்தமிழக வரலாறு).*

**அதிகாரி**

*அதிகாரி என்ற பட்டத்தை அகமுடையார்கள் சூடிக்கொள்கின்றனர் என்று குறிப்பிடுகிறார் திரு.எட்கர்ட் தர்ஸ்டன் தனது தென்னிந்தியக் குலங்களும் குடிகளும் நூலில் (பக்கம் 3, தொகுதி1). தமிழ்நாட்டில் பண்பாட்டுப்புரட்சி நூலின் ஆசிரியர் திரு.வி.ஆணைமுத்து அவர்கள் அதிகாரி என்பதற்குத் தமிழக அகமுடையாருள் ஒரு பிரிவினர் என்று குறிக்கிறார்.*

*அகம்படியர்களின் பட்டப்பெயராக அதிகாரி, சேர்வைக்காரன், பிள்ளை முதலியார் போன்றவற்றைத் தமிழர்களின் வரலாறு நூல் பதிவு செய்கிறது. அதிகாரி என்பதற்குத் தலைவன், அதிபதி என்று அகராதிகள் குறிப்பிடுகின்றன.*

*அதிகாரிகள் மற்றும் உடன் கூட்டத்து அதிகாரிகள் சோழப்பெருவேந்தர் கால நிர்வாகத்தில் தலைமைப் பொறுப்பில் இருந்தனர். இவர்களே உயரதிகாரம் பெற்ற முதன்மை அலுவலர்கள் என்று தமிழ்நாட்டு வரலாறு சோழப்பெருவேந்தர் காலம் நூல் (பக்கம்: 423) தெரிவிக்கிறது. இவ்வதிகாரிகள் அரசருக்கான பணிகளைச் செய்ததுடன், இவர்கள் வாயிலாகவே அரசாணைகள் இடப்பட்டு எல்லாவகை அரசுப்பணிகளும் நடைப்பெற்றன.*

வருவாய்த் துறையின் உயரதிகாரிகளுக்குக் கட்டளையிடும் அதிகாரத்தை இவ்வதிகாரிகள் பெற்றிருந்தனர். பெண் அதிகாரிகளும் இருந்துள்ளனர். இவர்களை அதிகாரிச்சிகள் என்று அழைத்தனர். வருவாய்த்துறை அலுவலர்கள் பெரும்பாலும் வேளார் என்ற பட்டப்பெயரைக் கொண்டிருந்தனர்.

முதலாம் இராசராசசோழனின் அரசியல் அதிகாரியான பொய்கைநாடு கிழான் ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்த வேளாண் என்பவனையும், முதலாம் பராந்தக சோழனின் அரசியல் அதிகாரியான சோழப்பெருமானடிகள் அதிகாரி மருதூருடையான் அருணிதிகலியன் என்பவனையும், விக்கிரம சோழன் தஞ்சைப் பெரிய கோயிலிலும், அக்கோயிலுக்கு சொந்தமான ஊர்களிலிருந்து வரும் கோயில் நெல்லையளந்து கோயில் களஞ்சியத்தில் சேர்க்கும் பொருட்டு இராசராச பல்லவரையன் என்னும் ஆவுடையான் அரையன் உடையானுக்கு உரிமையாக்கிய செய்தியையும், அவன் இறந்தபிறகு அவன் மகன் உடையான் கல்லாலையை அந்த வேலைக்கு நியமித்த செய்தியையும் தென்னிந்திய தமிழ்ச் சாசனங்கள் நூலில் அதன் ஆசிரியர் திரு தங்கையாநாடார் பதிவு செய்கிறார்.

தேசிகர் என்ற பட்டப்பெயர் டெல்டா மாவட்டங்களில் வழங்கி வருகின்றது. பெருந்தனக்காரரும், தொழில் அதிபரும், கல்விச் செம்மலுமாகிய வலிவலம் மனைத்துணைநாத தேசிகர் அகமுடையார் சமுதாயத்தைச் சார்ந்தவர். தேசிகர் என்பதற்கு குரு, ஆசான், வணிகன் என்று பல பொருள்கள் உள்ளன.

தேசி, தேசிகர் என்ற தமிழ்ச்சொற்கள் வியாபாரிகளைக் குறிப்பனவாம் எனக் குறிப்பிடுவார் பேராசிரியர் தொ. பரமசிவன் அவர்கள். மேலும் தேசங்கள் பலவற்றிற்குச் செல்வதால் வியாபாரிகள் தேசிகன் எனப்பட்டனர் போலும். தேசி என்னும் சொல் பிற்காலத்தில் வணிகர்களைத் குறிக்க “தேசிகர்” என வழங்கப்பட்டது. தேசிகர் என்னும் சொல் 13ஆம் நூற்றாண்டுக்குப்பின் சைவ, வைணவ சமயங்களின் குருமார்களைக் குறிப்பிடுவனவாயிற்று என்று தனது “பண்பாட்டு அசைவுகள்” நூலில் பேராசிரியர் தொ.பரமசிவன் குறிப்பிடுகிறார்.

மணிக்காரன் அல்லது மணியக்காரன் என்ற பட்டத்தை அகமுடையார் சூடிக்கொள்கின்றனர். மணிக்காரன் என்பதற்குக் கிராமத்தலைவன், கோயில் மேல் விசாரணை அதிகாரி என்று

பொருள் கூறுவர். மேலும் மேற்பார்வை செய்பவன் எனும் பொருளுடன் ஊர் தலைவனுக்குரிய பெயராகவும் உள்ளது.

**சேர்வை மற்றும் சேர்வைக்காரர்**

சேர்வை என்பது இராணுவச் சேவையின் அடிப்படையில் பிறந்த வார்த்தை என்பதைக் கல்வெட்டறிஞர் திரு.எஸ். இராமச்சந்திரன் குறிப்பிடுகிறார். செங்கம் தர்மபுரி நடுகற்களில் சேவகன் என்பது குறிப்பிடப்படுவதைச் சுட்டிக்காட்டும் திரு.எஸ்.இராமச்சந்திரன் அவர்கள், சேவகர் என்பது குறிப்பிட்ட பகுதியை ஆட்சி செய்யும் ஆட்சியர் அல்லது குறிப்பிட்ட படைத்தொகுதியின் தலைவன் என்ற அடிப்படையில் இராணுவ மற்றும் நிர்வாக தன்மைக் கொண்ட வார்த்தையாக சேவகனைக் குறிப்பிடுகிறார்.

சேவல் என்பது குதிரையைக் குறிப்பதைத் தொல்காப்பியம் மற்றும் கல்வெட்டுகள் வழி விளக்கமளிக்கப்படுவதையும், சேவகர் என்பது பின்னாளில் உடையான், ஆள்வன ஆகிய பட்டங்களால் மறைந்துப்போனதையும் பதிவு செய்கிறார். சிலப்பதிகாரம் தொடங்கி 18 ஆம் நூற்றாண்டு வரை தலைமகனைக் குறிக்கச் சேவகன் பயன்பட்டதையும், சேவகன் என்பது குதிரை வீரனைக் குறிப்பதைத் திருவிளையாடல் புராணம் கொண்டு ஆயிரம் குதிரைக்கு ஒரு சேவகன் என்பதையும் பதிவு செய்கிறார். (The Transformation of Tamil Society by S.Ramachandran, Journal of Tamil Studies pages 57 & 58).

A Manual Dictionary of the Tamil Language (Published by Jaffna Book Society) என்ற அகராதி சேர்வை என்பதற்குக் கூட்டம், சேனை என்றும், சேர்வைக்காரன் என்பதற்குச் சேனைத்தலைவன், போர்ச்சேவுகன் என்றும் பொருள் தருகிறது.

சேவகம், சேவகர், சேவகரு, சேவகன் என்பது படைவீரனையும், ஒற்றைச்சேவகர் என்பதற்குப் படைவீரர்களில் ஒருசாரர் என்றும், "உடநிலை சேவகர்" என்பதற்கு நெருங்கிய வீரர் குழுக்களில் ஒன்று என்றும். உள்ச்சேவகம் என்பதற்கு வீரர்பொருட்டு செலுத்தும் ஒருவரி என்றும், கோயிற் சேவகர் என்பதற்கு அரண்மனைக் காவலர் என்றும், மக்கட் சேவகர் என்பதற்கு உள்ளூர்ப்படைவீரர்கள் என்றும், மதிட்சேவகர் என்பதற்குக் கோட்டைச் சுவரைக் காக்கும் வீரர்கள் என்றும், பலவகைப்பட்ட போர்வீரர்களை (சேவகர்) திரு.ஏ.சுப்பராயலு அவர்கள்

தமது தமிழ்க்கல்வெட்டுச் சொல்லகராதியில் குறிப்பிடுகிறார். உடன்நிலைக்குதிரைச் சேவகர் என்பதற்குக் குதிரையேறிய மெய்க்காவலர் என்று குறிப்பார் திரு.தி.நா.சுப்பிரமணியன் அவர்கள் (கல்வெட்டுச் சொல்லகராதி). இராசசிம்ம பாண்டிய அரசன் காலத்தைச்சார்ந்த கல்வெட்டு, கரவந்தபுரம் கோயிலை மதிட்சேவகர் பாதுகாப்பில் விட்ட செய்தியை குறிப்பிடுகிறது. (எபிகிராபியா இந்தியா, தொகுதி 23, பக்கம் 285).

சேர்வை என்பதை அகம்படியர்களின் பட்டப்பெயராகக் குறிப்பிடுகிறார் எட்வர்ட் பால்போர் என்ற ஆசிரியர் (The Cyclopaedic of India and of Eastern and Southern Asia vol. 2 by Edward Balfour) இதே கருத்தைத் தரங்கம்பாடி ஏசுசபை பற்றிய நூலும் குறிப்பிடுகிறது. (Cultural encounters in India: The Local Coworkers of Tranquebar mission 18th to 19th centuries by Heike Liebau). இந்தச் சேர்வை என்பது சேவகர் என்பதிலிருந்து வந்ததாக அறியமுடிகிறது.

சேவகர், சேர்வைக்காரர் : இச்சொல் ஆழமான பொருளைக் கொண்டது. இது போர் மற்றும் போரில் பங்கேற்ற வீரனைக் குறித்துள்ளது. கி.பி.5ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பூலாங்குறிச்சி தமிழ் பிராமி கல்வெட்டில் சேவகரு என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

சேவகர் பற்றி "நடுகற்களில் சேவகர்கள்" என்ற தலைப்பில் சரித்திரச் செம்மல் திரு.ச.கிருஷ்ணமூர்த்தி தனது "நடுகற்கள்" என்ற நூலில் விரிவான ஆய்வுக்கட்டுரையைத் தந்துள்ளார். அதில் அவர், நடுகற்களுக்கும், சேவகர் என்ற சொல்லுக்கும் மிக நெருங்கிய தொடர்புண்டு என்று குறிப்பிடுகிறார். இது நடுகல் வீரரைக் குறிப்பதைப் பதிவுசெய்வதுடன் சேவகர் தொடர்பான முடிவுகளைக் கீழ்க்கண்டவாறு விளக்குகிறார்.

"உண்மையில் சேவகர், உயர்ந்த பதவியில் இருந்தவரையே பெரும்பாலும் குறிப்பிட்டுள்ளது. அரசனிடம் மெய்க்காப்பாளராகவோ படைத்தலைவராகவோ, சிற்றரசராகவோ, சேவகர் இருந்துள்ளனர். பேரரசராக உள்ள மன்னர் சிலர் சிலகாலம் சிற்றரசராகவும், படைத்தலைவராகவும் இருந்துள்ளனர்".

"சேவகன் என்ற சொல்லுக்கு இணையாக அடியான் அல்லது அடியார் என்ற சொல்லும் நடுகற்களில் பயிலப்பட்டுள்ளது".

"சிவமாரனாகிய கொங்கணி அரசருடைய வரதம்பட்டி நத்தமேடு நடுகல் மூலம் கி.பி.8ஆம் நூற்றாண்டில் மனைமகன்

உலகத்தை ஆண்டதைப் பார்க்கிறோம். மனைமகன் என்ற சொல் ஆய்வுக்குறியது. சேவகன் என்பதற்குப் பதில் இச்சொல் வந்துள்ளது. மனைமகன் என்ற சொல்லே சோழர் காலத்தில் அகம்படியர்கள் அல்லது அகம்படி முதலி என்று மாறியது போலும்.

சேவகர் என்ற சொல்லுக்கு மாற்றாக சோழர் காலத்தில் தொண்டர் என்ற சொல் வந்துள்ளது. அரசனுக்கு மிக நெருக்கமாக இருந்தவர் அணுக்கத்தொண்டர் என்று அழைக்கப்பட்டனர்.

சேவகர் என்ற சொல் பணியாளர் அல்லது எடுபிடி என்ற பொருளில் சுமார் 300 ஆண்டுகளாக வழக்கில் இருந்திருப்பினும் பல நூற்றாண்டுகளாகப் போருடன் தொடர்புடைய வீரரைக் குறிக்கவே முதலில் இச்சொல் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளது.

"போர் வீரர்களின் செலவுக்கும், அல்லது பராமரிப்புக்கும் போர்வீரர்களிடமிருந்து சேவகக்காசு என்ற வரி சோழர் காலத்தில் வசூலிக்கப்பட்டது".

சேவகனார் என்ற சொல் வீரத்தெய்வத்தை அதாவது ஐயனாரை வழங்க பயன்பட்டுள்ளது. திருவோத்தூர் வேதபுரீஸ்வரர் கோயில் கல்வெட்டொன்று, குதிரைச் சேவகன் தாங்கல் என்ற ஊரைச்சுட்டுகின்றது. குதிரை வீரனை இச்சொல் குறிப்பிடும் போலும்.

இன்றுள்ள ஆய்வாளர் பலரும் சேவகர் என்று நடுகற்களில் வரும் சொல்லைச் சாதாரணமாகப் போர்வீரன் என்றே கூறுவர். Soldier, Warrior, Veteran என்ற சொற்களுடன் பொருந்திப் பார்ப்பார். ஒரு சிலர் Hero என்ற சொல்லுடனும் ஒப்பிட்டு மகிழ்வார். இவ்வாறு சேவகர் என்பதன் விளக்கத்தைச் சரித்திரச்செம்மல் திரு.ச.கிருஷ்ணமூர்த்தி குறிப்பிடுகிறார். இச்சேவகர் என்பதே சேர்வை, சேர்வைக்காரர் என்று பின்னாளில் வழக்கத்திற்கு வந்துள்ளது.

சேரர், சேவகர் என்ற மரபுத் தொடர்ச்சிக் கொண்டு சேர்வை, சேர்வைக்காரர் என்ற அகமுடையார்களின் சாதிப் பட்டப்பெயர், பின்னாளில் வேறு சில பொருள் தரும் நிலையில் அந்தந்தக் கால அரசியல், சமுதாயப் பின்னனிக்கு ஏற்பப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

பாளையக்காரர்களின் ஆட்சித்தோன்றி வளர்ந்தக் காலகட்டத்தில் இராணுவ அதிகாரிகளைக் குறிக்க சேர்வைக்காரர்

என்ற பட்டப்பெயர் பயன்படுத்தப்பட்டதாக வரலாற்றாசிரியர் திரு.கே.இராஜய்யன், தனது “தமிழ்நாட்டில் பாளையக்காரர்களின் எழுச்சியும், வீழ்ச்சியும்'' நூலில் குறிப்பிடுகிறார். அதே காலகட்டத்தில் ஆனந்தரங்கன் பிள்ளை நாட்குறிப்பின் படியும் கிறித்துவ பாதிரிமார்களின் குறிப்பின்படியும், இராணுவ அதிகாரிகளைச் சேருவக்காரன், சேர்வைக்காரன், சேர்வைக்காரர் என்று குறித்துள்ளதாக திரு மீ.மனோகரன் (மருதுபாண்டிய மன்னர்கள்) குறிப்பிடுகிறார். மேலும் இவர் கட்டபொம்மன் முதலியவர்களைத் தூக்கிலிட்டபின், பானர்மன் வெளியிட்ட பிரகடனத்தில் ஷெரோகார் அல்லது சேர்வைக்காரர் என்பவர்களை ஆயுதங்களைக் கையாளக்கூடிய இராணுவ அதிகாரிகள் என்ற அர்த்தத்தில் குறிப்பிட்டுள்ளதாகப் பதிவு செய்கிறார்.

இதே கருத்தை இந்திராகாந்தி திறந்தநிலைப் பல்கலைக்கழகத்தின் 16ஆம் நூற்றாண்டு முதல் 18ஆம் நூற்றாண்டு வரையிலான தென்னிந்தியாவில் நிலவருவாய் என்ற தலைப்பில் சேர்வைக்காரர்களைப், பாளையக்காரர்களின் இராணுவ தலைவர்களாகக் குறிப்பிடுகிறது.

“Poligars even setup their own military and administrative structure. They divided their territories among their Kinsmen and Other subsidiary chieftains called Servaikkarars. Who owed military allegiance and tribute and demanded the same from village Headman” (Page:29 - Land Revenue system - Maratha, Deccan and South India - EHI -04 - History. India 16th to mid 18th century IGNOU).

மருதுபாண்டியர்கள் ஆட்சிக்கு வந்த காலம் முதல் சிவகங்கைச் சீமையின் ஆட்சியாளர்களைச் சேர்வைக்காரர்கள் என்றே குறித்தனர். இதனை ஆளுநர் எட்வர்ட் கிளைவ் பிரகடனங்கள் வழி திரு.மீ.மனோகரன் விரிவாக விளக்குகிறார். புதுக்கோட்டையில் தொண்டைமான் ஆட்சி ஏற்படுவதற்கு முன்பு கி.பி.14 முதல் 17ஆம் நூற்றாண்டு வரை புதுக்கோட்டையை ஆட்சி செய்த பல்லவராயர்கள் அகம்படிய சேர்வைக்காரர்கள் ஆவார்.

புதுக்கோட்டை தொண்டைமான் தனியரசில் இராணுவ அதிகாரிகளை மேலிலிருந்து கீழாக அதன் வரிசைமுறையில் கூறும்போது பௌஜ்தார் அல்லது தளபதி, சர்தார், சேர்வைக்காரர், அமரக்காரர், ஊழியக்காரர் என வரிசைப்படுத்துவார் (மருதுபாண்டிய மன்னர்கள்). இவ்வாறு அந்தந்தக் காலகட்டத்தில் சேர்வைக்காரர் என்ற பட்டப்பெயர் பயன்படுத்தப்பட்டு

வந்துள்ளது. இதன் அடிப்படையிலேயே அகமுடையார் தவிர்த்த இதர சமூகங்களுக்கும் இந்தப்பட்டப்பெயர் பயன்பாட்டில் உள்ளது.

## முதலிகள்

முதலையுடையவன், பணக்காரன், அரசஅவையில் முதலிடம் பெற்ற காரணத்தால் முதலி எனப்பெயர் வந்ததென்றும் கூறுவர் என்பார் திரு.மு.சி.பூர்ணலிங்கம் பிள்ளை (தமிழர் மாத இதழ் *1926* Feb. -March)

மூவேந்தர்களுக்கு அமைந்த படைத்தலைவர்கட்கு படைமுதலி, தண்டநாயன், சேனைமுதலி என்று அழைக்கப்பட்டதாகக் குறிக்கிறார் "தமிழர் போரியல்" நூலில் (பக்கம்: 79) அதன் ஆசிரியர் புலவர் திரு.செந்துரைமுத்து அவர்கள்.

சோழர் காலச் சமுதாய அமைப்பில் சிறப்புடன் விளங்கிய பிரிவினர்கள் முதலிகளும் அடங்குவர். மன்னர் படைப்பிரிவுகளிலும், அரசுப்பணிகளிலும், கோயிற் பொறுப்புகளிலும், ஊர் முதலி, பிரதானமுதலி போன்ற சமுதாயத்தின் பல்வேறு பொறுப்புகளிலும் முதன்மையுடையவராக விளங்கியவர்கள் முதலிகள் என அழைக்கப்பட்டனர் என்று குறிப்பிடுகிறார் திரு.இரா.இராமகிருட்டிணன் அவர்கள் (தகடூர் வரலாறும் பண்பாடும் ராமையா பதிப்பகம் பக்கம் 435). மேலும் அவர், அரண்மனையிலும், அரசுப்பணியிலும் அரசர்க்கு மெய்க்காப்பாளராகவும் விளங்கியவர்கள் அகம்படி முதலிகள் என்றும் கல்வெட்டுகளில் குறிக்கப்பெற்றுள்ளனர். பணிக்குச் சிறப்புப்பெயராக வழங்கப்பட்ட அகம்படி முதலி என்ற பெயர் நாளடைவில் ஓர் இனப் பிரிவினர்க்குரிய பெயராக மாறிவிட்டது.

பிரதிநிதிகளாக உள்ள முன்னோடிகள், அடைவு முதலிகள் என்றும், உட்கொத்து என்ற அரண்மனைப் பணியாளர் தொகுதியின் தலைவனுக்கு உட்கொத்து முதலி என்றும், மண்டலத்தின் தலைமை நிர்வாகி மண்டல முதலிகள் என்றும், தலைவர் என்பதற்கு முதலிகள் என்றும், ஊர் தலைமைப்பதவி, முதலித்தரம் என்றும் பதிவு செய்கிறது தமிழ்க்கல்வெட்டுச் சொல்லகராதி (ஆசிரியர் திரு.ஓய்.சுப்பராயலு - சாந்தி சாதனா).

காடவராயர், சேதிராயர், வாணகோமகதைப்பெருமாள், காடவகோப்பெருஞ்சிங்கன் மற்றும் யாதவராயர் ஆகியோர்களுக்கு அமைந்த அகம்படி முதலிகள் பற்றிக் கேசவன் வேலுதத்

குறிப்பிடுகிறார் (The Political Structure of Early medieval south india by Kesavan Veluthat). அகம்படி தன முதலிகள் என்பதற்கு அரசன்வாழ் அரண்மனையில் அணுக்கப்பணி செய்வோரில் முதன்மையானவர் என்றும், படைவீரர்களாய் அரண்மனையிலிருந்து அரச ஊழியம் செய்வாருள் முதன்மையானவர்கள் அகம்படி சேனை முதலிகள் என்றும், அகம்படி மற முதலிகள் என்றும் அழைக்கப்பட்டதைக் கல்வெட்டுக்கலைச்சொல் அகரமுதலி ஆசிரியர் திரு.சி.கோவிந்தராசனார் பதிவுசெய்கிறார்.

முதலி என்பதற்குத் தலைவன், பெரியோர் என்றும், முதலிப்பிள்ளை என்பதற்குத் தலைமை முதலிப்பதவியில் உள்ளவனுக்கு அடுத்தபடியாக உள்ளவன் என்றும் குறிப்பிடுகிறார் திரு.தி.நா.சுப்பிரமணியன் அவர்கள் (கல்வெட்டுச்சொல்லகராதி).

இது ஒரு மரியாதைக்குரிய பட்டமாக திராவிடர்கள் வேளாளர்கள் சூடிக்கொள்கின்றனர். சமுதாயத்தில் அல்லது நிறுவனத்தில் முதன்மைத்தன்மை அல்லது தலைமைத் தன்மையை ஏற்பவன் முதலர் (Mudalar) என்று அழைக்கப்பட்டதையும், அதிலிருந்து முதலி என்பது வந்ததென்றும் குறிப்பிடுகிறார் திரு.டி.பி.இராமச்சந்திரமுதலியார் (Quarterly Journal of the mythic Society - July - 1920 Volume - X)

கே.எஸ்.சிங் அவர்களின் இந்திய மக்கள் தமிழ்நாடு (People of India - Tamil Nadu - Volume XL)- நூல் அகமுடைய முதலியாரின் இடம் சார்ந்த உட்பிரிவு ஆர்க்காடு முதலியார் என்றும், அவர்கள் ஆர்க்காடு முதலியார், துளுவவெள்ளாளர் மற்றும் அகமுடையான் என்று அறியப்பட்டிருந்ததையும் அவர்கள் பிள்ளை, முதலியார் என்பதைத் தங்களுக்கான பட்டமாகப் பயன்படுத்தினார்கள் என்றும் குறிப்பிடுகிறது.

சோழ மாமன்னர் படைப்பிரிவுகளிலும் அரசுப்பணிகளிலும், கோயில் பொறுப்புகளிலும், சமுதாயத்தின் பல்வேறு துறைகளிலும் முதன்மைத் தன்மை உடையவர்களாக விளங்கியவர்கள் முதலிகள் என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் சோழ பெருவேந்தர் காலச்சமுதாய அமைப்பில் சிறப்புடன் விளங்கிய பிரிவினராகவும் இருந்தனர் என்பதைத் "தமிழ்நாட்டு வரலாறு சோழபெருவேந்தர் காலம்" நூல் பதிவு செய்கிறது. மேலும் மண்டலங்களின் முதன்மைப் பொறுப்பாளர் மண்டல முதலிகள் என்றும், நிலவுரிமையாளர் இந்நில முதலிகள் என்றும் படைகளில் முதன்மை நிலையில் இருந்தோர் படைமுதலிகள்

என்றும் அரண்மனையிலும் அரசுப்பணியிலும், அரசர்க்கு மெய்க்காப்பாளராகவும், முதன்மைத் தன்மை உடையவராகவும் விளங்கியவர்கள் அகம்படி முதலிகள் என்றும் மேற்படி நூல் சுட்டிக்காட்டுகிறது.

அத்துடன் முதலிகளில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள் அகம்படியர்கள் ஆவர். அகம்படியார் என்றும் அகம்படி முதலிகள் என்றும் அழைக்கப்பட்ட இவர்கள் மன்னர்களின் படைப்பிரிவுகளில் முதன்மை பெற்றவர்களாக விளங்கினர் என்பது படைமுதலிகள், இராசராச கோவலராயனின் அகம்படி முதலிகள், உடையார் காடவராயனின் அகம்படி முதலியான அரசநாராயண பல்லவராயன், அகம்படி முதலியான எதிரிகள் நாயன் பொத்தப்பிச்சோழன் என்பன போன்றவற்றால் அறியலாம்.

ஒவ்வொரு தொழிலியற்றும் கூட்டத்தார்க்கும் ஒரு தலைவன் உண்டு, அவன் இடத்திற்கு ஏற்ப மூப்பன் என்றும், மூத்தன் என்றும், முதலி என்றும் பெயர் பெற்றான் என்பர் திரு.மா. இராசமாணிக்கனார் (செந்தமிழ் இதழ் தொகுதி 52 சூன், சூலை 1956). அகம்படி முதலிகள் அரசுப்பணியிலும் அரண்மனைப்பணியிலும் சிறப்பிடம் அளிக்கப்பட்டிருந்தனர். அவர்கள் அரசனின் மெய்க்காப்பாளராகப் பணிபுரிந்து அவர்களின் உடலையும், உயிரையும், உடைமைகளையும் காத்தனர் (தமிழ்நாட்டு வரலாறு சோழப்பெருவேந்தர் காலம், பக்கம் 45, 46, இரண்டாம் பகுதி).

**உடையான், உடையார்:** உடையான் என்பது நிலக்கிழானையும், உடையன் என்பது உரிமை பெற்றுடையவன் என்றும், உடையர் என்பதற்கு பெற்றிருப்பவர் என்றும் உடையார் என்பது அரசர் மற்றும் குறுநிலத் தலைவனையும் குறிப்பதாகக் குறிப்பிடுவார் திரு.எ.சுப்பராயலு (தமிழ்க் கல்வெட்டு கலைச்சொல்லகராதி). உடையார் என்பதை அரசன், உரியவன், கோயிலில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் என்றும் அகம்படி உடையான் என்பதைக் குடிமக்கள் என்றும் குறிப்பார் திரு.தி.நா.சுப்பிரமணியன் அவர்கள்.

அகம்படி உடையான் என்பதை அரண்மனை அந்தப்புர நிர்வாகப்பணியாளர் அதிகாரி என்பார் திரு.சி.கோவிந்தராசனார் (கல்வெட்டுக்கலைச்சொல் அகரமுதலி). சாசனங்களில் பெரும்பாலும் சோழ அரசர்கள் உடையார் என்றே குறிப்பிடப்படுவர். இஃது இறைவனுக்குரியப்பெயர். அரசனும்

தெய்வ அம்சம் உடையவராதலின் உடையார் எனப்பட்டார். இஃது அடங்கிய அரசர்கள் மாட்சிமை தாங்கிய (His majesty) என்று அழைக்கப்படுவது போன்றதாகும். அரசர்க்கு மரியாதை பற்றி வழங்கும் சொல், இதை உடையார் ஸ்ரீராஜெந்திரசொழதெவர் என்ற தொடராலும் புலப்படும் என்கிறது, வித்துவான் தங்கையா நாடார் அவர்களின் தென்னிந்தியத் தமிழ்சாசனங்கள் நூல்.

சோழப் பெருவேந்தர் காலத்தில் அரசர்களைக் கடவுளுக்கு இணையாகக் கருதினர். இறைவனுக்கு இடப்பட்ட உடையார், தேவர், நாயனார், பெருமாள் போன்ற சிறப்புப் பெயர்கள் அரசர்களுக்கும் இடப்பட்டு அவர்கள் சிறப்பிக்கப்பட்டனர் (தமிழ்நாட்டு வரலாறு சோழப்பெருவேந்தர் காலம், முதல் தொகுதி - பக்கம் 413). சோழர்கள் முதலில் பெருமான், பெருமானடிகள் என்ற பட்டப்பெயரையும் பின்பு நாட்டுப்பகுதிகளுக்குத் தலைவன் என்று பொருள்படும் உடையான், உலகுடைய பெருமாள் என்ற பட்டங்களைச் சூட்டிக்கொண்டனர்.

உடையான் என்பதற்கு அரசன், உரிமைக்காரன், கடவுள், தலைவன் என்று தமிழ் அகராதிகள் பொருள் கூறுகின்றன. தமிழ்நாடு அரசின் தொல்லியல் துறையின் திரு.க.ஈஸ்வரன் அவர்களை ஆசிரியராகக்கொண்டு வெளியிடப்பட்ட காப்பலூர் என்ற நூலில் அகமுடையாருக்கான உடையார் பட்டம் பற்றிக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடப்படுகிறது.

“உடையார் என்று அழைக்கக்கூடிய அகமுடையார் இவ்வூரில் அதிகமாக வாழ்கின்றனர் இவர்களது முக்கியத் தொழில் விவசாயமாகும். இவ்வூரில் நடக்கின்ற கோயில் திருவிழாக்களில் இவர்களின் பங்கே அதிகமாகும். இவ்வூர் நாட்டாமை உரிமை இவர்களுக்கே உண்டு” என்று அகமுடையார்கள் உடையார் பட்டத்தில் இருப்பதைப் பதிவுசெய்கிறது.

கி.பி.எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த தண்டிவர்ம பல்லவ மன்னனின் உருத்திர மல்லூர் கல்வெட்டு அகம்படி உடையான் என்பதைக் குறிப்பிடுகிறது. இதற்குச் சிறிய அளவிலான நிலங்களை உடைமையாகக்கொண்ட உயர்நிலை வேளாண்குடிகள் என்று இந்திய பொருளாதார வரலாறு என்ற நூல் குறிப்பிடுகிறது.

“The term Agambadi Udaiyans, Mentioned in the Uttaramallur Inscription of Dantivarman, may Indicate a higher stage of peasants who look of have been smaller Landowners” History of Indian Economy by Raj Technology University (Engineering Minds)

உடையான் என்ற பட்டத்தை அகம்படியர் கி.பி.எட்டாம் நூற்றாண்டிலே கொண்டிருந்தனர் என்றும், இதன் மூலம் அவர்கள் நில உடமையாளராகவும், அவர்களின் வேளாண்மையை நோக்கிய நகர்வும் தெளிவாகப்புலப்படுகிறது.

**தேவர்:**

தேவர் என்பதற்கு, உயர்ந்தோர் அரசர், துறவிகள் முதலியோருடைய சிறப்புப்பெயர், நான்முகன், திருமால் முதலிய தேவர், தீக்கடவுள் முதலிய தேவர் என்று அகராதிகள் பொருள் தருகின்றன.

திரு.ந.கதிர்வேல் பிள்ளையின் தமிழ் மொழியகராதி (ஏசியன் ஏஜுகேஷனல் சர்வீஸ் 1981) தேவன் என்பதற்கு அகம்படியன், அரசன், அருகன், கடவுள், ஈட்டிக்காரன் என்று பொருள் தருகிறது. இதே பொருளை திரு.D.இராமநானின் இருபதாம் நூற்றாண்டு தமிழ்ப்பேரகராதியும் குறிப்பிடுகிறது. மூவேந்தர்களின் கல்வெட்டுகளின் இறுதிச் சொற்றொடராக இன்ன தேவர்க்குயாண்டு என்று முடிகிறது என்று தேவர் என்பதனின் சிறப்பை "கிழவன் சேதுபதி" நூலில் அதன் ஆசிரியர் திரு.மீ.மனோகரன் (பக்கம்: 20) பதிவு செய்கிறார்.

பாண்டியன் சுந்தரபாண்டியன் தன்னை சோணாடு கொண்டருளிய பாண்டியத் தேவர் எனவும், சோணாடு வழங்கியருளியசுந்தரபாண்டியத் தேவர் எனவும், சோழநாட்டின் மீதான வெற்றிக்குப்பின் விருதுப் பெயர்களைச் சூடிக்கொண்டான் (தென்னாட்டுப் போர்களங்கள்) நம்பிக்கை வாய்ந்த படையினராகவும், இராணுவத் தளபதியாகவும் பணியாற்றிய அகம்படியர்களுக்கு வழங்கப்பட்ட பட்டமாகத் தேவர் என்பதை இலங்கைக்கான இராயல் ஏசியாட்டிக் சொசைட்டி ஜேர்னல் தொகுதி 35 பதிவு செய்கிறது. கள்ளர், மறவர், அகம்படியர், பரதவர் என்னும் நான்கு சாதியாருக்கும் தேவவம்மிசமானதால் தேவர் என்ற பட்டமுண்டு என்பார் திருக்களர் மு.சுவாமிநாத உபாத்தியாயர் (சைவசமயமும், தமிழ்ப்பாடையும்).

கோட்டூர் கொழுந்தீசுவர சுவாமிக்கு அபிடேகக் கட்டளையாகப் பெருமாள் தேவர், திருமலைத்தேவர் என்னும் இருவர் ஓரிச்சேரி (ஓவர்ச்சேரி) என்ற இடத்தில் (திருத்துறைப்பூண்டிக்கு அருகில்) முக்கால் வேலி நிலத்தைக் கொடையாக அளித்த செய்தி கோட்டூர் கொழுந்தீசுவரர் கோயில் கல்வெட்டில் காணப்படுவதைத் திருவாரூர் மாவட்டத் தொல்லியல் வரலாறு பதிவு செய்கிறது.

பட்டுக்கோட்டை சீமையில் பெரியகோட்டையில் உள்ள நிலத்தை இராமேஸ்வரத்தில் அன்னதானக்கட்டளை தர்மச்சத்திரத்துக்குத் தஞ்சைமராட்டிய அரசகுடும்பத்தைச் சேர்ந்தவர் அளித்த கொடை நிலத்துக்கு ஐவழிநாடு குடியானவர்களான, மாகாளித்தேவன், வயித்தித்தேவன், மூர்த்தித்தேவன் போன்றோர் ஒப்புதல் கையொப்பமிட்டதும், சித்தாய்மூர், பொன்வைத்த நாதசுவாமிக்கு அபிஷேகம், நைவேத்தியம் இவற்றுக்காக சித்தாய்மூர் மாகாணத்தில் அடங்கியுள்ள எல்லா ஊர்க்காரர்களும் மகாசனங்களும், கலத்துக்கு நாழி நெல்லும் இதர கொடையும் கொடுப்பதற்கானச் சித்தாய்மூர் பொன்வைத்த நாதசுவாமி கோயில் செப்பேட்டில் மடப்புரம் வைத்தித்தேவர், கூத்தப்பத்தேவர் போன்றோர் ஒப்புதல் செய்திருப்பதைத் "தஞ்சை மராட்டியர் செப்பேடுகள் 50" என்ற நூல் பதிவு செய்கிறது.

தேவர் என்பதற்கு கடவுளர், நால்வகை தேவ வகையார், உயர்ந்தோரைக் குறிக்கும் சொல், அரசர், துறவியர் முதலியோருடைய சிறப்புப்பெயர் என்று அகராதிகள் பொருள் தருகின்றன.

மாமன்னன் இராசராச சோழன் கல்வெட்டுகளில் உடையார் ஸ்ரீராசராசதேவர் எனக்குறிப்பிடப்பட்டுள்ளன. சேர, சோழ, பாண்டிய அரசர்கள், பேரரசர்கள் தாங்கள் பெயருடன் தேவர் என்ற பட்டப்பெயரைக் கொண்டிருந்தனர். பண்டையநாள் புலவர்கள் பலரும் தேவர் என்ற பெயரைப் பட்டப்பெயராகக் கொண்டிருந்தனர். டெல்டா மற்றும் கோயமுத்தூர் பகுதிகளிலும் தென்மாவட்டங்கள் சிலவற்றிலும் அகம்படியர்களுக்குத் தேவர் என்ற பட்டப்பெயர் பெருவாரியாக நிலவி வருகிறது.

**நாயக்கன்:** நாயக்கன் என்பது அரசன், தலைவன், பாளையக்காரன் என்பதைக் குறிப்பதாகவும், செட்டு என்றால் வணிகம், செட்டித் தொழில் **செட்டிமை** எனப்படும் என்பார் மு.சி.பூர்ணலிங்கம்பிள்ளை (தமிழர் தனித்தமிழ் மாத வெளியீடு 1926 பிப்ரவரி மார்ச்). சேனைகளின் தலைவனான தமிழன் நாயன் எனவும், நாயகன் எனவும், (தெலுங்கில் நாயுடு என்றும்) சேரநாட்டான் நாயன் (நாயர்) என்றும் பெயர் பெற்றான் என்பார் திரு.மா.இராசமாணிக்கனார் (தமிழ் இனம் - செந்தமிழ் இதழ் (சூன்-சூலை 1956).

சேலம் மாவட்டம் ஆத்தூர் பகுதியில் அகம்படியர் துளுவ வெள்ளாளர்களுக்கு நாயக்கர் பட்டம் உண்டு என்பதை திரு.துரை ஜெகன்நாதன் அவர்கள் தனது “ஆரியதிராவிடமும் அழிந்துபோன தமிழ்ச்சங்கங்களும்” நூலில் குறிப்பிடுகிறார். சேர அரசமரபில் சங்க காலத்திற்குப் பின்னர் மைசூர் மாநிலம் சென்றடைந்த சேரர்கள் நாயக்கர் எனும் பட்டத்தைச் சூடிக்கொண்டனர் என்பார் வழக்கறிஞர் திரு.புலமை வேங்கடாசம் அவர்கள். மேலும் பண்டைய காலத்தில் வணிகத்தில் சிறந்தவர்களுக்கு எட்டிப்பட்டம் அரசனால் வழங்கப்பட்டது அது பின்னர் செட்டி என்று மாறியது என்பார். தீவாந்திரங்களுக்கு கப்பலில் பலவகைச்சரக்குகள் கொண்டுபோய் செட்டுத்தொழில் செய்து வந்த காரணத்தினால் செட்டியர் என்னும் பட்டம்பெற்றுப் பலபிரிவாயினார்கள் என்று குறிப்பிடும் திருக்களர் மு.சுவாமிநாத உபாத்தியாயர், செக்கார் என்போர் உள்நாடுகளில் பலவிதச் செட்டுத் தொழில்கள் செய்த காரணத்தால் செட்டியர் என்னும் பட்டத்தையும், வேளாளரில் சித்தக்காட்டார், சோழபுரத்தார் என்போர் செட்டுத்தொழில்கள் செய்தக் காரணத்தினால் வேளாளச்செட்டியார் என்னும் பட்டம் பெற்று வெள்ளாஞ் செட்டியார் என்று வழங்குப்பெறுவதராயினார் என்கிறார். மேலும் அவர், அகம்படியரில் சிலரும், வல்லம்பரில் சிலரும், அம்பலவரில் சிலரும் செட்டுத்தொழில் செய்தகாரணத்தினால் செட்டியார் என்னும் பட்டமும் பெற்றார்கள் (சைவ சமயமும் தமிழ்ப்பாடையும்).

சங்ககாலத்தில் வணிகராவோர், செட்டி, எட்டி, காவிதி எனப் படிப்படியாக உயரிய பட்டங்கள் வழங்கப்பட்டிருந்தன. செட்டு என்பதற்கு கட்டுதிட்டம், வணிகக்குழு என்றும், எட்டி, காவிதி போன்ற பன்னாட்டு வாணிகம், கடல்வணிகம் சுட்டியப் பட்டங்கள் வழக்கிழந்தன என்றும் சுட்டிக்காட்டும் பன்மொழிப்புலவர் திரு.கா.அப்பாத்துரையார் (கொங்குத்தமிழக வரலாறு), படைத்துறை, கப்பல்துறை, கப்பல் படைத்துறை ஆகியவற்றின் சார்பில் படையாட்சி (வன்னிய மரபினர்) முதலி (படைமுதலி - Lieutenant), நாய்கர் (நாய்கன், மாநாய்கன் கப்பல் தலைவன்) (நாவாய் - கப்பல்) நாயர் (ஐதர்அலி காலம் வரை கேரளப்படைவீர மரபினர்) நாயுடு (அவுரங்சீப்காலம் வரை) ஆந்திப்படை வீரர் என்பதையும் பதிவுசெய்கிறார்.

**பல்லவராயர் :** பல்லவராயர், பல்லவரையர் என்ற பட்டத்தை அகமுடையார்கள் சூடிக்கொள்கின்றனர். இப்பெயர்களின்

தோற்றம் பற்றிக் "கல்வெட்டில் அரையன் அமைப்புச் சிறப்புப் பெயர்கள்" என்ற ஆய்வுக்கட்டுரையில் திரு.ந.அருள்மொழி (Aayuagam an International Journal of multidisciplinary Research / Volume 5 / Issue 6 / June *17)* *கீழ்க்கண்டவாறு பதிவு செய்கிறார்.*

*அரசு அதிகாரிகள், அரசு தலைமை அதிகாரிகளைச் சிறப்பிக்க, வழங்கப்பட்டவையாக அரையன், ராயன், பேரரரையன் போன்ற பட்டங்கள் இனம் காணப்படுகிறது. மக்கள் சுட்டும் உயர் அடையாளமாக இப்பட்டங்கள் அமைந்துள்ளன. பல்லவரையன், பல்லவதரையன் போன்ற பட்டங்கள் பல்லவ மன்னரைச் சிறப்பித்து அரசு அதிகாரிகளுக்கு வழங்கப்பட்டுள்ளன.*

*ஈழத்தரையன், சீனத்தரையன் ஆகிய பட்டங்கள் ஈழம், சீனம் போன்ற நாடுகளை வெற்றி பெற வேண்டும் என்ற வேட்கையின் காரணமாக, அரசு அதிகாரிகளுக்கு வழங்கப்பட்ட பட்டங்களாகும். பாண்டியர் குடியைச் சிறப்பிக்கும் நோக்கில் மீனவதரையன் பட்டம் வழங்கப்பெற்றுள்ளது. குறுநில வேந்தர்கள், சிறந்த அரசு அதிகாரிகள், சிறந்த உள்ளூர் தலைவர்கள் அரையன் பட்டம் கொடுத்துச் சிறப்பிக்கப் பெற்றுள்ளனர். அரையன் என்பதற்கு அரசமரபில் தோன்றியவனாகவோ அல்லது அரசியலில் பெருந்தலைவனாகவோ, ஊராட்சியில் மதிக்கப்பட்டவனாகவோ இருப்பானுக்குரிய சிறப்புப்பெயர் எனக் கல்வெட்டுக்கலைச்சொல் அகரமுதலி விளக்கம் தருகிறது.*

*அரையன் என்ற பட்டம் ராயன் எனவும் சூட்டப்பெறுகின்றது. ராஜர் என்ற வடமொழிச் சொல்லின் திரிபே ராயர் எனக்கூறப்படுவதாக திரு.துரை அரங்கசாமி குறிப்பிடுகிறார். பழைய அரச மரபினரைச் சிறப்பித்துப் பட்டங்கள் வழங்கிய மரபைக் கல்வெட்டுகளில் காணமுடிகிறது. பல்லவரையன் பல்லவதரையன் போன்ற பட்டங்கள் அரசாண்ட முன்னோர்களான பல்லவர்களைச் சிறப்பித்துப் பாண்டிய மன்னர்களால் அதிகாரிகளுக்கு வழங்கப்பட்ட பட்டங்களாகும் என்கிறார் திரு.ந.அருள்மொழி அவர்கள்.*

*பல்லவர்களைச் சிறப்பித்து பல்லவத்தரையன், என்றபட்டமும் சேரர்களைச் சிறப்பித்து வில்லவதரையன் என்ற பட்டமும், பாண்டியர்களைச் சிறப்பித்து மீனவதரையன் என்ற பட்டமும் வழங்கப்பட்டதை அறிய முடிகிறது. முந்தயபக்கங்களில் பெருமாள்நம்பி பல்லவரையன் சோழர் காலத்தில் "அகம்படிநியாயம்" என்ற படைப்பிரிவிற்கு*

தலைமை ஏற்றதையும், புதுக்கோட்டையில் தங்களை அகம்படியவேளாளர் என்று அழைத்துக்கொண்ட பல்லவராயர் மரபினர் அரசாண்டதையும், நற்றன்பெரியான் வீரம் அழகிய பல்லவரையன் என்பவனைப்பற்றிப் புதுக்கோட்டைக் கல்வெட்டுகள் குறிப்பிடுவதும் விளக்கப்பட்டுள்ளது. குளித்தலை அருகில் உள்ள திருவாட்போக்கி என அழைக்கப்பட்ட ஊரில் உள்ள இரத்தினகிரிநாதர் கோயில் திருப்பணிசெய்த கொங்கரைக்கொண்ட பல்லவரையன் என்ற அகம்படியரைப்பற்றி 1915 வரை மெட்ராஸ் மாகாணத்தில் சேகரிக்கப்பட்ட புவிப்பரப்பு அடிப்படையிலான கல்வெட்டுகள் (A topographical list of the Inscriptions of the madras Presidency Collected till 1915) என்ற நூல் (பக்கம் 1519) குறிப்பிடுகிறது.

உடையான் சுந்தரபாண்டிய பல்லவராயன் என்ற அகப்பரிவார முதலிபற்றி விருதுநகர் மாவட்டக் கல்வெட்டுகள் தொகுதி இரண்டு (பக்கம்: 191) குறிப்பிடுகிறது. நிர்வாகப்பணியில் முக்கியப் பங்கேற்ற அதிகாரிகளுக்கு பாண்டிய அரசர்கள் காலிங்கராயன், மழவராயன், பல்லவராயன், முனையதரையன் ஆகிய பட்டப்பெயர்கள் பாண்டியரால் கொடுக்கப்பட்டதையும், அரசன் தன் ஆணைகளை இந்த அதிகாரிகள் மூலம் செயல்படுத்தியதையும் தமிழ்நாட்டு வரலாறு பாண்டியப் பெருவேந்தர்காலம் நூல் பதிவுசெய்கிறது.

**தொண்டைமான் :** தொண்டை மண்டலத்தை ஆட்சி செய்த மன்னர்கள், சிற்றரசர்கள், தளபதிகள், தொண்டைமான்கள் எனப்பட்டனர். புதுக்கோட்டையில் தொண்டைமான் மரபினர் ஆட்சி ஏற்படுவதற்கு முன்னர் சுமார் 300 ஆண்டுகட்கு முன்பு அறந்தாங்கி தொண்டைமான்கள் அப்பகுதியில் தோற்றம் கொண்டிருந்ததாக அறிய முடிகிறது. மதுரை மாவட்ட கல்வெட்டுத்தொகுதி இரண்டு (கல்வெட்டு தொடர் எண்.210/2003) மதுரை மாவட்டம் பேரையூர் அருகில் மேலத்திருமாணிக்கத்தில் உள்ள 13ஆம் நூற்றாண்டு பாண்டியர் காலக்கல்வெட்டு, நாட்டாயதராமநல்லூர் தேவர் தொண்டைமானார் அகம்படியர் பல்லவரையன் என்பவர் அவ்வூர் திருக்கோயிலுக்கு விளக்கெரிக்கப் பசுதானம் செய்தது பற்றிப் பதிவு செய்கிறது.

மேற்குறிப்பிட்ட பட்டங்கள் மட்டுமின்றி எஜமானார் என்ற பட்டம் தருமபுரிப் பகுதியிலும், இராவ், ரெட்டி என்ற பட்டங்கள் ஆந்திர மற்றும் தெலுங்கானாப் பகுதிகளில் வாழும் அகமுடையார்கள் சூடிக்கொள்கின்றனர். மேலும்

வெற்றிலைக்காரர், கவுண்டர், தலைவன், கௌடா, வர்மா வானவன், வாணாதிராயர், பாண்டியன், படையாட்சி போன்ற பட்டங்களை அகம்படியர்கள் கொண்டிருந்தனர். தந்திரியார் என்ற பட்டத்தைத் தென்காசிப்பகுதியில் உள்ள அகம்படியர்கள் சூடிக்கொள்கின்றனர். தங்களின் அதிகார நிலைப்பாட்டுக்காக, நாட்டார் என்று துளுவ வேளாளர்கள் அறியப்பட்டதைச் சென்னை நகரம் தொடர்புடைய நூல் தெரிவிக்கிறது. (Madras : The Growth of a colonial city in India 1780-1840 by Susan Margaret Neild). திரு.ராம.மா.இராமையாபிள்ளை அவர்களின் துளுவ வேளாளர் வரலாறு, தேசிகர், சிவாச்சாரியார், ராயர், பிள்ளை, நாயக்கர், நாயகர், செட்டி, குருக்கள் ஆசாரி போன்ற பட்டங்களைக் குறிப்பிடுகிறது. மேலும் அந்நூல் பழனிப்பட்டயத்தின் வழி துளுவ வேளாளர், துளுவகாராளர், துளுவராயர், துளுவ நாயக்கர், துளுவ வல்லவர் ஆகியோர்களைக் குறிப்பிட்டு அவர்களுக்குச் சொந்தமான மடம்பற்றி விளக்குவதாக மேலேகண்ட நூலின் ஆசிரியர் தெரிவிக்கிறார்.

கோவை மாவட்ட அகமுடையார் குலமரபுரம், பண்பாடும் என்ற ஆய்வேட்டின் ஆசிரியர் வெ.அ.நாகரத்தினம் அவர்கள் கொங்கு நாட்டில், மணியக்காரன், செட்டியார், கொங்கன், குடகன், வேந்தன், மலையான், புலவர், உதியன், வாத்தியார், கணக்கன் ஆகிய பட்டங்களை அகமுடையார் கொண்டிருந்ததாகப் பதிவு செய்கிறார். அத்துடன், கோவைப்பகுதியில் வெற்றிலைப் பயிர்செய்யும் தொழிலை கொண்டு கொடிக்கால் வேளாண்மையில் முன்னேற்றம் கண்டனர். இத்தொழிலில் இவர்கள் சிறப்பாகக் காணப்படுவதால் வெற்றிலைக்காரர், தோட்டக்காரர் என்று இவர்கள் அழைக்கப்பட்டனர் என்றும் பதிவுசெய்கிறார்.

தற்போது கர்நாடக மாநிலம் பெங்களூர், மைசூர், பெல்லாரி போன்ற பகுதிகளில் அகமுடையார் இராவ் என்ற பட்டத்துடன் வாழ்ந்து வருகின்றனர். சென்னை பச்சையப்பன் கல்லூரி முன்னாள் முதல்வர் கமலாகர்ராவ் அவர்களுள் ஒருவர் என்று மறையூர் இரா.வீராச்சாமி அகமுடையார் தனது அகமரபும் ஆதிக்குடியும் நூலில் குறிப்பிடுகிறார். அதேபோல ஆந்திர மாநிலம் சித்தூர், திருப்பதி, பலமேரி மாவட்டங்களில் அகமுடைய ரெட்டி என அகமுடையார்கள் ரெட்டிப்பட்டத்தைப் பயன்படுத்துவதையும் இவர் சுட்டிக்காட்டுகிறார்.

பேராசிரியர் திரு.சுப்புரெட்டியாரும் தனது நினைவுக்குமிழிகள் நூலில் அகமுடையார் இராவ் பட்டத்தைச் சூடிக்கொள்வதை உறுதிப்படுத்துகிறார். இதில் பல பட்டங்கள் வழக்கொழிந்து தற்போது, முதலியார், உடையார், தேவர், சேர்வை, பிள்ளை, நாயக்கர், தேசிகர், செட்டியார் போன்ற பட்டங்கள் மட்டுமே வழக்கில் நிலவுகிறது.

தந்தைபெயர் பிள்ளைக்கு பட்டமாவதுபோலச் சமுதாய ஆட்சித்துறைகளிலும் சிறப்பு வாய்ந்தவர்க்கு மன்னர் தம்பெயர், மரபுப்பெயர், விருதுப்பெயர் ஆகியவற்றை பட்டமாக அளித்தனர் என்று குறிப்பிடும் பன்மொழிப்புலவர் திரு.கா.அப்பாத்துரையார் அவர்கள் (கொங்குத்தமிழக வரலாறு) மன்னர்மரபினரேயன்று மன்னரை வென்ற பிறமன்னரும், அவர்களின் படைத்தலைவரும், துணைவரும், வெல்லப்பட்டவர் பெயர்களை விருதுப்பெயராக ஏற்றனர் என்றும் பதிவுசெய்கிறார்.

இதற்கு உதாரணமாக பல்லவரும், கலிங்கரும் அவர்களை வென்ற அரசரும் படைத்தலைவர்களும் அவர்களால் பட்டமளிக்கப்பட்டவரும், ஒருங்கே பல்லவராயர், காலிங்கராயர் போன்ற பட்டங்களைத்தாங்கினர் என்றும் பதிவுசெய்கிறார்.

★★★

# 6.
# அகம்படியாரில் காணப்படும் அரசமரபினர்கள்

"அகமுடையர், துளுவவேளாளர் ஆகியோர் சிற்றரசர்களாகவும் (மலையமான்கள், வாணகோவரையர்), தளபதிகள் மற்றும் அரசாங்க உயர் அதிகாரிகளாகவும் இருந்தனர். இந்நிலை விஜயநகர துளுவவம்ச மன்னர்களின் காலத்திலும் தொடர்ந்தது".

டாக்டர் இல.தியாகராஜன்,

வேட்டவலம் வரலாறு (பக்கம் 93).

**மாவலிவாணர்**

"மாவலி ஒரு கொடிய அரக்கன் என்றும், திருமாலின் எதிரி என்றும் திருமாலின் வாமன அவதாரத்தால் கொன்றொழிக்கப்பட்டவன் என்றும் பாகவத புராணம் கூறுகிறது. ஆயினும் வியத்தகு முறையில் திருமால் பக்தர்களேயான, திருவாங்கூர் கொச்சி அரசர்கள் அணிமைக்காலம் வரை தம்மை, மாவலியின் மரபினர் என்று கூறுவதிலேயே பெருமை கொண்டுள்ளனர். இதுமட்டுமோ?, மலையாள நாட்டு பெருமக்கள் மாவலியின் நல்லாட்சியின் நினைவாகவே தம் தேசிய சமுதாய விழாவாகிய திருவோணத்தை ஆண்டுதோறும் இன்னும் கொண்டாடிவருகின்றனர். தென்நாடெங்கும் ஒரே மொழி நாடாகக் கொண்டு ஆண்டபேரரசர் என்றும் அவனைக் குறிக்கின்றனர். மலையாளநாடு மட்டுமின்றி பண்டைய தமிழகம்

*முழுவதுமே இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இவ்விழாவைக் கொண்டாடியதாக அறிகின்றோம். மணிமேகலையில் கிள்ளிவளவனின் பட்டத்தரசியான சீர்த்தியும், தஞ்சைவாணன் கோவையில் அதன் பாட்டுடைத் தலைவனும் மாவலி மரபினரே என்று காண்கிறோம். மற்றும் மாவலியின் மகன் வாணன் பெயரால் அவன் மரபினர் வரலாற்றில் தம்மை வாணன் என்றே குறித்துக் கொள்கின்றனர். அவர்கள் மாவலியைப் போல என்றும் பேரரசனாக வாழாவிட்டாலும் அந்த எண்ணத்தை, ஏழேழு தலைமுறைகளாக மறக்கவில்லை. ஏனெனில் வாணர் மரபின் குடிகளும், கிளைக்குடிகளும், வல்லமை வாய்ந்த சிற்றரசர்களாக தமிழகத்திலும், தென்னாட்டிலும் பல, பல திசைகளிலும் சங்ககாலம் முதல் பிரிட்டிஷ் வாணிகக்குழு ஆட்சிக்காலம் வரை இரண்டாயிரம் ஆண்டு இடையறா ஆட்சி நடத்தினர்.*

*திரு.கா.அப்பாதுரை,*

*தென்னாட்டுப்போர்களங்கள் : (பக்கம் 16,17).*

*மஹாபலிவாணர், வாணராயர், மாவலிவாணர், வாணதிராயர், வாணகோவரையர், வாணன்,* (Banas) *போன்ற வேறுபட்ட வடிவங்களில் வழங்கப்படும் பெயர்கள் மஹாபலி மன்னனின் வம்சத்தில் தோன்றியவர் என்று பொருள்படும் அரசமரபைக் குறிப்பதாகும். அவ்வாறு வழங்கும் அரசமரபுப் பற்றி வரலாற்றுத் தரவுகளில் குறிப்பிடப்படும் செய்திகள் நிரம்ப உள்ளன. அவற்றில் கல்வெட்டு ஆய்வாளர் திரு.சுந்தரேசவாண்டையார் அவர்கள் தனது கல்வெட்டு விளக்க உரை எனும் நூலில் (பக்கம்: 108) வாணர் என்போர் வடுகவழிப் பன்னீராயிரத்தை ஆண்ட அரசக்குடியினராவர், மணிமேகலையில் குறிக்கப்பெற்றுள்ள கிள்ளிவளவன் மனைவியாகிய சீர்த்தி என்பவள் இவ்வாணர் குலத்தினள் ஆவள். இதனால் இக்குலத்தின் தொன்மை விளங்கும்.*

*பல்லவர்கள் காலத்தில் இவர்கள், அவர்களுக்கு அடங்கிய சிற்றரசர்களாய் இருந்து வந்தனர். கி.பி.888இல் இவர்கள் சுயேச்சை பெற்றனர். மூன்றாம் இராசராச சோழனுடைய மனைவியும் இக்குலத்தினனேயாவள், 14ஆம் நூற்றாண்டில் இவர்களது ஒரு பகுதியினர் மதுரைக்கு வந்திருந்தனர். தஞ்சைவாணன் கோவையில் பாட்டுடைத்தலைவனான “தஞ்சைவாணன் இக்குலத்தினனேயாவன்” என்று பதிவு செய்கிறார்.*

திருமதி.ஆ.பத்மாவதி, டாக்டர் திரு.இரா.நாகசாமி, இவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு தமிழக வரலாற்றுப்பேரவை வெளியீடான "தொல்லியல் கருத்தரங்கு" தொகுதி 1 இல் (பக்கம்: 87) "ஆரூரின் அறிய கல்வெட்டு" எனும் தலைப்பில் கீழ்க்கண்டவாறு மாபலி வாணதிராயன் மரபு வழிப்பற்றிய ஒரு செய்தி குறிக்கப்பெற்றுள்ளது.

"மனுவின் சரிதம்" (மனுநீதிச்சோழன்) பற்றிப் பல்வேறு நூல்கள் விரித்துரைப்பினும், இவை அனைத்திலும் கூறப்படாத பல புதிய செய்திகள் திருவாரூரில் உள்ள ஒரு கல்வெட்டில் காணப்படுகிறது. மனுவின் வரலாற்றைப் பேசும் இக்கல்வெட்டு விக்கிரம சோழனால் வெட்டப்பட்டதாகும்.

ஆரூர் இறைவனே இம்மன்னனது வரலாறு கூறுவது போன்று வெட்டப்பட்டுள்ளது. இதில் மனுவின் (மனுநீதிச்சோழன்) மகன், பிரியவிருத்தன் என்றும், அவனது அமைச்சன் "இங்கநாட்டு பாலையூர் உபயகுலாமலன்" என்றும் குறிக்கப்பட்டுள்ளது. இறைவனின் திருவருள் பெற்று உயிர்த்து எழுந்த அமைச்சன், உபயகுலாமலனும், மன்னன் மனுவும் தம் இறுதிக்காலத்தில் தபசு மேற்கொண்டதாகவும், அப்போது பிரியவிருத்தன் அமைச்சரின் மகன் சூரியனின் துணையுடன் ஆட்சி மேற்கொண்டதாவும் கூறுகின்றது.

உபயகுலாமலனின் வம்சத்தில் தோன்றிய சந்திரசேகரன் ஆதிவிடங்கனான குலோத்துங்கச்சோழ மாபலிவாணாதிராயன் என்பவன் உயிர் வாழ்ந்ததாகவும், அவனுக்கு விக்கிரம சோழன் திருவாரூரில் மாளிகையும், சில பரிசுகளையும் கொடுத்தான் என்பதை மேலே குறிப்பிடும் கல்வெட்டு விவரிக்கிறது. ஆகவே மாவலி வாணதிராய அரசமரபு பல்வேறு அரசர்களோடு தொடர்புடையதாக விளங்கியதை அறியமுடிகிறது.

சங்க காலத்தில் தனியரசு செலுத்தி வந்த வாணர்கள் பல்லவருடைய ஆட்சிக்காலத்தில் அவர்கட்கு திரைசெலுத்திக்கொண்டு குறுநில மன்னர்களாய் வாழ்ந்தனர். பாலாற்றுக்கு வடக்கே சித்தூர் மாவட்டம் வரையில் அமைந்ததும், புங்கனூர், காளத்தி என்ற ஊர்களை எல்லையாகக் கொண்டதுமான நிலப்பகுதியைச் சங்ககாலம் முதல் ஆண்டுவந்த மன்னர் மரபினர் வாணர்கள் என்று "சோழர் வரலாறு" நூலில் பேராசிரியர் சி.கோவிந்தராசனார், முனைவர் கோ.தெய்வநாயகம் ஆகியோர் குறிப்பிடுகின்றனர்.

நம் வரலாற்றாராய்ச்சி ஒளியோ, நமக்கு இன்று அழியாது மீந்துள்ள தமிழிலக்கிய ஒளியோ சென்றெட்டாத தொல்பழங்காலத்தில் மாவலி தென்னாடெங்கும் ஒரு குடையின்கீழ் அரசாண்ட பேரரசனாயிருந்திருக்கவேண்டும் என்பதை வரலாற்று தடையங்கள் காட்டுகின்றன. ஆனால் புராணமரபின் மாயவண்ணம், இவ்வுண்மைத் தடத்தின் மீது ஆராய்ச்சியாளர் கண்ணொளிக்கூடப்பரவாமல் தடுத்து வருகின்றன என்று தம் ஆதங்கத்தை "தென்னாட்டுப் போர்க்களங்கள்" நூலில் பன்மொழிப்புலவர் திரு.கா.அப்பாத்துரை அவர்கள் பதிவு செய்கிறார்.

இவ்வாணன் பற்றிப் பிராபவ ஆண்டு ஆவணி மாதம் 1906 இன் செந்தமிழ் இதழ் இவ்வாறு குறிப்பிடுகிறது. "இவர்கள் மதுரைக்கடுத்த தஞ்சக்கூர் என்னுமிடத்தை அரசாண்ட சிற்றறசனென்றும், மதுரை திருநெல்வேலிகளையாண்ட பாண்டியர்களுக்கு மந்திரியாயும், சாமந்தனாயுமிருந்தவனென்றும், இவர் பெயராலும் இவனைப்பற்றி ஆங்காங்குச் சொல்லியிருத்தலாலும் தெரியவருகிறது என்றும் வாணவம்சத்தான் முன்னோர்கள் கி.பி.5வது நூற்றாண்டு முதல் வடுகவழி மேற்குப்பாகத்தையாண்டு வந்தார்கள். இவர்கள், தாம் மகாபலி சக்கரவர்த்தியின் பெயரனான பாணாசுரன், வழித்தோன்றியவர்களென்றும், பரமேச்சுவரனால் தன்னுடைய வாயில் காப்பாளராக்கப் பெற்றவர்களென்றும் இவர்கள் தம் மெய் கீர்த்திகளில் குறிப்பிட்டுக்கொள்வதாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

வல்லாளம் அல்லது வல்லம் என்பது வாணர்களின் தலைநகரமே யாகும் என்று குறிப்பிடும் திரு.கா.அப்பாத்துரை அவர்கள் (தென்னாட்டுப்போர்க்களங்கள்), இது இன்றைய வடஆர்க்காட்டு மாவட்டத்தில் குடியாத்தம் வட்டத்தைச் சார்ந்த திருவலம் என்னும் ஊரே என்று அறியப்படுகிறது என்றும் குறிப்பிடுகிறார். மேலும், அவர் தொண்டைநாட்டில் பல்லவர் மேலுரிமையை ஏற்று வாணகப்பாடி நாட்டையாண்ட வாணர்கள் என்று குறிப்பிடுகிறார்.

மேலும் தஞ்சைவாணன் கோவையில் இப்பிரபுவை, வையைநாடன், வழுதியர்நாமம் வளர்க்கின்ற வாணன், மீனவர் தஞ்செங்கோன்முறைமை செலுத்திய வாணன், மாவலி வாணன், மல்லையம் போர் வென்ற வாணன், வல்லத்தமர் வென்ற வாணன், தென்னன் தன்னைப்பணிந்து குற்றேவல் செய்யாது

*சமர்க்கெழுந்த மண்ணைப் புறங்கண்ட வாணன், கன்னடர் மண்கொண்ட வாணன், வேளாண்மரபு விளங்கிய வாணன் என்று பலவாறு புகழப்பட்டுள்ளதையும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.*

*திரு.சொ.சாந்தலிங்கம் அவர்கள் தனது குடுமியான் மலை நூலில் (பக்கம் 12) வாணாதிராயர்கள் பாண்டியர்களுக்கு அடங்கிய சிற்றரசர்களாக பதின்மூன்றாம் நூற்றாண்டில் கோனாடு, கேரள சிங்கவளநாடு ஆகிய பகுதிகளையாண்டுள்ளதையும் குறிப்பிடுகிறார்.*

*முதலாம் மாறவர்மன் குலசேகரபாண்டியன் காலத்தில் கோனாட்டுப்பகுதிகளைக் குலசேகர மாவலி வாணராயன் என்பவர் ஆண்டதையும், கல்வெட்டுகளில் இவன் சமரகோலாகலன், புவனேகவீரன், மாவலி வாணாதிராயன், திருமாலிஞ்சோலை நின்றான், கருடகேதினன் போன்ற பட்டப்பெயர்கள் பூண்டிருந்ததையும் குறிப்பிடுகிறார். குடுமியான்மலைக் கல்வெட்டுகள் மூலம் இவர்கள் செல்வாக்கு பெற்று விளங்கியதையும், பாண்டியர்களை வென்று அரசு புரிந்ததையும் பதிவுசெய்கின்றார்.*

*மேலும் இவ்வாணர்களைப்பற்றி "புதுக்கோட்டைச் சமஸ்தான மானுவல்" தொகுதி இரண்டில் (பக்கம்: 728) அதன் ஆசிரியர் திரு.கே.கே.வெங்கட்ராம ஐயர், நான்காம் நூற்றாண்டிலிருந்து 16ஆம் நூற்றாண்டு வரை இவர்களைப்பற்றிய கல்வெட்டுக் குறிப்புகள் கிடைக்கின்றன என்றும், தெற்கே பாலாற்றிலிருந்து கிழக்கே காளஹஸ்தி வரையிலும் இவர்கள் தொடக்கத்தில் ஆண்டதாகவும், கடம்பர்கள், மேலைச்சாளுக்கியர்கள், பல்லவர்கள், சோழர்கள், பாண்டியர்கள் என்று பல்வேறு அரசர்களுக்கு உட்பட்டு ஆட்சிபுரிந்ததாகவும் குறிப்பிடுகிறார்.*

*அத்துடன் புதுக்கோட்டையில் வண்டாக் கோட்டையில் (வாணதிராயன் கோட்டை) இவ்வாணதிராயர்கள் கள்ளர் தலைவர்களின் துணைக்கொண்டு கோனாட்டு வேளாளர்களை எதிர்த்ததாகவும் குறிப்பிடுகிறார். மெக்கன்சி ஓலைச்சுவடியில் தொகுதி ஒன்றில் கிழக்கு கடற்கரையில் மயிலாப்பூர் தொடங்கி கடலூர் வரையிலான பகுதியில் சதுரங்க பட்டினத்தைச் சேர்ந்த சதுரங்கா, பாலரங்க என்ற அசூரர்கள் காடுகளை அழித்து நாடாக்கியதையும், இந்த அசூரர்கள் மாவலிச்சக்கரவர்த்தியின் வழித்தோன்றல்கள் என்றும் பக்கம்: 74 இல் பதிவுசெய்யப்பட்டுள்ளது. "மாமல்லை" என்ற நூலில்*

முனைவர் திரு.இரா.நாகசாமி அவர்கள் "இங்கு (மஹாபலிபுரம்) மஹாபலியின் கதையை அடிப்படையாகக்கொண்டு ஒரு குகையில் திருவிக்ரம அவதாரம் சிற்பமாகக் செதுக்கப்பட்டுள்ளது. இதைக்கொண்டே மாமல்லப்புரத்தை மக்கள் மஹாபலிபுரம் என்று அழைத்தனர்" என்று பதிவு செய்கிறார்.

பாண்டியர்க்கடங்கிய சிற்றரசர்களாக விளங்கிய வாணாதிராயர்கள், பாண்டியர்களைத்தாக்கித் திருவில்லிப்புத்தூருக்குத் தெற்கே அவர்களை விரட்டித் தனியாட்சியை நிறுவினர். இதைத் திருவில்லிபுத்தூர் கல்வெட்டொன்று, "மகாபணிவாணதரையர் சீர்மையான முதரை மண்டலம்" எனக் கூறுவதாலறியலாம். இவர்கள் தங்களை "பாண்டியகுலந்தன்" என்று கூறிக்கொண்டனர் இது நெக்கோணம் கல்வெட்டிலிருந்து புலப்படுவதாக தமிழ்நாட்டு வரலாறு, பாண்டியப்பெருவேந்தர் காலம் நூல் பதிவுசெய்கிறது.

தமிழகத்தில் பாண்டியப் பேரரசு வீழ்ச்சியுற்றப்பின் சோணாட்டிலும் தொண்டைநாட்டிலும் சம்புவராயர் என்ற சிற்றரசர் ஆற்றலுடன் விளங்கியது போலவே வடபாண்டி நாட்டில் வாணாதிராயர் என்ற வாணர்குலச் சிற்றரசர் ஆற்றலுடையவர்களாயிருந்தனர். முஸ்லீம் ஆட்சியாளர் அகற்றப்பட்டபின்கூட விசயநகர ஆட்சியின் கீழ் மதுரையிலும் அதனைச்சூழ்ந்த இடங்களிலும் அவர்களே உயர்பதவியிலிருந்தனர் என்கிறார் திரு.கா.அப்பாத்துரை அவர்கள் தனது "தென்னாட்டுப் போர்க்களங்கள்" நூலில். மேலும் அவர், மதுரை முஸ்லீம் ஆட்சிக்கு முன்னும், பின்னும் மதுரையிலும், மதுரையைச் சூழ்ந்த பகுதியிலும் சுந்தரத்தோள் மாவலிவாணதிராயன் என்பவன் பாண்டிய மரபுடன் தொடர்புகொண்டு அம்மரபுரிமை கோரியிருந்தான். 16ஆம் நூற்றாண்டில் இராமநாதபுரம் மாவட்டத்தில் திருப்புல்லாணி, காளையார் கோவில் தேவிப்பட்டிணம் ஆகிய பகுதிகளில் வாணதிராயர் ஆட்சிபுரிந்தனர் அக்காலத்திற்கு முன் அவர்கள் பாளைய முறையில் சேர்க்கப்பட்டிருந்தனர். கிருட்டிணப்ப நாயக்கனுக்குப்பின் மதுரை நாயக் மன்னனானவன் வீரப்பநாயக்கன் (1572-1595). முந்தய ஆட்சியில் தும்பிச்சிநாயகன் கிளர்ச்சி செய்தது போலவே அவன் காலத்தில் ஒருவாணாதிராய மரபினன் மதுரை ஆட்சியை மீறி எழுந்தான். மானாமதுரையிலும் காளையார் கோவிலிலும் கோட்டைக்கட்டித் தன்னை வலுப்படுத்திக்கொண்டான். அவற்றைச் சூழ்ந்த நாட்டுப்பகுதிகளைக் கைப்பற்றலானான். ஆனால் வீரப்பநாயக்கன்

தன்முழு ஆற்றலையும் தொடக்கத்திலேயே அவன்மீது செலுத்தி அவனை வென்றதுடன் அவன் பாளையத்தையே அவனிடமிருந்து பறித்தான். அவன் வென்ற பகுதிகளும் பாளையமும் நாயக்கர்களின் நேராட்சிப்பகுதிகளாயின. இதன் பின்னும் மதுரையடுத்த பொட்டைத்தஞ்சை என்ற நகரத்தில் ஒரு வாண அரசன் ஆண்டுவந்தான், இவனைப் பொய்யாமொழிப் புலவர் என்ற தமிழ்க் கவிஞர் தஞ்சைவாணன் கோவை என்ற சிறந்த தமிழிலக்கிய ஏட்டில் பாடியுள்ளார். இவன் சிறந்த வீரனாகவும் இருந்தான், தஞ்சைவாணன், பாண்டியர் மேலுரிமையை ஏற்றவன் என்பதாக திரு.கா.அப்பாத்துரை அவர்கள் பதிவு செய்கிறார்.

இந்த வாணர் (Banas) என்ற அரச வகுப்பினர் தங்களை அகம்படி, அகம்படியர் என்று அழைத்துக்கொண்டனர். இதனை கல்வெட்டுக்கள் மற்றும் செப்பேடுகள் உறுதி செய்கிறது. உசிலம்பட்டிக்கு அருகில் உள்ள ஆணையூர் கல்வெட்டு, எண்.27, தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை தொடர் எண்.352/2003 என்ற கல்வெட்டு பிள்ளை மகாவலிவாணதிராயர் அகம்படி முதலிகள் என்றும், "கொங்கு நாட்டு சமுதாய ஆவணங்கள்" நூலில் சுட்டிக்காட்டப்படும், "கணக்கன் கூட்டத்தார் பட்டயம்", வெட்டுமாவலி அகம்படியர் கதிர்முனை தீண்டாக்காரளர் என்று அகம்படியர்களை, வாணாதிராயர் மரபினராகக்குறிப்பிடுகிறது.

பாண்டிய மன்னர் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1216 1238) காலத்தில் திருநட்டப்பெருமாளான சுந்தரபாண்டிய வாணாவதரையர், அவனிநாராயணதேவரெனும் வழுதிநாராயணதேவர் சுந்தரபாண்டிய வாணதிராயர் என்ற பெயர்கொண்ட வாணதிராயர்களை, திரு.வேதாச்சலம் அவர்கள் தனது "பாண்டிய நாட்டில் வாணதிராயர்" என்ற நூலில் குறிப்பிடுகிறார் (பக்கம் 23,24,25). மதுரை, மேலூர், திருச்சி சாலையில் உள்ள அருவிமலைக் கல்வெட்டில் ஆனைமலை நாட்டு, அறுகைக் குன்றத்து அகப்பரிவார முதலிகளில் திருநட்டப் பெருமாளான சுந்தரபாண்டிய வாணவதரையர் என்று இவ்வாணதிராயர், அகப்பரிவாரத்து முதலியாகக் குறிக்கப்பெறுகிறார். இந்த திருநட்டப்பெருமாளான சுந்தரபாண்டிய வாணவதரையரின் மகன் வழுதிநாராயணத்தேவர் ஆவர். இவர்கள் பாண்டியரின் படைத்தலைவர்களாக இருந்துள்ளனர்.

அகம்படி / வாயில் காவலன் / அரண்மனைக் காவலன் என்று பொருள்படும். பிரதிஹாரீகிருத என்ற அடைமொழியை

மாவலிவாணர் தொடர்புடைய கல்வெட்டுகளில் அவர்களின் மெய்கீர்த்திகளில் கூறப்பட்டுள்ளது. அவ்வாறான கல்வெட்டினை "கல்வெட்டு விளக்க உரை" நூலில் வித்துவான் திரு.வை.சுந்தரேச வாண்டையார் குறிப்பிடுகிறார். இரண்டாம் நந்திவர்ம பல்லவமன்னர் காலத்து (கி.பி.717 முதல் 779) வடார்க்காடு, குடியாத்தம் தாலுக்காவில் நுகா என்னும் ஆற்றின் மேற்குக்கரையில் வல்லத்துக்கு வடகிழக்கே ஒருமைல் தூரத்தில் உள்ள கல்வெட்டில் இடம்பெரும் செய்தியை "பிரதிஹாரீகிருத, மஹாவலி குலோத்பவ" என்று திரு.சுந்தரேசவாண்டையார் மேலே குறிப்பிட்ட நூலில் பதிவுசெய்கிறார்.

படைவெட்டும் மகாபலிவம்சத்தவரான அகம்படிய மறவர் என்ற குறிப்பினை கல்வெட்டாய்வாளர் திரு.எஸ். இராமகிருஷ்ணன் (வரலாற்று நோக்கில் வர்மக்கலை கட்டுரை) குறிப்பிடுகிறார்.

திருக்கோயிலூர் மலையமான் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு கிளையினராக மிலாடராயர், வாணகோவரையர்/ வாணாதிராயர்கள் இருந்தனர் என்பதையும், இவர்களில் சிலர் அகம்படவன் எனவும், அதிகாரிகள், அகம்படிகள், அகம்படி முதலி என்று அழைக்கப்பட்டதையும், கல்வெட்டுகள் மூலம் அறிய முடிகிறது என்று கல்வெட்டாய்வாளர் டாக்டர் திரு.இல.தியாகராஜன் குறிப்பிடுகிறார். அத்துடன் இவர்களே அகமுடையார், அகமுடைய முதலியார் என்ற சாதிப்பிரிவினரின் முன்னோர்கள் எனலாம். சோழர்காலம் வரை செல்வாக்குடன் திகழ்ந்த வாணகோவரையர் குடும்பத்துக் குறுநில மன்னர்கள், அதிகாரிகள் அதன்பின் தங்கள் அரசியல் செல்வாக்கை இழந்து நில உடைமையாளர்கள் / நிலக்கிழார்கள் என்னும் நிலையை எய்தி, இப்பகுதியில் ஆங்காங்கு பாண்டியர், கோப்பெருஞ்சிங்கன், மற்றும் சம்புவராயர் ஆகிய மன்னர்களிடம் அதிகாரிகளாக / நாட்டார்களாகப் பணியாற்றியதைக் கல்வெட்டுகள் மூலம் அறிய முடிகிறது என்று பதிவு செய்கிறார்.

மொழிஞாயிறு ஞா.தேவநேயப்பாவாணர் அவர்கள் மாவலி என்பவன் பாரதக் காலத்திற்கு முற்பட்டு செங்கோலாட்சி செய்த மாபெருஞ் சேரவேந்தன். சேரநாட்டுத் தமிழரின்பின் அவர் வழியினரான மலையாளிகள், இன்றும் அவ்வேந்தனை ஆண்டுதோறும் நினைவு கூர்ந்து மகிழ்ச்சியாய்க் கொண்டாடி வருகின்றனர். பிராமணர் அவனை ஓர் அசூரனாக்கி அவன் திருமாலாற் கொல்லப்பட்டதாக் கதையுங்கட்டிவிட்டனர்.

மாவலியின் மகன் பிள்ளை பேர்த்தியான உழை, கண்ணபிரானின் மகன் பிள்ளை பேரனான அநிருத்தனை மணந்தான். மாவலியின் மரபில் வந்த சீர்த்தியை கோவலன் காலத்துக் கிள்ளிவளவன் மணந்தான். சோழநாட்டின் ஒரு பகுதியான நடுநாட்டை 14ஆம் நூற்றாண்டுவரை வாணகோவரையர்கள் என்னும் மாவலி மரபினர் சிற்றரசர்களாக இருந்து ஆண்டு வந்துள்ளனர் என்பதைத் தனது "தமிழர்களின் வரலாறு" பக்கம் 219இல் பதிவுசெய்கிறார்.

**புதுக்கோட்டை பல்லவராயர் :**

தற்போதைய புதுக்கோட்டை மாவட்டத்தில் கி.பி.12ஆம் நூற்றாண்டிலிருந்து அரசு செலுத்திய குருநில மன்னர் மரபினர். இவர்கள் தொடக்கத்தில் சோழர்களுக்கும் பின்பு பாண்டியர்களுக்கும் அடங்கிய சிற்றரசர்களாக விளங்கியுள்ளனர். கி.பி.14ஆம் நூற்றாண்டில் முழு அதிகாரம் பெற்ற அரசர்களாகத் தோற்றம் பெற்ற இவர்கள் பின்பு விஜயநகர ஆட்சிக்காலத்தில் அவர்களுக்கு உட்பட்ட சிற்றரசர்களாக விளங்கினர். இவர்கள் புதுக்கோட்டை மாவட்டத்தில் பெருங்களூர், வழுத்தூர், வைத்தூர், ஆதனக்கோட்டை, பொன்னமராவதி, கலசமங்கலம், திருக்கட்டளை, திருவரங்குளம், இரும்பாளி, குளத்தூர், கீரனூர் ஆகிய பகுதிகளை அரசுபுரிந்துள்ளனர்.

புதுக்கோட்டைப் பகுதிகளில் கல்வெட்டுகளில் குறிக்கப்பெறும் பல்வேறு பல்லவராயர் அரசுகளைப்பற்றித் தொல்லியல் அறிஞர் திரு.இரா.நாகசாமி அவர்கள், கல்வெட்டு இதழில் (இதழ் 6, இராட்சச ஆண்டு ஆடித்திங்கள் (பக்கம் 10,11) கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

அ) குன்னாண்டார் கோயில் சடாவர்மன் சுந்தரபாண்டியர் கல்வெட்டில் சேர நாராயணப் பல்லவராயன் என்பவனும்,

ஆ) ஆதனூர்க் கல்வெட்டில் சங்கரநாராயணான பல்லவராயனும்,

இ) ஒலியமங்கலத்தில் உள்ள கல்வெட்டில் பேராம்பூர் சேத்தன் சோமனான ஆய்ப்பாடி பல்லவராயனும்,

ஈ) திருக்கட்டளைக் கல்வெட்டில் சீரங்கன் பல்லவராயனும்,

உ) திருவரங்குளம் கோயில் கல்வெட்டு சிவந்தெழுந்தான் திருமலராசபல்லவராயன் என்பவன் வழுத்தூர் அரசனாகக் குறிக்கப்பெறுகிறான் என்று பதிவு செய்கிறார். அத்துடன்

இவ்வாறு குறிக்கப்பெற்ற பல்லராயர்கள் அண்ணன் தம்பி உறவினர்களாகவும், பெண்கொண்ட உறவினர்களாகவும் இருந்திருக்கின்றனர் என்பதையும் தொல்லியல் அறிஞர் டாக்டர் இரா.நாகசாமி குறிப்பிடுகிறார்.

மதுரை திருமலை நாயக்கர் காலத்தில் வாழ்ந்த சிவந்தெழுந்த பல்லவராயர் இப்பல்லவராயர் மரபின் இறுதி அரசராகக் குறிக்கப்பெறுகிறார். மல்லையூர் சிற்றம்பலக் கவிராயர் என்பவர் இந்தச் சிவந்தெழுந்த பல்லவராயன் மீது "சிவந்தெழுந்த பல்லராயன் உலா" என்ற இலக்கியத்தை செய்துள்ளார். இந்தச் சிவந்தெழுந்த பல்லவராயர் தன்னை சந்திக்கச் சொன்ன கிழவன் சேதுபதியை சந்திக்கத் தாமதப்படுத்தியதால் கொல்லப்பட்டு இந்த பல்லவராயன் மரபு முடிவுக்குக் கொண்டுவரப்பட்டதாக வரலாற்றாசிரியர் திரு.மீ.மனோகரன் அவர்கள் தனது "மருது பாண்டிய மன்னர்கள்" நூலில் குறிப்பிடுகிறார். மேலும் இந்த பல்லவராயர்களே வைத்தூரிலிருந்து வந்து கலசமங்கலம், சிங்கமங்கலம் ஆகிய சிற்றூர்களை இணைத்து அங்கு புதிதாகக் கோட்டைக்கட்டி அதற்குப் புதுக்கோட்டை எனப்பெயரிட்டு இன்றைய புதுக்கோட்டைக்கு அடிகோலினார் என்றும் பதிவு செய்கிறார்.

இந்த பல்லவராயர் அகம்படியர் மரபினர் என்பதைப் புதுக்கோட்டை சமஸ்தான மானுவல் ஆசிரியர் (A Manual of the Pudukkottai State – Volume 1) திரு.கே.ஆர்.வெங்கட்ராம ஐயர் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

அஞ்சூர் அகம்படியர்கள் தஞ்சை மாவட்டம் ஐய்யம் பேட்டைக்கு அருகிலுள்ள வைத்தூரிலிருந்து குடிபெயர்ந்து வைத்தூர், முட்டாம்பட்டி, எரையூர், வட்டனகுறிச்சி மற்றும் மெய்க்குடிப்பட்டியில் தங்கள் முன்னோர்களான பல்லவராயர் வழியினராகக் குடியேறியதாகவும் அவர்களின் முதல் குடியேற்றம் வைத்தூர் என்றும் குறிப்பிடுகிறார். பின்னாளில் இவர்கள் வைத்தூர் பல்லவராயர்கள் என்று அழைக்கப்பட்டனர்.

இந்த பல்லவராயர்களின் முன்னோர்கள் சேர்வை என்ற குறிப்பினை, அறிஞர்கள் திரு.இராபர்ட் சியூவல் மற்றும் திரு.நெல்சன் ஆகியோரின் கூற்றாக, அகம்படியர் மற்றும் அகம்படியரின் சேர்வைப்பட்டம் தொடர்பான "யார் இந்தச் சேர்வைக்காரர்கள்" என்ற தலைப்பில் "மருதுபாண்டிய மன்னர்கள்" நூலில் திரு.மீ.மனோகரன் குறிப்பிடுகிறார்.

புதுக்கோட்டை குடுமியான்மலை கோயிலுக்கு விளக்கெரிக்க கொடையும், சிவப்பிராமணர்களுக்கு 96 ஆடுகளும், மற்றும் 48 ஆடுகள், 13 பசுக்களைத் தானம் வழங்கி நரன்பெரியன் என்கிற வீரமழகிய பல்லவராயன் என்ற அகம்படி மறமுதலி ஒருவரைப்பற்றிப் புதுக்கோட்டையின் பழங்கால நகரமைப்பு (Studies in the History of Ancient Townships of Pudukkottai by R.Tirumalai I.A.S.) என்ற ஆங்கில நூலில் அதன் ஆசிரியர் திரு.ஆர்.திருமலை அய்.ஏ.எஸ். அவர்கள் குறிப்பிடுகிறார்.

"தம்பிக்கு நல்லான்கோட்டை ஸ்ரீரெங்கசாமித்தேவர் அவர்களின் ஜீவியசரித்திரம்" எனும் நூலில் (பக்கம்: 60) இப்பல்லவராயர்களைப் பற்றிக் கீழ்க்கண்டவாறு குறிக்கப்பெறுகிறது. "பூவைசிய அகமுடைய வேளாளர் மரபினில் உதித்த பல்லவராய தேவர், திருவெண்ணை நல்லூரிலிருந்து வந்து புதுக்கோட்டையை அரசு புரிந்தான். அதனால் இம்மரபினர் சைவமதத்திற்கும் பாண்டியருக்கும் தொண்டுபுரிந்து வந்திருக்கின்றனர்."

"அரையநாட்டு வரலாறு" எனும் நூலில் அதன் ஆசிரியர் திரு.நந்தர் அவர்கள் இப்பல்லவராயர்கள் "அகம்படிய வேளாளர் மரபினர்" என்று அந்நூலில் பக்கம் 62இல் கீழ்க்கண்டவாறு பதிவுசெய்கின்றனர்.

"புதுக்கோட்டை மாவட்டம் குடுமியான் மலையில் கி.பி.1510இல் அமைந்த கல்வெட்டு அகம்படிய வேளாள மரபிலே வந்த வழுத்தூர் அரசு திராவினை தீர்த்தான் பல்லவராயர் தன்னை வீரநரசிங்கராய நாயக்கப் பல்லவரையன் என்று பெருமைபடக் கூறிக்கொள்கிறான். அரசு என்று உரிமை பாராட்டிய அகம்படிய வேளாளர்கள், அறந்தாங்கி, பெருங்கோளியூர், வழுத்தூர் அரசு என்று தம்மைக் கூறியுள்ளனர்." இதில் அறந்தாங்கி அரசு பற்றிப் திரு.சதாசிவப் பண்டாரத்தார் ஆய்வுக் கட்டுரைகள் தொகுப்பில் (பக்கம் 48,49) கீழ்க்கண்டவாறு விளக்கமான பதிவுகள் இடம்பெற்றுள்ளது. கடைச்சங்க நாளில் குறுநில மன்னர்கள் வேள் எனவும், அரசு எனவும், அரையர் எனவும் அந்நாளில் வழங்கப்பெற்று வந்தனர், என்பது பல கல்வெட்டுகளில் புலப்படுகின்றது. மண்டல மாக்களுந் தண்டத் தலைவருமாய்ச் சோழநாட்டுப் பிடாவூரும், அழுந்தூரும், நாங்கூரும், நாவூரும், ஆலச்சேரியும், பெருஞ்சிக்கலும், வல்லமும், கழாரும், முதலிய பதியிற்றோன்றி வேள் எனவும், அரசு எனவும், உரிமையெய்தினோர் என்று ஆசிரியர் நச்சினார்கினியர் கூறியிருத்தலும், இதனை வலியுருத்தல் காண்க.

வழுத்தூர் அரசு, சூரைக்குடி அரசு, அறந்தாங்கி அரசு, சேந்தமங்கலத்தரசு, புல்வயலரசு என்போர் நம் தமிழகத்தில் முற்காலத்தில் வாழ்ந்த குறுநில மன்னர் ஆவர். முந்நாளில் தஞ்சாவூர் சில்லா அறந்தாங்கியில் "அறந்தாங்கி அரசு" என்ற பெயருடன் குறுநில மன்னர்கள் ஆட்சிபுரிந்தனர். இவர்கள் தொண்டைமான் என்ற பட்டப் பெயருடையோர்.

முதல் ஆதித்த சோழன் பல்லவர்களை வென்றபின் பல்லவர்களுள் சிலர் சோழமன்னர்களுக்குத் திறைசெலுத்தி குறுநில மன்னர் ஆயினர். சிலர் அவர்கள்பால் அமைச்சர், படைத்தலைவர், திருமந்திர ஓலை முதலான அரசியல் அதிகாரிகளாகவும், வாழ்ந்து வந்தனர். இங்ஙனம் வாழ்ந்த பல்லவர் குல தலைவர்களுள் அறந்தாங்கி தொண்டைமானும் ஒருவர். இத்தொண்டைமான் மரபினர் அறந்தாங்கி அரசு எனவும் வணங்காமுடித் தொண்டைமான் எனவும் அறந்தாங்கியில் புகழுடன் வாழ்ந்த செய்தி பலகல்வெட்டுகளால் அறியமுடிகிறது.

**பெருமான் நம்பிப் பல்லவராயன் :**

சோழர் கால முக்கிய அரசியல் தலைவர் ஜெயங்கொண்ட சோழமண்டலத்து ஆமூர்க்கோட்டத்துக் காரிகைக் குளத்தூர் என்ற ஊரைச்சேர்ந்தவர். இவ்வரசியல் தலைவனின் பல்லவராயன் என்னும் பெயர் இரண்டாம் இராசராச சோழனால் அளிக்கப்பட்ட சிறப்புப்பெயர் என்று சொல்லப்படுகிறது. மாயூரத்துக்கு அருகில் உள்ள பல்லவராயன் பேட்டை இவ்வரசியல் தலைவன் பெயராலேயே அழைக்கப்படுகிறது. தன் அரசன் பெயரால் இராசராசேச்சுரம் எனும் சிவன் கோயிலை இவர் இவ்வூரில் எடுப்பித்துள்ளார்.

இந்த பெருமான் நம்பிப் பல்லவராயன் பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து வந்த சிங்கள தளபதி இலங்காழரிதண்ட நாயகன், ஜெகத்விஜய தண்டநாயகன் ஆகியோர்களை எதிர்த்துப்போரிட்டு அவர்களைத் தோற்கடித்து, சிங்களப்படைத் தலைவர் இருவரைக்கொன்று அவர்களின் தலைகளை மதுரை வாசலிலேயே வைப்பித்தான். இந்த சோழப்படையின் உதவியால் மாறவர்மன் சுந்தரப்பாண்டியன் மதுரையை மீட்டான். இந்த சோழப்படையில் வந்து வெற்றியினைத் தேடித்தந்த சோழவீரர்களே அகம்படியர் என்றக் குறிப்பினைத் தருகிறது "இலக்கியத்தரவுகளில் மகளீர் பதிவுகள்" எனும் நூல் (பக்கம் 133).

சோழமன்னன் இரண்டாம் இராசராச சோழன் நோய்வாய்ப்பட்டு இறக்கும் தருவாயில் சோழநாட்டில் ஆட்சியுரிமை பற்றிய கலகம் தோன்ற வாய்ப்பிருந்த நிலையில் இவர் தனது சாதுர்யமான செயல்பாடுகளால் அப்படியான சூழலைத் தவிர்த்து எதிரிலிப் பெருமாள் என்பவருக்கு இளவரசராகப்பட்டம் கட்டி, பழையாறையில் ஆயிரத்தளி படைவீட்டிலிருந்த இளவரசனுடைய அந்தப்புர மகளிரையும், இளங்குழந்தைகள், இருவரையும் பரிவாரங்களோடு அழைத்துவந்து, இராசராசபுரத்திலேயே (தாரசுரம்) காவல்மிக்க இடத்தில் இருக்கச்செய்து காப்பாற்றினார்.

இப்படிப்பட்ட சவாலான சூழலில் சோழநாட்டுக்கு எவ்வித குறைபாடுகளும் வராமல் நாட்டை பாதுகாத்தவர் பெருமாள்நம்பி பல்லவராயர். பின்பு எதிரிலிப் பெருமாளை இராசாதிராசன் என்றபட்டப் பெயரோடு சோழ பேரரரசனாக்கியவர் பெருமாள் நம்பி பல்லவராயன் ஆவர். இவர் இரண்டாம் இராசாதிராச சோழன் ஆட்சியில் தலைமை அமைச்சனாக வீற்றிருந்து அரசியல் பொறுப்புகளை ஏற்று திறம்பட செயல்பட்டவர். இந்தப் பெருமாள்நம்பி பல்லவராயன் அகம்படி நியாயம் என்றச் சோழப்படைப்பிரிவை சார்ந்தவன், அப்பிரிவிற்கு தலைமை ஏற்றவன். இதனை இரண்டாம் இராசாதிராச சோழனின் பல்லவராயன் பேட்டைக் கல்வெட்டு..

"திருச்சிற்றம்பலமுடையான் பெருமானம் பிரியார்

ஆன பல்லவராயர் பெரிய தேவர் ராஜராஜ தேவர்

பத்து கோயிற் கொத்து யாணை குதிரை அகம்படி

நியாயம்முள்ளிட்ட துறைகளுக்கு முதலிகளுமாய்"

என்று கோயிற்கொத்து என்ற அரண்மனைப்பரிவாரங்கள், யானைப்படை, குதிரைப்படை உள்ளிட்ட அகம்படி நியாயம் என்ற அகம்படியர் படைப்பிரிவின் தலைவனாகக் குறிப்பிடப்படுகிறார்.

இதனை இலங்கை வரலாற்றாசிரியர், பேராசிரியர் சி.பத்மநாபன் அவர்கள், தனது "இலங்கைத்தமிழ் சாசனங்கள்" என்ற நூலில் கீழ்க்கண்டவாறு பதிவுசெய்கிறார்.

அவர்கள் (அம்படியர்கள்) அரசப்படைகளிலும் ஆலயங்களிலும் சேவை புரிந்தனர். பிற்காலச் சோழர்களின் இராணுவத்தில் அகம்படிநியாயம் என்னும் படைப்பிரிவு சிறப்பிடம் பெற்றிருந்தது. ஆயிரத்தளி அரண்மனையில் அரசகுடும்பத்தார்

தங்கியிருந்தபோது அங்குள்ள படைகளில் அகம்படி நியாயம் முதன்மை நிலையில் விளங்கியது என்பதைப் பல்லவராயன் பேட்டைக் கல்வெட்டின் மூலம் அறிய முடிகிறது என்று குறிப்பிடுகிறார்.

"தம்பிக்கு நல்லான்கோட்டை ஸ்ரீமான் ரெங்கசாமித் தேவர் ஜீவியசரித்திரம்" நூல் அகம்படிய அரசுகள் பற்றிக் கீழ்க்கண்டவாறு (பக்கம்: 61) பட்டியலிடுகிறது.

பூவைசிய அகமுடைய வேளாளன் மரபினில் தோன்றிய

1. அண்ணாமலைத்தேவன் என்பான் திருவண்ணாமலையை ராஜதானியாக்கி ஆண்டு வருங்காலத்தில் வன்னியர் குலத்தவனான வல்லாளன் இந்நகரை கவர்ந்து அவன் அரசு புரிந்ததால் மேற்படி அண்ணாமலைத்தேவர் வர்க்கத்தவர்கள் அவ்விடம் மந்திரிகளாகவே இருந்து வந்தார்கள். மேற்படி ஷேத்திரத்தில் ஸ்வாமி பெயர் அருணாச்சலலேஸ்வரர், அம்மன் பெயர் உண்ணாமுலையம்மை.

2. இரங்கநாததேவன் என்பான் சோழநாட்டில் ஆதிரெங்கம் என்ற விஷ்ணு க்ஷேத்திரத்தில் அரசு புரிந்தான் அவ்விடம் ஸ்வாமி பெயர் ரங்கநாதர், அம்பாளின் பெயர் ரங்கநாயகி.

3. அருண்மொழிஞானதேவன் என்பான் சோழநாட்டில் விளாங்குளம், பூமகளூர் என்ற சிவக்ஷேத்திரத்தில் அரசு புரிந்தான் அவ்விடம் ஸ்வாமி பெயர் சுந்தரரேஸ்வரர், அம்பாள் பெயர் சுந்தரநாயகி.

4. பூவைசியன் ராமசாமித்தேவன் என்பான் சோழநாட்டில் திருக்குடவாயில் என்ற நகரை ஆண்டுவந்தான். அவ்விடம் ஸ்வாமி பெயர் கோணேஸ்வரர் தேவியார் பெரிய நாயகியம்மன்.

5. பல்லவராய தேவன் திருவெண்ணை நல்லூரிலிருந்து வந்து புதுக்கோட்டையை அரசுபுரிந்தான்.

6. சுவாமிநாத தேவன் என்பவன் திருவாய்மூரில் வந்து குடியேறி வாழ்ந்துவந்தான்.

7. சோழநாட்டில் பரமசாமிதேவன் என்பான் திருநாவலூரிலிருந்து வந்து, திருநெல்லிக் காவல் என்னும் நகரத்தை அரசு புரிந்தான். ஸ்வாமி பெயர் நெல்லிவனேஸ்வரர், தேவி மங்களநாயகி.

*8. பால்பாக்ய தேவன் என்பான் திருக்களரை அரசு புரிந்தான். ஸ்வாமி பெயர் களர்முனையீஸ்வரர், தேவி மங்களநாயகி.*

*9. சொக்கநாத தேவன், திருவெண்ணை நல்லூரிலிருந்த வந்து திருப்புகலூர் என்னும் நகரத்தை அரசு புரிந்தான். ஸ்வாமிபெயர் மாணிக்க வண்ணர், தேவி வண்டுவார் குழலி.*

**பொத்தப்பிச் சோழர்கள் :**

*ஆந்திர மாநிலத்தில் சிற்றரசர்களாக ஆட்சிபுரிந்தவர்கள் சோழர்களின் கிளைக் குடியினர். பொத்தப்பிச் சோழர்களில் எதிரிகண நாயன் பொத்தப்பிச் சோழன் என்பவன் அகம்படி முதலியாகக் குறிப்பிடப்படுகிறான். இதனை தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி 7, கல்வெட்டு எண்.147இன் மூலமாக அறிய முடிகிறது. தெலுங்கு சோழர்கள், கடப்பை, கர்நூல் கோட்டங்களில் ஆதிக்கம் பெற்றிருந்தனர். இவர்கள் தம்மை சூரிய குலத்தவர் என்றும் கரிகாற்சோழர் வழியில் வந்தவர் என்றும் கூறிக்கொள்வர். இவர்களைத் தெலுங்கு சோடர் என்றும் கூறுவர்.*

*சோழர் ஆட்சிக் காலங்களில் இவர்கள் மணவினையாலும், பிறவாறும் ஒன்றுபட்டிருந்தனர். இச்சோழருள், மதுராந்தகப் பொத்தப்பிச் சோழன், சங்கமராசன், சோடன் திருக்காளத்திதேவன் சிறப்பாகக் கூறப்படுகின்றவர்கள் என்று சோழர் வரலாறு நூலாசிரியர் பேராசிரியர் திரு.சி.கோவிந்தராசனார் மற்றும் முனைவர் திரு.தெய்வநாயகம் குறிப்பிடுகின்றனர். தெலுங்குச் சோழர்கள் தங்களைக் கரிகாலன் வழிவந்தவர்களாகக் கூறிக்கொண்டதுடன், இவர்கள் ஆந்திராவை நோக்கிய இடப்பெயர்வு சமுத்திரகுப்த மன்னனின் படையெடுப்புக்காலமான கி.பி. நான்காம் நூற்றாண்டில் ஏற்பட்டிருக்கலாம் என டாக்டர் பி.சுமாபாலா தெரிவிக்கிறார்.* (Early medieval Andhra Desa : The Abode of Tamils Page:6). .

*களப்பிரரின் படையெடுப்பினால் மங்கிய சோழவம்சத்தின் கிளையினர், பல இடங்களில் குடியேறிச் சிறுசிறு நாடுகளாக நிறுவிக்கொண்டனர். உறையூரை ஆண்டவனும், காவிரிக்கு அணைக்கட்டியவனும், காசியப கோத்திரத்தில் பிறந்தவனுமாகிய கரிகாலன் மரபினர் என்று இவர்கள் தம்மைச்சொல்லிக்கொண்டனர். (சோழர் சமுதாயம் - பதிப்பாசிரியர் முனைவர் சீ.வசந்தி பக்கம் 130). நெல்லூர், கடப்பை, சித்தூர்ப்பகுதிகளில் ஆண்ட தெலுங்குச்(சோழர்கள்) சோடர்கள் சோழப்பேரரசின்*

மாலைப்பொழுதில் மிகவும் சக்திவாய்ந்தவர்களாக வளர்ந்தார்கள். ஆனால் அவர்கள் எப்போதும் சோழர்களுக்கு நண்பர்களாக இருந்ததுடன் சோழருக்கெதிராக அடிக்கடி கிளர்ந்தெழுந்து தொல்லை கொடுத்த சம்புவராயர், காடவராயர், சேதிராயர் ஆகியவர்களிடமிருந்து சோழ அரசனைக்காத்ததாக திரு.கா. அப்பாத்துரை அவர்கள் தென்னாட்டுப் போர்க்களங்கள் நூலில் பதிவு செய்கிறார்.

**புவனசிங்கத் தேவன் :**

புதுக்கோட்டை மாவட்டக் கல்வெட்டுகளின் அதிகமாகக் குறிப்பிடப்படும் ஒரு அரசியல் தலைவனாக புவனசிங்கத்தேவன் அறியப்படுகிறார். இவர் பாண்டியர் ஆட்சியில் திருக்கோயில்களுக்கு தானங்கள் வழங்கிய வகையிலும், உள்ளூர் வரி மற்றும் கோயில்களுக்கான வரிகளை ஒழுங்குப்படுத்திய வகையிலும் சிறப்புக்குரிய அரசியல் தலைவராகவும், நிர்வாகத் தலைவராகவும், காணப்படுகிறார். திரு.ஆர்.திருமலை IAS (Retd.) அவர்கள் எழுதிய புதுக்கோட்டையின் பழங்கால நகரமைப்பு (Studies in the history of Ancient Townships of Pudukkottai) எனும் ஆங்கில ஆய்வு நூலில் புவனசிங்கத் தேவன் ஆற்றிய நிர்வாகப் பணிகளை மெச்சத்தகுந்த வகையில் பட்டியலிடுகிறார்.

பாண்டிய மன்னன் ஜாடவர்மன் வீரபாண்டியன் (அரியணை ஏரிய ஆண்டு 1253) ஆட்சிக்காலத்தில் புதுக்கோட்டைப் பகுதியில் பெரும் ஆளுமையுடைய தலைவனாக (முதலி) புவனசிங்கத் தேவன் விளங்கியுள்ளார். குறிப்பாக திருவரங்குளம் பகுதிகளில் இவர் செயல்படுத்திய நிர்வாக நடைமுறைகள் குறிப்பிடதக்கவையாக இருந்துள்ளது. புதுக்கோட்டை சமஸ்தானத்தின் அரசவம்சப்படி வரிசைப்படுத்தப்பட்டுள்ள கல்வெட்டுத் தொகுதிகளில் அகம்படி முதலிகளில் உதையன் புவனசிங்கத்தேவன் என்றும், அரசியல் தலைவன் என்றும் இவர் குறிக்கப்பெறுகிறார்.

இலங்கை கல்வெட்டு அறிஞர் திரு.சி.பத்மநாதன் அவர்கள் புவனசிங்கத்தேவன் பற்றித் தனது "இலங்கைத்தமிழ் சாசனங்கள்" எனும் நூலில், "பாண்டியரின் படைகளிலும் அகம்படி என்னும் படைப்பிரிவினர் சேவை புரிந்தனர். அகம்படி முதலிகளில் ஒருவரான உதையன் புவனசிங்க தேவன் ஏற்படுத்திய அறக்கட்டளைகள் பற்றிப் பல சாசனக் குறிப்புகள் உள்ளன", என்றகுறிப்பைத் தருகிறார்.

மாறவர்மன் சுந்தரபாண்டியனால் தஞ்சை அழிவுற்றப்பின் சோழ அரசன் மூன்றாம் இராஜேந்திரன் தஞ்சையை ஆண்டதாகக்கூறும் "தஞ்சை மன்னரும் சரஸ்வதி நூலகமும்" நூலின் ஆசிரியர் திரு.வ.வேணுகோபாலன் அவர்கள், மூன்றாம் இராஜேந்திரன் பொது ஆண்டு 1279 இல் காலமான பின்பு இவன் புதல்வன் அரசு கண்டராமன் என்ற சேமப்பிள்ளை தஞ்சையை ஆட்சிபுரிந்ததாகக் குறிப்பிடுகிறார். இந்த சேமப்பிள்ளையின் அரசியல் அதிகாரியாய் செயல்பட்டவர் வழித்துணைபெருமாள் மற்றும் புவனசிங்கதேவன் என்றும் பதிவு செய்கிறார்.

**மருதுபாண்டிய மன்னர்கள் :**

சிவகங்கைச்சீமையின் மக்களின் மன்னர்களாக நல்லாட்சிபுரிந்தவர்கள் இவர்கள். வெள்ளை மருது என்ற பெரிய மருதுபாண்டியரும், இவரின் இளைய சகோதரர் சின்ன மருதுபாண்டியரும் ஒருசேர அரசாண்டு சத்திரங்கள், ஊருணிகள், கோயில்கள் என்று மக்கள் நல அரசாகச்செயல்பட்டனர். இவர்கள் கொரில்லாப்போர்முறையின் முன்னோடியாகவும், வளரி வீசுவதில் பேராற்றலுடனும் செயல்பட்டவர்கள். வீரத்தில் பாபிலோனாவை ஆண்ட மாபெரும் வீரன் நிம்ராட்டுக்கு இணையானவராக கீழ்த்திசை நிம்ராட் என்று புகழப்பட்டவர்கள். தென்னிந்தியாவில் ஆங்கிலேயர்களுக்கு எதிரான எதிர்ப்பெழுச்சியை ஒரு புரட்சியாக ஒருங்கிணைத்தவர்கள். இவர்கள் ஆங்கிலேயர்களுக்கு எதிராக வெளியிட்ட ஜம்புதீபப்பிரகடனம் புகழ் பெற்ற ஒன்று. இவர்கள் குடும்பத்தில் தந்தை, மகன், பேரன் என்றும், உறவினர்கள், உடன் இருந்தவர்கள் என்றும் 500க்கு மேற்பட்டவர்கள் ஆங்கிலேயர்களால் தூக்கிலிடப்பட்டு மிகவும் துயரமான முடிவினை எய்தியவர்கள்.

இம்மன்னர்களைப் பற்றித் தமிழிலும் ஆங்கிலத்திலும் அதிகமான நூல்கள் வந்துள்ளன. அவற்றில் குறிப்பாக கலோனல் ஜேம்ஸ் வெல்ஸ் எழுதிய இராணுவ நினைவுகள் (Military Reminiscences by Colonel Jameswelsh) மற்றும் திரு.கே.இராஜ்ஜையன் அவர்களின் தென்னிந்திய எதிர்பெழுச்சி (South Indian Rebellion- The First war of Independence 1800-1801 by K.Rajayyan) ஆகிய இருநூல்கள் புகழ்பெற்றவை. அத்துடன் ஜெ.கோர்லே எழுதிய மருது என்ற நூலும் முக்கியத்துவம் மிக்கநூலாகும் (MAHRADU an Indian Story with some observations on the Present state of the British Empire by J.Gourley)

தமிழில் சிவகங்கை சரித்திரக்கும்பி, சிவகங்கை அம்மானை (பழையபதிப்புகள்) ஆகிய உள்ளூர் இலக்கியமும், திரு.ந.சஞ் சீவி அவர்களின் மானம் காத்த மருதுபாண்டியர், மருதிருவர் ஆகியவையும் முக்கியமான நூல்களாகும். மருதுபாண்டியர் தொடர்புடைய அனைத்துத் தகவல்களையும் உரிய ஆதாரத்துடன் ஒரு கலைக்களஞ்சியம் போன்று பெரும் தொகுப்பாக அன்னம் வெளியீடான திரு.மீ.மனோகரன் எழுதிய "மருதுபாண்டிய மன்னர்கள்" நூல் அமைந்துள்ளது.

தமிழக வரலாறு, பண்பாடு, தமிழ் இலக்கியம், சுதந்திரப்போராட்ட வரலாறு, தமிழ்நாடகம் ஆகியவை பற்றிப் பெரும் ஆளுமைகளும் அறிஞர்களும் எழுதிய நூல்களில் மருதுபாண்டியர்களின் தியாகத்தையும், வீரத்தையும் விளக்கியும், வியந்தும் எழுதியுள்ளனர். குறிப்பாக திரு.குன்றகுடி அடிகளார், திரு.சுத்தானந்த பாரதியார், திரு.டாக்டர் ரா.பி.சேதுப்பிள்ளை, டாக்டர் கே.கே.பிள்ளை, திரு.சோமலெ, திரு.தொ.மு.சி.ரகுநாதன், திரு.மா.பொ.சிவஞானம், திரு.நா. பார்த்தசாரதி, திரு.ப.சிவனடி, திரு.கோவிமணிசேகரன், திரு.வி.சுவாமிநாதன், திரு.எம்.வி.வெங்கட்ராம், திரு.வி.கந்தசாமி, திருமதி.வள்ளிசொக்கலிங்கம், திரு.அ.மா.சாமி, திரு.ஸ்டாலின் குணசேகரன், திரு.எஸ்.நடராஜன், திரு.ப.தீனதயாளன், திரு.கவியரசர் கண்ணதாசன் மற்றும் பலர் மருதுபாண்டியரை விவரித்து எழுதியுள்ளனர்.

**அகம்படிய தளபதிகள் :**

சந்திரப்ப சேர்வைக்காரர், வைரவன் சேர்வைக்காரர், வெள்ளையன் சேர்வைக்காரர், முத்துக்கருப்பத்தேவர் ஆகியோர் சேதுபதிகள் ஆட்சியில் செல்வாக்குடன் பெரும் ஆளுமைகளாக விளங்கியதையும், புதுக்கோட்டை சமஸ்தானத்தில் சேர்வைக்காரர்கள் தளபதியாக விளங்கியதையும், விருப்பாட்சி பாளையத்தில் பிராதானியாக சேர்வைக்காரர்கள் விளங்கியதையும் திரு.மீ.மனோகரன் தனது "மருது பாண்டிய மன்னர்கள்' நூலில் பதிவு செய்கிறார். தீரன் சின்னமலையின் தளபதியாக விளங்கிய கருப்பச்சேர்வைக்காரர் பற்றிக் "கொங்குவேளிர்" வரலாறு நூலில், (பக்கம்: 179) இரா.வடிவேலன் அவர்கள் குறிப்பிடுகிறார்.

1672 இல் இராஜசூரிய சேதுபதியிடம் சந்திரப்ப சேர்வைக்காரர் இராணுவ அதிகாரியாய் இருந்துள்ளார். அவர் மறைவுக்கு பின் சிலகாலம் இந்த சேர்வைக்காரரே சேதுநாட்டின் ஆட்சியை

*நடத்தியுள்ளார். பின்பு காத்ததேவர் என்ற முத்துவிசய ரகுநாத சேதுபதியிடம் (1729–35), பிரதானியாக இருந்தவர் வைரவன் சேர்வைக்காரர் விரத்தளவாய் என்று புகழ்பெற்ற வெள்ளையன் சேர்வைக்காரர், தளவாயாக நான்கு சேதுபதிகளின் காலத்தில் மிகுந்த செல்வாக்குடன் விளங்கியுள்ளார். கழுதிக் கோட்டையைக் காத்த இராணுவ அதிகாரியாக புலியுடையான் சேர்வைக்காரர் முடிகொண்டான் சேர்வைக்காரர், மருதுபாண்டியர்களின் தளபதிகளாக நயினப்பா சேர்வைக்காரர், புக்குளிவேல் முருகு சேர்வைக்காரர் போன்றோர்கள் செயல்பட்டுள்ளனர்.*

★★★

# 7. போர் மரபும், வேளாண் (துளுவ / தொழுவ) பரிணாமமும்.

“கள்ளர், மறவர், அகமுடையார் ஆகியோர் எல்லாம் மெள்ள மெள்ள வேளாளராயினரே என்ற பாடல்கூட வேளாளர் தம் பெருமையைக் கூறுவதாக எண்ணிப் பயனில்லை. உண்மையில் அவர்கள் விவசாய நாகரிகத்திற்குள் வந்தனர்”.

மா.அரங்கநாதன்

மா.அரங்கநாதன் கட்டுரைகள்

அகம்படியார்கள் ஒரு போர் மரபுச்சமூகம். இவர்களின் இராணுவ அரசச்சேவைக்கு ஈடாகப்பெற்ற நிலம் வேளாண்மையை நோக்கிய இவர்களின் நகர்விற்கான தொடக்கமாகும். கி.பி.எட்டாம் நூற்றாண்டிலேயே தண்டிவர்ம பல்லவ மன்னனின் உத்திரமல்லூர் கல்வெட்டு அகம்படி உடையான் என்று இவர்களை விவசாயக்குடிகளாகப் பதிவுசெய்கிறது. இவர்கள் போர் மரபிலிருந்து வேளாண் நோக்கிய நகர்வு கி.பி.எட்டாம் நூற்றாண்டிலிருந்து 16 மற்றும் 17ஆம் நூற்றாண்டுவரை தென்னிந்தியா மற்றும் இலங்கையில் நடந்துவந்த நிகழ்வாகும்.

பல்லவர்கள் காலத்திலிருந்து வேளாண்மை நோக்கிய நகர்வு, தொடர்ச்சியாக நடந்து வந்தாலும், சோழர்கள் ஆட்சி முடிவுக்கு வந்தபிறகு அது அதிகமாக நடைபெற்றது. பாண்டியர்கள் ஆட்சி முடிவும், அன்னியரது படையெடுப்பும், தமிழர்களின் அரசியல்

சீர் குலைவும் இவர்களை வேளாண்மை உள்ளிட்ட மாற்றுத் தொழில்களை நோக்கி நகர்த்தின. இந்த மாற்றம் இவர்களுக்கு அகம்படி வேளாளர் என்ற நிலையைத்தந்தது. இது போன்ற மாற்றம் இலங்கை வரலாற்றிலும் நிகழ்ந்தது. இம்மாற்றம் கல்வெட்டுகளிலும், இலக்கியங்களிலும் பதிவுகளாக இடம் பெற்றுள்ளது.

புதுக்கோட்டை மாவட்டத்தைச் சேர்ந்த கல்வெட்டு ஒன்று, அகம்படி முதலிகளில் பிராங்குடையான் ஆளும்பிரான் பெரியநாயனான மலையாழ்வி வேளாண் என்பவரைத் (எண்.388, புதுக்கோட்டை சமஸ்தான கல்வெட்டுகள்) தெரிவிக்கிறது. தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி: 22 பக்கம் உடையான் அகம்படி வெளார் என்று பதிவுசெய்கிறது. கி.பி.12,13–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சோழர்காலக் கல்வெட்டு ஒன்றில் பிள்ளை அகமுடையான் வேளாண் தாங்கினான் என்பவரைத் தமிழக அரசின் தொல்லியல் துறை வெளியீடான “கும்பகோணம் வட்டக் கல்வெட்டுகள்” தெரிவிக்கிறது. திருவோத்தூர் (செய்யாறு) வரலாறு நூலில் பக்கம் 197, அதன் ஆசிரியர் திரு.ச.கிருஷ்ணமூர்த்தி அவர்கள் திருவாய்ப்பாடி சபையில் இருந்த அகம்படி வேளாண் என்பவரைக் குறிப்பிடுகிறார். மணிவாசகர் பதிப்பகத்தின் “தமிழியல் ஆய்வு” : முனைவர் இராம சுந்தரம் மணிவிழா ஆய்வு நூலில் ‘அகம்படி வேளாண்’ என்பதைக் குறிப்பிட்டு (பக்கம் 122) வேளாளர் நிலைக்கு அகம்படியர் சென்றதைக் குறிப்பிடுகிறது.

திரு.த.ஈசுவரப்பிள்ளை தனது “பக்தி இலக்கியத்தில் சமுதாயப்பார்வை” நூலில் (பக்கம் 86) அகம்படி உடையார்கள் வேளாண் தொழிலில் ஈடுபட்டதைக் குறிப்பிடுகிறார். திரு.ஜின் டெலோச் என்பவர் எழுதிய 17ஆம் நூற்றாண்டில் டச்சுக்காரர்களின் திட்டமிடல் வழி பாண்டிச்சேரியின் நகர வளர்ச்சியின் தோற்றம் (பக்கம்: 37) எனும் நூலில் (Origins of The Urban Development of Pondichery, According to seventeenth century Dutch plan by Jean Deloche) பாண்டிச்சேரியின் குடியிருப்புப்பகுதிகளைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது அங்கு அகம்படி வேளாளர் (Agambadi Vellalar) குடியிருப்புகளைக் குறிப்பிடுகிறார். தமிழ்நாட்டில் சாதி அமைப்பு என்ற ஆங்கில நூலின் ஆசிரியர் திரு.கே.கே. பிள்ளை அவர்கள் (Page : 20, The Caste System in Tamil Nadu by K.K.Pillai) பல்லவர் கல்வெட்டுகளில் வேளாண் குடிகளாக இவர்கள் காணப்படுவதையும், உருத்திரமேரூர் கல்வெட்டுகள் வழி

இவர்கள் அகம்படி உடையான் என்று அழைக்கப்பட்டதையும் பதிவுசெய்கிறார்.

திரு.தமிழ்வேள் உமாமகேஸ்வரன் பிள்ளை அவர்களின் வரலாற்றை எழுதிய கருப்பக்கிளார் திரு.இராமசாமிப்புலவர் அவர்கள் தனது "தமிழ் புலவர் வரிசை தொகுதி 4"இல் உமாமகேஸ்வரன் பிள்ளை அவர்களின் குலத்தை 'அகமுடைய வேளாளர்' குலம் என்றே பதிவுசெய்கிறார். (பக்கம்: 15). வள்ளல் பச்சையப்பர் என்ற நூலினை எழுதிய திரு.டி.பக்தவச்சலம் அவர்கள் "இவர் சாதியில் அகமுடைய வேளாளர்" (பக்கம்: 24) என்றே பதிவு செய்கிறார்.

திரு.வி.திருவரங்கராசன் அவர்கள் எழுதிய திருக்காணப்பேர், காளையார்கோயில் தல வரலாறு நூலில் (பக்கம்: 101) அகமுடையார் போர் தொழிலிலிருந்து வேளாண் தொழில்நோக்கிய நகர்வினைக் குறிப்பிடுகிறார். டாக்டர் திரு.எஸ்.சௌந்தரபாண்டியன் அவர்கள் பதிப்பாசிரியராக இருந்து வெளியிட்ட இடங்கை வலங்கையர் வரலாற்றில், இடங்கை, வலங்கைப்புராணம், (பக்கம் 86) அணைக்குடி சாமிநாத பிள்ளையென்கிற "பேரடுப்பான் வெள்ளாளனும்" என்று அனங்குடி சாமிநாதப்பிள்ளை என்ற அகமுடையாரை குறிப்பிடுகிறது. இவரை மராட்டிய ஆட்சியாளர்களுடன் மிக நெருங்கிய செல்வாக்கு பெற்றவர் என்று குறிப்பிடுவார் வழக்கறிஞர் திரு.புலமை வேங்கடாசலம் அவர்கள் தனது "அகமுடையார் வரலாறு" எனும் நூலில். மேலும் இதே இடங்கை, வலங்கைப்புராணம் இராமய்யன் பல்லவராயன் என்ற அகம்படிவேளாளரைப் பற்றி இவ்வாறு குறிப்பிடுகிறது. "தஞ்சாவூருக்கு மேற்கே தச்சன் குறிச்சியென்கிற ஒரு கிராமமிருந்தது, அந்தவூர் நாட்டாமை காரனாகிய இராமய்யன் பல்லவராயன்னென்கிற அகம்ப(டி)ய வெள்ளாளன் பேரிலே அனேகப்பாடல்களைப் பாடினான்".

"தம்பிக்கு நல்லான் கோட்டை ஸ்ரீமான்ரெங்கசாமித்தேவர் ஜீவிய சரித்திரம்" என்னும் நூல் (பக்கம் 60) பூவைசியனான, அகமுடையவேளாளன் மரபு, ஐவேலி நாட்டுப்பூவைசிய அகமுடைய வேளாளர் வகுப்பு என்று அகமுடையார்களைக் குறிப்பிடுகிறது.

அகமுடையார்கள் போர்மரபு நிலையிலிருந்து வேளாண்சமூக நிலைக்கான நகர்வினைக் கல்வெட்டியல் துறை பேராசிரியர் (ஓய்வு) திரு.புலவர் செ.இராசு அவர்கள் எழுதிய "கொங்குநாட்டு

சமுதாய ஆவணங்கள்" என்ற நூலின்வழி அறியமுடிகிறது. இந்நூலில் கணக்கன் கூட்டத்தார் பட்டயம் என்ற கொங்கு நாட்டு பட்டயம் ஒன்றில் தென்பாண்டி நாட்டில் ஆட்சியில் இருந்த குருலிங்கராச என்ற அகம்படியர் பற்றிக் குறிப்பிடப்படுகிறது. அந்த குருலிங்கராசவின் வாரிசுகளிடம் ஏற்பட்ட பங்காளிச் சண்டையில் ஒரு பிரிவினர் அங்கிருந்து வெளியேறி, கொங்கு நாட்டில் குடியேறியதையும், அங்கு நல்லாண்பிள்ளை சர்க்கரை மன்றாடியாருக்கு உதவிசெய்ததன் பொருட்டு கொடுமணல் காணியாட்சியைப் பெற்றதையும் குறிப்பிடுகிறது.

இந்தப்பட்டயம் இவ்வகம்படியர்களைக் கருது (கதிர்) முனை தீண்டாத காராளனென்றும், உலக்கைபிடியாத குலக்கொளுந்துவர்க்கம் என்றும் கன்னல், கதலி, கமண்டலங் காத்த காராளன் என்றும், பொன்முடி சித்திரமோழித் தலைவர், பூமிபாலகர், என்று வேளாண் வர்க்கமாகவே குறிப்பிடுகிறது.

திரு.கணபதி பழனித்துரை திரு.ஆர்.தாண்டவன் எழுதிய இந்தியாவின் உள்ளூர் இன இயக்கங்கள் எனும் நூலில் (Ethnic movement in India: Theory and Practice by Ganapathy Palaniththurai, R.Thandavan) பக்கம்: 125 இல் அகம்படியர் போன்ற சாதிகள் தங்களை வெள்ளாளர் என்று அழைத்துக்கொள்ள முயன்றன என்பதைப் பதிவு செய்கின்றனர்.

திரு.பவானி இராமன் எழுதிய டாக்குமென்ட் ராஜ் எனும் ஆங்கில நூலில் (Document Raj : Scribes and writing under early colonial rule Madras 1771-1860 by Bhavani Raman)" அகம்படியர் என்பவர் முன்னேறிக்கொண்டிருந்த போர்மரபுக்குழு, அவர்கள் 19ஆம் நூற்றாண்டுகளில், மதுரை மற்றும் தஞ்சாவூர் பகுதிகளில் வேளாண்குடிகள் எனும் நிலையை அடையத் தொடங்கினர் என்று பக்கம்: 353 இல் பதிவு செய்கிறார்.

திரு.கென்னத்டேவிட் எழுதிய "த நியூ வின்ட், சேஞ்சிங் ஐடென்டிட்டிஸ் இன் சவுத் ஆசியா (The New wind : Changing Identies in South Asia by Kenneth David) எனும் நூலில் (பக்கம்: 19) இலங்கையில் வேளாளர்கள் பெரிய வேளாளர்கள் என்றும், அகமுடையார்கள் சின்ன வேளாளர்கள் என்றும், அழைக்கப்பட்டதை அறியமுடிகிறது.

சென்னையில் கல்லறை அல்லது நினைவுச் சின்னங்களில், வரலாறு அல்லது தொல்லியல் முக்கியத்துவம் உடைய கல்வெட்டுகள் பட்டியல் எனும் ஆங்கில நூலின் ஆசிரியர்

ஜேம்ஸ்காட்டன் (List of inscriptions on Tombs or Monuments in Madras Possessing historical or Archaeological interests by Julian James Cotton) லசரஸ் திமோதி என்று அறியப்பட்ட தனியப்பமுதலியார், பாண்டிச்சேரியில் பிரஞ்சு கிழக்கிந்திய கம்பெனியின் முன்னோடியாக அறியப்பட்டதைக் குறிப்பிடுகிறார். மேலும் இவரை அகம்படிமுதலி வெள்ளாளர் என்றே பதிவு செய்கிறார்.

வர்த்தகம் மற்றும் ஊரக வளர்ச்சியில் ஏற்பட்டுள்ள இடைநிலைமாறுதல் என்னும் ஆங்கில நூல் (Transitional trade and rural development by Barbara Harriss) பக்கம் 104, 107இல் துளுவவேளாளர், அகமுடையார், வர்த்தகம் மற்றும் வேளாண்மையில் செல்வாக்கு பெற்ற சமூகமாகக் குறிப்பிடுகிறது. மேலும் இந்த அகமுடையார்கள் தங்களை வெள்ளாளர்களாகக் கருதிக்கொண்டனர் என்றும் பதிவு செய்கின்றது.

சமூகவியல் அறிஞர் என்ற ஆங்கில நூல் (Social Scientist Volume 8. by Indian School of Social Science, New Delhi) பக்கம் 27 இல் வடஆர்க்காடு பகுதியில் அம்படிய முதலியார்கள் வர்த்தகம் மற்றும் வேளாண்மையில் செல்வாக்கு மிகுந்தவர்கள் என்று குறிப்பிடுகிறது. அகம்படியர்கள் நிலத்துக்குச் சொந்தக்காரர்களாக விளங்கினர் என்றக் குறிப்பினைத் தருகிறது, சமூக செல்வாக்கு மற்றும் அன்றாட சமூகங்களுக்கிடையிலான உறவு (பக்கம்: 109) எனும் ஆங்கில நூல் (Social Power and Everyday class relation by Anand Chakravarti)

தமிழ்நாட்டிலே உழவுத்தொழில் செய்யும் ஒரு கூட்டத்தினர் அகமுடையார் எனப்படுகின்றனர். அவர்கள் வேளாண் மக்கள் பழக்கவழக்கங்களைப் பின்பற்றுபவர் என்று திரு.ந.சி.கந்தையா அவர்கள் தனது “தென்னிந்தியக்குடிகளும் குலங்களும்” நூலில் குறிப்பிடுகிறார்.

தொண்டைமண்டலத்தில் காணியாட்சி உண்மையில் வேளாளர்களில் துளுவ வேளாளரிடமிருந்து பின்பு இதர சமூகத்திடம் சென்றதாக தமிழகத்தில் வேளாண்மை மற்றும் சமூகக்கட்டமைப்பு என்ற ஆங்கில நூல் தெரிவிக்கிறது (Agriculture and social structure in TamilNadu : Past origin, Present Transformation, and Future Prospects – Joan P.Mencher).

“தமிழ்நாடு மாவட்ட குறிப்புகள்” எனும் நூலின் ஆசிரியர் திரு.தே.ப.பெருமாள் (பக்கம்: 86) துளுவ வேளாளர்கள், ஆர்க்காடு முதலியார்கள் என அழைக்கப்படுபவர்கள் பண்ணைவயல்களில்

வேலை செய்வதில்லை. தொழிலாளர்களை வைத்தே நிலங்களைப் பயிர் செய்கின்றனர் என்று குறிப்பிடுகிறார்.

"தமிழ் வரலாறும் இலங்கை இடப்பெயர் ஆய்வும்" எனும் நூலின் ஆசிரியர் திரு.கதிர்தணிக்காச்சலம் (பக்கம்: 44) கள்ளர், மறவர் அகம்படியர் ஆகியோர் தம்மை வேளாண் குடிமக்களாக்கினர், மற்றத் தொழில்முறைச் சாதியினர் அவ்விதம் செய்ய முடியவில்லை என்ற குறிப்பினைத் தருகிறார்.

"குருபரம்பர சர்வார்த்த சரபூஜனம் பூர்வார்த்தம் சரசங்கிரக விளக்கம்" எனும் நூலின் ஆசிரியர் திரு.பராங்குசதாசர் (பக்கம்: 16இல்) அகமுடையாரை பூவைசியர் என்று குறிப்பிட்டு திருமங்கையாழ்வாரின் பிறப்பினை கீழ்க்கண்டவாறு பதிவு செய்கிறார்.

"பத்தாவது திருமங்கையாழ்வார், இவர் அவதார ஸ்தலம் திருவாலி திருநகரியில் திருக்குறையலூர். இவர் பூவைசியரில் அகமுடையார். இவர் வமிசத்தார் மிலேச்ச கிருத்யான், காலம் கலியுகம் பிறந்த 397க்கு மேல் செல்லாநின்ற நள வருஷம் கார்த்திகை மாசம் குருவாரம்"

இலங்கையில் "தமிழ் மன்னன் மாகோனின் மகத்தான வரலாறு" எனும் நூலின் ஆசிரியர் தங்கேஸ்வரி, அகம்படியர்களை அகம்படி வேளாளர் என்று குறிப்பிடுகிறார். தென்னிந்திய கல்வெட்டுகள் தொகுதி 22 (South Indian Inscription Volume 22) பக்கம் 189 இல் வெண்பாக்கமுடையார் அகம்படி வேளாளர் ஒருவரைக் குறிப்பிடுகிறது. விதவைகளின் சமூக பொருளாதார நிலை என்ற ஆங்கில நூலின் ஆசிரியர் கோ.பத்மநாபன் (Socio Economic status of widows by Kochappi Padmanabhan) அவர்கள், இவர்களுக்கு, துளுவ வேளாளர், ஆர்க்காடு வேளாளர், ஆர்க்காடு முதலியார், அகமுடியன். அகமுடி, அகமுடிரெட்டி, அகமுடி முதலியார் என்று பல பெயர்கள் வழக்கில் இருப்பதைப் பதிவு செய்கிறார். துளுவ வெள்ளாளர்கள், மணியக்காரர்கள், பட்டாக்காரர்கள் என்று அழைக்கப்பட்டதை "The so called maniyakkarrars of the Barahmahal are said to be Tuluva Vellalars, organized under a pattakkarar at Harur"என்று பி.எஸ்.பலிகா அவர்கள் சேலம் மாவட்ட கெஜட்டியரில் குறிப்பிடுகிறார். (Madras District Gazetteers : Salem by B.S.Baliga – Page 121).

தமிழ்நாட்டு அரசின் பிற்படுத்தப்பட்ட வகுப்பினர்கள் பட்டியலில் வரிசை எண் ஒன்றில் தொழு அல்லது துளுவ

வெள்ளாளர் உள்ளடங்களான அகமுடையார் என்று இவர்களைக் குறிப்பிடுகிறது. தமிழ்நாடு மட்டுமின்றி ஆந்திரப்பிரதேசத்தின் பொதுநிர்வாகத்துறை வெளியீடான மாநில நிர்வாக அறிக்கையிலும் (State Administration Report by General Administration Department Andhrapradesh (India) 1957) துளுவ வெள்ளாளர் உள்ளிட்ட அகமுடியன் என்றே இவர்களைக் குறிப்பிடுகிறது. புனித ஜார்ஜ் கோட்டை கெஜட் பகுதி 2 (Fort Saint George Gazette Part 2 1964) இல் துளுவ வேளாளர் உட்பட அகமுடையார் என்று குறிப்பிடுகிறது.

அகமுடியன், அகமுடியார், துளுவவேளாளர் ஆகிய இந்து பிரிவினர் தமிழ்நாடு, ஆந்திரா மற்றும் பாண்டிச்சேரியில் இதரபிற்பட்டவர்களாக (OBC) இருப்பதையும் தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரியில் மட்டும் அகமுடியார் கிறிஸ்தவர்கள் இருப்பதையும் கேரளாவில் மக்கள் என்ற நூல் பதிவு செய்கிறது (Man in Kerala Twelve Anthropological Essays by L.A.Krishnaiyer).

சரித்திரச் செம்மல் ச.கிருஷ்ணமூர்த்தி தனது தொல்லியல் நோக்கில் காஞ்சிபுரம் மாவட்டம் எனும் நூலில் (பக்கம்: 25).

காஞ்சி நகரிலும், காஞ்சியைச் சுற்றிலும் துளுவ வேளாளர்கள் மிகுதியாகத் தற்போதும் உள்ளார்கள். தொழுவ வேளாளர் என்றும், சில சாசனங்களில் இருப்பதை அவதானிக்க வேண்டும். அகம்படி முதலிகள் எனவும், இவர்கள் அழைக்கப்படுகின்றனர். மேலும் மூர்க்க நாயனார் பற்றிக் குறிப்பிடும் பொழுது, இங்கே சுட்டப்படும் நாயனார் துளுவ வேளாளப் பிள்ளை என வழங்கப்படும் அகம்படிய முதலியார் இனத்தவர் ஆவர். (பக்கம் 265) அத்துடன் பக்கம் 364 இல் இவர் திருவேற்காடு மூர்க்க நாயனார் மரபில் துளுவ வேளாளர் சாதியில் வந்தவர் என்று கல்வெட்டு கூறுகிறது. உமாபதி சிவாச்சாரியார் வேளாளர் மரபில் மூர்க்க நாயனாரைக் குறிப்பிடுவார். ஆயின் வேளாளர் மரபில் துளுவ வேளாளர் பிரிவும் ஒன்றாகும். அகம்படி முதலிகள் எனவும், இவர்கள் வழங்கப்படுவர் மேலும் பக்கம் 74இல் துளுவ வேளாளர் பெயர் அடிப்படையில் துளுநாட்டிலிருந்து குடிபெயர்ந்தவர்கள் என்று கருதப்பெறுகின்றனர். உண்மையில் இப்பெயர் தொழு வேளாளர் என்றிருக்க வேண்டும். நாட்டார் வழக்காற்றில் தொழு வெள்ளாளர் என்று குறிக்கப்பெறுகின்றது என்று பதிவு செய்கிறார்.

தொழுவர் என்பதற்கு உழவர் / தொழில் செய்வோர் என்றும், தொழுதி என்பதற்கு கூட்டம் / ஈட்டம் என்றும், தொழு,

தொழுவம், தொழுவு, தொழூஉ என்பதற்கு மாட்டுத்தொழுவம் என்று சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் (தமிழ்ப் பல்கலைக் கழகம் வெளியீடு) தெரிவிக்கிறது. தொறு என்ற சொல்லைப் பற்றி விளக்கும் முனைவர் திரு.ர.பூங்குன்றன் (தொல்குடி வேளிர் அரசியல் பக்கம்: 70,71) அவர்கள் கால்நடைக் கூட்டத்தைக் குறிப்பதாகப் பதிவுசெய்கிறார். இந்த தொறு என்பது தொழு என்பதின் திரிபாகவும் குறிப்பிடுகிறார். இந்த தொறு (கால்நடைக் கூட்டம்) தொடர்பாக எழுந்த பூசல்களை விரிவாக விளக்கும் இவர் அரசர்களும் இப்பூசலில் ஈடுபட்டதாகக் குறிப்பிடுகிறார்.

டாக்டர் இல.தியாகராஜன், தனது வேட்டவலம் வரலாறு நூலில் பக்கம்205 இல் திருக்கோயிலூர் மலையமான் குடும்பத்தைச் சார்ந்த ஒருகிளையினராக மிலாடராயர், வாணகோவரையர், வாணதிராயர்கள் இருந்தனர் என்பதையும், இவர்களில் சிலர் அகம்படவன் எனவும், அதிகாரிகள், அகம்படிகள், அகம்படிமுதலி என்று அழைக்கப்பட்டதையும், கல்வெட்டுகள் மூலம் அறிய முடிகிறது. இவர்களே அகமுடையார், அகமுடைய முதலியார் என்ற சாதிப்பிரிவினரின் முன்னோர்கள் எனலாம் என்ற குறிப்பினைத் தருகிறார். இத்துடன் இவர்கள் சோழர் காலம் வரை செல்வாக்குடன் திகழ்ந்ததையும், அதன்பின் தங்கள் அரசியல் செல்வாக்கை இழந்து நில உடைமையாளர்கள், நிலக்கிழார்கள், என்னும் நிலையை எய்தி பாண்டியர், கோப்பெருஞ்சிங்கன், சம்புவராயர் ஆகிய மன்னர்களின் கீழ் அதிகாரிகளாக / நாட்டார்களாகப் பணிபுரிந்தனர் என்று குறிப்பிடுகிறார்.

எத்தனேகிராபி என்ற ஆங்கில நூலில் (Ethnography by sir Athelstan Baines) அகமுடையார்கள் அதிகமாக ஆரியமயமாக்கப்பட்டு பல வழிகளிலும் இவர்கள் பழக்கவழக்கம் மற்றும் நம்பிக்கைகளில் வேளாளர்களை ஒத்துள்ளனர் என்று குறிப்பிடப்படுகிறது. இந்தியாவில் அமைப்புச்சாரப் பொருளாதாரத்தில் முதலாலித்துவ வளர்ச்சி என்ற நூல் துளுவ வேளாளர் அகமுடைய முதலியார் என்று பதிவு செய்கிறது (Capitalist Development in India's Informal Economy by Elisabetta Basile).

அகம்படியர்கள் பிராமண நாகரிகத்தின் தாக்குதலுக்கு ஆளானவர்கள் என்றும், வேளாளரைப்போல அகம்படியர்களும் எல்லாச் சடங்குகளிலும் பிராமணக் குருக்கள்மாரைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள் என்பதுடன், இவர்களிடம் வேளாளர் பழக்கவழக்கங்கள் நிலவுகின்றன என்றும்,

வெள்ளாளர், பிள்ளை என்ற பட்டப் பெயர்களை இவர்கள் போட்டுக்கொள்கிறார்கள் என்று இராமநாதபுரம் மாவட்ட விவரச் சுவடிகள் தெரிவிக்கின்றது.

21ஆம் நூற்றாண்டை எதிர்கொள்ளும் ஊரக இந்தியா என்ற ஆங்கில நூலின் ஆசிரியர் பார்பாரா ஹரிஸ் வெய்ட் என்பவர், அகமுடையான், அகமுடைய முதலியார் என்பதற்கு உள்ளூரில் செல்வாக்கு மிக்க வேளாண் மற்றும் வர்த்தகம் செய்யும் சாதியினர் என்று குறிப்பிடுகிறார். (Rural India Facing the 21st Century by Barbara Harriss White).

டாக்டர் பி.எஸ்.பாலிகா அவர்களின் தென்ஆர்க்காடு மாவட்ட கெஜட்டியர் பக்கம்: 135 இல் அகமுடைய வேளாளர் என்பவர் அகமுடைய சாதியிலிருந்து வந்தவர் என்று பதிவு செய்கிறார். மைசூர் கெஜட்டியர் பக்கம் 247இல் இதன் ஆசிரியர் (Mysore Gazetteer by B.Lewis Rice) ஆர்க்காடு வேலூர் மற்றும் பிற பகுதிகளிலிருந்து பெங்களூர் மற்றும் மைசூர் பகுதிகளில் குடியேறிய அகமுடையார்கள், அரசாங்கத்திலும், பொது வேலையிலும் மற்றும் கட்டிடக்கட்டுமான ஒப்பந்தக்காரர்களாகவும் பணியாற்றுகின்றனர் என்றும் நல்ல சம்பாத்தியத்தையும், முன்னேற்றத்தையும் கொண்டவர்கள் என்று குறிப்பிடுகிறார். இதனையொட்டியே திரு.தேவநேயப் பாவாணர் தனது "தமிழர்வரலாற்றில்" அகம்படியர்களைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது கொத்த வேலை என்று பதிவு செய்கிறார் போலும். மேலும் இதே மைசூர் கெஜட்டியர் அச்மில்லி, அகமுடி, பாணன் ஆகியோர்களுடன் நாயர்களையும் சேர்த்து விவசாயத் தொழில் செய்வோர்களாகக் குறிப்பிடுகிறது (பக்கம்: 288).

10,11 ஆம் நூற்றாண்டுகளில் சோழர் ஆட்சியின் விரிவாகத்தாலும், போர் படையெடுப்புகளாலும் மக்கள் பெருமளவில் இடம்பெயர வாய்ப்புகள் ஏற்பட்டதாகக் குறிப்பிடும் அறிஞர்களான திரு.நொபொருகராஷிமா திரு.எ.சுப்பராயலு (தமிழகத்தில் சாதி உருவாக்கமும் சமூகமாற்றமும் பொ.ஆ.800-1500), இதனால் தமிழக வீரர்கள் வணிகர்கள் முதலியோர் வெளியே சென்றனர் என்றும் எடுத்துக்காட்டாக தொண்டைமண்டல நிலக்கிழார்கள் கோலார் மாவட்டத்தில் அவனிமுதலிய இடங்களில் குடியேறியதைக் கல்வெட்டுகள் மறைமுகமாகத்தெரிவிக்கின்றன என்கிறார்கள். இங்கு கர்நாடக மாநிலம் அவனிகுன்று ஏகாந்த ராமேஸ்வரர் திருக்கோயிலுக்கு அகம்படிபெரிய உடையான்நான தந்திரபாலன்

அளித்த கொடைகள் பற்றி எபிகிராபியா கர்நாடக தொகுதி குறிப்பிடுவது ஒப்புநோக்கத்தக்கது.

மெட்ராஸ் மாவட்ட கெஜட்டியர் தொகுதி17, பக்கம்:115 இல், அகமுடையார்களை வேளாண்தொழில் செய்பவர்களாகக் (Cultivating Class) குறிப்பிடுகிறது. குலம் என்பது பல குடிகள் சேர்ந்த தொகுதி என்றும், எடுத்துக்காட்டாகப் பள்ளியர், கவுண்டர் அகம்படியர், குடியானவர் முதலிய பல குடிகள் சேர்ந்த தொகுதி வேளாண்குலம் என்று குறிப்பிடுகிறார் தேவநேயப்பாவாணர் (சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் பக்கம்: 44)

திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த கோட்டை வேளாளர்கள் உண்மையில் கோட்டைப்பற்று அகமுடையார்களே என இவர்கள் நம்புகின்றனர் என்று திரு.எட்கர் தர்ஸ்டன் தனது தென்னிந்திய குலங்களும் குடிகளும் நூலில் (தொகுதி: 1) பதிவு செய்கிறார்.

கீழிருந்து பார்வை என்ற ஆங்கில நூலின் ஆசிரியர் திருமதி. கணகலதாமுகுந் (The view from Below : Indigenous Society, Temple and Early Colonial State in Tamil Nadu (1700 to 1835) அவர்கள் அகமுடையார்கள் வேளாண்தொழிலில் ஈடுபட்டிருந்தவர்கள் என்றும் அவர்கள், வேளாளர் தகுதிக்கு உரிமை கொண்டாடினர் என்றும், குறிப்பாக சென்னையையொட்டிய வடக்கு மாவட்டங்களில் இவ்வாறு உரிமை கொண்டாடினர் என்று பதிவு செய்கிறார். ஆனால் அகமுடையார்கள் வடக்கு மாவட்டத்தில் மட்டுமல்லாமல் தென்மாவட்ட ராஜகுல அகம்படியர்களில் கீழமண்டு, மேலமண்டு பிரிவைச் சார்ந்தவர்கள் வேளாளர் என்று பொருளையுடைய காரளர் என்று தங்களை அழைத்துக்கொண்டதையும், கொங்கு பகுதியில் உள்ள அகம்படியர் தங்களை கதிர்முனை தீண்டாத காராளன் என்று குறிப்பிட்டுக்கொண்டதையும், பூவைசிய அகம்படிய வேளாளர் என்று தஞ்சாவூர் பகுதியில் நிலவுடமையாளர்களாக மாறியிருந்ததையும், அரசு என்று உரிமைபாராட்டிய புதுக்கோட்டைப் பகுதியில் சிற்றரசர்களாக இருந்த அகம்படி வேளாளர்களையும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. முன்பு குறிப்பிட்ட கீழிருந்த பார்வை என்ற நூலில் ஆங்கிலேய கிழக்கிந்திய கம்பெனியில் அகமுடையார்கள் அதிகாரமும் செல்வாக்கும் மிக்க ஜென்டில்மேன் பதவிகளில் இருந்தனர். இவ்வகமுடையார்கள் துபாஷிக்களாகப் பணியாற்றினார்கள் என்று பதிவு செய்யப்படுகிறது. ஆனந்தரங்கன் பிள்ளை நாட்குறிப்பில் (தொகுதி 6 - பக்கம்: 266) வேலப்பமுதலி,

*ஆறுமுகத்தா முதலி போன்ற அகமுடையார்கள் துபாஷிகளாக இருந்ததைக் குறிப்பிடுகிறார்.*

*துளுவ வேளாளர் பற்றிப் பல்வேறு கருதுகோள்கள் ஆய்வாளர்களால் முன் வைக்கப்படுகிறது. துளுநாட்டில் புகுந்து பரவிய வேளிர் துளுவ வேளாளர் எனப்பட்டனர் என்கிறார் திரு.மு.இராகவையங்கார், தனது "வேளிர் வரலாறு" நூலில் (பக்கம்: 27)*

*வரலாற்றாசிரியர் திரு.மா.இராசமாணிக்கனார் தனது பத்துப்பாட்டு ஆராய்ச்சி நூலில் (பக்கம்: 231) "கரிகாலன் காடுகெடுத்து நாடாக்கிய பின்பு அங்கு வேளாளரைக் குடியேற்றினான். அவ்வேளாளர் துளுநாட்டு வேளாளர் ஆவர்கள். அவர்கள் தொண்டை மண்டலத்தில் தங்கிவிட்டதால் தொண்டை மண்டலத் துளுவ வேளாளர் எனப்பட்டனர் என்று செவிவழிச் செய்தி செப்புகிறது" என்று பதிவு செய்கிறார்.*

*திரு.டி.பி.இராமச்சந்திர முதலியார் அவர்களின் மைத்திக் சொசைட்டி காலாண்டிதழில்* (Quarterly Journal of Mythic Society Vol. X, 1920, Issue 4, Pages 289 to 292) *வாசித்தளித்த கட்டுரையில் "தென்கர்நாடகமான துளுநாட்டைச் சேர்ந்த வேளாளர் துளுவ வேளாளரானார், வெள்ளத்தை கட்டுப்படுத்தியவன் வேளாளன் என்று பெயர் பெற்றான், மேகத்தை கட்டுப்படுத்தியவர் காராளன் எனப்பட்டான், வில் அம்புகளையுடைய நாட்டுக்குரியவர் வில்லுபெட்ட நாட்டான் எனப்பட்டான், காசி என்ற படையை மேலாண்மை செய்தவர் காசிக்காவலன் ஆனான், நிலத்துக்குச் சொந்தக்காரன் அகமுடையானான், மேகத்தை பாதுகாத்தவன் காரைக்காட்டன் ஆனான். தொண்டைச் சக்கரவர்த்தி துளுநாட்டு வேளாளர்களின் உதவியால் குரும்பர்களை வென்று பின்பு துளுவ வேளாளர்களைத் தொண்டை மண்டலத்தில் குடியமர்த்தினார். துளுவ வேளாளர்கள் 80 கிராமங்களையும், 2000 ஏக்கர் நிலத்தையும் பெற்று அங்கு வீடுகளைக்கட்டி வாழத்தொடங்கினர்" என்று பதிவு செய்கிறார்.*

*திரு.ந.சி.கந்தையாபிள்ளை தனது "தமிழர்சரித்திரம்" எனும் நூலில் (பக்கம்: 89, 90) "வேளாளர் கங்கை குலத்தவர், கங்கை வம்சத்தவர் என்று அழைக்கப்பட்டனர். வேளாளர் பெரிதும் வாழ்கின்ற மைசூரின் ஒருபகுதி பத்தாவது, பதினொராவது நூற்றாண்டுகளில் கங்காவதி என்று அழைக்கப்பட்டது. ஒரிசாவை ஆண்ட இன்னொரு பரம்பரை கங்கை வம்சம் எனப்பட்டது.*

கரிகாலன் அருவாளரை வென்று அவர் நாட்டை தனது தேசத்தோடு இணைத்த போது வெற்றி கொண்ட நிலத்தை வேளாண் பிரபுக்களுக்குப் பகுந்தளித்தான். அப்பிரபுக்களின் வழிவந்தோர் பெரும் நிலமுடையோராய் ஆங்கில அரசின் கீழ் சிறு ஜமீன்தாரர்களாய் இருந்திருக்கின்றனர், அவர்கள் இப்பொழுது முதலிமார் என்று அழைக்கப்படுகின்றனர். முதலிமார் என்பதற்கு முதற்சாதி என்பது பொருள்" என்று பதிவு செய்கிறார்.

"ஆரிய திராவிடரும், அழிந்து போன சங்கங்களும்" என்ற நூலின் ஆசிரியர் திரு.ஜெகன்நாதன் துரை அவர்கள் (பக்கம்:24) அண்மைக்காலம் வரை கோசர்களாகிய வேளாளர் படைத்தலைவராக இருந்திருக்கின்றனர் எனலாம், நாளடைவில் துளுநாட்டு கோசர் துளுவ வேளாளர்ரானதாகப் பதிவு செய்கிறார். பெரும் புகழையுடைய மாறானைத் தலைவனாகக் கொண்டு போரில் அஞ்சாது மேற்சென்று பகைவரைக் கொல்லும் தப்பாத வாளையுடைய இளையராகிய பல கோசர் எனக் கோசரைப்பற்றி மதுரைக்காஞ்சி கூறுகிறது. இவர்கள் விற்றொழில் வல்ல வீரக்குழுவினர் என்று தெரிகிறது என்பார் முனைவர் இரா.தெய்வம் அவர்கள் (மூவேந்தர்களின் குடிச்சிறப்பு, பக்கம்: 110). தமிழகம் முழுவதும் கோசர்கள் படைவீரர்களாகவும், கோட்டைக் காவலராகவும் வாயில் காப்போராகவும் அரசரிடமும், செல்வரிடமும் பணியாற்றினர் என்று கோசர்களைக் குறிப்பிடுகிறார், பன்மொழிப்புலவர் திரு.கா. அப்பாத்துரையார் (கொங்குத்தமிழக வரலாறு). மேலும் அவர், கோசர்கள் போர் ஒன்றையே வாழ்க்கைத் துணையாகக் கொண்டு எப்போதும் போர்த்திறப் பயிற்சிகளிலேயே ஈடுபட்டிருந்தவர்கள் ஆவர். அவர்களைக் குறிப்பிடும்போதெல்லாம் சங்கப்புலவர்கள் வெண்வேல்கோசர், வாய்வாள் கோசர் இளம்பல்கோசர் என வாளும் வேலும் தாங்கிய அவர்களின் வீரத்தோற்றத்தையும் இளமைத்துடிப்பையும் தன்னாண்மைப் போக்கையுமே நம்கண்முன் கொண்டுவருகின்றனர் என்கிறார்.

துளு நாட்டிலிருந்து வந்த வேளாளர்கள் தொண்டைமண்டலத்தில் குடியேறினர். அவர்கள் தொண்டைமண்டல துளுவ வேளாளர் என்று அழைக்கப்பட்டனர் என்கிறார் திரு.க.இந்திரசித்து அவர்கள், தனது தமிழ் அறிஞர்களும் இலக்கியங்களும் நூலில் (பக்கம்: 142).

வேளாளர் என்பதற்கு அகம்படியர், பிள்ளை, தேவர் என்று குறிப்பிடுகிறார் வேளாங்கண்ணி தொடர்பான ஆங்கில நூலின் ஆசிரியர் திரு.பி.ஜெபஸ்டியா (Mariyamman – Catholic Practices and Images of Virgin in Velankanni Brigitte Sebastia _ Page No.20)

சமூகங்கள், பிரிவுகள், ஒத்தப்பெயர்கள், துணைப்பெயர்கள், பட்டங்கள் என்ற ஆங்கில நூலின் (Communities, Segments, Synonyms and Titles by Kumarsuresh Singh, Page No.1858) ஆசிரியர் திரு.குமார் சுரேஷ்சிங் இவர்களைத் தொழுவ வேளாளர் / அகமுடையார் என்றே குறிப்பிடுகிறார்.

சமூக அசைவியக்கத்தின் பயனாய் சமூகப்பெயர்வுகள் பற்றிக் குறிப்பிடும் திரு.கார்த்திகேசுத் சிவத்தம்பி, இலங்கையில் அகம்படியார், மடப்பள்ளி, தனக்காரர், செட்டிமார், எண்ணெய் வணிகர் போன்ற சாதியினரும், சில பின்தங்கிய பிரதேசக்காரர்களும் இப்பொழுது படிப்படியாக வெள்ளாளர் என்ற பெருங்குழுமத்தினுள் வந்துள்ளனர், வந்து கொண்டிருக்கின்றனர். இத்தகைய ஓர் அசைவியக்கம் முன்னரும் நிகழ்ந்துள்ளது என்கின்றக் கூற்றைப் பதிவு செய்கிறார் (தமிழர் மானிடவியல்). கேரளாவில் நாயர் என்ற பெரும் குழுமம் நோக்கி, வணிகம், கைநுட்பத்தொழில், எண்ணெய் வணிகம், பல்லாக்கு சுமத்தல் போன்ற பல்வேறு தொழில்வகுப்பாரும் இடம்பெயர்வதை எட்கர் தர்ஸ்டன் சுட்டிக்காட்டுகிறார். சமூக அசைவியக்கத்தில் இதுபோன்ற நிகழ்வு தவிர்க்க முடியாதவை என்பதை ஆய்வாளர்கள் விளக்குகின்றனர். தமிழகத்தில் அகமுடையார், வேளாளர் தன்மை நோக்கிய நகர்வும் அத்தகையதே. அத்துடன் வேளாளர் என்ற நிலையைக்கோரிய இனங்களை எட்கர் தர்ஸ்டன் கீழ்க்கண்டவாறு பதிவுசெய்கிறார். வேட்டுவரான வேட்டுவவேளாளர், பூலுவரான பூலுவவேளாளர், பணிக்கன்களான இல்லம் வேளாளர், கரையான்களான கனாத்துறை வேளாளர், சாணாரன கருகமட்டை வேளாளர் பலிசரான காசுல வேளாளர், செம்படவர்களான குக வேளாளர், வண்ணாரான ஈர்குளி வேளாளர் வருணனை முன்வைத்து பட்டனவன்கள் தங்களை வருணகுல வேளாளர் மலையாளிகள் மலைப்பகுதியில் குடியேறிய வேளாளர் என்று பல்வேறு இனங்கள் வேளாளர் நிலையை நோக்கிய நகர்வினைப் பதிவு செய்கிறார்.

“வேட்டவலம் வரலாறு” நூலின் ஆசிரியர் டாக்டர் திரு.இல. தியாகராஜன் அவர்கள் திருக்கோயிலூர் பகுதிகளில் மிகுதியாக

வாழ்கின்ற அகமுடையார் (அகம்படிகள், அகம்படி முதலிகள்) என்ற இனமக்களின் முன்னோராக மலையமான் குடும்பத்துச் சித்தவடவன் அகம்படவனான உத்தமசோழ மிலாடுடையார் திகழ்ந்தார் என்று குறிப்பிடுகிறார். மேலும், அவர் உடையார், முதலியார் பிள்ளை, நாயக்கர், அகமுடையார், துளுவ வேளாளர் என்னும் பட்டம் மற்றும் இனப்பெயர்களுடன் வாழ்கின்ற இவர்கள், மலையமான் மிலாடுடையார் குடும்பத்து வழிவந்தவர்களே என்று பக்கம் 64இல் குறிப்பிடுகிறார். சோழர் காலத்தில் நில உடைமையாளர்களாக வேளான், உடையான், கிழான் என்ற பட்டத்துடன் வாழ்ந்தவர்களே இன்றைய நத்தமரும் துளுவ வேளாளரும் என்று பக்கம் 12இல் பதிவு செய்கிறார். அத்துடன் விஜயநகர துளுவ வம்ச மன்னர்களின் ஆட்சி இப்பகுதிகளில் நிலவியபோது இங்கு வாழ்ந்த இவர்கள் தங்களின் விசுவாசத்தையும், அரசப்பதவி உரிமைகளையும் அடையாளம் காட்டிக்கொள்ள துளுவ வேளாளர்கள் என அழைத்துக்கொண்டனர் என்றும் பதிவு செய்கிறார். தொடர்ந்து, இவர்கள் சிற்றரசர்களாகவும், தளபதிகள் மற்றும் அரசாங்க உயர் அலுவலர்களாகவும் விளங்கியதுடன், இந்தநிலை விஜயநகர துளுவ வம்ச மன்னர்கள் காலத்திலும் தொடர்ந்து நீடித்தது என்றும் குறிப்பிடுகிறார்.

“மேலபாடி” என்ற நூலின் ஆசிரியர் பூ.கல்பனா அவர்களும் உண்மையில் இப்பெயர் (துளுவ வேளாளர்) தொழு என்றிருக்க வேண்டும் என்கிறார். அறிஞர்கள் திரு.காழி.சிவ கண்ணுசாமி பிள்ளை அவர்களும் திரு.மு.அப்பாத்துரைப்பிள்ளை அவர்களும் மொழிபெயர்தியற்றிய “கால்டுவெல் ஒப்பிலக்கணம்” (கழக வெளியீடு) என்ற நூலில் பக்கம்: 45 இல், துளுமொழி பற்றிக் குறிப்பிடும்பொழுது, “சென்னைக்கு அருகில் வசித்துவந்த குரும்பர்கள் என்ற நாடோடி இடையர்கள் துரத்தப்பட்டு அவர்களுடைய நிலபுலன்கள் துளுநாட்டு வேளாளர்களுக்கு வழங்கப்பெற்றன, என்ற ஒரு பழங்கதையை எல்லீஸ் கூறியுள்ளார். சென்னையும், சென்னையையடுத்தும் உள்ள சில குடும்பத்தினர் தங்களை துளுவ வேளாளர் என்று அழைத்துக்கொள்வதும், மேற்குறித்த பழங்கதைக் கொள்கையை வலியுறுத்துவதாகும். இருந்தாலும், துளுநாட்டிலிருந்து பலர் சென்னைக்கு வந்து குடியேறியிருக்கக்கூடும் என்று கொள்வதற்கில்லை. ஏனென்றால் அவ்வாறிருந்தால் சென்னை நகர தமிழில் சிற்சில துறைகளிலேனும் துளுமொழிப்

பண்புகளை ஏற்று கொண்டிருந்தல் இயல்பாகுமாதலின், அவ்வாறு துளுமொழிக் கலப்பு இருப்பதாகத்தெரியவில்லை என்று பதிவு செய்கின்றனர்.''

இடைக்கால சோழர்கால சமூகத்தில் எல்லாவகையிலும் பரவலாக முதன்மையிடத்தை வகித்த இரு இனங்களாக பிராமணரையும் வெள்ளாளரையும் குறிப்பிடுகிறார்கள், ''தமிழகத்தில் சாதி உருவாக்கமும் சமூகமாற்றமும்'' நூலில் அதன் ஆசிரியர்கள் திரு.நொபொரு கராஷிமா - திரு.எ.சுப்பராயலு. மேலும் இவர்கள், நிலவுடைமையில் 10ஆம் நூற்றாண்டுவரை இருந்துவந்த எளிய கட்டமைப்பு போய் ஒருசெறிவான சிக்கலான கட்டமைப்பு சோழர் ஆட்சியில் ஏற்பட்டதாகப் பதிவுசெய்கின்றனர். அவ்வாறு ஏற்பட்ட கட்டமைப்பை, நொபொரு கராஷிமா அவர்கள் வரலாற்றுப்போக்கில் தென்னகச்சமூகம் நூலில் கீழ்க்கண்டவாறு விளங்குகிறார்.

முதல் இராஜராஜன், முதல் இராஜேந்திரன் ஆகியோர் ஆட்சிக்காலத்தில் சோழராதிக்கம் பேரரசாகப்பரவியதை ஒட்டி எதிரிநாடுகளிடமிருந்து கொணர்ந்து குவிக்கப்பட்ட செல்வம் சோழநாட்டின் மையப்பகுதி மக்களிடையே பகிர்ந்தளிக்கப்பட்டது. அணைகள், ஏரிகள் முதலிய நீர்பாசன வசதிகள் பெருகியதும் அதன் பயனால் விளைச்சல் பெருகியது. பிரமதேய ஊர்கள் நிறைய ஏற்படுத்தப்பட்டமையால் நிலம் சொத்துரிமை மாற்றங்கள் எளிமையடைந்தன. இது முதல் இராஜராஜன் காலந்தொடங்கி பெருகிவந்த அரசு அலுவலர் தொகுதிக்கு உடையவர்களிடமிருந்து நிலங்களை எடுத்து வழங்குவது எளிதாயிற்று. மேலே குறிப்பிட்ட இந்தக்காரணிகள் அகம்படியர்கள் வேளாண்மையை நோக்கிய நகர்வினை எளிதாக்கின என்று முடிவு செய்ய இயலும்.

வெள்ளான் ஊர்களில் செல்வாக்கும் பட்டங்களும் பெற்ற பல நிலக்கிழார்கள் நிறைய நிலம் சொத்துக்களைப் பெற்றிருந்ததோடு அரசாங்கத்திலும் முக்கிய பதவிகளை வகித்ததால் போர்மரபு மற்றும் நிர்வாகப்பதவிகளில் இருந்த அகம்படியருக்கு அகம்படி வேளாளர் என்ற நிலையை அடைவது ஒரு இலகுவான நகர்வாக இருந்திருக்க வேண்டும். இதனை திரு.நொபொரு கராஷிமா & திரு.எ.சுப்பராயலு, கீழ்க்கண்டவாறு பதிவுசெய்கின்றனர் (தமிழகத்தில் சாதி உருவாக்கமும் சமூகமாற்றமும்). இந்த வகையில் 13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு உடைந்த

கல்வெட்டில் காணப்படும் அகம்படிவேளானும், பள்ளி வேளானும் என்ற சொற்றொடர் முக்கியத்துவம் வாய்ந்தது. அதாவது வேளாளர் தகுதிக்கு அகம்படியரும், பள்ளிகளும் உரிமை கொண்டாடினார்களென்று இதை விளக்கலாம்.

பெருகிவந்த நிலக்கொடை, நீர்ப்பாசன அமைப்புகள், விளைச்சல், நாட்டார் அமைப்புகளின் செல்வாக்கு நிலம் ஒரு சமூக அந்தஸ்த்துக்கான குறியீடு போன்ற காரணிகள், போர்மரபு, நிர்வாகத்துறையில் இருந்த அகம்படியர்களை வேளாண்மை நோக்கி நகர்த்தின, இதன் விளைவு அகம்படியவேளாளர் மற்றும் துளுவ வேளார் என்ற பரிணாமத்தை அவர்களுக்கு அளித்தது.

★★★

# 8.
# கல்வெட்டுகளில் அகம்படியர்கள்

"அகம்படியார் என்றும், அகம்படி முதலிகள் என்றும் அழைக்கப்பட்ட இவர்கள், மன்னர்களின் படைப்பிரிவுகளில் முதன்மை பெற்றவர்களாக விளங்கினர் என்பது படைமுதலிகள், இராசராச கோவலராயனின் அகம்படி முதலிகள், உடையவார் காடவராயனின் அகம்படி முதலியான அரசநாராயண பல்லவராயன், நாயனார் சோழகங்கதேவனின் அகம்படி முதலிகளில் நடுவனான கலியுகமெய்யனான நந்திபன்மன், அகம்படி முதலியான எதிரிகள் நாயன் பொத்தப்பிச்சோழன் என்பன போன்ற கல்வெட்டுக் குறிப்புகளால் பெறப்படுகிறது".

"அகம்படி முதலிகள் அரசுப்பணியிலும் அரண்மனைப்பணியிலும் சிறப்பிடம் அளிக்கப்பட்டிருந்தனர், அவர்கள் அரசர்களின் மெய்க்காப்பாளராகப் பணிபுரிந்து அவர்களின் உடலையும் உயிரையும், உடைமைகளையும் காத்தனர் என்பது திருமேனிக்கு நன்றாக அகம்படிமுதலிகளில் என்ற கல்வெட்டு வரியினால் பெறப்படும். அரசூரில் இருக்கும் அகம்படியாரில் அரசூருடையான் செங்கனிவாயன் சோழகோனர். அகம்படித்தன முதலிகளின் ஆண்டாளி மகன் அஞ்சாதபெருமானார் அனுப்பத்தூர் அகம்படிப் பெண்டுகளிற் களப்பாளநாச்சி, இவள்மகள் வீரப்பெருமாள் நாச்சி என்பன போன்ற கல்வெட்டு வரிகள் இதற்குச்சான்றாக அமைந்துள்ளன".

(பக்கம்: 46), தமிழ்நாட்டு வரலாறு,
சோழப்பெருவேந்தர் காலம், இரண்டாம் பகுதி.
(கி.பி. 900 - 1300)
தமிழ் வளர்ச்சித்துறை வெளியீடு.

*1.* இந்தியக்கல்வெட்டு ஆண்டறிக்கை *433/1924*ஆம் அண்டின் கல்வெட்டு மற்றும் எபிகிராபியா இன்டிகா தொகுதி *21*, (பக்கம்: *184*). ). (Epigraphia – Indica vol 21) மயிலாடுதுறைக்கு அருகில் உள்ள பல்லவராயன் பேட்டை கல்வெட்டுப்பற்றிக் குறிப்பிடுகிறது.

பல்லவராயன்பேட்டைக் கல்வெட்டு சோழஅரசன் இரண்டாம் இராஜராஜன் காலத்தினது. இக்கல்வெட்டின் ஆண்டு கி.பி.*1165* ஆகும். இக்கல்வெட்டு “அகம்படிநியாயம்” என்ற படைப்பிரிவையும் அதன் தலைவனான திருச்சிற்றம்பல முடையான் பெருமான்நம்பி பல்லவராயன் பற்றியும், அவர் பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து வந்த சிங்களப்படைகளை எதிர்த்து போர்புரிந்ததும், அதன் தண்டநாயகர்களின் தலையை வெட்டி மதுரை கோட்டையில் வைத்ததும், இரண்டாம் இராஜராஜன் மறைந்த போது, சோழநாடு எதிர்கொள்ள இருந்த அரசியல் குழப்பங்களைத் தனது சாதுர்யமான இராஜதந்திரத்தால் தடுத்து நிறுத்தியும், உள்நாட்டு கலகம் ஏதும் ஏற்படாதவாறுப் பார்த்துக்கொண்டும், பழையாறை ஆயிரத்தளியில் இருந்த அரசகுடும்பத்தைத் தமது அகம்படிநியாயம் படைப்பிரிவினைக் கொண்டு பாதுகாத்ததும், பெருமாள்நம்பி பல்லவராயர் இறந்த பிறகு அவர் குடும்பத்தினரது வாரிசுதாரர்களுக்கு சோழமன்னர் நிலதானம் அளித்ததுப்பற்றியும் மேற்படி கல்வெட்டு குறிப்பிடுகிறது. இதில் முக்கிய விசயம் அகம்படிநியாயம் என்ற படைப்பிரிவும் அதற்குத் தலைமை தாங்கிய பெருமாள் நம்பி பல்லவராயனும் அவன் சார்ந்த இந்த அகம்படி நியாயத்தில் இடம் பெற்றப் படைப்பிரிவினர்களாக

1. கோயிற்கொத்து (அரண்மனைப்பரிவாரங்கள்)
2. யானை வீரர்கள்
3. குதிரை வீரர்கள், ஆகியோர்கள் ஆவர்.

“இதனை இராஜராஜதேவர் பத்து கோயிற் கொத்தும், ஆனை குதிரை அகம்படி நியாயமுள்ளிட்ட துறைகளும் முதலிகளுமாய்” என்று குறிப்பிடுகிறார், “தமிழ் இலக்கியவரலாறு” (பன்னிரண்டாம் நூற்றாண்டு) நூல் ஆசிரியர் திரு.எம்.அருணாச்சலம் அவர்கள் (பக்கம்: *329*)

இதனை The Headship of the Several Departments (Thuraigal) of the body of ARMED CAVALRY, RETINUE etc. and was managing such of the official as had been allotted to the chief…… என்று எபிகிராபிகா இன்டிகா தொகுதி *21* குறிப்பிடுகிறது. மேலும் பெருமாள்நம்பி பல்லவராயரை, The

Palace Comptroller of the big household of Periyadevar Raja Rajadevar என்றும் குறிப்பிடுகிறது. நியாயம் என்பதற்கு படை என்றும், இளைய நியாயம் என்பது இளைய படை என்றும், குறிப்பிடுகிறார் கல்வெட்டுத்துறைப் பேராசிரியர் திரு.எ.சுப்பராயலு அவர்கள்.

2. இந்திய கல்வெட்டு ஆண்டறிக்கை 1956–57ஆம் ஆண்டின் கல்வெட்டு எண்.154, மற்றும் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையின் வெளியீடான நாகப்பட்டின மாவட்டக் கல்வெட்டுகள் பக்கம் 204, 205இல் அகம்படி நியாயம் என்ற சோழர்களின் முக்கியமானப் படைப்பிரிவைப் பற்றிக் குறிப்பிடுகிறது. இந்த படைப்பிரிவுப் பற்றிப் பல்வேறு அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர். இந்தக்கல்வெட்டு இரண்டாம் இராஜராஜ சோழனின் பத்தாம் ஆட்சியாண்டில் (கி.பி.1156) நாகப்பட்டினத்தில் கோயில் கொண்டுள்ள அருள்மிகு திருக்காரோணமுடையார் கோயிலுக்கு தொடர்ந்து விளக்கிடுவதற்குகாக, "அகம்படிநியாயம்" என்ற சோழர்களின் அரசப்படைப்பிரிவினர் 83 அன்றாடு நற்காசுளை இக்கோயிலில் உள்ள சிவப்பிராமணர்களிடம் வழங்கி அதிலிருந்து கிடைக்கும் வட்டியில் திருக்காரோணமுடையார் கோயிலில் தொடர்ந்து விளக்கெரிப்பதற்கு உரிய ஏற்பாட்டைச் செய்தனர். இந்தக் கல்வெட்டு திருக்காரோண முடையார் (காயரோகணர்) கோயில் மகாமண்டபத்தின் வடபுறக் குமுதத்தில் இடம் பெற்றுள்ளது. இந்த அகம்படி நியாயம் என்ற சோழர்களின் முக்கிய படைப்பிரிவில் அடங்கியுள்ள படையினர் பெயர்களையும் இந்தக்கல்வெட்டு குறிப்பிடுகிறது.

அகம்படி நியாயம் என்ற படைப்பிரிவில் உள்ளடங்கிய படையினர் அல்லது உட்பிரிவு

1. வேட்டைக்காரர்
2. தெரிந்த வில்லிகள் (தேர்ந்தெடுக்கப்பட்ட வில்வீரர்கள்)
3. அணுக்கவில்லிகள் (அரசர் அல்லது தளபதியின் நெருக்கத்தில் பணியாற்றும் வில்வீரர்கள்)
4. இராஜராஜன் வேளைக்காரர் (மெய்க்காவலர்)
5. இராஜேந்திர சிங்கன் வேளைக்காரர் (மெய்க்காவலர்)
6. (குலோ)த்துங்க சோழன் வேளைக்காரர் (மெய்க்காவலர்)
7. குதிரைச்சேவகர் (குதிரைவீரர்)
8. சேனாபதிகள் (சேனாதிபதி)
9. தண்டநாயகம்.

இந்த ஒன்பது பிரிவினரும் அகம்படி நியாயம் என்ற படையாகக் குறிக்கப்படுகிறது.

இதே கல்வெட்டின் இரண்டாம் பகுதி இதர வேளைக்காரர்களும், மற்றும் அரசப் பணியாளர்களும் இதே இறைவனின் திருக்கோயிலில் விளக்கெரிக்கச் செய்த தானத்தைப்பற்றிக் குறிப்பிடுகிறது. வேளைக்காரர் என்பதற்குச் சோழ அரசர்களுக்கு மெய்க்காவல் செய்யும் ஒருவகுப்பார் என்று குறிப்பிடுவார், தென்னிந்திய அரசியல் என்ற ஆங்கில நூலின் ஆசிரியர் (பக்கம்: 466) திரு.T.V.மகாலிங்கம் அவர்கள் (South Indian Polity by T.V.Mahalingam).

குறிப்பு: அருள்மிகு திருக்காரோண முடையார் நினைவாக காயரோகணம் என்ற பெயரினை அகமுடையார்கள் இன்றும், நாகப்பட்டினம், திருவாரூர் மாவட்டங்களில் சூடிக்கொள்கின்றனர்.

பரிவாரக்கொத்து, பரிவாரக்கொந்தம் என்பதற்குக் கோயிற் பணியாளர்கள் (அரண்மனைப்பணியாளர்கள்) என்றும் கோயிற் கொத்து என்பதற்கு அரண்மனை அல்லது கோயில் பணியாளர்கள் என்று திரு.தி.ந.சுப்ரமணியன் அவர்கள் தென்னிந்தியக் கோயில் சாசனங்கள் நூலின், பக்கம்: 1423இல் குறிப்பிடுகிறார்.

மேலும் வேளைக்காரர்கள் என்ற அமைப்பில் வலங்கை, இடங்கை, சிறுதனம், பிள்ளைகள்தனம், வடுகர், மலையாளர், பரிவாரக் கொந்தம் அகிய பிரிவுகள் இருந்ததாகக் குறிப்பிடுகிறர். அகம்படியர் இடங்கை, வலங்கைப் பிரிவில், வலங்கைப் பிரிவைச் சார்ந்தவர்கள். மேலும் அகப்பரிவாரம், பரிவாரம் ஆகியவை அகம்படியர்ரோடு தொடர்புடையவையே. மலையாளர் பிள்ளைகள்தனம் என்பவையும் அவ்வாரே. வேளைக்காரர் என்பவர்கள் எந்த நேரத்திலும் போரிடத் தயாராக நாட்டின் பல்வேறு பகுதிகளில் நிலைகொண்டுள்ள படை என்பதைத் “தென்னிய அரசியல்” நூல் (பக்கம் 254) குறிப்பிடுகிறது. முதலாம் இராஜராஜசோழன் காலத்தில் 31 நிலைப்படைகளைத் தஞ் சாவூர் கல்வெட்டுகள் வழி திரு.T.V.மகாலிங்கம் குறிப்பிடுகிறார். அவற்றில்

1. பெருந்தனத்து ஆனையாட்கள்.
2. பண்டித சோழத் தெரிந்த வில்லிகள்.
3. உத்தம சோழத் தெரிந்த அந்தகளத்தார்.
4. நிகரிலிச்சோழத் தெரிந்த உடநிலைக்குதிரைச் சேவகர்.

*5.* *மும்முடி சோழத் தெரிந்த ஆனைப்பாகர்.*

*6.* *வீரசோழ அணுக்கர்.*

*7.* *பரந்தக கொங்கள்வார்.*

*8.* *மும்முடி சோழத் தெரிந்த பரிவாரத்தார்.*

*9.* *கேரளாந்தகத் தெரிந்த பரிவாரத்தார்.*

*10.* *சிங்களாந்தக தெரிந்த பரிவாரத்தார்.*

*11.* *சிறுதனத்து வடுகக் காவலர்.*

*12.* *வலங்கைப் பெருப்படைகளிலார்.*

*13.* *பெருந்தனத்து வலங்கை வேளைக்காரப்படைகள்.*

*14.* *அழகிய சோழத் தெரிந்த வேளைக்காரர்.*

*15.* *அரிதுர்க்க லங்கானத் தெரிந்த வலங்கை வேளைக்காரர்.*

*16.* *சண்ட பராக்கிரமத் தெரிந்த வலங்கை வேளைக்காரர்.*

*17.* *இளைய இராஜராஜ தெரிந்த வலங்கை வேளைக்காரர்.*

*18.* *சத்திரிய சிகாமணி தெரிந்த வலங்கை வேளைக்காரர்.*

*19.* *மூர்த்த விக்ரமா பரணத் தெரிந்த வலங்கை வேளைக்காரர்.*

*20.* *நித்திய விநோத தெரிந்த வலங்கை வேலைக்காரர்.*

*21.* *இராஜ கந்திரவ* (Raja Kanthirava) *தெரிந்த வலங்கை வேளைக்காரர்.*

*22.* *இராஜராஜ தெரிந்த வலங்கை வேளைக்காரர்.*

*23.* *இராஜ விநோத தெரிந்த வலங்கை வேளைக்காரர்.*

*24.* *விக்ரமா பராணத் தெரிந்த வலங்கை வேளைக்காரர்.*

*25.* *கேரளாந்தக வாசல் திருமெய்க்காப்பார்.*

*26.* *அணுக்க வாசல் திருமெய்க்காப்பார்.*

*27.* *பரிவார மெய்க்காப்பார்கள்.*

*28.* *பலவகைப்பெரும் படைகளிலார்.*

*29.* *மூலபரிவார விட்டேரு என்ற ஜனநாத தெரிந்த பரிவாரத்தார், ஆகிய படைகள் அடங்கும்.*

இவற்றில் பரிவாரத்தார், மெய்க்காப்பாளர் போன்றவை நேரடியாக அகம்படியரைக் குறிப்பதாகவே கொள்ளலாம்.

சேனாபதிகள் என்பதற்கு இராணுவ முகாம்களுக்குப் பொறுப்பான, இராணுவ அமைப்பு என்கிறார் திரு.T.V.மகாலிங்கம், (A military body in charge of military cantonment (South Indian Polity in page 454).

தண்டநாயகம் என்பதற்குச் சோழ பாண்டிய கல்வெட்டுகளில் இராணுவ தளபதிகளைக் குறிப்பதாக திரு.T.V.மகாலிங்கம் குறிப்பிடுகிறார். (Page 419 – South Indian Polity). தண்டநாயகம் என்பதற்குப் படைத்தலைமை என்று பொருள்தருகிறது தமிழ்க் கல்வெட்டுச் சொல்லகராதி.

கிழக்கின் பொருளாதாரம் மற்றும் சமூக வரலாறு தொடர்பான இதழில் (Journal of the Economic and social History of the orient 21C1), 75-98, 1978) கென்னத் ஆர்.ஹால் எழுதிய மத்திய கால தென்னிந்தியாவின் சர்வதேசவர்த்தகம் மற்றும் வெளிநாட்டு ராசதந்திரம் என்ற கட்டுரையில் (International trade and foreign Diplomacy in Early medieval south India by K.R.Hall) “அகம்படிநியாயம்” என்ற நாகப்பட்டினத்தில் நிலைகொண்ட படையை அரசப்படை (A Regiment of Royal Troops Called Agambadiniyayangal) என்று பதிவுசெய்கிறார்.

சீன மற்றும் இந்திய மேம்பாட்டில் வேர்களும் வழிகளும் என்ற ஆங்கில நூலில் (Roots and Routes of Development in China and India by Jos Gommans and Harrietzurndorfer) “அகம்படிநியாயம்” நாகப்பட்டினத்தில் நிலை கொண்டிருந்த அரசப்படை என்றும் இதில் வரும் வேளைக்காரப்படை நாகப்பட்டினம் துறைமுகம் மற்றும் அங்கிருந்து கடல்மார்க்கமாகத் தூரத் தேசங்களுக்குச் செல்லும் வணிகக்குழுக்களுக்கு காவல் அளித்தவையாகக் குறிப்பிடுகிறது.

அகம்படி, அகம்படியர், அகம்படி முதலி, அகம்படி மறமுதலி, அகம்படிநியாயம், அகத்தார், அணுக்கர், அகப்பரிவாரம், வேளைக்காரர், உடையார், முதலி, தேவன், சேவகர் அங்ககாறன் உள்மனையார், ஏழகத்தார், உரிமைச்சுற்றம், கோயிற்கொத்து, கோயிற்சேவகர், பரிவாரம், நிழல், பரிவாரகொந்தம், மெய்க்காப்பாளர், வாசல், வாளிலள், வில்லிகள், வீரசோழ அணுக்கர் போன்ற பல்வேறு பெயர்கள் கல்வெட்டுகளில்

வழங்கப்பட்டு வந்துள்ளது. இதனை கல்வெட்டுகள் ஆண்டறிக்கை, எபிகிராபிக இந்தியா, எபிகிராபிக கர்நாடிகா, புதுக்கோட்டை சமஸ்தானக் கல்வெட்டுகள், தென்னிந்தியக் கல்வெட்டுத்தொகுதிகள், திருவாங்கூர் தொல்லியல் தொடர், திரு.தி.நா.சுப்பிரமணியன் அவர்களின் தென்னிந்திய கோயில் சாசனங்கள், நூலில் இடம்பெற்ற சாசனச் சொல்லகராதி, மற்றும் திரு.சி.கோவிந்தராசனார் ஆசிரியராக இருந்து மதுரைப்பல்கலைக் கழகம் மூலம் வெளியிடப்பட்ட கல்வெட்டுக் கலைச்சொல்அகரமுதலி ஆகிய நூல்களின் வழி அறியமுடிகிறது. மேலும் தமிழ்ப்பல்கலைக்கழக ஓய்வுபெற்ற கல்வெட்டியல் துறை பேராசிரியர் திரு.ஒய்.சுப்பராயலு அவர்கள் ஆசிரியராக இருந்து, சாந்தி சாதனா வெளியீடான "தமிழ்க்கல்வெட்டுச் செல்லகராதியிலும்" உரிய மேற்கோள்களுடன் விரிவான பொருள் விளக்கம் தரப்பட்டுள்ளன. மேலே குறிப்பிட்ட நூல்கள் வழி கல்வெட்டுகளில் அகம்படியர் தொடர்பாக நேரடியாகவும், மறைமுகமாகவும் இடம்பெறும் பல்வேறு குறிப்புகள் அகம்படியர் தொடர்பான ஆய்வுக்கு உதவக்கூடும்.

3. தண்டிவர்ம பல்லவனின் உருத்திரமல்லூர் கல்வெட்டு அகம்படி உடையான்கள் பற்றிக் குறிப்பிடுகிறது.

(தென்னிந்திய கல்வெட்டுத் தொகுதி VI கல்வெட்டு எண் 344,

எபிகிராபிக இண்டிகா XXIV எண்: 7(A),

இந்தியத் தொல்லியல் வருடாந்திர அறிக்கை: 1898, எண்: 61.

An Agricultural caste figuring in the Pallava Inscription is that of the Agambadiyar in the Uttaramer of inscription of Dandivarman this agricultural caste of apeasants or ryots is known as "Agambadi Udaiyans" (The Caste system in Tamil Nadu K.K.Pillai, Page 20).

4. பல்லவன் கோப்பெருஞ்சிங்கனின் அகம்படி முதலி எதிரிகள் நாயன பொத்தபிச் சோழன் விருத்தாசலம் கோயிலுக்கு விளக்குத் தானம் செய்தது பற்றித் தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி ஏழு கல்வெட்டு, எண் :149 மற்றும் எபிகிராபிக இண்டிகா தொகுதி ஏழு, பக்கம்: 163 குறிப்பிடுகிறது.

5. அரகண்டநல்லூர் இராஜராஜ தேவன் பொன்பரம்பினான் என்ற மகதைப் பெருமானின் நலன் வேண்டி அவனின் அகம்படி முதலி பெருமாள் பாண்டியராயன் அரகண்டநல்லூர் கோயிலில் விளக்கெரிக்க நிலம் தானம் செய்தது பற்றித்

*தென்னிந்தியக்கல்வெட்டுத் தொகுதி ஏழு கல்வெட்டு எண் 1020 குறிப்பிடுகிறது.*

*6. இராஜராஜ கோவலராயனின் அகம்படி முதலி குகையூர் ஸ்ரீகைலாசநாதர் கோயிலுக்குப் பசுதானம் வழங்கியதை திரு.நீலகண்டசாஸ்திரி அவர்கள் எழுதிய சோழர் நூல் (தொகுதி* II, *பக்கம்: 704) குறிப்பிடுகிறது.*

*7. பிற்காலப் பல்லவ மன்னன் முதலாம் கோப்பெருஞ் சிங்கன் ஆட்சியில் அஞ்சாதபெருமாள் என்ற அகம்படித்தன முதலி விருத்தாச்சலம் திருமுதுகுன்றமுடைய நாயனார் கோயிலுக்கு 32 பசுக்கள் தானமாக வழங்கியதைத் தென்னிந்தியக்கல்வெட்டுத் தொகுதி (தொகுதி* X11 *பக்கம் : 55) குறிப்பிடுகிறது. (கல்வெட்டு ஆண்டறிக்கை: 85/1918)*

*8. திருவெண்ணைநல்லூர் கரிபபுரிஸ்வரர் கோயிலுக்கு விளக்கெரிக்க அரசூர் அகம்படியர் வழங்கிய பசுதானத்தைப்பற்றித் தென்னிந்திய கல்வெட்டுத் தொகுதி (தொகுதி* XII *- பக்கம் 72) குறிப்பிடுகிறது.*

*9. மாயவரம் தாலுக்கா, பல்லவராயன் பேட்டையில் இராஜராஜ ஈஸ்வரமுடையார் திருக்கோயிலுக்கு வரவேண்டிய வரிபாக்கியினை வசூலித்த வகையில் அகம்படி முதலியாகிய கயிலாயமுடையான் என்ற சோழகன் பல்லவராயன் செயல்களைத் தென்னிந்தியக்கல்வெட்டுகள் தொகுதியில் (தொகுதி* XII *- பக்கம்: 120) பதிவு செய்யப்பட்டுள்ளது. (கல்வெட்டு ஆண்டறிக்கை எண்.*432/1924).

*10. அரசநாராயணப் பல்லவராயன் என்ற அகம்படிக்கொத்து முதலிபற்றித் திருவெண்ணை நல்லூர் கல்வெட்டுக்குறிப்புப்படி தென்னிந்தியக்கல்வெட்டுத் தொகுதி (தொகுதி* XII *- பக்கம்: 170) குறிப்பிடுகிறது.*

*11. புதுக்கோட்டை சமஸ்தானக் கல்வெட்டுகள், திருவரக்குளம் கோயிலுக்கு அகம்படி முதலி புவனசிங்கத் தேவனின் அறக்கொடைகள் பற்றிக் கல்வெட்டுகள் 432, 435 குறிப்பிடுகிறது.*

*12. அரசூருடையான் செங்கனிவாயன் சோழகோனார் அகம்படித்தன முதலிகளில் என்று தென்னிந்தியக்கல்வெட்டு தொகுதி* XII *- பகுதி ஒன்றில் கல்வெட்டு எண் 118 குறிப்பிடுகிறது.*

*13. குலோத்துங்க சோழக் கடம்பராயர் அகம்படி மறமுதலிகளில் நற்றந் பெரியானான வீரம் அழகிய பல்லவராயன் பற்றிப்*

புதுக்கோட்டைக் கல்வெட்டுக்கள் எண்: 181 குறிப்பிடுகிறது.

14. சோழவரையன் அகம்படியர் பற்றி "திருத்துறைப்பூண்டிக் கல்வெட்டுகள்" நூல் (தமிழக அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை வெளியீடு) குறிப்பிடுகிறது.

15. கர்நாடக மாநிலம் அவனிகுன்று (Avani Hill)ஏகாந்த ராமேஸ்வரர் திருக்கோயிலுக்கு அகம்படி பெரிய உடையான்நான தந்திரபாலன் அளித்த கொடைகள் பற்றி எபிகிராபிக கர்நாடிக தொகுதி X (பக்கம்: 114) குறிப்பிடுகிறது.

16. மூன்றாம் குலோத்துங்கன் ஆட்சியாண்டில், தருமபுரி மாவட்டம் பாலக்கோடு வட்டம் மல்லசமுத்திரம் பெருமாள் கோயில் வடபுறம் உள்ள கல்வெட்டு அகம்படியர் மற்றும் சில இனத்தவர்கள் அளித்த கொடைகள் பற்றிக் குறிப்பிடுகின்றது (பக்கம் 133 செங்குந்தர் வரலாற்று ஆவணங்கள் புலவர் செ.இராசு)

17. தருமபுரி மாவட்டம் பாலக்கோடு வட்டம் மல்லசமுத்திரம் பெருமாள் கோயில் வடபுறம் நிறுத்தப்பட்டுள்ள கல் அகம்படி நேர்தடி விச்சாதிரர் என்பதைப் பதிவு செய்கிறது. இது மூன்றாம் குலோத்துங்களின் 19ஆம் ஆட்சியாண்டைச் சேர்ந்தது. (கி.பி.1197) வித்தியாத்தி, விச்சாத்தி என்பது மாணவனைக் குறிப்பதாக கலாநிதி சூ.வேலுப்பிள்ளை தனது சாசனமும் தமிழும் நூலில் குறிப்பிடுகிறார்.

18. வெண்பாக்கம் உடையார் அகம்படி வேளாளர், கைக்கோளருடன் இணைந்து நிலம் விற்று கோயில் வரிகளைக் கட்டியதைத் திருவண்ணாமலை மாவட்டம் செய்யாறு வட்டம் திருப்பனங்காடு தாளபுரீசுவரர் கோயில் கல்வெட்டுக் குறிப்பிடுகிறது. (பக்கம்: 15, செங்குந்தர் வரலாற்று ஆவணங்கள் புலவர் செ.இராசு).

19. திருவாரூர் மாவட்டம், நன்னிலம் வட்டம் திருப்புகலூர் அக்கினீசுவரர் கோயில் கல்வெட்டு அக்கோயிலுக்கு அகம்படியர் உள்ளிட்ட சில இனத்தவர்களின் கொடைகள் பற்றிக் குறிப்பிடுகிறது. (செங்குந்தர் வரலாற்று ஆவணங்கள் பக்கம் 161 - புலவர் செ.இராசு).

20. மூன்றாம் குலோத்துங்கச் சோழன் ஆட்சியில் பஞ் சநதிவாணன் நீலகங்கன் என்ற சோழகங்க தேவனின் அகம்படி முதலி திருநீர்மலை விஷ்ணு கோயிலில் விளக்கெரிப்பதற்கு

அளித்த கொடைகள் பற்றிச் சென்னை மண்டலத்தின் முந்தய வரலாறு எனும் நூல் குறிப்பிடுகிறது. (பக்கம் 264 The Early history of the Madras region – K.V.Raman, கல்வெட்டு ஆண்டறிக்கை 1913, தொகுதி II).

21. சடையவர்மன் விக்கிரம பாண்டியனின் ஆட்சிக் காலத்தில் (கி.பி. 1344–1352) மன்னார்குடி வட்டம் அப்பரசப்பேட்டை ஆபத்துக்காத்தார் கோயிலுக்கு அகம்படி முதலிகள் தேவதானமாக நிலம் அளித்தச் செய்தி, கல்வெட்டு எண்.240/1980 தமிழ்நாடு கல்வெட்டுத் தொகுதி 2005. (தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை வெளியீடு) குறிப்பிடுகிறது.

22. ஜடாவர்மன் சுந்தரபாண்டியனின் ஆட்சியாண்டில் (கி.பி.1263) போளூர் அருகே ஏழுவம்பபடி கிராமத்தில் அமைந்த கல்வெட்டு அகம்படியர், அகம்படி முதலிகள் தானம் பற்றிக் குறிப்பிடுகிறது. (கல்வெட்டு ஆண்டறிக்கை 891/194142).

23. பிரமாதிராய முத்தரையன் அகம்படியர்களுக்கு நிலம் விற்ற செய்தி ஊட்டத்தூர் கல்வெட்டில் இடம்பெற்றுள்ளன. (திரு நீலகண்ட சாஸ்திரிகள் எழுதிய சோழர், நூல் தொகுதி II இல், பக்கம்: 745இல் குறிப்பிடப்படுகிறது).

24. பலபணி நிவந்தக்காரர்கள் எழுப்பிய அகம்படி விநாயகப் பிள்ளையார் கோவில் பற்றிய செய்தி நல்லூர் கல்வெட்டில் இடம்பெறுவதை நீலகண்ட சாஸ்திரிகள் தனது சோழர்வரலாறு தொகுதி இரண்டில் பக்கம் 726ல் குறிப்பிடுகிறார்.

25. அரசநாராயண பல்லவராயன் என்ற அகம்படி முதலி திருவெண்ணை நல்லூர் திருக்கோயிலுக்குத் தானம் வழங்கியதைப்பற்றித் திரு நீலகண்ட சாஸ்திரி அவர்கள் தனது சோழர் வரலாற்று தொகுதி II இல் பக்கம்: 717இல் குறிப்பிடுகிறார்.

26. அகம்பரிவாரம் பற்றி சிவபுரம் கொர்க்கை, திருவிடை மருதூர் கல்வெட்டுகள் குறிப்புகளைத் தருகின்றன. (திரு நீலகண்ட சாஸ்திரிகள் சோழர் வரலாறு தொகுதி II பக்கம் 618, 669).

27. கல்வெட்டு ஆண்டறிக்கை (ARE) 1933-34இல் கல்வெட்டு எண்.32 இராசநாராயண சம்புவராயர் ஆட்சியில் எழும்போதையன் கங்கையாடி மாதையன் என்ற அகம்படி முதலிபற்றிக் குறிப்பிடுகிறது.

*28. வீரசோழ அணுக்கர் பற்றி இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை (ARE) 1904 கல்வெட்டு எண்.548 தென்னிந்திய கல்வெட்டு தொகுதி XVII எண்.593 குறிப்பிடுகிறது.*

*29. ஆற்றூர் கூற்றத்தைச் சேர்ந்த பொன்பரப்பின வாணகோவரையனின் அகம்படி முதலியாகிய மாறன்குளாந்தான் சேதிராயன், மூன்றாம் குலோத்துங்கனின் கி.பி.1204 ஆம் ஆண்டில் திருப்பாலப்பந்தல் மத்யஸ்தநாத சுவாமி கோயிலுக்கு நிலதானம் அளித்துள்ளதைக் கல்வெட்டு ஆண்டறிக்கை 1937 –38இல் எண்.407 மூலம் "பொன்பரப்பின வாணகோவரையன்" நூல் பதிவு செய்கிறது.*

*30. இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை 1960-61ஆம் ஆண்டில் கல்வெட்டு எண்.306இல் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையின் நாகப்பட்டினம் மாவட்டக்கல்வெட்டுகள் நூல் பக்கம் 152ல் அகம்படி பக்கல் பொத்தகம் என்ற குறிப்பு இடம்பெற்றுள்ளது.*

*31. நன்னிலம் கல்வெட்டுக்கள், தொகுதி 2, பக்கம் 274 (தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடு) அகம்படி மனிச்சரில் சொக்கனான உலக விடங்கப் பேரையன் பற்றிக் குறிப்பிடுகிறது. (மனிச்சம் = மனிதன் சாசனச்சொல் அகராதி பக்கம் 1475 தென்னிந்திய கோயில் சாசனங்கள் தொகுதி II திரு.தி.நா.சுப்பிரமணியன்).*

*32. திருப்பூர் மாவட்டம், உடுமலைப்பேட்டைக்கு அருகில் மடத்துக்குளம் வட்டத்தில் அமைந்துள்ள கடத்தூர் அர்சுனேசுவரர் திருக்கோயில் கல்வெட்டுகள் இத்திருக்கோயில் நந்திமண்டபக் கட்டுமானத்தில் அளித்த கொடையில் அகம்படி வீரசோழ அனங்க கூற்றன் தூண் என்று கட்டுமானத்திற்கு தூண் வழங்கியதைக் குறிப்பிடுகிறது. (வரலாறு இதழ் 109, ஜூலை 6,2014).*

*33. கும்பகோணத்திற்கு அருகில் உடையாளூர் கைலாசநாதர் கோயில் கல்வெட்டு, "பிள்ளை அகமுடையான் வேளாந்தாங்கினான்" என்பவரைப் பற்றிப் பதிவு செய்கிறது. இதனை தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை வெளியீடு கும்பகோணம் வட்டக்கல்வெட்டுகள் (பக்கம் : 106) குறிப்பிடுகிறது.*

*34. அகம்படியரில் உய்யன் திருவநான வீரசிங்கன் பன்மர் என்பவனைப் பற்றி அரசவம்சப்படி வரிசைப்படுத்தப்பட்ட புதுக்கோட்டை சமஸ்தான கல்வெட்டுகள், (கல்வெட்டு எண்.1107, பக்கம் : 660) குறிப்பிடுகிறது.*

*35. மதுரை மாவட்டம் உசிலம்பட்டி, ஆனையூர்க்கண்மாய் மடைத் தூணில் உள்ள கல்வெட்டு, பிள்ளை மஹாவலிவாணராயர் அகம்படி முதலிகளில் பெரியான் உய்யவந்தனான விக்கிரமசிங்க தேவன் பற்றிக் குறிப்பிடுகிறது. கி.பி.பதிமூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த இந்தக்கல்வெட்டு தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை வெளியீடான மதுரை மாவட்டக் கல்வெட்டுகள் நூலில் இடம் பெற்றுள்ளது.*

*36. தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை வெளியீடான மதுரை மாவட்டக்கல்வெட்டுத் தொகுதி2, கல்வெட்டு எண்.210/2003 தேவர் தொண்டைமானார் அகம்படியர் பல்லவரையன் என்பவர் மதுரை மாவட்ட பேரையூர் வட்டம் மேலத்திருமாணிக்கம், திருமாணிக்கமுடைய நாயனார் கோயிலுக்கு அளித்த கொடைகள் பற்றிக் குறிப்பிடுகிறது.*

*37. இராசபாளையம் வட்டம், சோழபுரம் அருள்மிகு விக்கிரபாண்டீச்சுரமுடையார் திருக்கோயிலின் இரண்டு கல்வெட்டுகள் அகப்பரிவாரத்தைச் சேர்ந்த சுந்தரபாண்டிய பல்லவரையன் பற்றிக் குறிப்பிடுகிறது. இதனை விருதுநகர் மாவட்டக் கல்வெட்டுகள் (கல்வெட்டுத் தொகுதி எண்.315, 323/2005) பதிவுசெய்துள்ளது.*

*38. மெட்ராஸ் மாகாணத்தில் 1915 வரைச் சேகரிக்கப்பட்ட கல்வெட்டுகளின் நிலப்பரப்பு அடிப்படையிலான பட்டியல் என்ற நூல் மன்றகலந்தன் என்ற அகம்படி முதலிபற்றிக் குறிப்பிடுகிறது. (கல்வெட்டு எண்.157/1914).*

*39. தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடான, சேலம், நாமக்கல் மாவட்டக் கல்வெட்டுகள் நூலில் பக்கம்: 250இல் சேலம் வட்டம் வாழக்குட்டப்பட்டி, பிள்ளையார் கரட்டுப் பாறை கல்வெட்டில் அகம்படியார் ஏரியின் கீழ் சண்டேஸ்வரர் கோயிலுக்கு நிலம் விடப்பட்ட செய்தி கூறப்படுகிறது. இக்கல்வெட்டு கி.பி.12ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது.*

*40.செஞ்சிக்கு அருகே, செவலப்புரை அகத்தீஸ்வரர் கோயில் கல்வெட்டு பாண்டியர் ஆட்சியில், திருநாமத்துக்காணியாக வழங்கப்பட்ட நிலத்தானத்தில் கையொப்பமிட்டவர்களாக அகம்படிவேளான், காட்டுப்பள்ளி வேளான் ஆகியோர் குறிக்கப்படுகின்றனர் (மகான்கள் வழிபட்ட செவலப்புரை அகத்தீஸ்வரர் கோயில் .......... (புதிய கல்வெட்டுகள் கண்டுபிடிப்பு - ஆனந்த விகடன் 24.09.2019).*

*41.* திருநெல்வேலிக்குக் கிழக்கே மன்னர்படைவீடு என்ற படையினருக்கான நகரத்தில், அகப்பரிவாரம் அல்லது அகம்படிப்பிரிவைச் சேர்ந்தவர்கள் நிறுவிய சேனாபதி ஆழ்வார் என்ற இறையுருவம் பற்றிப் (The King's or the Chief's entourage of the house (Agaparivaram or Agampadi) who have installed an image of Senapati Alvar) பாண்டிய நகரங்கள் என்ற ஆங்கில நூலில் அதன் ஆசிரியர் திரு.ஆர்.திருமலை, அய்.ஏ.எஸ்., (ஓய்வு) பதிவு செய்கிறார். (தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி XXVI).

*42.* மாயவரம் வட்டம், கொறுக்கை வீரட்டானேஸ்வரர் கோயில் கல்வெட்டு (கல்வெட்டு ஆண்டறிக்கை 228/1917) இவ்வூர் திருச்சாமூண்டீஸ்வரமுடையார் கோயிலில் பள்ளியறை நாச்சியார் ஆட்கொண்ட நாயகர் இறைத்திருமேனிகளை எழுந்தருளச் செய்து திருவமுது படைக்க 180 காசுகளைக் கொடையாக வழங்கிய சோழர் அகப்பரிவாரத்தைச் சேர்ந்த அரையன் உமையாழ்வி பற்றிக் குறிப்பிடுகிறது. (கங்கை கொண்ட சோழபுரம் கல்வெட்டுகள் டாக்டர் இல.தியாகராஜன்).

*43.* புதுக்கோட்டைச் சமஸ்தான கல்வெட்டுகள் (கல்வெட்டு எண்.338). அகம்படிமுதலிகளில் பிராங்குடையான் ஆளும் பிரான் பெரிய நாயனான மலையாழ்வி வேளான் என்ற அகம்படியரைக் குறிப்பிடுகிறது.

*44.* திருவோத்தூர் (செய்யாறு) வேதபுரீஸ்வரர் கோயிலின் முன்புற மண்டபத்தில் தென்புறம் சுவரில் உள்ள, கோப்பெருஞ் சிங்கனுடைய 22ஆம் ஆண்டுக் கல்வெட்டு (தெ.இ.க.தொ.7, எண்.104) அனுப்பத்தூர் அகம்படிப் பெண்டுகளில் காளப்பாள நாச்சியும், இவள் மகள் வீரப்பெருமாள் நாச்சியும், திருவேத்தூர் கோயிலுக்கு 2000 காசுகள் கொடுத்து நிலம் வாங்கி திருநாமத்துக் காணியாக அளித்த செய்தியைச் சரித்திரச்செம்மல் திரு.ச.கிருஷ்ணமூர்த்தி, கல்வெட்டுகளில் ஊரும் பேரும் (செய்யாறு) நூலில் பதிவுசெய்கிறார். மேலும் அகம்படி இனத்தைச் சேர்ந்த காளப்பநாச்சி இரண்டு விளக்குகள் வைக்கவும் தானம் செய்துள்ளார் (பக்கம் : 39, 154).

*45.* வீரபாண்டியன் நான்காம் ஆட்சியாண்டில் அத்திப்பற்று அழிவிடைத்தாங்கி நாட்டவர் திருவேத்தூர் உடையார் பூஜைக்கும், மடத்தில் உள்ள தவசிகளுக்கு உணவிற்கும் இறையிலியாக நிலம் வழங்க ஆணையிட்டபோது கையெழுத்திட்டவர்களில் ஒருவராக அகம்படி வேளான் (கல்வெட்டு ஆண்டறிக்கை

*1939/40–115) என்பவரைக் குறிப்பிடுகிறார், சரித்திரச்செம்மல் திரு.ச.கிருஷ்ணமூர்த்தி, தனது கல்வெட்டுகளில் ஊரும் பேரும் நூலில் (பக்கம்: 69, 147).*

*46. கும்பகோணத்திற்கு அருகில் உள்ள திருநல்லூர் சிவன் கோயில் கல்வெட்டுகளில் அகம்படி விநாயகப்பிள்ளையாருக்கு வீட்டு நிலமும், அகம்படியார் கட்டின வீடுகளும், எட்டுத் தென்னை மரங்களும் கோயிலுக்குத்தரப்பட்டுள்ள செய்திகளைக் குறிப்பிடுவதைப் பேராசிரியர் பாவலரேறு திரு.ச.பாலசுந்தரம் அவர்கள் பதிப்பித்த திருநல்லூர்ப் புராணத்தில் பதிவு செய்கிறார்.*

*47. அரண்மனைக்காவல் / வாயில் காவல் எனப்பொருள்படும் பிரதிஹாரீகிருத மஹாவலி குலோத்பவ என்று மஹாவலி வாணராயர் என்ற மாவலி வாணர்கள் குறிக்கப்பெற்றதை கோவிசைய நந்திவிக்கிரமபன்மன் காலத்து (கி.பி.779) கல்வெட்டுகள் (தென்னிந்திய கல்வெட்டுத் தொகுதி111, பகுதி 1, பக்கம் : 91) மற்றும் கி.பி.888 ஆம் ஆண்டு மகாவலி வாணராஜன் கல்வெட்டு மற்றும் வாணமஹாதேவியார் கல்வெட்டுகள் தெரிவிப்பதைக் கல்வெட்டு விளக்கவுரை நூலில் வித்துவான் சுந்தரேசவாண்டையார் பதிவுசெய்கிறார். இக்கல்வெட்டுகள் வடார்க்காடு மாவட்டம் திருவல்லம் அருகில் காணப்படுபவையாகும்.*

*48. துளுவ வெள்ளாளரில் திருப்பெரும்புதூர் திருமணம் அருணாசல முதலியார் மகன் முத்து முனியப்ப முதலியார் கோயில் திருப்பணிப் பற்றிய செய்தியையும், ஜஸ்டி சு.முத்துசாமி முதலியார் சென்னை அருணாசலீசுவரர் கோயிலுக்கு வீடு ஒன்று தானம் அளித்த செய்தியையும் தொல்லியல் அறிஞர் திரு.இரா. நாகாசாமி அவர்கள் பதிப்பாசிரியராக இருந்து வெளியிட்ட "சென்னை மாநகர் கல்வெட்டுகள்" நூலில் (பக்கம்: 198 மற்றும் பக்கம்: 289இல்) பதிவு செய்யப்பட்டுள்ளது.*

*49. ஆவணம் இதழ் 30/2019 இல் சரித்திரச்செம்மல் திரு.ச.கிருஷ்ண மூர்த்தி அவர்கள், திருத்தணி துளுவவேளாளர் சத்திரம் கல்வெட்டு பற்றிக் குறிப்பிடுகிறார். இதில் வேலூர், வாலாஜா வட்டம், நாகவேடு கிராமத்தில் துளுவவேளாளர் குடும்பத்தினர் திருத்தணியில் சத்திரம் ஒன்றை ஏற்படுத்தி அதற்குக் கொடைகள் அளித்ததைத் தெரிவிக்கிறார்.*

*50. வள்ளல் திரு பச்சையப்ப முதலியார் அவர்கள் தொடர்புடைய, திருக்கோயில் பூஜைக்காகவும்,*

கல்விபோதிக்கவும், உணவு வழங்கவும், அவர் ஏற்படுத்திய அறக் கட்டளைகள் பற்றிய கல்வெட்டுகள் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயில், சிதம்பரம், திருவானைக்கா, திருவையாறு, ஆவுடையார்கோயில் ஆகிய திருக்கோயில்களில் காணப்படுகிறது. திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தசாரதி கோயிலில் தேசாந்திரிகளுக்கு உணவு வழங்குவதற்கும் இந்து பிள்ளைகளுக்கு இந்நாட்டு சாத்திரங்களையும், ஆங்கில மொழியையும், கற்பிப்பதற்கு திரு பச்சையப்ப முதலியார் ஒரு லட்சம் வராகன் பணம் அளித்ததைத் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை வெளியீடான "சென்னை மாநகர் கல்வெட்டுகள்" பதிவு செய்கிறது.

★★★

# 9.

# சாசனங்களில் அகம்படியர்கள்

"வெட்டுமாவலி வாணாதிராயர் என்ற மாவலி வாணாதிராயர், சேவித்துத் தம்முடைய பிறந்த நாளின்போது, வழிபாட்டுக்காக வெட்டுமாவலி வாணதிராயர் சந்தி ஏற்படுத்தியுள்ளார். இறைவனுக்கு விசேஷபூஜை செய்ய ஏற்பாடாகி இருந்தது".

சரித்திரச் செம்மல் ச.கிருஷ்ணமூர்த்தி
திருவாடுதுறை ஆதினச் செப்பேடுகள்.

தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகம் வெளியிட்ட கொங்கு நாட்டுச் சமுதாய ஆவணங்கள் (Social Documents of the Kongue Region)என்ற நூலில் அதன் பதிப்பாசிரியர் புலவர் திரு.செ.இராசு அவர்கள் கணக்கன் கூட்டத்தார் பட்டயம் பற்றி விளக்குகிறார். இந்நூலில், இப்பட்டயம் ஈரோடு கலைமகள் கல்வி நிலைய அருங்காட்சியகத்தில் இருப்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பட்டயம் வெட்டுமாவலி அகம்படியர் பற்றிக் குறிப்பிடுகிறது. அகம்படிய சிற்றரசர்களைப் பற்றியும் குறிப்பிடுகிறது.

இப்பட்டயத்தின்படி பாண்டிய நாட்டில் அகம்படிய தேவரில், குருலிங்கராசா என்பவர் வாதவ நல்லூரில் ஆட்சிபுரிந்து வந்தார், இவருக்கு இரு மனைவியர். குருலிங்கராசா மரணமடைந்தவுடன் தும்பிச்சி நாயக்கர் என்ற நாயக்கரின் உதவியால் இளைய மனைவியின் மகன் சிங்கராசா அரசரானார். மூத்த மனைவியின்

மகன்களான மூத்தமகன் சங்கரலிங்கராசா மற்றும் அவர் தம்பிகள் ஐந்து பேரையும் சிறையில் இளைய மனைவியின் மகன் சிங்கராச அடைத்துவிட்டார்.

சிறையிலிருந்து தப்பிய இவர்கள் கொங்கு நாட்டில் காங்கேயம் பகுதியில் குடியேறினர். அப்போது பழையக் கோட்டை பட்டாக்காரர் நல்லாண்பிள்ளை சர்க்கரை மன்றாடியார் அதிகாரத்தைப் பாப்பாக்கவுண்டர் என்பவர் கைப்பற்றிக் கொண்டார். அச்சமயம் சங்கரலிங்கராசவும், அவர் தம்பிகளும் நல்லாண்பிள்ளை சர்க்கரை மன்றாடியாருக்கு உதவி செய்து அவர் அதிகாரத்தைத் திரும்பப் பெற்றுக்கொடுத்தனர். இதற்கு நன்றியாக தங்கள் காணியாட்சியான கொடுமணலை சங்கரலிங்கராசா மற்றும் அவர் தம்பிமார்களுக்கு அளித்தனர்.

இப்பட்டயத்தில் வாதவநல்லூரில் அரசு புரிந்தக் குருலிங்கராசுவின் முன்னோர்களான அகம்படியத் தேவர் மரபினரின் 49 தலைமுறை பெயர்கள் குறிக்கப்பெற்றுள்ளது. கல்வெட்டுகள் மற்றும் இலக்கியங்களில் மாவலிவாணர் மரபினரான வாணதிராயர், வாணகோவரையர், வெட்டுமாவலி வாணதிராயர் ஆகியோர் அகம்படி மரபினராக அறியப்பட்டதிற்கு வழுசேர்க்கும் விதமாகவும், கூடுதல் ஆதாரமாகவும் இந்தப்பட்டயம் விளங்குகிறது. இப்பட்டயத்தில் பாண்டிய நாட்டிலிருந்து கொங்குப் பகுதியில் குடியேறிய அகம்படியர்கள் தங்களை வெட்டுமாவலி அகம்படியர் என்று அழைத்துக்கொண்டதை அறியமுடிகிறது. சங்கரலிங்கராசா மரணமடைந்த நிலையில் கொங்குப்பகுதியில் குடியேறிய வெட்டுமாவலி அகம்படியர்கள் அவரை அடையாளங்கண்டு குருலிங்கராசா சந்ததியினருடன் இணைகின்றனர். இப்பட்டயத்தின்வழி அகம்படிய தேவர்கள் பாண்டிய நாட்டில் வாதவநல்லூரில் ஆட்சியாளராக இருந்ததையும், வெட்டுமாவலி என்ற மாவலி வாணதிராயர் மரபினராகவும், கருதுமுனை (கதிர்) தீண்டாத காரளர், உலக்கை பிடியாத குலக்கொளுந்து வர்க்கம், ஆடையழகுடைய அகத்தீட்டாக்கால் பிறந்திடாப் பெரியோர், வன்மையும், சீறும், ஆண்மையுள்ளார், கைக்கொண்டாரை பின்விடாமல் காக்கின்ற பெரியோர், மாலையும் வாழ்த்தும் மங்களமுடையோர், கன்னல், கதலி, கமண்டலங்காத்த காராளன், பொன்முடி சித்திரமேழித் தலைவர், பூமிபாலன் என்று குறிப்பிடப்படுவதையும் அறிய முடிகிறது.

*அகமுடையார்கள் இடம்பெறும் சில செப்பேடுகளை திரு.புலவர் செ.இராசு அவர்களின், சேதுபதி செப்பேடுகள், தஞ்சை மராட்டியர் செப்பேடுகள் ஆகிய நூல்களில் காணக்கிடைக்கிறது. அந்தவகையில் இரகுநாதசேதுபதியின் இளமனூர்ச்செப்பேடு சோளகை சேருவைக்காரனுக்கு இளமநேரியை உரிமையளித்ததையும், பாலிசாதனச்செப்பேடு உடையக்காள் என்ற அகம்படிய பெண்ணுக்கு வலையர் சமூகத்தினர் அளித்த அடைக்களமும், சிறப்பையும் கூறுகிறது. வயிரவன் சேர்வை நிர்மாணித்த இரணபலி முருகன் கோயிலுக்கான கொடைகள் பற்றிப் பெருவயல் செப்பேடு கூறுகிறது. சாக்காங்குடிச்செப்பேடு, இராமநாதபுரம் கோதண்டராமசுவாமி கோயிலுக்கான கொடைகள் அளித்தவர்களாக பல சேருவைக்காரர்களைக் குறிப்பிடுகிறது. பொ.ஆ.1746 ஆம் ஆண்டின் முத்துக்குமார விசைய ரகுநாத சேதுபதியின் இராமேஸ்வரம் செப்பேடு இராமேஸ்வரம் இலட்சுமணதீர்த்தம் தொடர்பாக விசாரணையில் தளவாய் வெள்ளையன் சேர்வை, சேதுபதி தரப்பில் கலந்து கொண்டதைக் குறிப்பிடுகிறது. பெருவாய்க்கோட்டை செப்பேடு முத்துவிசயன் சேருவைக்காரனுக்கு வழங்கப்பட்ட சிறப்புரிமைகளைக் குறிப்பிடுகிறது.*

*தஞ்சை மராட்டியர் செப்பேடுகளில் சித்தாய்மூர் பொன்வைத்த நாதசுவாமி கோயில் செப்பேடு மற்றும் சரசுவதிமகால் செப்பேடு 7, ஆகியவை கோயில் கொடைகள் தொடர்பானவற்றில் அகம்படியர்கள் ஒப்புதல் கையொப்பமிட்டதைத் தெரிவிக்கிறது. துளுவவேளாளர் பழனிபட்டயத்தை ராம.மா.இராமையாபிள்ளை குறிப்பிடுகிறார். இதில் துளுவ வேளாளர்க்குச் சொந்தமான மடம் பற்றிக் குறிப்பிடப்படுகிறது.*

★★★

# 10.
# அகராதிகளில் அகம்படியர், அகமுடையார்

அகம்படி : அகம்படிச் சாதியைச் சேர்ந்த வீரர் (பெரிய தேவர் இராஜராஜதேவர் பேர்த்து கோயிற் கொத்து மாவர்க்குதிரை அகம்படி நியாயம் உள்ளிட்ட துறைகளுக்கும் (Epigraphia Indica – XXI, 31)

அகம்படியர் : அகம்படி இனத்தைச்சேர்ந்தவர், (கூத்தாடுந்தேவர் அகம்படியாரில் தந்திரபாலன் பெரியுடையாநேன். Epigraphia Carnatica X Mb 53)

பக்கம் : 2, தமிழ்க் கல்வெட்டுச் சொல்லகராகதி
முதல் தொகுதி, திரு.எ.சுப்பராயலு
கல்வெட்டியல் துறைப் பேராசிரியர் (ஓய்வு).

அகம்படியர் : அணுக்கத்தொண்டு செய்வோர்.
அகமுடையார் : நிலமுடையவன், அகம்படியர் சாதியை சார்ந்தவன்
தமிழ்ப் பேரகராதி (Tamil Lexicon),
சென்னைப் பல்கலைக்கழகம்.

*தமிழில் கல்வெட்டு மற்றும் இலக்கியம் தொடர்புடைய அகராதிகள், அகம்படியர், அகமுடையார் என்ற சொற்கள் பற்றி ஆழமான விளக்கங்களைத் தருகிறது. இலக்கியம் தொடர்பான அகராதிகளைவிட, கல்வெட்டு அகராதிகள், அகம்படி, அகம்படியர், அகமுடையார் மற்றும் அதன் பொருள் விளங்கநிற்கும் அகப்படை, அணுக்கத்தொண்டு, அகப்பரிவாரம், பரிவாரம், மெய்க்காப்பாளர், வேளைக்காரர் போன்ற பல்வேறு*

சொற்களுக்கு, போர்மரபு, படை, காவல், இராணுவம், நிர்வாகம் என்ற தன்மையில் விளக்கம் தருகிறது.

கல்வெட்டுகள் காட்டும் அகம்படியர்கள் படைவீரர்களாகவே இருந்துள்ளனர் என்பதை இலங்கைக் கல்வெட்டு அறிஞர் திரு.சி.பத்மநாதன் அவர்கள் தனது "இலங்கைத் தமிழ்ச் சாசனங்கள்" நூலில் (பக்கம்: 262-265) கீழ்க்கண்டவாறு பதிவு செய்கிறார்.

"அகமுடையான் என்பது அகம்படியன் என்பதன் திரிபாகலாம். அந்தத்திரிபும் பாமரவழக்கில் ஏற்பட்டவொன்று, அகம்படியார் மாளிகையிலும் மனையகத்தும் குற்றேவல் புரிகின்ற பணிமக்கள் என்ற கருத்து அகராதிகளின் தொகுப்பாசிரியர்களுக்கும் ஏற்புடையதாகிவிட்டது. அகம்படியர் பற்றி இந்நாட்களில் வழங்கும் கருத்துக்குச் சாசனக் குறிப்புகள் ஆதாரமாக அமையவில்லை. சாசனங்கள் குறிப்பிடும் அகம்படியார் படைவீரர்களாகவே காணப்படுகின்றனர்".

அகம்படியர், அகமுடையார் தொடர்பான விளக்கங்களைக் கல்வெட்டுகள் தொடர்பான அகராதிகள் பதிவு செய்கின்றன. தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை மூலம் கல்வெட்டு அறிஞர் திரு.தி.நா.சுப்பிரமணியன் அவர்களை ஆசிரியராகக்கொண்டு வெளியிடப்பட்ட "கல்வெட்டுச் சொல்லகராதி" (Epigraphical Glossary), வரலாற்றாய்வாளர் திரு.சி.கோவிந்தராசனார் அவர்களை ஆசிரியராகக் கொண்டு மதுரை காமராசர் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை வெளியீடான "கல்வெட்டு கலைச்சொல் அகரமுதலி" ஓய்வு பெற்ற, தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் துறைப் பேராசிரியர் திரு.எ.சுப்புராயலு அவர்களைத் தொகுப்பாசிரியராகக் கொண்டு "சாந்திசாதனா" வெளியீடான "தமிழ்க் கல்வெட்டுச் சொல்லகராதி" ஆகிய அகராதிகள் குறிப்பிடத்தகுந்த தமிழ் கல்வெட்டுகள் தொடர்பான அகராதிகள் ஆகும்.

இந்த மூன்று அகராதிகளுமே அகம்படியார், அகமுடையார் தொடர்பான பல்வேறு சொற்களுக்கு ஆழமான விளக்கத்தைத் தருகிறது.

*அறிஞர் திரு.தி.நா.சுப்பிரமணியன் அவர்கள் தனது "கல்வெட்டுச் சொல்லகராதி" (Epigraphical Glossary) இல் தரும் விளக்கங்கள்.*

| | | |
|---|---|---|
| 1. அகப்பரிவாரம் | : | அரண்மனையிலே பணிசெய்யும் பரிவாரம். |
| 2. அகம்படி | : | குடும்பம், குடும்பத்தைச் சேர்ந்தது, உள்துறை, அந்தப்புரம். |
| 3. அகம்படி உடையான் | : | குடி, குடிமக்கள், குடும்பி, |
| 4. அகம்படி முதலிகள் | : | அரண்மனை அந்தப்புரத்தைச் சேர்ந்த அதிகாரிகள் (அகம்படி மற முதலிகள்... முவேந்த வேளார்) |
| 5. அணுக்கர் அணுக்கியர் | : | அரசர் முதலியோரிடம் நெருங்கிப் பணிபுரிவோர், அந்தரங்க ஊழியர் |
| 6. அணுக்கச் சேவகம் | : | அணுக்கராகச் சேவை செய்வது. |
| 7. உடன் கூட்டம் | : | அரசனோடு கூடவே செல்லும் மந்திரிகள் போன்ற உயர்தர அதிகாரிகள். |
| 8. உடன் கூட்டத்ததிகாரி | : | அரசன் பக்கத்தில் இருக்கும் பரிவாரமான உடன் கூட்டத்து அதிகாரி. |
| 9. உடனிலைக் குதிரைச் சேவகர். | : | குதிரையேறிய மெய்க்காவலர் |
| 10. உடைப்படை | : | நிலைப்படை |
| 11. உடையார் | : | அரசன், உரியவன், கோயிலில் எழுந்திருக்கும் எம்பெருமான். |
| 12. முதலி(யார்) | : | தலைவன், பெரியோர் |
| 13. முதலிப்பிள்ளை | : | தலைமை முதலிப்பதவியில் உள்ளவனுக்கு அடுத்தப்படியாக உள்ளவன் போலும். |
| 14. கணகன் | : | கணக்குப்பிள்ளை |
| 15. கணபெருமக்கள் | : | ஊர்காரிய நிர்வாகிகள் |
| 16. ராகுத்தராயன் | : | குதிரைவீரர்களின் தலைவன் |
| 17. இராசகாரியம் | : | அரசாங்க ஊழியம் |
| 18. இராசகுலம் காணிப்பற்று | : | இராஜ குடும்பத்தைச் சேர்ந்தோர். அணுபோகத்தில் உள்ள நிலம் அல்லது கிராமம். |

| | | |
|---|---|---|
| 19. வாசல் | : | அரண்மனை வாசல், அதன் பொறுப்பைவகிக்கும் அதிகாரி |
| 20. வாசல் கணக்கன் | : | அரண்மனைக் கணக்கன் |
| 21. வாசல் காரியம் | | |
| 22. வாசல் நிர்வாகம் | : | வாசல் என்னும் அரண்மனை உத்தியோகம், அதை வகிப்பவன் வாசல் முதலி எனவும் பெறுவான் |

*பேராசிரியர் திரு.சி.கோவிந்தராசனார் அவர்களின் "கல்வெட்டுக் கலைச்சொல் அகரமுதலி" தரும் விளக்கங்கள்.*

1. அகப்பரிவாரம் : அரண்மனையில் பணிசெய்யும் அதிகாரிகளுள்ளிட்ட குழுவினர், அந்தரங்கப்பணியாளர்கள்

2. அகம்படி : அந்தப்புரம், அரண்மனையில் சிறந்த பகுதி அரண்மனை நிர்வாக உள்துறை.

3. அகம்படி உடையான் : அந்தப்புர நிர்வாகப் பணியாளர் அதிகாரி, அகம்படி மற முதலிகள்

4. அகம்படித்தன முதலிகள் : அரசன்வாழ் அரண்மனையிலும் அமைச்சர், சேனைத் தலைவர் போன்ற பெருமக்கள் வாழ் இல்லத்தில் அவ்வவர்க்கு அணுக்கப்பணி செய்வாருள் முதன்மையானவர்

5. அகம்படிமற முதலிகள் : படைவீரர்களாய் அரண்மனையில் இருந்து அரச ஊழியம் செய்வாருள் முதன்மையானவர்கள். இவர்கள் அகம்படி சேனை முதலிகள் என்றும் பெறுவர்

6. அகம்படியார் : அரண்மனை மேல்நிலைப் பணியாளர்

7. அடைப்பு முதலிகள் : அரசவைக்குரிய அடைப்பக்காரர்கள், சபையின் காரிய நிர்வாகிகள், கிராம நீர்ப்பாசன முறைகளில் ஈடுபடும் அதிகாரிகள்

8. அணுக்கச்சேவகம் : அரசனிடம் நெருங்கிப் பணிபுரியும் ஊழியம்

9. அணுக்கர் : நெருங்கியவர், அரசர் முதலியோரிடம் நெருங்கிப் பழகும் அந்தரங்க ஊழியர்

10. அதிகாரிச்சி : சோழமன்னர் ஆட்சியில் அரசமாதேவியர்க்கு அணுக்கத்தொண்டு செய்வாரை மேற்பார்வை செய்வதற்கு பெண் அதிகாரிகள் நியமிக்கப்பட்டிருந்தனர் அவர்களே அதிகாரிச்சி எனப்பெயர் பெற்றனர்.

11. அரசர்கரும அணுக்கத்தினர் : அரசனுடைய செயல்களை உடனிருந்து ஆராய்ந்து கூறும் பெருமக்களாகிய அதிகாரிகள் இவர்கள் "அரசர்கருமமாராய்வார்" என்றும் பெயர் பெறுவர்.

12. அரையன் : அரசமரபில் தோன்றியவனாகவோ, அல்லது அரசியலில் பெருந்தலைவனாகவோ, ஊராட்சியில் மதிக்கப்பட்டவனாகவோ இருப்பவனுக்குரிய சிறப்புப்பெயர்

13. காரணவர் : அணுக்க அதிகாரிகள்

14. காரியப்பிள்ளை : அரச காரியங்கள் பார்க்கும் அதிகாரி

15. கேள்வி முதலி : அரசனிடும் உத்தரவுகளை நேரில் கேட்டு எழுதும் அதிகாரி

16. சித்திரமேழி பெரிய நாட்டார் : சித்தரிக்கப்பட்ட கலப்பையினை இலச்சினையாகக் கொண்ட பெரிய நாடெனும் தொண்டை மண்டலத்து வேளாண் வணிகச் சபையார். இவர்கள் பல்லவர் ஆட்சிக்காலம் முதலாக நடுநாட்டிலமைந்த திட்டைக் குடியான வித்யாரண்யபுரத்தினைத் தலைமையிடமாகக் கொண்டு தமிழகமெங்கும் நிலவிய வாணிகச் சபையோராவர்.

இவர்கள் உணவுப்பொருள்களுக்கான பயிர்வகைகளை உற்பத்தி செய்து நாடெங்கும் எடுத்துச்சென்று விற்பனை செய்யும் வணிகராக இருந்திருப்பதுடன். இச்சபையின் உறுப்பினர்களாகிய "திசைவிளங்கு திறலாயிரத்தைந்நூற்றுவரர் பதினெண் பூமி நானா தேசியராகிய வணிகர்கள் செட்டிகள், வளஞ்சியர், ஆகியோரின் கூட்டு வாணிபத்தினால் பொன் வாணிகராகவும், இரத்தின வாணிகராகவும் இருந்துள்ளனர்.

இவர்கள் அறுபத்து நான்கு கிளையுடையவராக இருந்திருப்பதுடன், இவர்களின் வாணிபமும், செல்வாக்கும் அமைந்திருந்த நாடுகள் தொண்ணூற்று இரண்டு என்று கல்வெட்டுகள் குறிக்கின்றன.

17. தொறு : பசுக்கூட்டம், எருமைமந்தை.

18. தொறுநிலை : பசு, எருமை ஆகியவை கட்டும் கொட்டில்

19. தொறுபட்டி : ஆயிரம் மாடுகள் அடைக்கப்பெறும் அளவுள்ள பூமி, ஒரு தொறுப்பட்டி நிலமாகும்.

20. நரபதி : மக்கள் தலைவன், சோழ, பாண்டிய மன்னர்கள் பெற்றிருந்த விருதுப்பெயர்களுள் ஒன்று.

21. படைமுதலி : படைத்தலைவர்கள்

22. பூமிபுத்திரர் : வேளாண்மக்கள், சித்திரமேழிப் பெரிய நாட்டவர் என்னும் கிராம சபையார்.

23. வலங்கைப் பழம்படை : முதல் இராசராசன் ஆட்சியில் அமைக்கப்பட்டிருந்த படைகளுள் பழமையாக வரும் வலங்கைப் படையின் பெயராகும். வலங்கை, இடங்கை என்பது படைகளின் பாகுபாட்டிற்கமைந்த குறிப்புப் பெயராகும்.

*ஓய்வுபெற்ற தஞ்சை தமிழ் பல்கலைக்கழக கல்வெட்டுத்துறை பேராசிரியர் திரு.எ.சுப்பராயலு அவர்கள் தொகுப்பாசிரியராக இருந்து "சாந்திசாதனா" வெளியீடான "தமிழ்க்கல்வெட்டுச் சொல்லகராதி" எனும் நூலில் பதிவாக இடம்பெற்றுள்ள விளக்கங்கள்.*

1. அகத்தார் : அரண்மனையைச் சேர்ந்தவர்

2. அகநகர் : கோட்டைக்கு உட்புறத்தேயுள்ள நகரம்.

3. அகப்பரிவாரம் : அரண்மனைப் பணியாளர் குழுவில் ஒன்று

4. அகம் : வீடு, உள்ளே, இடம்

5. அகம்படி : அகம்படிச் சாதியைச் சேர்ந்த வீரர்

6. அகம்படி மற முதலி : அகம்படி மறவர் என்ற வீரர்களுக்குத் தலைவன் (குலோத்துங்க சோழக் கடம்பராயந் அகம்படி மறமுதலிகளில் நற்றாந்பெரியாநாந)

7. அகம்படியார் : அகம்படி இனத்தைச் சேர்ந்தவர் (கூத்தாடுந்தேவர் அகம்படியாரில் தந்திரபாலன் பெரியுடையாநேன்).

8. அங்ககாறன் : ஐநூற்றுவர் வணிகர் குழுவோடு தொடர்புடைய வீரர்

9. அங்கவர் : ஓர் அரசகுலம்

10. அடைவு முதலிகள் : பிரதிநிதிகளாக உள்ள முன்னோடிகள்

11. அணுக்கப்பிள்ளை : பாண்டியர் ஆட்சியில் ஓர் அரச அலுவலர்

12. அணுக்கர் : நெருங்கிய ஊழியர்

13. அதிகாரச்சியார் / அதிகாரிச்சி : பெண் அதிகாரி

14. அதிகாரிகள் : சோழ அரசாங்கத்தில் உயர் அலுவலர்

15. அயப்படை : குதிரைப்படை

16. அயில் : வேலாயுதம்

17. அரையன் : அரசன், உயர் அலுவலர் மற்றும் குறுநிலத் தலைவன் பட்டப்பெயர்

18. அறுநூற்றுவர் : (சேரநாட்டில்) ஒரு படைவீரர் குழு

19. இளைய நியாயத்தார் : இளையபடை (இளைய வீரர்களைக்கொண்ட படை)

20. உட்கொத்து முதலி : உட்கொத்து என்ற அரண்மனைப் பணியாளர் தொகுதியின் தலைவன்

21. உடன் கூட்டத்து அதிகாரம் : உடன் கூட்டத்து அதிகாரியின் பணி. உடன் கூட்டத்து அதிகாரிகள் என்பது சோழ அதிகாரிகளின் இருபெரும் பிரிவுகளில் ஒன்று

22. ஊடநிலை சேவகர்: நெருங்கிய வீரர் குழுக்களில் ஒன்று

23. உடன் வேளை : அரசன் அல்லது தலைவனோடு கூடவே சாக உறுதிபூண்ட வீரர்

24. உடையார் : அரசர் மற்றும் குறுநிலத் தலைவரின் பட்டம் (உடையான் என்பது நிலக்கிழான் ஆகும்)

25. உரிமைச்சுற்றம் : அரசச்சுற்றம்

26. உள்மனையார் : அரண்மனைக் காவலர்

27. ஒற்றைச் சேவகர் : படைவீரரில் ஒருசாரர்

28. கொத்து : ஊழியர் தொகுதி

29. கோயில் : அரசன் / அரண்மனை

30. கோயில் அதிகாரிகள் : சேரநாட்டில் அரசனுக்கு அடுத்த நிலையில் இருந்த உயர் அலுவலர்கள்

31. கோயிற் கொத்து : அரண்மனைப் பரிவாரங்கள் (பெரிய தேவர், ராஜராஜ தேவர் பேர்த்து கோயிற் கொத்தும் மாவர்க் குதிரை அகம்படி உள்ளிட்ட துறைகளுக்கும்)

32. கோயிற் சேவகர் : அரண்மனைக் காவலர்

33. கணம் (Ganam) : கூட்டம்

34. சேவகம் / சேவகர் / சேவகரு : வீரர்

35. சேவகன் : வீரன்

36. தந்திரம் : வீரர் தொகுதி, படை

37. தந்திரிமார் : படைவீரர் கொண்டசாதி

38. திரு அகம்படி : கோயிலில் காவல் செய்வோர்

39. துளுவர் : துளுவ வெள்ளாழர் (காணியாளர் துளுவ முதலான பெருநாட்டு வேளாளர்)

40. தெரிஞ்ச குதிரை சேவகர் : தேர்ந்தெடுக்கப்பட்ட குதிரை வீரர் (தெரிஞ்ச / தெரிந்த : தேர்ந்தெடுத்த)

41. தேவகருமி : கோயில் ஊழியர்

42. தேவகுடி : கோயிலில் பணி செய்யும் குடி

43. நாட்டார் : நாட்டுமன்ற உறுப்பினரான நிலக்கிழார்

44. நியாயம் : படை

45. வீரபுத்திரர் : ஐந்நூற்றுவர் வாணிகக்குழுவைச் சார்ந்த ஒரு வீரர் குழு

*காரி மாறப்பிரானின், நாலாயிரதிவ்யப் பிரபந்த அகராதி (பக்கம் : 47,48,49) தரும் விளக்கங்கள்.*

1. அகப்படை : அந்தரங்க பரிகரம்:

(பரிகரம் : சேனை, பரிவாரம்)

நம்பிக்கையான துணை

(அருநிலங்களிலே வழிபோவார்.... என்று மிடுக்கராயிருப்பாரைக் கூட்டிக்கொண்டு)

2. அகப்பணி செய்வார் : விண்ணோர், அந்தரங்கவ்ருத்தி பண்ணுவர், கிட்டியிருந்து உபசரிப்பார்.

3. அகம்படி : உள்ளே, உள்ளிடம்

4. அகம்படி : அடியார்கள்

5. அகம்படியர் : சேஷபூதர், அடியார்கள், கையாட்கள், ''அவ்வர்க்குரிய .... ராணவர்கள்'' ''அகம்படியர் கிளர்ந்தால் அரசனாலும் அடக்கப்போகாது''

*பிரஜைகள், குடிகள்.*

*வைணவ உரையாசிரியர்கள் குறிப்பாகத் திருப்பாவையின் உரையாசிரியர்கள், ஆழி மழைக்கண்ணா எனத்தொடங்கும் திருப்பாவைப் பாசுரத்திற்கு உரை எழுதும் போது.*

*ஆழி மழைக்கண்ணா ஒன்று நீ கைகரவேல் என்று தொடங்கும் பாடலில் இடம்பெற்றுள்ள தாழாதே சார்ங்கம் உதைத்த சர மழை போல் வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும் என்ற வரிகளுக்கு ''அகம்படியர் - சேஷபூதர் கிளர்ந்தால் அரசனாலும் அடக்கப் போகாது இறே'' என்ற மேற்கோளைப் பயன்படுத்துகின்றனர். இதில் சார்ங்கமுதைத்த சரமழை என்பதற்கு வியாக்யானம் தந்த ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை, இரைபெறாத பாம்பு போல் முன்பு விஷயமில்லாமல் அடங்கியிருந்த ஸ்ரீ சார்ங்கம் ''அகம்படியர் கிளர்ந்தால் அரசனானாலும் அடக்க முடியாதது போலே'' எம்பெருமான் கடாக்ஷித்த பின்பு அவனாலும் விலக்கமுடியாதபடி சரமழை பொழிந்தது என்று விளக்கம் தருகிறார். இதனை திரு.கிருஷ்ண சுவாமி சீனிவாச ஐயங்காரின் ''திருப்பாவை வியாக்யானம்'' நூலும் (பக்கம்: 62) பதிவு செய்கிறது.*

6. அகம்படி வைத்த அரசு : மந்திரிகளின் ஆட்சியிலுள்ள ராஜ்யம்,

அகம்படி - பழையபடியார்

7. அகமுடையான் : வீட்டுக்குச் சொந்தக்காரன், கணவன்.

*திரு டாக்டர் எஸ்.சவுந்தரபாண்டியன் அவர்கள் பதிப்பாசிரியராக இருந்து வெளியிட்ட அரசினர் கீழ்த்திசை சுவடிகள் நூலகத்தின் ''தமிழ் அகராதி'' (அரசினர் கீழ்த்திசை நூலாக சுவடிகள் வரிசை எண்.77, ஆண்டு 1995) தரும் அகம்படியர் பற்றிய விளக்கம்.*

1. அகம்படி : அந்தரங்கமாயிருந்து நியமிக்கிறபெயர்

2. அகம்படியார் : நிர்வாகரும், அந்தரங்கரும், அபிமானகரும்

3. அகம்படிவைத்த அரசு : அந்தரங்கண்யம், அந்தரங்க நியாப்யன்

*சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி* (Tamil Lexicon) *அகமுடையார் தொடர்புடைய சொற்களுக்குக் கீழ்க்கண்ட வகையில் விளக்கம் தருகிறது.*

*1. அகக்கோளாளர் : அகம்படிப்பெண்டுகள்*

*2. அகம்பரிவாரம் : அரண்மனைப் பரிவாரங்கள்*

(Attendants of Royal House Hold)

*3. அகம்படி : அகம்படியர் (திருவகம்படியில் யோகினிகளே)*

*4. அகம்படியர் : அணுக்கத் தொண்டு செய்வோர்*

*5. அகமுடையான்: நிலமுடையவன்* (Land Lord) *அகம்படியர் சாதியான்*

(Person of the Akampatiyar Caste)

*6. அங்கரங்கன் : மெய்காவலன்* (Body Guard)

*7. அங்கம் : வெட்டுகை* (Chopping / Cutting)

*8. அணுக்கச்சேவகம் : அரசர் முதலியோரிடம் அணுகிப் புரியுந்தொண்டு*

*9. அணுக்கநம்பி : சுந்தரமூர்த்தி நாயனார்*

*10. அணுக்க விளக்கு : கோயில் மூர்த்திக்குப் பக்கத்தில் எரியும் விளக்கு*

*11. அடைப்பு முதலி : சபையின் காரிய நிர்வாகிகள்*

*12. ஏழகத்தார் : படைவகுப்பாருள் ஒருவகையார்*

மொழி ஞாயிறு திரு.ஞா.தேவநேயப்பாவணர் அவர்களின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி தொகுதி I, பகுதி I.

*1. அகம் : உள்ளிடம், மனம், நெஞ்சம், ஆன்மா, அகப்பொருள், கூலம், மலை.*

*2. அகம்படி : உள்ளிடம், மனம், திருக்கோயிலில் அல்லது அரண்மனையிற் செய்யும் அகத்தொண்டு* Service in a sanctuary or Inner Apartment of a palace. *அகம்படிப் பெண்டுகள், அடியார்* (Devotees)

*அகம்பு = உள், அகம்பு + அடி = அகம்படி புறம்படி என்பதற்கு எதிர்*

3. அகம்படித்தொண்டு : அணுக்கத்தொண்டு, (Service as in a Sanctuary) கோயிலுள்ளாலகம்படித்தொண்டு செய்வார்.

அகம்பு +அடி + தொண்டு ஸ்ரீ அகம்படித்தொண்டு அகம்படிமை என்றும் வழங்கும்.

4. அகம்படிமை : அகம்படித்தொண்டு

5. அகம்படியர் : தஞ்சை, மதுரை மாவட்டங்களில் முன்பு குறுநில மன்னர் அரண்மனைகளில் பணிசெய்து இன்று உழவுத்தொழில் செய்து வரும் ஒரு குலத்தார்.

6. அகம்படியார் : திருக்கோயில்களிலும், அரண்மனைகளிலும், அகத்தொண்டு செய்வோர்.

திரு.மு.சண்முகம் பிள்ளையின் (தொகுப்பாசிரியர்) தமிழ் தமிழ் அகரமுதலி, (தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனம், சென்னை) தரும் விளக்கம்.

1. அகநாடு : உள்நாடு, மருதம்

2. அகப்பகை : உட்பகை

3. அகப்படை : அணுக்கப்படை, மூலப்படை

4. அகப்பரிவாரம் : அரண்மனைப் பணியாளர்கள்

5. அகப்பா : கோட்டை, உள்மதில், மதிலுள்மேடை, அகழி

6. அகம் : இருப்பிடம், பூமி, மனை, வீடு, உள், மனம், அகப்பொருள்

7. அகம்படி : உள்ளிடம், மனம், அகத்தொண்டு, ஒருவகைச்சாதி

8. அகம்படித்தொண்டு : அணுக்கத்தொண்டு

9. அகம்படியர் : ஒருவகைச்சாதியார், ஊழியம் செய்வோர்

10. அகமுடையாள் : வீட்டுக்குடையவள், மனைவி

11. அகமுடையான்: வீட்டுக்காரன், நிலமுடையவன், கணவன்

12. பரிகரம்: சேனை, பரிவாரம்

13. ஏழகத்தார் : படை வகுப்பாருள் ஒருவகையார்

14. மெய்க்காவல் : ஒருவனை பாதுகாக்கை

*15. மெய்காவலன் : பிறனுக்குக்கேடு நேராமற்காப்பவன்*

*கதிர்வேற்பிள்ளையின் "தமிழ்ச்சொல்லகராதி" (முதலாம்பாகம்) (உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்) தரும் விளக்கம்.*

*1. அகம்படித்தொண்டு : உள்ளாகநின்று செய்யுந்தொண்டு (அங்கணர் கோயிலுள்ளாரகம்படித் தொண்டு செய்வார்)*

*2. அகம்படிமை : அகம்படித்தொண்டு*

*(நிருத்தனருட் செல்வமலியகம் படிமைத் திறலினர்தம்பதம் போற்றி)*

*டாக்டர் சீ.சசிவல்லி அவர்களின் "சமயச்சொல்லகராதி" (உலகத்தமிழாராய்சி நிறுவனம்) தரும் விளக்கம்.*

*1. அகத்தடிமை : அணுக்கத்தொண்டு*

*2. அகம்படி : அடியார்*

*3. அகம்படித்தொண்டு : அணுக்கத்தொண்டு*

*4. அகம்படிமை : அகம்படித்தொண்டு அகம்படித்திறலினர்*

*திரு.உ.வே.சாமிநாதையரால் வெளியிடப்பட்ட தக்கயாகப்பரணி மூலமும் உரையும் நூலில் (பக்கம் 41)*

*"அடையாள முளரித் தலைவியாதி மடவா*

*ருடையா டிருவகம் படியில்யோ கினிகளே"*

*இதில் "திருவகம்படிப்பெண்டுகள்" என்பதற்குத் திருவணுக்கத்தொண்டு செய்யும் மகளீர் என்றும் அகம்படி என்பதற்கு உள்ளிடம் என்றும் குறிப்பிடுகிறார்.*

*தமிழ்த்துறை, தியாகராசர் கல்லூரி மதுரை, வெளியீடான "தமிழ் இலக்கியக் கலைச்சொல் அகராதி" பக்கம் 2இல்*

*1. அகத்துழிஞை : கோட்டையில் உள்ளவரை புறத்தேயுள்ளவர்கள் போர் வெல்லும் புறத்துறை*

*(அகம் + உழிஞை) புறத்திணையில் ஒன்றாக உழிஞைத்திணையுள் அமைந்த துறைகளுள் ஒன்று.*

*"முரணவியச் சினஞ்சிறந்தோர்*

*அரணகத் தோரை அமர் வென்றது"*

*உழிஞை மறவர் மதிலகத்து நொச்சியரை வென்றது*

அகத்துழிஞை எனப்பெறும்.

முகிலுரிஞ்சுஞ் சுழி ............................. அகத்தாரை வென்றார் அமர்.

முகில் தவழும் உச்சியினையுடைய அரணகத்துள்ள நொச்சியாரை வென்ற தன்மையைப் புறப்பொருள் வெண்பாமாலை குறிக்கின்றது.

திரு.வ.ஜெயதேவன் மற்றும் திரு.ப.வெ.நாகராஜன் ஆகியோர்களின் "தொல்காப்பிய அகராதி" (சென்னைப் பல்கலைக்கழகம்) தரும் விளக்கம்.

1. அகத்தோன் செல்வம் : உழிஞைத் திணையின் துறைகளுள் ஒன்று முற்றுகையிடப்பட்டுக் கோட்டைக்குள் இருக்கும் அரசனை எளிதில் வெல்ல முடியாதபடி அமைந்துள்ளதாகிய வளமைச்சிறப்பு

2. அகத்தோன் வீழ்ந்த நொச்சி : உழிஞைத் திணையின் துறைகளுள் ஒன்று, முற்றுகையிடப்பட்டோரது போர் முயற்சி உணவுப் பொருட்கள் தட்டுப்பாடு முதலியவற்றால் தளர்ந்துபோதல். (அகத்தோன் செல்வம் என்னும் துறைக்கு எதிர் மாறானது)

பொது ஆண்டு 1804இல் ரோமில் இருந்து வெளிவந்த சமஸ்கிருத லத்தீன் இலக்கண நூல் அகம்படி என்பதற்கு பேரரசர்களின் உயர் சிறப்புமிக்க, மெய்க்காவலர்கள் என்று (Like Elite Imperial Roman Army) பொருள் தருகிறது.

AGAMPADI – Miles Praetorianus (Guardia Dicorpo) - அகம்படி - அரசர்களுக்கு உடன்வந்து பாதுகாப்பு வழங்கும் உயர் சிறப்புமிக்க மெய்க்காவல்படை என்று VYACARANA SEU LOCUPLETISSIMA SAMSCRDAMICAE LINGUAE INSTITUTION By Paulin de saint – Barthelemy குறிப்பிடுகிறது.

ஆங்கிலம் - ஆங்கிலம் / கன்னடம் / மலையாளம் / தமிழ் / தெலுங்கு பலமொழி அகராதி அகம்படி (AKAMPADI) என்பதற்கு மெய்க்காவலர், பாதுகாப்புக்காக உடன் செல், பாதுகாப்புக்காக வழித்துணைச் செல்பவர் என்று பொருள் தருகிறது. (Learner's multilingual Dictionary: English – English / Kannada / Malayalam/ Tamil / Telugue – Pearson Education India).

*1855ஆம் ஆண்ட பாண்டிச்சேரியிலிருந்து வெளிவந்த தமிழ்பிராஞ்சகராதி* - (DICTIONNAIRE – TAMOUL- FRANCAIS, PAR DEUX MISSIONNAIRES APOSTOLIQUES DE LA CONGREGATION-PONDICHERY) *தரும் விளக்கம்.*

*1. அகமுடையான்: உடையான் (அகம், உடையான்)* (Proprietaire d' Uneterre-Landowner-*நிலத்துக்குச் சொந்தக்காரர்.* Maitre, Maitresse de La Maison. Master, Mistress of the Mansion *மாளிகைக்கு சொந்தக்காரர், சொந்தக்காரி,*Nom 'd' Une caste-Name of the Caste- *ஒரு சாதியின் பெயர்.*

*2. அகம்படியன் : அகம்படியான் (அகம், படி)*

Nom de Caste - Name of the Casteïஒரு *சாதியின் பெயர்.*

Qui travaille dans L interieur des maisons, on des temple – who work Inside the Mansion or Temple –*அரண்மனை அல்லது கோயிலுள் காரியம் பார்பவர்.*

Calicut: The city of Truth Revisited by M.G.S. Narayanan, Folk – lore, volume 4, by Indian publications and The Cult of Teyyam and Hero worship in Kerala by K.K.N. Kurup *ஆகிய நூல்கள் அகம்படி என்பதற்கு அரசருடன் உடன் வருபவர்கள்* (Their duty of following the king) *என்று பொருள் தருகிறது.*

*வேறு சில தமிழ் ஆங்கில அகராதிகளும் அகமுடையான் என்பதற்கான பொருளைத் தருகின்றது.*

A Dictionary Tamil and English by Viswanatha Pillai (Madras School Book and Literature Society (Page No : 3) *தரும் விளக்கம்.*

*அகமுடையான்* :A House Holder - *மனையாளன்*

A Land Holder - *காணிக்காரன்*

A Caste man - *ஓர் ஜாதிக்காரன்*

*கிறிஸ்தவ தமிழ் தொண்டர்கள் (தமிழ் இலக்கியக் கழகம் 1972) (பக்கம்: 145) தரும் விளக்கம்.*

*அகமுடையான் என்பார்* A House Holder, The name also of Certain Caste of the Tamil people *என்று குறிப்பிடுகிறது. மேலும் அகம்படியர் என்பதற்கு* A Particular Caste of Hindus, who attend any business in the interior of the King's Palace or in pagoda.

கேரளோர்பதி (Keralolpatti) அகம்படி என்பதற்கு மெய்க்காவலர் என்று குறிப்பிடுகிறது (Akampati – Bodyguards) Keralolpatti by Hermann Gondert.

திரு.ந.கதிர்வேல்பிள்ளையின் தமிழ்மொழியகராதி (ஏசியன் எஜூகேஷனல் சர்வீஸஸ் 1981 ) தேவன் என்பதற்கு அகம்படியன், அரசன், அருகன், ஈட்டிக்காரன், கடவுள், கொழுந்தன் என்று பொருள் தருகிறது.

திரு.P.இராமநாதனின் இருபதாம் நூற்றாண்டு தமிழ்ப் பெயரகராதி - தொகுதி I 1909 (பக்கம் : 772) வித்துவான் கண்ணப்ப முதலியாரின் தமிழ் இலக்கிய அகராதி, திரு.எஸ். சங்கரலிங்க முதலியாரின் ஜூபிலி தமிழ்ப்பேரகராதி தேவன் என்பதற்கு அகம்படியன், அரசன், அருகன், ஈட்டிக்காரன் என்று பொருள் தருகிறது.

ஸ்ரீசிவஞானசுவாமிகளின் குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ் அகமுடையான் என்பதற்குத் தலைவன், காந்தன் என்று பொருள் தருகிறது.

A manual Dictionary of the Tamil language (Published by Jaffna book society) என்ற அகராதி, சேர்வை என்பதற்குக் கூட்டம் சேனை என்றும் சேர்வைக்காரன் என்பதற்குச் சேனைத் தலைவன், போர்ச் சேவுகன் என்றும் பொருள் தருகிறது.

இந்தியாவின் குலங்கள் என்ற நூல் தேவர் என்பதற்கான ஒத்த பெயர்களாக அகமுடியன் அஃகம்படி மற்றும் அகம்படி என்று பதிவுசெய்கிறது (India's Communities by Kumarsuresh singh). நவாப்பின் கண்ணீர் என்ற ஆங்கில நூல் அகம்படி என்பதற்கு அரசர்க்கு உடன்வந்து பாதுகாப்பு அளிப்பவர்கள் என்று குறிப்பிடுகிறது (Ceremonial escort for the King- The Nawab's Tears by Ajitmani)."

★★★

# 11.
# பின்நாளைய வளர்ச்சிக்கான முந்தைய அடித்தளம்

"Old Tamil Literature has several words for Palace servants or Attendants, derived from aka-ttu, or aka-mpu meaning Inside (fort, Palace or House). Some examples are aka-tt-oon, aka-tt-adimai, aka-tt-adiyaalh, akattondu akampati etc (Tamil Lexicon). From This evidence it appears likely that while the palace Sign was associated with ruling classes. The enclosure's sign related to minor Functionaries like Palace servants and attendants.

**சிந்து சமவெளி நாகரிகத்தில் கண்டறியப்பட்ட எழுத்துப் பொறிப்புகளில் காணப்படும் இடம்பற்றிய குறியீடுகள் அரண்மனை மற்றும் அதில் சேவையாற்றும் அரண்மனை வீரர்களைக் குறிப்பதாக அமைந்துள்ளது. அந்த எழுத்துப்பொறிப்புகளில் இடம்பெற்றுள்ள சதுரம், நாற்கரம், நீள்வட்டம் போன்ற குறியீடுகள் அரண்மனை சார்ந்த அகத்தடிமை, அகத்தடியாள், அகத்தொண்டு, அகம்படி போன்ற அரண்மனைச் சேவைக்குரியோர் தங்குவதற்கும் அவற்றின் உள்ளே உள்ள வடிவங்கள் அரசு செய்பவர்களைக் குறிப்பது போன்று தோன்றுகிறது.**

Iravatham Mahadevan,
"Palace signs in the Indus script"
Paper Read at the V – International conference – Seminar of Tamil Studies
Madurai 5 to 10 : January 1981.

*தமிழகத்தில் புகழ்பெற்ற மானிடவியல், இனவரைவியல் ஆய்வாளர் திரு.பக்தவத்சல பாரதி அவர்கள், அண்மையில் வெளியிட்ட "சாதியற்ற தமிழர், சாதியத்தமிழர்" என்ற நூலில்*

சாதிக்கட்டமைப்பின் தோற்றம், வளர்ச்சி போன்றவற்றை ஆழமாக விளக்குகிறார்.

சங்ககாலத்தின் முற்பகுதியில் தமிழ்ச் சமூகம் குடி என்ற அமைப்பினைக் கொண்டிருந்தது என்றும், ஐவகை திணை நில அமைப்பு வழி பண்டைய தமிழ்ச் சமூகம் அடையாளப் படுத்தப்பட்டதாகவும் குறிப்பிடுகிறார். அத்துடன் குறிஞ்சி தொடங்கி மருதம் வரையிலான சமூக அமைப்பு குடிநிலையிலேயே தொடர்ந்து வந்ததாகவும், வேட்டையாடல், கால்நடை மேய்த்தல், மீன்பிடித்தல், உழவுத்தொழில் எனத் தொழில்கள் மாறினாலும் ஆதித்தமிழ் குடிகளின் குடி அமைப்பானது, மருதம் வரை தொடர்ந்து வந்ததாக விளக்குகிறார். அந்தத் குடிகள் சுதேசியானவை என்றும் அவைகளிடம் சாதிக்குரிய பண்புகளான படிநிலை தீட்டு, தூய்மை, அகமணம், தீண்டாமை, பஞ் சமர் பிரிவு முதலானவை முழுமையான வடிவத்தில் இல்லை என்கிறார்.

முல்லையில் சீறூர் மன்னன் என்றும், குறிஞ்சியில் குறுநில மன்னர் என்றும் இனக்குழு சார்ந்த சமூகமுறை மெல்ல மறைந்து சங்ககாலத்துக்குப்பின் வேந்தனை மையமிட்டு சமூகம் உருவெடுத்ததாகவும், அதில் ஒவ்வொரு குடியும் ஒருவகையான தொழிலைச்செய்து கடமையாற்றினர் என்றும் குறிக்கிறார்.

செல்வாக்கிழந்த குறுநில மன்னர்கள் வேந்தனைச் சார்ந்தும் அவனுக்குப் படைத்துணை புரிந்தனர். இதற்கு கைமாறாக வேந்தர்களிடமிருந்து குறுநில மன்னர்கள் ஊர்களை நிலக்கொடையாகப் பெற்றனர் என்கிறார். அத்துடன் வேந்தர் ஆட்சிமுறை ஏற்பட்டவுடன் குடி அமைப்பிலான சமூகமுறை சாதியாக மாறத்தொடங்கின என்றும் அது கி.பி.4,5ஆம் நூற்றாண்டுகள் வரை நீர்மைத் தன்மையுடன் விளங்கியதாகவும் சுட்டிக்காட்டுகிறார். மேலும் 10,13 ஆம் நூற்றாண்டுகளில்தான் சாதிப்படிநிலை இறுக்கமடைந்ததாகவும் பதிவு செய்கிறார்.

திரு.பக்தவத்சல பாரதி அவர்கள், தனது “சாதியற்ற தமிழர், சாதியத் தமிழர்” எனும் நூலில் (பக்கம்: 55), சங்க காலத்தில் அரசர்குரிய பணிகளைக் கவனிக்கும் பொருட்டு செயல்பட்ட பல்வேறு குழுக்களைக் கீழக்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

அ. அரசருக்கு அறிவுரையளிக்க காவிதி மக்கள் (அமைச்சர்கள்)

ஆ. நாற்பெருங்குழு,

இ. அறங்கூறும் அவையம்,

ஈ. மெய்க்காப்பாளர்,

உ. நாழிகைக் கணக்கர்,

ஊ. பெண் பணியாளர்கள்,

எ. நகரக் காவலர்,

ஏ. கடைக்காப்பாளர்,

ஐ. நீர் நிலை காப்பாளர்,

ஒ. நாற்பெரும் படையினர்,

ஓ. சுங்கவரி வசூலிப்போர்,

ஔ. அடிமைத்தொழில் செய்வோர்,

ஃ வீட்டடிமைகள்,

சங்ககாலம் முதல் மெய்க்காப்பாளர்கள் அரசோடும் அரசர்களோடும் கொண்டிருந்த இணைப்பைப் பல்வேறு அறிஞர்கள் எடுத்துக் காட்டுகிறார்கள்.

சேரமன்னர்கள் மழவர் மெய்ம்மறை (பதி : 24, 58) என்று கூறப்படுவதிலிருந்து மன்னனுக்கு காவல் வீரர்களாக மழவர் விளங்கினார் என்பது விளங்கும் என்பார் முனைவர் திரு.ரா. பூங்குன்றன் அவர்கள் (தொல்குடி வேளிர் வேந்தர் பக்கம் 25).

மேஜர் கதிர் மகாதேவன் அவர்கள் தனது "பழந்தமிழர் வீரப்பண்பாடு" நூலில் சேரர்களை அகநானூறு "வில்கெழுதடக்கை வெல்போர் வானவன் என்றும், பதிற்றுப்பத்து வில்லோர் மெய்ம்மறை" என்றும் பாராட்டுவதை பதிவுசெய்கிறார்.

மழவர்கள் குடியைச் சேர்ந்த சில குழுவினர் சேரர்க்கும் அதியர்க்கும் பிறமன்னர்க்கும் மெய்க்காப்பாளர் ஆயினர். சேர மன்னன் மழவர் மெய்ம்மறை என அழைக்கப்படுகிறான். மழவர்கள் எல்லோரும் வீரத்திற் சிறந்தவர்களாக இருந்தனர். இதனால் மழவர் என்ற சொல் பொதுவில் வீரர் என்னும் பொருள் குறிப்பதாயிற்று. மழவர் என்பார் "சிலவீரர்" என்பது நச்சினார்க்கினியர் உரை.

மழவர் என்ற சொல்லுக்கு இளமையென்ற பொருளில் "மழ" என்னும் சொல் வரும் எனத் தொல்காப்பியர் கூறுகிறார். இளமையில் போர்களத்தில் இறப்பதையே வீரர்கள் விரும்பியதாலும், இளமைநீங்கி முதுமையில் ஆற்றல்

இழந்துவிடும் என்று நம்பியதாலும் குறிப்பிட்ட சில ஆண்டுகள் மன்னன் ஆட்சி செய்தபின்பு அம்மன்னனைக் கொன்றுவிடும் வழக்கம் பிற்காலச் சேரமன்னர்களான சேரமான் பெருமான்கள் ஆட்சியிலும் நீடித்ததாகக் கூறப்படுகிறது.

இவ்வுண்மைகளால் வீரர்கள் இளையர், மழவர் என அழைக்கப்பட்டதன் காரணம் இன்று விளங்கும் என்பார் "மூவேந்தர்களின் குடிச் சிறப்புகள்" நூலின் ஆசிரியர் முனைவர் இரா.தெய்வம் (பக்கம்: 93). மழவர்கள் போன்று இளையர் என்ற பெயரும் சங்க இலக்கியத்தில் வருகிறது. இளையர் என்பாரைத் தனிவகைப்பட்ட ஒரு குடியினர் என்று கூறுவர். வரலாற்று முறையாகவோ, இலக்கிய முறையாகவோ குறிக்கப்பட்ட ஒவ்வொரு தலைவனிடமும் இந்த இளையர்கள் மெய்க்காப்பாளராக இலங்கினார் என்று "சங்ககாலச் சிறப்புப் பெயர்கள்" நூலில் அதன் ஆசிரியர் டாக்டர் மொ.அ.துரை அரங்கசாமி அவர்கள் குறிப்பிடுகிறார்.

தொடக்கத்தில் மக்கள் தொல்குடி என்ற நிலையில் இருந்துள்ளனர். இரத்த சம்பந்தமுடைய குடிகளின் தலைவன் ஒருவன் தோன்றி அவன் மன்னன் என்று அழைக்கப்பட்டுள்ளான், பெண் மணமுறை, குடியிருப்பு, உற்பத்தி, பண்டமாற்றம், தெய்வ வணக்கம் இவற்றின் அடிப்படையில் ஒரு குடி பலகுடிகளாகப் பிரிந்து பெருகியுள்ளது. குடியின் மூத்தோர் குடியினைக் கட்டுப்படுத்தியுள்ளனர். பின்பு அம்மூத்தோர் தலைவன், மன்னன் நிலைக்கு உயர்ந்து அதுவே பின்பு வேளிர், வேள் என்றத் தலைமை நோக்கி நகர்ந்துள்ளது. இவ்வாறு நிறுவனமயமான தலைமை இறுதியில் வேந்தர் என்ற நிலையை அடைந்து ஒரு முழுமையான அரசியல் வடிவம் அடைந்துள்ளது.

வேந்தன் தமிழ் நிலத்தில் சேர, சோழ, பாண்டியர் என்ற பெரும் அதிகார ஆட்சி அமைப்பாக மாறி, மக்களின் வாழ்வில் பெரும்தாக்கத்தை ஏற்படுத்தியது. வேந்தர் மரபிலும் பல்வேறு கிளைக்குடியினர் இருந்துள்ளனர். சோழர் மரபில் ஒன்பது கிளையினரும், பாண்டியர் மரபில் ஐந்து கிளைக்குடியினையும், சேர மரபினில் நான்கு கிளைக்குடியினரையும் கொண்டிருந்தனர் என்பதை முனைவர் திரு.ரா.பூங்குன்றன், அவர்கள் தனது "தொல்குடி வேளிர் வேந்தர்" நூலில் குறிப்பிடுகிறார். மேலும் அவர் இந்தக் கிளைக்குடியினரில் ஒரு குடியின் வழி தோன்றியவர் வேந்தராக உயர்வு பெறுகிறான் என்கிறார். புவியியல் மற்றும்

காலத்தின் தேவையின் அடிப்படையில் இந்த கிளைக்குடியினர் தங்களுக்குள் இணைப்பினை உருவாக்கி அரசியல் மேன்மை அடைவதாகக்காட்டுகிறார். வேந்தர்கள் படிப்படியாகத் தங்களின் பகுதியிலிருந்த வேளிர்களையும், மன்னர்களையும் தங்கள் ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டு வந்தனர். மேலும் வேந்தரின் கிளைக்குடியினரும் தங்களின் இணைப்பால் அரசியல் அதிகாரம் பெற்று வேந்தரின் கீழ்வரலானார்கள் என்பதையும் சுட்டிக்காட்டுகிறார்.

நாட்டின் எல்லையும் பரப்பும் விரிவடையத் தொடங்கியபோது முந்தய மன்னரும் வேளிரும் வேந்தனுக்கு உட்பட்டு தங்களின் குடிகளிடம் வரிவாங்கும் காணியாளராய் விளங்கத் தொடங்கினர். இவ்வாறு வேந்தனின் கீழ் வந்த மன்னர்கள் மற்றும் வேளிர் வேந்தனின் தாயாதியினராகக் கூறிக்கொண்டனர். வேந்தர்கள் வேளிரிடம் மகட் கொடை பெற்றனர் இவ்வாறு வேந்தரோடு இணைக்கப்பெற்ற வேந்தன் கிளைக் குடியினரும், மன்னர், வேளிர் என்ற முந்தய சுயாட்சிபெற்ற தொல்குடி தலைவர்களும் வேந்தனின் பாதுகாப்பினை உறுதி செய்தனர். இவர்களை அரசகுடும்பங்களை பாதுகாக்க அரசர்களின் நெருங்கிய உறவினர்களால் உருவாக்கப்பட்ட மெய்க்காவல் படையாகக் கெள்ளமுடியும். இந்தவகையில் மழவர் போன்றோர் சேர மன்னரின் பாதுகாப்புக்கு காவல் வீரர்களாக விளங்கினர் என்பது ஒப்பு நோக்கத்தக்கது.

ஒருபுறம் மூவரசுகள் வேளிரின் இணைவால் இயல்பாக ஏற்பட்டவை. மறுபுறம் அவை தேசிய வளர்ச்சி சார்ந்தவை. ஏனெனில் பாண்டியரும் சோழரும் மிகத் தொல்பழங்காலத்திலேயே தனித்தனி ஐந்து ஐந்து வேளிரின் ஒருங்கிணைவாகத்தோன்றி மலர்ச்சியுற்றவர் ஆவர். சேரரோ இதுபோல ஏழு வேளிரின் இணைவரசாகத்தோன்றி இணைவரசராகவே அண்மைக்காலம் வரை தொடர்ந்து வந்துள்ளனர் என்பதைக் "கொங்குத்தமிழக வரலாறு" நூலில் பன்மொழிப்புலவர் கா.அப்பாத்துரை அவர்கள் பதிவு செய்கிறார்.

மேலும் அவர், வேளிர் அல்லது குடியரசர் வலிமை பெற்று, வல்லாட்சி எய்தி முடியரசரை எதிர்த்ததும் பிற குடியரசரை அடக்கியும் தாமே முடியரசராக விழைந்தப்போக்கு கடைச்சங்க காலத்தில் மலையமான் திருமுடிக்காரியும், அதிகமான் நெடுமானஞ்சியும், பறம்புமலைப்பாரியும் இம்முயற்சியை

மேற்கொண்டு வெற்றிபெறாது அழிந்தவர்களேயாவர். இதற்கு மேற்பட்ட தளத்தில் முடியரசர் மூவர் என்ற நிலை ஏற்பட்டபின், மற்ற முடியரசர் இருவரையும் வென்று தமிழக முதல்வர் ஆகும் அவாவும், குடியரசரைத் தூண்டின. சேரர் வரலாற்றில் நாம் கேள்விப்படும் ஏழு முடியரசர் பிற்காலச்சோழ, பாண்டியர் வரலாற்றிலும், கல்வெட்டுகளிலும் அடிபடும் மும்முடியரசர் ஆகிய வழக்குகளும் புராண இதிகாசங்களில் குறிக்கப்படும் மூவுலகாளும் மன்னர், ஏழுலகாளும் மன்னர் முதலிய புனைந்துரைகளும் தமிழரின் நீடித்த தேசிய அரசியல் வரலாற்று மரபின் தடங்கள் என்று “தென்னாட்டுப்போர்க் களங்கள்” நூலில் குறிப்பிடுகிறார்.

பண்டைய தமிழகத்தில் அரசுருவாக்கம் பற்றிய “தொல்குடி வேளிர் வேந்தர்” என்னும் ஆய்வு நூலில் முனைவர் திரு.ர.பூங்குன்றன் அவர்கள் அம்குடி, பழங்குடி, முதுகுடி, குரம்பைக்குடி, வேட்டக்குடி, நீள்குடி, விழுக்குடி, வீழ்குடி, செழுங்குடி, பல்குடி போன்ற தொல்குடிகளைக் குறிப்பிடுகிறார். மேலும் குடிக்கு இணையானச்சொற்களாக இல், திணை, குலம் போன்றவற்றைக் குறிப்பிடுகிறார். இந்த குடிகளிலிருந்து வேளிர்கள் உருவாக்கம் பெற்றனர் என்கிறார். அவர் மேலும் வேளிர் குடி என்ற நிலையிலிருந்து வேந்தர் குடி உருப் பெற்றதனை விரிவாக விளக்குகிறார்.

குடி என்பது குறிப்பிட்ட இரத்த உறவுள்ளவர்களை (பங்காளிகளை) மொத்தமாகக் குறித்தது என்று பதிவுசெய்கிறார். குடி சிறு சிறு, கூறுகளாகப் பிரிந்து சிறு குடிகள் தோற்றம் பெற்றது. பின்பு பல்வேறு கிளைக்குடிகள் தமக்கான குடி முதல்வனுடன் வளர்ச்சிப்பெற்றது. இந்த வளர்ச்சிப் போக்கில் பெண் கொள்வினை, கொடுப்பிணை, பொருள் கைமாற்றம், குடியிருப்புமுறை உற்பத்திப் பொருள்களின் மீது கிளைக்குடிக்குள்ள பிடிப்பு போன்றனவும், குடியின் தெய்வ வழிபாடு, அதனையொட்டிய சடங்குகள் ஆகியவை குடிக்குள்ளும் குடிகளுக்குமிடையேயுமான உறவினை நிர்ணயித்தது. குடியினை மூத்தோர்கள் ஆட்சி செய்தனர் என்கிறார்.

மேலும், தொல்குடிகளிடையே குறும்பு, அரண், அரணம், அருப்பம் போன்றவை பாதுகாப்பு உள்ள இடமாக விளங்கிற்று, இங்குக் கால்நடைகள், கலன்கள் போன்றவை பாதுகாக்கப்பட்டன.

மிளை என்பது கோட்டையைச் சுற்றி அமைந்த காவற்காடு இவ்வாறு பாதுகாப்புக்கான கட்டமைப்புகள் தொல்குடிகள் நிலையிலேயே உருவாக்கம் பெற்றுள்ளது. அரு என்பது தொல்குடியின் பாதுகாப்பு தொடர்புடையது, அருவாளர் என்போர் பாதுகாப்பு அரண்களையுடைய தலைவர்கள் என்கிறார் முனைவர் திரு.ர.பூங்குன்றன் அவர்கள். தொல்குடிகளின் மேலே குறிப்பிட்ட பாதுகாப்பு கட்டமைப்புகள் ஆநிரைகளைப் பாதுகாப்பது என்ற நிலையிலிருந்து வளர்ச்சிப் பெற்றுள்ளது. மேலும் அவர்,

மன் என்ற வேர்சொல் மன்னர், மன்று ஆகிய சொற்கள் உருவாகக் காரணமாயிற்று. மன்று என்பது ஒரு சமூக செயல் அமைப்பாகச் செயல்பட்டது. தொடக்கத்தில் பசுத்தொழுவாக நிலைபெற்று பின்பு மக்களின் எல்லாச் செயல்களுக்கும் நிலைக்களமாக விளங்கியது. மன்று, மன்றம் ஆகியவற்றின் தலைவன் என்ற நிலையில் மன்னன் என்ற சொல் உருப்பெற்று பின்பு தொல் குடியின் தலைவனாக ஏற்றம் பெருகிறான். இந்த தொல்குடிகளின் இரத்த உறவினால் குடித்தலைவன் என்ற நிலையிலிருந்து வேள் ஆட்சி உருவாகிறது. தமிழகத்தில் சேர, சோழ, பாண்டியர் என்ற வேந்தராட்சி உருவாகி நிலைகொள்வதற்கு முன்பு வேள் ஆட்சி உருவாகி நிலை பெற்றுள்ளுள்ளது. அரசியல் படிநிலையில் உயர்ந்து நிற்போர் வேந்தர் ஆவர். தொல்குடியின் தலைவன், மன்னன், பின்பு வேள் இறுதியாக வேந்தன் என்பது அரசியல் படிநிலையில் ஏறுமுகமான தோற்றம் ஆகும்.

அரசனையொட்டியும், அரண்மனை சார்ந்தும் ஒரு படைப்பிரிவு பின்னாளில் பெருவளர்ச்சி பெறுகின்ற நிலையில் அதன் முந்திய தோற்றம் ஒருங்கிணைவு, வளர்ச்சி என்பது, பண்டைய திணை சார்ந்த குடியமைப்பிலும், போர்முறையிலும் தோற்றம் கொண்டிருக்க வேண்டும். குறிப்பாக உழிஞை, நொச்சி என்று இலக்கியங்கள் குறிப்பிடும் போர்முறைகள் இங்குக் கவனிக்கத்தக்கது.

உழிஞை என்பது மருதத்திணைக்குரிய புறத்திணையாகும், கோட்டையை முற்றுகையிடுதலும் கோட்டைக்குரியவன் அதனைக் காத்து நிற்றலும் உழிஞை எனப்படும் என்பார் திரு.கா.சுப்பிரமணிய பிள்ளை (பழந்தமிழர் நாகரிகம் அல்லது தொல்காப்பிய பொருளதிகாரக்கருத்து).

நில அமைப்பில் போர் முறைகள் பெயர் பெற்றதை விளக்கும் திரு.வெ.சு.அழகப்பன் அவர்கள் (ஆய்வுக்கோவை தொகுதி1 பதினொராவது கருத்தரங்கு, பக்கம் 51,52,53) மருதநிலமாகிய வயல்சார் நிலத்தில் எழுந்த மதிர்போர் உழிஞைத்திணை என்று குறிப்பிடுகிறார். மேலும் இதர நிலத்திற்கு இயற்கையான அரண் இருக்க, மருதநிலத்துக்கு அரசு தானே செயற்கையாக அமைத்தல் வேண்டும். இவ்வரணை முறித்து பொய்யாக்குவதே வாகைசூடப்போதிய செயலாகும். ஆகவே மருதத்தில் நிகழ்ந்த மதிர் போரே உழிஞை என்கிறார். இதில் காவற்காடும், அகழியும், உயர்ந்த மதிலும் உடைய அரணைத் தகர்த்து உள்ளேபோன அரசன் அம்மதில் அகத்தே உள்ள அரசனுடனும் அவன் சேனைகளுடனும் போர்நிகழ்த்துவான். படையெடுத்து வந்த அரசனை அரண் மற்றும் அரண்மனைக்குள்ளிருந்து போரிட்டு தன்னைக்காத்துக் கொள்ளுதல் நொச்சித்திணை ஆகும் என்று குறிப்பிடுகிறார், "மருத நிலத்தில் மக்கள் வாழ்வியல்" என்ற நூலில் திரு.எ.பாலுச்சாமி அவர்கள்.

மேலும், குறிஞ்சி நிலத்தில் அமைந்த வேட்டைச்சமூக அமைப்பிலோ, முல்லை நிலத்தில் ஏற்பட்ட கால்நடைச் சமூக அமைப்பிலோ அரசுகள் தோற்றம் பெறவில்லை மாறாக இனக்குழு தலைவர்கள் பலர் தோன்றி மக்கள் மத்தியில் செல்வாக்கு பெற்றனர். ஆனால் மருதநிலத்தில் உருவான வேளாண் சமூக அமைப்பிலேதான் அரசுகள் தோன்றியிருக்க வேண்டும் என்கிறார்.

திரு.ந.சி.கந்தையாபிள்ளை தனது தமிழர் சரித்திரம் பக்கம் 78 இல் போருக்கு பயிற்றுவிக்கப்பட்டவரும், பரம்பரை பரம்பரையாகப் போர் தொழிலுக்குரியோரும் போரில் கலந்துகொண்டனர், மதிலால் அரண் செய்யப்பட்ட நகர்கள் பகையரசரால் எளிதில் தாக்க முடியாமலிருந்தன. அரண்படுத்தப்பட்ட நகரிலேயே கைத்தொழிலும் வாணிகமும் விருத்தியடைந்தன என்று பதிவு செய்கிறார். அத்துடன் போர்வீரனின் காவலை பெற்று வணிகர்கள் ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்திற்கு கூட்டமாகச் சென்றனர் என்றும் குறிப்பிடுகிறார்.

பழங்கால மதுரை அமைப்புப் பற்றிக் குறிப்பிடும் திரு.தேவநேயப்பாவாணர், அவர்கள் அக்கால வழக்கிற்கேற்ப, மதுரையைச் சுற்றி நாற்புரமும் பல்வேறு போர்ப்பொறிகளைப் பொருத்துதற்கும், நொச்சி மறவர் நின்று போர் செய்வதற்கும்

ஏற்றவாறு அகன்றுயர்ந்த கோட்டை மதில் எழுப்பப்பட்டது. நாற்புரமும் கோட்டை வாயிலும், வாயில்தொறும் மேன்மாடமும் அமைந்தன. வாயின் மாடச்சிறப்பால் மதுரை, மாடமதுரை எனப்பட்டது என்று தனது "தமிழர்களின் வரலாறு" (பக்கம்: 190) நூலில் பதிவு செய்கிறார்.

அரசன் மெய்க்காப்பாளராலும், பரிசனர்களாலும் சூழப்பட்டிருந்தான், மணப்பொருளாளர், மாலைக்காரர், அடைப்பைக்காரர், பாக்குப் பணியாளர்கள் கவசக்காரர், ஆடையணி புனைவோர், பந்தமேந்திகள், மெய்க்காவலர் போன்றோர் எண்பேராயங்கள் என்று அழைக்கப்பட்டதாக திரு.வி.கனகசபை அவர்கள் தனது "ஆயிரத்தொண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்" நூலில் தெரிவிக்கின்றார். மேலும் அவர் அரசன் அரசியலுக்கு மட்டுமின்றிச் சமுதாயத்துக்கும் தலைவனாயிருந்தார். வழக்கமாக அவன் மெய்க்காவலர் முதலிய பணியாளர்கள் சூழவே சென்றாலும் அந்நிலையிலேயே மக்களுடன் தங்குதடையின்றி பழகினான் என்கிறார்.

பண்டைய தமிழர் வாழ்வியலில் மெய்க்காவலர் பெற்றிருந்தச் சிறப்பை ஔவையார் பாடல் வழி டாக்டர் திரு.ரா.பி.சேதுப்பிள்ளை (தமிழர் வீரம்) அவர்கள் கீழ்க்கண்டவாறு விவரிக்கிறார்.

அரசனைக் காணச்சென்ற ஔவையார் அரசன் அருகில் முறுக்குமீசையோடு காவலுக்கு நின்ற அவனது மெய்க்காப்பாளனையும் காணுகிறார். அப்போது அவனைப்பற்றி அறிந்து கொள்கிறார். ஆர்வத்துடன் அந்த மெய்க்காவலன் பற்றி அரசனிடம் விவரிக்கிறார். அதில் அரசே இவன்பிறந்த குடியின் பெருமையை மூன்று தலைமுறையாக நான் அறிவேன். போர்க்களத்தில் தனது அம்பினால் எதிரிகளைச் சின்னாபின்னமாக்கிக் கொண்டிருந்தான் உன் பாட்டான், அப்போது அந்த வில்லின் செயல் கண்டு விம்மிதம் கொண்டு நின்றான் உன் ஐயன்.

அச்சமயம் பகைவன் ஒருவன் விலாப்புறமாக நின்று வீசிய வேற்படை அவனைநோக்கி வேகமாக வந்து கொண்டிருந்தது. அதனை அவன் அறிந்தானில்லை, நொடிப்பொழுதில் வேற்படைக்கும், அவனுக்கும் இடையே ஒரு வீரன் வந்து நின்றான் வெம்படையைத் தன் மார்பில் ஏற்றான். மடிந்து மண்மேல் விழுந்தான், அவனைத் தழுவி எழுந்தான்

உன்பாட்டன். கடும்புண்ணைக் கண்ணீரால் கழுவினான். அவன் விழுந்துபட்ட இடத்தில் வீரக்கல் நாட்டினான்.

அந்தச் சிறப்புமிக்க வீரனின் பேரன் இவன், அந்த முறையில் அவன் பெயரே இவன் பெயர். அமர்க்களத்தில் இவனும் அருஞ் செயல்புரிய வல்லவன், உனக்காக உயிரையும் கொடுக்கும் தியாக குணம் இவன் பிறவிக்குணம் என்றார்.

இந்தக்காட்சியில் விவரிக்கின்றபடி மெய்க்காவலர் வீரத்திற்கும், தியாகத்திற்கும் இலக்கணமாய்த் திகழ்ந்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

“தமிழில் சிற்றிலக்கிய வரலாறு” நூலாசிரியர் முனைவர் திரு.தா.ஈசுவரப்பிள்ளை அவர்கள், சங்க இலக்கியம் காட்டும் வேந்தர்கள் மேகமோ என மருளத்தக்க மாடங்களையும் அரிய காவலையும் உடைய அரண்மனைகளில் வாழ்ந்தனர். வேந்தர்கள்தம் உடைமைகளையும், அரசினையும் பாதுகாக்க யானை, தேர், குதிரை, காலாட் படையினை கொண்டிருந்தனர். ஆனால் வேந்தர் தோன்றுவதற்கு முந்தய இனக்குழு சமுதாய அமைப்பில் படைகள் இல்லை. இனக்குழுக்கான இடையூறுகளை அனைவரும் திரண்டு நின்று போராடினர் என்கிறார்.

தொல்காப்பியம் அரசனுக்குரிய பத்து அங்கங்கள் எனக் கூறுவனவற்றுள் முதலாவதாக இடம் பெறுவது படை ஆகும்.

அரசனின் ஆட்சிக்கு உரிய உறுப்புகளாக அமைச்சு நாடு, அரண், பொருள், படை, நட்பு என்பவற்றைத் திருவள்ளுவர் குறிப்பிடுகிறார். மன்னனின் நாடும் தலைநகரமும் மதிலரண், நிலவரண், நீரரண், காட்டரண், மலையரண் என்னும் ஐவகை அரண்களுள் சிலவற்றையோ பலவற்றையோ கொண்டிருந்ததை அறியமுடிகிறது. பகைவர் தாக்குதலிலிருந்து நாட்டையும் மக்களையும் காக்க வலிமையான பாதுகாப்பு வீரர்களும் அதனையொட்டிய அமைப்பும் முக்கியமாகும். இயற்கையாக அமைந்திருக்கும் நீர், மலை, காடு போன்ற அரண்கள் இல்லாத இடத்தில் அகன்று உயர்ந்த மதில்களை எழுப்பி, அவற்றின் மீது போர்க் கருவிகளை அமைத்து நாடும், அரண்மனையும் பாதுகாக்கப்பட்டதைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. (சங்ககாலத் தமிழர் வாழ்வு வெ.ப.கரு இராமநாதன் செட்டியார் (பக்கம்: 39).

தமிழ் இலக்கணமரபில் தமிழர் போர்முறை ஆநிரை கவர்தலிலும் மீட்டலிலும், தொடங்கிக் கோட்டை முற்றுகையிலும், காப்பிலும் கோட்டைக்கு வெளியே களப்போரிலும் முதிர்வுற்றன என்பார் பன்மொழிப்புலவர் திரு.கா.அப்பாத்துரையார் அவர்கள் தனது “கொங்குத்தமிழக வரலாறு” நூலில்.

சங்க கால போர்மரபில் மதிலும், அகழியும், காடும், மலையும் அரணாகச் சூழ்ந்த பகை அரசனுடைய தலைநகரை முற்றுகை இடுவது உழிஞைத் திணையாகும். முற்றுகையிட்டவனை எதிர்த்துத்தாக்கி அழிக்கமுயல்வது நொச்சித்திணையாகும்.

“உழிஞை தானே மருதத்துப் புறனே

முழுமுதல் அரணம் முற்றிலும் கோடலும்

அணைநெறி மரபிற்று ஆகும் என்ப”

(தொல்காப்பியம், தொல்காப்பியனார் 1010 - 1011) என்று தொல்காப்பியப் பொருளதிகாரம் புறத்திணை இயலில் அக்காலப்போர் முறை கூறப்படுகிறது.

மதிலையும் அதனையொட்டிய அகழியையும் வளைத்துப் போர்தொடுக்க முயலும் உழிஞைப் பூ சூடிய வீரர்களை, நொச்சிப் பூ சூடிய வீரர்கள் எதிர்த்து தங்கள் எயில் காத்து நின்றனர். இந்த நொச்சிப் பூ சூடிய வீரர்களே பின்னாளில் இட்டுவைத்த அரசையும், அரசனையும் அவன் அரண்மனையையும் அதனோடு கூடிய அரணையும் காத்துநின்றனர். இதன் மரபுவழித் தொடர்ச்சியே அகப்படை அகம்படிப்படையாக பின்னாளில் உருவெடுக்கிறது. படையை அதன்நிலை அடிப்படையில் இருபடைகளாகப் பிரிக்கப்படுகிறது. அவை அகப்படை மற்றும் புறப்படை. அகப்படை என்றால் மூலப்படை, அந்தரங்கமான சேனை அல்லது அணுக்கப்படையாகக் கருதப்படுகிறது.

நொச்சிப் பூமாலை சூடி, உழிஞைத் திணை வீரர்களை மதிலுள் புகாமல் தடுத்துப்போரிடும், நொச்சித்திணையின் எட்டு துறைகளைப் புறப்பொருள் வெண்பாமாலை குறிப்பிடுகிறது. அதில்,

1. செருவிடை வீழ்தல் என்பது அகழிகளைக்காக்கும் நொச்சி வீரர்கள் உழிஞை வீரரோடு போராடி வெற்றிகொள்வதைக் குறிக்கும் துறையாகும்.

*2. குதிரை மறம் என்ற துறை மதிலைக் காக்க வேண்டி, பெரிய மதில்களின் மீது பாய்ந்தோடும் குதிரையின் திரத்தைக்கூறும்.*

*3. ஊர்ச்செருதல் என்பது மதிலைச்சுற்றி அகழிகள் மதிலைப்பிடிக்க வரும் வீரர்களின் முனனேற்றத்தைத் தடுக்கும் விதமாக அமைந்திருக்கும் எனவே இவ்வகழிகளை உழிஞை வீரர்கள் அழிக்காது போரிடுவதைக் குறிக்கும் துறையாகும்.*

*4. மறனுடைப்பாசி என்ற துறை உழிஞைவீரரோடு போரிடும் வேளையில் வீரமரணம் அடைந்து சுவர்க்கம் அடைவதினைக் குறிக்கும்*

*5. மகள் மறுத்து மொழிதல் என்பது மதிலை சுற்றியும் தன் உழிஞைவீரப்படைகளை நிறுத்திய மன்னர், நொச்சி வேந்தரின் மகளை மணமுடிக்க வேண்டுதலும், அதனை நொச்சிமன்னர் ஏற்க மறுத்தலையும் விளக்கும்.*

*6. எயிலதுபோர் என்ற துறை மதில் மீதிருந்து உழிஞை வீரரோடு போரிடுவதைக் குறிக்கும்.*

*7. அழிபடைதாங்கல் என்பது மதிலின் மீது கூட்டமாக இல்லாவிடினும் ஒவ்வொரு நொச்சிவீரரும் தனியே நின்று போரிடும் தன்மையைச் சுட்டுவதாகும்.*

*8. எயில் தணை அழித்தல் என்பது வீரமரணம் அடைந்த நொச்சி வீரர்களை வானிலிருந்து தேவமகளிர் வந்து அவர்களை அழைத்துச்செல்வதைக் குறிக்கும்*

*எயில் காத்தலாகிய நொச்சி என்ற இத்திணை வீரர்கள் அரசன் அவன் இருக்கும் அரண்மனை, இவற்றைக்குறிக்கும் அகம்படி இதனை சூழ்ந்திருக்கும் மதிலரண், அதனையொட்டிய அகழி இவற்றை காத்து, பாதுகாப்பு அளித்தனர். மதிலுக்கு புரிசை, எயில், இஞ்சி முதலிய பல பெயர்கள் உண்டு. நகரைச் சூழ்ந்திருப்பதால் புரிசை எனவும், அம்பு எய்தற்குரிய புழைகளையுடைமையால் எயில் எனவும், செம்பை உருக்கிச் சாந்தாக வார்த்துக்கட்டப்பட்டமையால் இஞ்சி என்றும் அழைக்கப்பட்டது. (சங்க காலத் தமிழர் வாழ்வு - வெ.ப.கரு. இராமநாதன் செட்டியார் (பக்கம் 40,41).*

*மதுரைப்புறமதிலில் அமைக்கப்பெற்றிருந்த கருவிகளான 1. வளைவிற்பொறி, 2. கருவிரல் உளகம், 3.கல்உமிழ் கவண்,*

4.பரிவுறுவெந்நெய், 5.பாகடுகுழிசி, 6.காய்பொன்உலை, 7.கல்லிடுகூடை, 8.தூண்டில், 9.தொடக்கு, 10.ஆண்தலை அடுப்பு, 11.கவை, 12.ஐயவித்துலாம், 13.கைபெயர் ஊசி, 14.சென்றுஎறி சிரல், 15.பன்றி, 16.பணை, போன்றனவும், மதிற்கதவுக்கு வலிமையாக உள்வாயிற்படியில் நிலத்தில் விழவிடும் மரங்கள், மதிற்கதவுக்குத்தடையாகக் குறுக்கேயிடும் மரங்கள், குருவித்தலை என்னும் மதில் உருப்புகள் முதலியன மதுரை மதிலிலும் கோட்டை வாயிலிலும் இருந்ததை அறியமுடிகிறது.

கோட்டைச் சார்ந்த பண்டைய போர் வாழ்க்கையைப் பன்மொழிப்புலவர் திரு.கா.அப்பாத்துரையார் அவர்கள் தனது தென்னாட்டுப்போர்க்களங்கள் நூலில் கீழ்க்கண்டவாறு கோட்டை முற்றுகையைப் படம்பிடித்துக்காட்டுகிறார்.

சோழன் நெடுங்கிள்ளி, நலன்கிள்ளி தொடர்பான போரில் ஆவூர் முற்றுகை நாள் கணக்கில், வாரக்கணக்கில் நீடித்தது. நெடுங்கிள்ளி வெளிவந்து போரிடாமல் கோட்டைக்குள்ளேயே அடைபட்டு கிடந்தான். இதனால் நகரத்தின் உள்ளிருந்த மக்களுக்கும், உயிரினங்களுக்கும், பெருத்தமுட்டுப்பாடு ஏற்பட்டது. கோவூர்கிழார் நெடுங்கிள்ளியிடம் சென்று வீரஅறிவுரை தந்தார். வீரமரபில் வந்தவன் நீ, போர் புரிய விருப்பம் இருந்தால் ஆண்மையோடு வெளியேவந்து வெற்றிதேடு, இல்லாவிட்டால் நாட்டுக்குரியவனிடம் கோட்டையை விட்டுவிடு என்றார்.

அதேபோல் சேரன் மேற்கொண்ட அதியமான் தகடூர் முற்றுகைப்போரில் அதியமான் எழினியின் படைத்தலைவன் பெரும்பாக்கன் எதிரிப்படைகளைக் கோட்டைக்குள்ளிருந்து தாக்காமல் துணிச்சலுடன் கோட்டைக்கு வெளியே வந்து எதிர்த்தான் என்பதைத் தகடூர் யாத்திரை மூலம் சுட்டிக்காட்டுகிறார்.

மேலும் வேங்கைமார்பனின் கானப்பேரெயில் கோட்டையின் மதில்கள் வெல்லமுடியாதவை என்று சங்க காலங்களில் கருதப்பட்டிருந்தன. அது தற்போதைய காளையார் கோயில் ஆகும்.

எயில் காத்தவர்கள் வில் அம்பைப் பயன்படுத்துவதைக் காண்கிறோம் என்று குறிப்பிடும் மேஜர் கதிர் மகாதேவன் அவர்கள் (பழந்தமிழர் வீரப்பண்பாடு, ஒப்பிலக்கிய கணிப்பு) எயில் அழிக்கும் அமரில் ஈடுபட்ட வீரர்கள் வேலைப்பயன்படுத்தினர் என்கிறார்.

சோழர் கால இலக்கியமான கம்ப இராமாயணத்தில்

"எழுபது வெள்ளத்து உற்ற குரங்கினம் எயிலை முற்றும்,

தழுவின என்று செய்யத் தக்கது சமைதி போலாம்

அழுவநீர் வேலை அன்னது ஆயிரம் வெள்ளம் அன்றே

உழிஞையைத் துடைக்க நொச்சி உச்சியில் கொண்டது உன்ஊர்

(கம்பராமாயணம் அணிவகுப்பு படலம்)

அரச பெருமானே! உழிஞைப்பூச்சூடி வந்துள்ள வானரப் படையினரை அழிக்க, நமது அரக்கர் சேனை இலங்கை மாநகர மதில்களில் நொச்சிப்பூச்சூடி முன்நிற்கிறது. தங்கள் ஆணையை எதிர்பார்த்துக் கொண்டுள்ளது என்று காவல்படைத் தலைவனான நிகும்பன் கூறுகிறான்.

சங்ககால உழிஞைத்திணை, நொச்சித்திணை என்னும் இலக்கணச் சொற்களையே கம்பர் பயன்கொண்டமை இங்கு குறிப்பிடத்தக்கது. (தமிழ்மணி - தொல்காப்பியர் வழியில் கம்பர் - புலவர் சங்கர நாராயணன்)

இவ்வாறு அரசன், அரண்மனை, அரசு, இவற்றை காக்கும் காவல் அமைப்புகள் பின்னாளில் பெருவளர்ச்சிக்கான முந்தய மெய்ம்மறை, குறும்பு, அரண், மன்று, உழிஞை, நொச்சித்திணை என்பவை தொடக்கநிலை கட்டமைப்பாகக் காணப்படுகிறது. இவை அகம்படி, மெய்க்காவல், அணுக்கச்சேவகம், வேளைக்காரர் அகம்படிநியாயம் உள்ளிட்ட பல்வேறு வளர்ச்சி நிலைக்கு தொடக்கமாய் அமைந்தது என்று முடிவு செய்யலாம்.

**பூலாங்குறிக்கு கல்வெட்டில் உள்மனையார்**

கி.பி.5ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டு ஒன்று சிவகங்கை மாட்டம் பூலாங்குறிச்சியில் காணப்படுகிறது. இதில் வேள்மருகன் மகன் "கடலகப்பெரும்படைத் தலைவன் எங்குமான்" தேவகுலங்களையும, வாசினதேவனார் கோட்டத்தையும் எடுப்பித்ததாகத் தெரிவிக்கிறது. "அத்தி கோயத்தார்" 'உள்மனையார்', 'நால்வகைத் திணைகள்' ஆகிய குழுக்கள் அவற்றை தங்கள் பாதுகாவலில் கொண்டு உரியன செய்தனர் என்று சொல்லப்படுகிறது. இதில் இடம்பெறும் தேவகுலங்கள் சிவன் அல்லது விஷ்ணு கோயில் ஆகலாம்

என்றும், தாபதப்பள்ளி ஜைன மதநிறுவனம் என்றும் அறிஞர்கள் கருதுகிறார்கள். இதில் வரும் "உள்மனையார்" என்பது பின்னால் வரும் அகம்படியார் என்ற சொல்லுடன் இணைந்துப் பார்க்கப்படுகிறது (ஆவணம் இதழ்1 வருடம் 1991) இந்த உள்மனையார், தேவகுலங்கள் மற்றும் தாபதப்பள்ளி ஆகியவற்றிற்குக் காவல்பணி செய்ததை அறிய முடிகிறது. திரு.வி.மாணிக்கம் அவர்களின் "கொங்குநாடு கி.பி.1400 வரை" (தொகுதி 1, பக்கம் 152) எனும் நூலில் "உள்மனையார் பிற்றை நாளைய அகம்படி முதலிகள் எனப்படும் அரச அதிகாரிகள் என்று குறிப்பிடுகிறார்.

தொல்லியல்துறை வெளியீடான "கோயம்புத்தூர் மாவட்டம் தொல்லியல் கையேடு" (பக்கம் 66, 67) உள்மனையார் பற்றி இவ்வாறு குறிப்பிடப்படுகிறது.

"பூலாங்குறிச்சி கல்வெட்டில் அரசனுக்குக் காவலாக அத்திகோசத்தார், உள்மனையார், நாற்பாற்றிணைகள் ஆகியோர் குறிப்பிடப்படுகின்றனர். இதேபோன்று பெருங்கதையில் அரசனுடன் இருப்பவர்களாக கடிகைக்கணம், ஐம்பெருங்குழு, மனைப்பெருஞ்சனம், தேவிமார்கள், தானை போன்றவர்கள் குறிக்கப்படுகின்றனர்.

**மனைப்பெருஞ்சனம் :**

மேலே குறிப்பிட்ட கோயமுத்தூர் மாவட்ட தெல்லியல் கையேடு, இந்த உள்மனையார் (பின்னாளைய அகம்படி முதலிகள்) என்பதைப் பெருங்கதையில் வரும் மனைப்பெருஞ் சனம் என்பதுடன் ஒப்பிடத்தக்கது என்று குறிப்பிடுகிறது (பக்கம் 66,67) அத்துடன் மன்பெருஞ்சிறப்பின் மனைப்பெருஞ் சனம் என்று குறிப்பிடப்படுவதால் மனைப்பெருஞ்சனம் என்பவர்கள் உயர்ந்த நிலையில் இருந்ததைக் குறிப்பதாகவும் தெரிவிக்கப்படுகிறது. மேலும் பூலாங்குறிச்சி கல்வெட்டில் குறிப்பிடப்படும் உள்மனையார் உள்ளிட்ட மூன்று குழுக்களுமே படைகளுக்குத் தொடர்புடையதாகவே தெரிகின்றனர் என்றும் குறிப்பிடப்படுகிறது. இலங்கையின், மயூரசந்தேஸய என்ற இலக்கியம் அரசர், அரசியருடன், அகம்படிச்சேனைக்கும் கடவுளரின் ஆசிகிடைக்கட்டும் என்றுக் குறிப்பிடுவது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

**உள்வீட்டுக் கோயில் சேவகர்**

*கி.பி.889 ஆம் ஆண்டில் நடப்பட்ட கோமாறந் சடையனுடைய 23ஆவது ஆட்சியாண்டில் நடைபெற்ற போர் நிகழ்வைப்பற்றிய தூத்துக்குடி அருகே உள்ள கழுகுமலை நடுகல் குறிப்பிடுகிறது. இதில் பங்கேற்ற தொண்டைநாட்டு பூந்தண்மலி வினையஞ் தொழுகுரான் என்பவன் எட்டி மன்னனின் உள்வீட்டுக் கோயில் சேவகராக மேற்படி போரில் பங்கேற்று உயிர்விடுகிறான். இதனை விவரிக்கும் சரித்திரச்செம்மல் திரு.ச.கிருஷ்ணமூர்த்தி அவர்கள் நடுகற்கள் என்ற (பக்கம்: 267) நூலில் உள்வீட்டுக் கோயில் சேவகர் என்பது அரண்மனையில் பணிபுரிந்த போர்வீரர், அகம்படியர் அல்லது மனைமகன் எனலாம் என்று பதிவு செய்கிறார்.*

**மனைமகன் :**

*மேலே குறிப்பிட்ட நடுகற்கள் நூல் (பக்கம்: 321) சிவமாரனாகிய கொங்கணி அரசருடைய வரதம்பட்டி நத்தமேடு நடுகல் மூலம் கி.பி.8ஆம் நூற்றாண்டின் மனைமகன் என்ற சொல் வழக்கு பற்றிப் பதிவு செய்கிறது. இதில் மனைமகன் என்ற சொல்லே சோழர் காலத்தின் அகம்படியார் அல்லது அகம்படி முதலி என்று மாறியது போலும் என்று குறிப்பிடப்படுகிறது.*

**அகம்படி உடையான்:**

*கி.பி.எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த தண்டிவர்ம பல்லவனின் உத்திரமல்லூர் கல்வெட்டு (கல்வெட்டு ஆண்டறிக்கை 61/1898) அகம்படி உடையான்களைப் பற்றிப் பேசுகின்றது. போர் மரபுச் சமூகமான இவ்வகம்படியர்கள் வேளாண்மையை நோக்கிய நகர்வினை இதில் அறியமுடிகிறது.*

*இந்தச்சாதிச் சமூகம் காலங்காலமாக இப்படியே இருக்கவில்லை. இதன் வரலாற்றுப்பின்னணியைப் பார்த்தால் இது காலந்தோறும் மாறிவந்துள்ளது என்பது புரியும் என்று குறிப்பிடும் நொபொரு கராஷிமா - எ.சுப்பராயலு (தமிழகத்தில் சாதி உருவாக்கமும் சமூகமாற்றமும்) ஆகிய இரு அறிஞர்களும் தமிழ் நாட்டைப் பொறுத்தவரை இடைக்காலச் சோழர்காலத்தில், அதாவது பொது ஆண்டு 10–13 ஆம் நூற்றாண்டுகளில் தான் சாதி ஒரு சமூகநிறுவனம் என்ற வகையில் ஓரளவு முழுமையடைந்தது என்பதற்குக் கல்வெட்டுச் செய்திகள் சான்று*

பகர்கின்றன என்றும் பதிவு செய்கின்றனர். இந்தப்பின்னனியில், தொல்குடி நிலையிலிருந்து கிளைக்குடி, சிறுகுடி, மழவர் மெய்ம்மறை, மெய்க்காவலர் அரண்மனை, அகத்தொண்டு, அகம்படி, உழிஞை, நொஞ்சி போன்ற இலக்கிய வழக்குகள், உள்மனையார், மனைப்பெருஞ்சனம், உள்வீட்டு கோயில் சேவகர்கள், மனைமகன், அகம்படி உடையான், அணுக்கப்பணி, வேளைக்காரப்படை, படைத்தொகுதி, நிர்வாகம், அரசு என்று பல்வேறு படிநிலைகளை அகமுடையார்கள் எதிர் கொண்டு பின்னாளில் ஒரு அகமண இனக்குழுவாக நிலைபெருகின்றனர் என்பது வரலாற்றுப்போக்கில் அடையக்கூடிய வளர்ச்சியாகக் கருதமுடியும்.

★★★

# 12. குலத்தெய்வங்கள்

"அருஞ்செயல் புரிந்திறந்த அல்லது அகால மரணமடைந்த குல முன்னோர்களை அவர்களின் வழிவந்த குடும்பத்தினர் தெய்வமாகக்கருதி வழிபடுவதைத் சமுதாயத்தில் காணமுடிகிறது."

அரு.இராமநாதன்,
நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர்
வாழ்வியல் (பக்கம் 208)

"மலை உறை கடவுள் குலமுதல் வழுத்தி" என்னும் தொடர்கொண்டு குலத்தெய்வம் என்னும் வழக்குச் சங்க நூல்களில் காணப்படுகிறது என்பார் திரு.ப.ஞானம் (தமிழ் இலக்கியத்தில் முருகக்கடவுள், பக்கம் 211). முன்னோர்கள், சிறுதெய்வங்கள், ஆகியோர் இந்தக் குலத்தெய்வ வழிபாட்டுக்குரியோர்கள் ஆவர். மூதாதையரின் வீரச்செயல்களைப் போற்றி அவர்கள் மீது தெய்வத் தன்மையை ஏற்படுத்தி அதனை நடுகல் அல்லது சமாதித் தெய்வமாக வணங்கப்பெற்றதே பல்வேறு சிறுதெய்வங்கள் தோன்ற வழிவகுத்தது.

*வாழ்ந்த மாந்தரையே குலத்தெய்வமாக்கி வழிபடுதல், சாதியின் அடிப்படையில் வழிபடப்படும் தெய்வங்கள், சமாதித்தெய்வங்கள், நடுகல் தெய்வங்கள், காவல் தெய்வங்கள் ஆகியனக் குலத்தெய்வ வழிபாட்டில் வழிபடப்படும் தெய்வ வகைகள் ஆகும். போர்க்களத்தில் வெற்றிபெற்ற அல்லது இறந்துபோன வீரர்களின் வழிபாடாக நடுகல் வழிபாடு தோற்றம் பெற்றுள்ளது.*

*மதுரை மாவட்டத்தில் இராசகுல அகமுடையாரின் தெய்வ வழிபாடும், திருவிழாக்களும் என்ற ஆய்வுக் கட்டுரையில் அதன் ஆசிரியர் செல்வி. மு.அம்பிகாபதி, இப்பிரிவினர் 21 வகை தெய்வங்களை வணங்குகிறார்கள் (இலக்கியத் தரவுகளில் மகளிர் பதிவுகள், பக்கம்: 139) என்று பதிவுசெய்கிறார். ஆனால், நடைமுறையில் இந்த எண்ணிக்கைக்கு மேலாகவே தெய்வங்களை வணங்குகிறார்கள் என்பதையும் குறிப்பிடுகிறார். இந்த இராஜகுல அகம்படியரின் குலத்தெய்வமாக.*

| **ஆண் தெய்வங்கள்** | | **பெண் தெய்வங்கள்** |
|---|---|---|
| 1. ஐயனார் | 1. | முத்துப்பேச்சியம்மாள் |
| 2. கருப்புச்சாமி | 2. | ராக்காச்சி அம்மாள் |
| 3. சின்னச்சாமி | 3. | சீலைக்காரி அம்மாள் |
| 4. சோணையா | 4. | தொட்டிச்சியம்மாள் |
| 5. சங்கையா | 5. | அங்காள ஈசுவரி |
| 6. முத்தையா | 6. | நல்ல தங்காள் |
| 7. வீரபத்திரன் | 7. | பெத்தம்மாள் |
| 8. மருதுசாமி | 8. | கன்னிமார் எழுவர் |

*மதுரைப் பகுதிகளில் இராஜகுல அகமுடையார்களின் வழிபாட்டில், குறிப்பாக பூலாங்குளத்திலிருந்து மங்கல்ரவ் என்னும் ஊர்வரைக் கொண்டாடப்படும் சின்னச்சாமி கும்பிடல் என்னும் வழிப்பாடு சிறப்புக்குரியதாகும். இங்குள்ள கோயில் விழாவில் 1.கம்பம், 2.புதுப்பட்டி, 3.இராயப்பன்பட்டி, 4.அனுமந்தன்பட்டி, 5.தருமாபுரி, 6.சங்கரலிங்கபுரம், 7.பாப்பநாயக்கன்பட்டி, 8.மீனாட்சிபுரம், 9.வீரப்பட்டி, 10.சலுப்பப்பட்டி, 11.வீரானாம்பட்டி, 12.மங்கள்ரவ்,*

*13.தொட்டியப்பட்டி, 14.பெரியபூலாங்குளம், 15.சின்ன பூலாங்குளம், 16. அல்லிகுன்றம், ஆகிய ஊர் மக்கள் கலந்து கொள்வதாகக் குறிப்பிடுகிறார்.*

*சென்னம்பட்டி ஐயனார் தெய்வத்தை அகம்படியர்களும் பிற சமுதாயத்தினரும் வணங்குகின்றனர்.*

*மதுரை மற்றும் சிவகங்கை மாவட்டங்களில் உள்ள குலமங்கலம், ஆவியூர் அரசகுளம், எட்டுநாழி திருப்பரங்குன்றம், பழங்காநத்தம், கிருங்காக்கோட்டை வேளங்குளம், பாப்பான்குளன், பழையூர் முதலியகிராமங்களில் உள்ள இராஜகுல அகம்படியருக்கு, மதுரை கணபதியேந்தல் ஸ்ரீவெள்ளையம்மன் கோவில் குலத்தெய்வமாகும்.*

*அகமுடையர், துளுவ வெள்ளாளர் : திருக்கோயிலூர், வேட்டவலம், விழுப்புரம், திருவண்ணாமலை, கடலூர், பாண்டிச்சேரி, வேலூர், திண்டிவனம் பகுதிகளில் வாழும் அகமுடையர்/துளுவ வெள்ளாளர்களும், நந்தமான் உடையாரும், பச்சையம்மன், பச்சை வாழியம்மன், மன்னநாதன் (மண்ணுநாதன்) பூமிபாலன், பெரியாண்டவர், பெரியாயி, வீரன், கருப்புசாமி கருப்பண்ணன், வீரவாழியம்மன், பெரிய நாயகி, அய்யனார், வீரனார், புடவைக்காரி, மேல்மலையனூர் அங்காளம்மன், கருப்பன், முனுசாமி, போன்ற தெய்வங்கள் அல்லது குடிசாமிகள் இவர்களுக்குப் பொதுக் கடவுளாக வழிபாட்டில் உள்ளது என்று வேட்டவலம் வரலாறு நூலின் (பக்கம் 93, 211) ஆசிரியர் டாக்டர் இல.தியாகராஜன் குறிப்பிடுகிறார்.*

*கோயம்புத்தூர் பகுதிகளில் அகமுடையார் குலத்தெய்வங்களாக கீழ்க்கண்ட கடவுள்களைக் குறிப்பிடுகிறார் முனைவர் வெ.அ.நாகரத்தினம் அவர்கள் (அகமுடையார் குலத்தெய்வ வழிபாடு)*

| | | | |
|---|---|---|---|
| 1. | வீரமாச்சி | 7. | சுந்தராயி அம்மன் |
| 2. | காத்தாய் கமலாய் முத்துப்பேச்சி | 8. | செல்லாண்டியம்மன் |
| 3. | சோலையம்மன் | 9. | தொட்டிச்சியம்மன் |
| 4. | தங்கம்மான் | 10. | எழுவக்காரியம்மன் |
| 5. | பகவதியம்மன் | 11. | சிலம்பாத்தாள் |
| 6. | உடைய நாச்சியம்மான் | 12. | காவேரியம்மன் |

டெல்டா மாவட்டங்களின் தென்பகுதியில் தகட்டூர் அருள்மிகு பைரவநாத சுவாமி, அருள்மிகு இராவுத்தசாமியும், பரக்கலக்கோட்டை அருள்மிகு பொது ஆவுடையார் திருக்கோயிலும் பெரும்பகுதி அகமுடையார்களின் குலத் தெய்வமாக வழிபடப்படுகிறது. குறிப்பாக ஐவழி நாட்டு அகமுடையாரின் குலத்தெய்வமாக மேலே குறிப்பிட்ட கோயில்கள் விளங்குகின்றன. மேலும் 1.தகட்டூர் மாப்பிள்ளை வீரன், 2.பக்தர்குலம் மாரியம்மன் (வேதாரண்யம்), 3.கடிநெல்வயல், வேம்படி ஐயனார், 4.பத்ரகாளியம்மன் ஆயக்காரன்புலம், 5.திரௌபதியம்மன் வாய்மேடு, 6.பெருகவாழ்ந்தான் திரௌபதியம்மன், 7.நல்லகாத்தாயி அம்மன் வடசேரி, 8.ஸ்ரீஆகாசவீரனார் பரவாக்கோட்டை, 9.இடும்பன் ஜாம்பவனோடை, 10.பெரியாச்சியம்மன், வீரனார் பரவாக்கோட்டை, 11.ஸ்ரீஆயி ஆத்தா மின்னடியான் பரவாக்கோட்டை, 12.ஸ்ரீ ஆகாசவீரனார் வேப்பங்குளம், 13.ஸ்ரீவீரனார் பொன்னவராயன்கோட்டை, 14.ஸ்ரீகழுவடியான் காமாட்சி அம்மன் பரவாக்கோட்டை, 15.ஸ்ரீபெரியம்மாள் உள்ளிக்கோட்டை, 16.ஓலைகொண்ட ஐய்யனார் முன்னவால்கோட்டை, 17.எலக்குடி மாரியம்மன், அம்மையப்பன், திருவாருர், 18.ஸ்ரீகாத்தவராயன் கூப்பாச்சிக் கோட்டை, 19. ஸ்ரீபச்சை ஐய்யனார்,தூண்டில்வீரன், ஓவேல்குடி மன்னார்குடி, 20.காத்தவராயன் சுவாமி தளிக்கோட்டை, 21.தோளாச்சேரி காத்தாயி அம்மன், திருத்துறைப்பூண்டி, 22.பெத்தபெருமாள் சுவாமி சங்கமங்களம்அம்மையாண்டி, 23.ஆதனூர் மழைமாரியம்மன் வேதாரணியம், 24.வண்டுறை மாரியம்மன், துளசியாப்பட்டினம், 25.நல்ல மெய்க்க ஐய்யனார், வடசேரி, 26.சேவிச்சியம்மன் ஓரடியாம்புலம், 27.முத்தையா சுவாமி காயாவூர், 28.ஸ்ரீகாத்தாயி அம்மன், வாழ்முனீஸ்வரர் மகிஷி திருத்துறைப்பூண்டி, 29.நொண்டிவீரன் ஆயக்காரன்புலம், 30.பந்தமாணிக்க ஐய்யனார் கீழப்பட்டி மன்னார்குடி, 31.முத்து மாரியம்மன் திருத்துறைப்பூண்டி, 32.அரசர் மாணிக்கம் ஐய்யனார் பெரிய கோட்டை, 33.பெரிய கருப்பர் சுவாமி செங்கமங்கலம் பேராவூரணி, 34.நானலூர் வீரன் வேதபுரம் கோட்டூர், 35.பொன்னியம்மன் கரந்தை தஞ்சாவூர், 36.அங்காளம்மன் முத்துப்பேட்டை, 37.அங்காளம்மன் பஞ்சநதிக்குளம், 38.அக்கினி வீரன் ஜாம்பவனோடை,

தமிழகம் முழுவதும் அகமுடையார்கள் வழிபடும் குலத்தெய்வங்கள் வாய்மொழி ஆதாரங்கள் வழி

சேகரிக்கப்பட்டுள்ளது. இதில் இடம்பெறும் பெரும்பகுதி தெய்வங்களை அகமுடையார்கள் வழிபடுகின்றனர் என்பது உறுதி செய்யப்பட்டுள்ளது. சிறிய எண்ணிக்கையில் கீழ்க்கண்ட பட்டியலில் வேறுபாடுகள் இருக்க வாய்ப்பு உள்ளது என்பதும் இங்குச் சுட்டிக்காட்டப்படுகிறது.

*தமிழகத்தின் வடமாவட்டங்களில் உள்ள அகமுடையார்கள் :*

1. அம்மணி அம்மன் - சென்ன சமுத்திரம், திருவண்ணாமலை.
2. புத்துவாயம்மன் - கோலியனூர், விழுப்புரம்.
3. ஐயனாரப்பன் - கண்டாச்சிபுரம், விழுப்புரம்.
4. பூங்காவனத்தான் - திருவண்ணாமலை மாவட்டம்.
5. அம்மச்சர் அம்மன் - வேட்டவலம், திருவண்ணாமலை.
6. தீவனூர் சுயம்பு பொய்யா மொழி விநாயகர் - திண்டிவனம்.
7. ஐய்யனார் சத்திரம் - திருக்கோயிலூர், விழுப்புரம்.
8. முத்தாலம்மன் பூண்டி பழங்கோயில் - கலசப்பாக்கம், திருவண்ணாமலை.
9. குன்னியம்மன் - புக்கரவாரி சின்னச் சேலம், விழுப்புரம்,
10. பெரியாண்டவர் ஏரிக்குப்பம் - போளுர், திருவண்ணாமலை.
11. மேல்மலையனூர் அங்காளபரமேஸ்வரி -மேலமலையனூர்
12. கந்தவாசல் படைவீடு ரேணுகா அம்மன் - போளுர்.
13. வாழைப்பந்தல் பச்சையம்மன் ஆரணி - செய்யார்.
14. முத்தாலம்மன் - எரும்பூண்டி, திருவண்ணாமலை.
15. பச்சையம்மன் - அவலூர் பேட்டை, திருவண்ணாமலை.
16. அரகண்டநல்லூர் பச்சையம்மன் - வாழைப் பந்தல், கோவிலூர் காவேரிப்பட்டினம் திருக்கோயிலூர்.
17. விரிஞ்சிபுரம் பிரகதீஸ்வரர் - வேலூர் வட்டம்,
18. திரௌபதியம்மன் - தஞ்சூர், கள்ளக்குறிச்சி, திருவண்ணாமலை, முயனூர், சின்னச்சேலம்
19. தீர்த்தகிரீஸ்வரர் தீர்த்தமலை - தருமபுரி.
20. அம்மச்சார் அம்மன் - எய்தனூர், நெல்லிகுப்பம்.
21. கோமதுரைசாமி - கள்ளக்குறிச்சி, விழுப்புரம்.
22. பேச்சியம்மன் அ.முதலியார் - திருவண்ணாமலை.

23. அக்னிமூர்த்தி ஐய்யனார் - விழுப்புரம் மாவட்டம்.
24. மன்னார்சாமி சமேத பச்சையம்மன் - சேத்துப்பட்டு.
25. சின்னம்மாள் சிறுகாளியம்மன் - திருவண்ணாமலை மாவட்டம்.
26. அம்மாச்சி அம்மன் கோலியனூர் - விழுப்புரம் மாவட்டம்.
27. புத்துவாழ் அம்மன் - விழுப்புரம் மாவட்டம்.
28. தஞ்ஜியம்மன் ஆலயம் - இரும்பேடு, ஆரணி.
29. மஞ்னீஷ்வர ஐயனாரப்பன் - கீழ்புத்துபட்டி, மரக்காணம்.
30. பில்லூர் ஐய்யனார் - விழுப்புரம் மாவட்டம்.
31. முனீஸ்வரர் - குடியாத்தம், செங்கம்
32. அம்மாச்சர் அம்மன் - வேலூர், திருவண்ணாமலை.
33. மதுரைவீரன் ஐய்யனார் - வீரமூர், விழுப்புரம்.
34. பச்சையம்மன் - வாழைப்பந்தல், வேலூர் மாவட்டம்.
35. வேடியப்பன் - தாதனவலசை, திருப்பத்தூர், வேலூர் மாவட்டம்.
36. அங்காளம்மன் - மரவப்பாளையம் - நாமக்கல்.
37. மதுக்கரை செல்லாண்டியம்மன் - மதுக்கரை.

*ஆகிய தெய்வங்களைத் தங்கள் குலத்தெய்வமாக வழிபடுவதாக தெரியவருகிறது.*

*டெல்டா மற்றும் அதன் அருகில் உள்ள மாவட்டங்களில் உள்ள அகமுடையார்கள் கீழ்க்கண்டதெய்வங்களைத் தங்கள் குலத்தெய்வமாக வழிபடுகின்றதை அறிய முடிகிறது.*

1. வேலாயுதத்தம்மன் கோயில் - பரவாக்கோட்டை.
2. வீரனார் - ஆலங்கோட்டை.
3. அத்திவெட்டிவீரன்.
4. அக்னிவீரன் - வாய்மேடு.
5. கட்டெறும்பு ஐயனார் - தம்பிக்கோட்டை.
6. தீர்தாரியப்பன் சுவாமி - வல்லம், தஞ்சாவூர்.
7. காதமறவா காளி (காதம்பரியம்மன்) - அறந்தாங்கி.
8. கருப்பசாமி - புதுக்கோட்டை.
9. அங்காளம்மன் - வேதாரணியம்.
10. தூண்டிக்காரன் - பஞ்சநதிக்குளம், வேதாரணியம்.

11. ஆகாச கருப்பர், பட்டவர் ராக்காச்சி, ராக்கம்மாள் அம்மணி அம்மாள் - மாராயப்பட்டி, புதுக்கோட்டை.
12. வழஞ்சமுடைய ஐய்யனார், சோளக்கருப்பர் -திருமயம் குறிச்சி, புதுக்கோட்டை.
13. கள்ளிமேடு பத்ரகாளியம்மன் - வேதாரணியம்.
14. பட்டவரைய்யா, வீராத்தாள் - களத்தூர், பேராவூரணி.
15. மதுரைவீரர் கோட்டைக்காடு - மதுக்கூர்
16. கீழப்புலியூர், பச்சையம்மன் - வலிகண்டாபுரம், பெரம்பலூர்.
17. காத்தாயியம்மன் - கபிஸ்தலம், சுவாமிமலை.
18. காத்தவராயன், காத்தாயி - கீழப்பாளையம், பட்டுக்கோட்டை.
19. இராசப்பா சுவாமி, குருந்தடி அம்மன் - ஆண்டாக்கோட்டை, பேராவூரணி.
20. நொண்டிமுனியன் / காத்தான் - வடசேரி, தஞ்சை.
21. அம்பலத்தடியார் - ஆதங்குடி - பொதக்குடி, கொரடாச்சேரி.
22. காமாட்சியம்மன் - கண்டிதம்பேட்டை, மன்னார்குடி.
23. முத்தாள் ராவுத்தர் / வீரனார் - பெருகவாழ்ந்தான்.
24. அயத்த முன்னடியான் - பரவாக்கோட்டை.
25. அங்காளபரமேஸ்வரி அகோர வீரபத்திரர் - நெய்குப்பை, குடவாசல்.
26. மணக்காடு மாரியம்மன் - மணக்காடு, வேதாரணியம்.
27. காத்தாயியம்மன் நாககுடி - புதுக்கோட்டை.
28. கனகாம்பிகையம்மன் - மேலப்பெருமழை, திருத்துறைப்பூண்டி.
29. அங்காளம்மன் - கொத்தமங்களம், திருத்துறைப்பூண்டி.
30. திரௌபதி அம்மன் - பஞ்சநதிக்குளம் வேதாரணியம்.
31. பாவாடைராயன் / பேச்சியம்மன் - வடசேரி, தஞ்சை.
32. சவந்தான் ஐய்யனார் - தம்பிக்கோட்டை.
33. ஐய்யனார் - பரவாக்கோட்டை, மன்னார்குடி.
34. திரௌபதியம்மன் - செம்பியன் ஆத்தூர், நாகை.
35. அங்காளம்மன் - பஞ்சநதிக்குளம், வேதாரணியம்.
36. அக்னிவீரன் - குலமாணிக்கம்.
37. காமாட்சி உருமகருப்பு - கீழக்காவணூர், புதுக்கோட்டை.

38. ஆகாசவீரனார் - பரவாக்கோட்டை.

39. முத்தையாசாமி - காயாவூர், பட்டுக்கோட்டை.

40. நொண்டிவீரன் மேட்டுப்பட்டி, புதுக்கோட்டை.

41. ஆயி ஆத்தா - கூப்பாச்சிக் கோட்டை.

42. ஐய்யனார், வீரிஆயாள் - அதம்பை.

43. வல்லமுடைய ஐய்யனார் - பரவாக்கோட்டை.

44. பொன்வார்த்த அம்மன் - எடையூர், திருத்துறைப்பூண்டி.

45. அகோரவீரபத்ர சுவாமி, ஸ்ரீகருப்பணசாமி - கொடிக்கரம்பை, புதுக்கோட்டை.

46. முனீஸ்வரன் - ஆயக்காரன்புலம்.

47. மூங்கில் ஐய்யனார் / மதுரை வீரன், பெரியாண்டவர் - கந்தர்வக் கோட்டை, புதுக்கோட்டை.

48. வீரனார் - அதிராம்பட்டினம்.

49. தர்ம சாஸ்த்தைய்யனார் - திருமயம், புதுக்கோட்டை (கண்ணாரக்குழி).

50. வாழ்முனீஸ்வரர் - மன்னங்காடு, மதுக்கூர்.

51. திரௌபதி அம்மன் - வல்லத்திரக்கோட்டை, புதுக்கோட்டை.

52. பெரியாச்சி - அத்திவெட்டி, மதுக்கூர்.

*கோவைப்பகுதியில் வேளாளர், நாவிதர், குயவர், பள்ளர், முதலிய கொங்கு வகுப்பாருடன் அகமுடையாரையும், கொங்கு வகுப்பாராகக் குறிப்பார் திரு.ம.இராமச்சந்திரன் செட்டியார் அவர்கள் தமது கொங்குநாட்டு வரலாறு (பக்கம் 54) நூலில். இங்குள்ள அகமுடையார்கள்.*

1. வீரமாட்சி அம்மன் - கோவை, இராமநாதபுரம், மருதூர்.

2. உமாமகேஸ்வரர் - வெள்ளூர்.

3. புடவைக்காரி - இருகூர்.

4. பொன்னவரம்மன் - இருகூர்.

5. ஐய்யனார் இருகூர்

6. வீரமாட்சி புடவைக்காரி, ஏழுகன்னிமார், கருப்பணசாமி - கிணத்துக்கடவு.

7. சூரத்தம்மன் - சூலூர்.

8. சீராங்கன்னியம்மன்.

9. அரசப்பதேவர், மாடத்தியம்மன்.

10. சோலையம்மன்.

11. இருளப்பசாமி.

12. ஏழுவாக்காரியம்மன்.

13. சூரத்தம்மன்.

14. கருப்பராய சுவாமி

15. ஆண்டிச்சி.

16. குருநாத சுவாமி - கெம்பட்டி குளம், சூலூர்.

17. சித்திரபுத்தர், எமதர்மராஜகோயில் - வெள்ளலூர்.

18. வேட்டைக்காரன் சுவாமி - செஞ்சேரி.

*ஆகிய தெய்வங்களைத் தங்கள் குலத்தெய்வமாக வழிபடுவதாக தெரியவருகிறது.*

*வெள்ளலூர் இடையர்பாளையம் உமாமகேஸ்வரர் திருக்கோயில்*

*இராமநாதபுரத்திலிருந்து சேதுபதி மன்னர்களுடன் ஏற்பட்ட தகராரால் அங்கிருந்து கிளம்பிய அகமுடையார்கள் கோவை வெள்ளலூர் இடையர்பாளையத்தில் குடியேறி அவர்கள் கொண்டுவந்து வணங்கிய தெய்வங்களிலிருந்து இக்கோயில் தோற்றம் பெற்றுள்ளது. சுமார் 400 ஆண்டுகளுக்கு மேல் இங்கு கோயில் கொண்டுள்ள இத்திருகோயில் தெய்வங்கள் மூலவராக உமாமகேஸ்வரரும், அவரின் பரிவாரமாக 60 தெய்வங்களும் இங்கு அகமுடையார்கள் குலத்தெய்வமாக வழிபடப்படுகிறது. முன்பு 60 தெய்வங்களுக்கும் தனித்தனியே குடிசைகளில் வைத்து வழிபடப்பட்டுள்ளது, பின்பு கற்கோயிலாக எழுப்பப்பட்டுள்ளது. அதனால் 60 வீட்டுக்கார இருளப்பசுவாமி என்கிற உமாமகேசுவரர் திருக்கோயில் என இக்கோயில் அழைக்கப்படுகிறது.*

*கோவை மாவட்டத்தில் அகமுடையார் வழிப்பாட்டில் வீட்டுத்தெய்வங்களாக 1.வீரமாச்சி, புடவைக்காரி, 2.காத்தாயி, கமலாயி, முத்துப்பேச்சி, 3.சோலையம்மன், 4.தங்கம்மன், 5.சுந்தராயி அம்மன், 6.பெயர்தெரியாத அம்மன் ஆகியவற்றை குறிப்பிடுகிறார் செல்வி நாகரத்தினம் அவர்கள் (கோவை மாவட்ட அகமுடையார் குலமரபும், பண்பாடும்), மேலும் இவர் அகமுடையார்களின் குலத்தெய்வமான செல்லாண்டியம்மன், வெற்றியம்மன், தொட்டிச்சியம்மன், மீனாட்சியம்மன், காமாட்சியம்மன், திரௌபதியம்மன், எழுவாக்காரியம்மன்,*

பட்டத்தரசியம்மன், சிலம்பாத்தாள், பகவதியம்மன். உடைய நாச்சியம்மன், அக்கமார் தேவி, காவேரியம்மன், கன்னிமார் சப்தமாதர், சாத்தான், ஐய்யனார் கருப்புசாமி, முனியப்பசாமி, மதுரைவீரர், வேட்டைக்காரன்சாமி, அண்ணமார்சாமி, இருளப்பசாமி, அரசப்பசாமி, பெருமாள், எமன், முருகன் ஆகிய தெய்வங்களைக் குலத்தெய்வமாகக் குறிப்பிடுகிறார்.

தென்மாவட்டங்களில் அகமுடையர்களின் குலத்தெய்வங்கள் மற்றும் வழிபடும் தெய்வங்கள்.

1. வண்டியூர் ஸ்ரீ சமயகருப்புசாமி - மதுரை.
2. ஸ்ரீபகவதியம்மன் - இராமேஸ்வரம்.
3. ஸ்ரீதலைமடல் காளி - ஆர்.எஸ்.மங்களம் - இராமநாதபுரம்.
4. துவரிமான் சாலக்கரை முத்தையா கோவில் - மதுரை மாவட்டம்.
5. மருதூர் ஐயனார் மருதங்குடி - மதுரை.
6. கூரிசாத்த ஐயனார் - இராமநாதபுரம்.
7. பில்லூர் வேதமுடை ஐயனார் - பில்லூர், சிவகங்கை.
8. சிவசெண்பகத்தண்ணாயிரம் உடைய ஐய்யனார் - எழுவானி, நரிக்குடி, விருதுநகர்.
9. முத்தையா, நிறைகுலத்து ஐயனார், அடைக்கலம் காத்த ஐயனார் - விருதுநகர் மாவட்டம்.
10. இருளப்பசாமி - பேரையூர்.
11. அழகர் கோயில் - மதுரை.
12. அழகுமலையான், சேதுமகாளியம்மன் - மதுரை.
13. சோட்டாணிக்கார ஸ்ரீபகவதி - இராமநாதபுரம்.
14. படவநாச்சியார் - சிவகங்கை மாவட்டம்.
15. வேளங்குடி, கருப்பசாமி, அங்காள பரமேஸ்வரி - பரமக்குடி.
16. சந்திரவீரன் வேப்பங்குடி - சிவகங்கை.
17. சங்கையா திருவேட்டை அய்யனார் - விரதனூர், சிவகங்கை.
18. லாடனேந்தல் காமாட்சியம்மன் - வரிச்சியூர்.
19. பதினெட்டாம்படி கருப்பசாமி - அழகர்மலை.
20. தீர்த்தக்கரை ராக்காயி அம்மன் - அழகர் கோயில்.
21. கொக்கரலி ஐய்யனார் - பரமக்குடி.
22. ஊர்க் காவலன் - திருமங்கலம்.

23. சபரிமலை ஐய்யனார் - பனையூர், மதுரை மாவட்டம்.
24. கோணயாடி கருப்பசாமி - மருதப்ப ஐய்யனார் கோயில் சிவகங்கை.
25. வீரபெருமாள் ஐயனார் கோயில் - இராம்நாடு.
26. மருதப்ப ஐயனார் - தீயனூர், சிவகங்கை.
27. அங்காள பரமேஸ்வரி, முத்தையா - வடகரை திருமங்களம்.
28. சோணையம்மாள் - துவரிமான், மதுரை மாவட்டம்.
29. சதுரகிரி ஸ்ரீ மகாலிங்க முனீஸ்வரர் கீழ்க்குடி - திருவாடனை.
30. பழங்காநத்தம் அங்காள ஈஸ்வரி - மதுரை.
31. சிங்காரமுடைய ஐயனார் - காளையூர், பரமக்குடி.
32. மார்நாட்டு கருப்பசாமி - மதுரை.
33. ஊர்க்காவலன், ராக்காச்சி, பத்ரகாளி - மூளக்குலம், சிவகங்கை.
34. கோச்சடை முத்தையா கோயில் - மதுரை.
35. வீரக்குடி முருக ஐயனார் கோவில் - முக்குளம், விருதுநகர்.
36. இராஜராஜேஸ்வரி வாலுடைய ஐயனார் - இராசசிங்கமங்கலம், இராமநாதபுரம் மாவட்டம்.
37. சந்தனக் கருப்பு - பழையனூர், சிவகங்கை.
38. விருசின்னம்மாள் - சாலைபுதூர், திண்டுக்கல்.
39. திரௌபதியம்மன் - இராமநாதபுரம்.
40. உலகம்மாள் செல்வத்துரை நொண்டிக்கருப்பர் - மேலச்செல்வனூர், இராமநாதபுரம்.
41. கருப்பசாமி - எட்டயபுரம், தூத்துக்குடி.
42. ஆதிகாமாட்சி - முதுகுளத்தூர்.
43. சந்திவீரன் - சிவகங்கை.
44. பிரான்மலை மலையாண்டி - இக்கூர், சிவகங்கை.
45. ஆலடிமுத்தையா ஸ்ரீ மாணிக்கவாசக ஐயனார் - காரியாப்பட்டி.
46. சாப்பிராணி கருப்பர் கோயில் - வேலங்குடி, சிவகங்கை.
47. தாண்டீஸ்வரன் - அல்லிநகரம்.
48. செண்பமூர்த்தி - ஓடத்தூர்.
49. வாலகுருநாதன் வெள்ளிக்குறிச்சி.
50. சின்ன ஐயா, பெரிய ஐயா - கீரனூர், மதுரை மாவட்டம்.

51. இருளப்பசாமி - பெரிய பூலாம்பட்டி பேரையூர், மதுரை.
52. பொய்சொல்ல மெய் ஐயனார் - தச்சனேந்தல், விருதுநகர் மாவட்டம்.
53. சோணைய்யாசாமி - சிவகங்கை.
54. கும்பமுனீஸ்வரர், பூசப்புளி ஐயனார்-வாலாந்தரவை, இராமநாதபுரம்.
55. கருப்பையா சுவாமி - வீரசோழம், பார்திபனூர்.
56. சின்னம்மாள் செல்வக்காளி - இராமநாதபுரம்.
57. காரளுடைய ஐய்யனார் - திருப்பாச்சேத்தி.
58. ஆதீனமுடைய ஐய்யனார் - கமுதக்குடி.
59. அழகிய பொன்னாள் - புளியால், திருவாடனை.
60. முனீஸ்வரர் - ஆட்டூர், திருவாடனை.
61. அங்காளபரமேஸ்வரி, வாணிக்கருப்பணசாமி - பரமக்குடி.
62. ராக்கம்மாள் செந்நெல்குடி - விருதுநகர் மாவட்டம்.
63. ராக்காச்சியம்மன் - பாம்பன்.
64. தீபாய்ந்தம்மன் - நரிக்குடி, விருதுநகர்.
65. மொட்டையசுவாமி - திருபுவனம், மதுரை.
66. அங்காளபரமேஸ்வரி - உச்சிப்புளி, இராமநாதபுரம்.
67. அக்காச்சி நெடுங்குளம் - இராமநாதபுரம்.
68. பூவாயி அம்மன் - சிவகங்கை.
69. வாலகுருநாதன், சீலக்காரி, இருளப்ப சுவாமி, மாசானக்காளி - சித்தூர், மதுரை மாவட்டம்.
70. வாலகுருநாதர் அங்காளபரமேஸ்வரி - கட்டனூர், விருதுநகர்.
71. முத்து இருளப்ப சுவாமி - பெரியக்கோட்டை, சிவகங்கை.
72. உரப்புளிஅங்காளபரமேஸ்வரி - பரமக்குடி.
73. ஸ்ரீசங்கையா, ராக்காயி, பேச்சி, இருளாயி, துர்க்கை, ஐயனார், கருப்பசாமி, முனீஸ்வரர் - துதை, சிவகங்கை.
74. மொட்டை இருளப்பன் - பனைக்குளம், இராமநாதபுரம்.
75. சோணையா சுவாமி - இலுப்பை குட்டை.
76. மாயாண்டி சுவாமி - நலக்குடி, விருதுநகர்.
77. காளிமுத்து அழகர் மலையான் - சிவகங்கை.

78. கூத்தப்பெருமாள் - இளையாங்குடி.

79. படமாத்தூர் வேம்படையார் கோயில் - சிவகங்கை.

80. ஸ்ரீதர்ம முனீஸ்வரர் - சக்கரகோட்டை, இராமநாதபுரம்.

81. அக்னிவீரபத்ரசுவாமி - கட்டிகுளம், மானமதுரை.

82. மகாலிங்க முனீஸ்வரர் - கீழக்குடி, திருவாடனை.

83. பத்ரகாளி, அங்காள ஈஸ்வரி - அரியனேந்தல், பரமக்குடி.

84. கூந்தப்பனை ஐய்யனார் - சிவகாசி.

85. வீரக்குடி கரைமுருகன் - நரிக்குடி, சிவகங்கை.

86. சின்னச்சாமி - நேசநேரி, திருமங்கலம்.

87. கொம்பு கருப்பண்ண சுவாமி - கொளுந்துரை, முதுகுளத்தூர்.

88. சேது ஆத்தாள் - பொட்டிதட்டி இராமநாதபுரம்.

89. பால குருநாதன் சுவாமி - விளாத்தூர், சிவகங்கை.

90. இருளப்ப முனியாண்டி - கள்ளிக்குடி, திருமங்கலம்.

91. தோடி கருப்பசாமி - கமுதி

92. காமாட்சியம்மன் - பாரூர், ராம்நாடு.

93. வன்னிகுலம் கருப்பசாமி - நாகலாபுரம், தூத்துக்குடி.

94. ஐய்யனார் - முள்ளிகுளம், திருநெல்வேலி.

95. வெயில் உகந்த அம்மன் - கீழப்பருத்தியூர்.

96. அங்காள பரமேஸ்வரி - வீரபத்திரம், அரியனேந்தல்.

97. ரெட்டைக்கருப்பசாமி - கடமங்குளம்.

98. சின்ன கருப்பசாமி - ஆவியூர்.

99. சீலைக்காரி - அரசரடி.

100. மதுரைவீரன் - பல்வாண்குடி, குன்றக்குடி.

101. வெள்ளையம்மன் - மதுரை.

102. செங்காருடைய ஐய்யனார் - விருதுநகர்.

103. ஆண்டிஐயா - வாலாந்தரவை, ராம்நாடு.

104. அக்கிரமேகி, ராக்காச்சி - ராம்நாடு.

105. வேம்படி கருப்பசாமி, வீராப்பட்டி சின்னசாமி.

106. கருப்பசாமி - கீழக்கோட்டை, மங்கல்ரவ் - திருமங்கலம்.

107. ஊத்தடியான் கருப்பணசாமி - கழுவளசேரி, காரியாப்பட்டி.

108. ஆலடியான், அக்னிவீரன் - திருப்புவனம்.

109. மாத்தூர் ஸ்ரீவேங்கடம் பெருமாள் - மகாராசபுரம், ஸ்ரீவில்லிபுத்தூர்.

110. மலைமேல் உடைய சாத்தனார் - திருப்புல்லானி, ராம்நாடு.

111. மருதாயி அம்மாள் - ஒத்த ஆலம்குடி, மதுரை.

112. அழகர் சின்னக் கட்டளை - பேரையூர்.

113. அத்தியூத்து பகவதியம்மன் - இராமநாதபுரம்.

114. ஏழுசாமி கோயில் - பொன்னமங்கலம், திருமங்கலம், மதுரை.

115. பட்டவன், பாப்பாத்தி, சீலைக்காரி - முடியனூர், மல்லாங்கிணறு.

116. தொட்டிச்சியம்மன் - கல்லல், காரைக்குடி.

117. காவேரி ஐய்யனார் - தஞ்சக்கூர், மதுரை.

118. வில்வநாதன் நொண்டி கருப்பணசாமி - கடலாடி.

119. கூத்தபெருமாள் - கச்சாத்த நல்லூர், பரமக்குடி.

120. சப்பானி கருப்பு, அதியமடை ஐய்யனார் - கீழவேள்ளுர், திருப்புவனம்.

121. தொந்தம்காத்த ஸ்ரீதர்மமுனீஸ்வரர் - பகைவென்றி இராம்நாடு.

122. மண்மலைபோட்ட ஐயனார் - உரப்புளி இராம்நாடு.

123. பாண்டிக்கண்மாய் வீரன் - இராம்நாடு.

124. பட்டாளம்மன் முத்தையா - மேல்மங்களம், பெரியகுளம்.

125. எழுவர் கருப்பசாமி, சீலைக்காரி - அதிகாரிப்பட்டி, உசிலம்பட்டி.

126. செங்கால் ஐயனார் - அழகாழி, விருதுநகர்.

127. வலம்புரி முனீஸ்வரர் - இராம்நாடு.

128. வைகை மறித்த ஐய்யனார் - குராயூர், பெரிய ஆலங்குளம் மதுரை.

*ஐயனார் வழிபாடு பற்றிக் குறிப்பிடும் திரு.கா. அப்பாத்துரையார் அவர்கள் (கொங்குத்தமிழக வரலாறு) பண்டைய வேளிர்க்கும் அதன்வழி வந்த அரசருக்கும் அவர்கள் உருவிலேயே வழிபடப்பட்ட ஐயனார் அல்லது சாத்தானுக்கு வேட்டையாடுதலும் செண்டாட்டமும் (குதிரை மீது அமர்ந்து ஆடும் பந்தாட்டாம் - Polo) சிறந்த வீரப்பயிற்சிகளாகக் கருதப்பட்டன. தென்னகமெங்கும் ஐயனார் கோயில் வெளியில் பக்தர்களால் நேர்ந்து நிறுத்தப்பட்டுள்ள பாரிய மரக்குதிரைகள், ஐயனாரின் ஊர்க்காவலுக்கு மட்டுமின்றி அவருக்குரிய*

செண்டாட்டக்கேளிக்கைக்கும் உரியதாகும். அத்தெய்வத்தையும், அதன்மரபில் வந்த சிவகங்கை மருதுபாண்டியர் போன்ற அரசர்களையும் தழிழ்ப்புலவர் செண்டலங்காரர் என்று பாடுவதுண்டு எனப்பதிவு செய்கிறார்.

முன்னோர் வழிபாடாகிய குலத்தெய்வ வழிபாட்டில் சிறுதெய்வங்கள் குலத்தெய்வங்களாக வணங்கப்படுகின்றது. தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு நூலில் அதன் ஆசிரியர் முனைவர் அ.பிச்சை அவர்கள், தமிழ்நாட்டில் தெய்வ வழிபாடு பற்றிக் கீழ்க்கண்டவாறு பதிவு செய்கிறார்.

தமிழ்நாட்டில் வாழும் பல்வேறு சாதியரும் ஒரே பண்பாட்டைச் சார்ந்தவர்கள் இல்லை, சாதியாலும், பல்வேறு உட்பிரிவுகளாலும் வேறுபட்டவர்கள். ஒரே இனத்தைச் சார்ந்தவர்கள் ஒரு தெய்வத்தைமட்டும் வழிபடுவதும் இல்லை. ஒரு தெய்வம் தமிழ்நாடு முழுவதும் ஒரே விதத்தில் வழிபாடு செய்யப்படவுமில்லை. இதற்கேற்ப அகமுடையார்கள் மேலே குறிப்பிட்டவாறு பல்வேறு தெய்வங்களை வழிபடுகின்றனர். இருந்தபோதிலும், ஐயனார், வீரன், முனீஸ்வரர், கருப்பசாமி, திரௌபதி அம்மன், அம்மச்சர் அம்மன், அங்காளபரமேஸ்வரி, பச்சையம்மன், வீரமாச்சியம்மன், ராக்காச்சியம்மன் போன்ற தெய்வங்கள் பெரும்பான்மையான அகமுடையார் வழிபடும் குலத்தெய்வங்களாக அமைகிறது.

★★★

# 13.

# அகமுடையார் பழக்க வழக்கங்கள்

“பழக்க வழக்கங்கள் நிலத்திற்கும் சூழலிற்கும் ஏற்ப அமைகின்றன. வெவ்வேறு சூழ்நிலைகள் வெவ்வேறு பழக்க வழக்கங்களை ஏற்படுத்துகின்றன. பழக்க வழக்கங்கள், பண்பாடு மரபு ஆகியவற்றின் அடித்தளமாக விளங்குகின்றன. பழக்க வழக்கங்கள் வளர்ந்த நிலையில் பண்பாடாகவும் முதிர்ந்த நிலையில் மரபாகவும் கருதப்படுகிறன்றன”.

வெ.அ.நாகரத்தினம்

கோவை மாவட்ட அகமுடையார் (தேவர்)

குல மரபுரம் பண்பாடும்.

**இறைவழிபாடு :**

பாண்டிய நாட்டு அகமுடையார்கள், அழகர்கோவில் பெருமாளை தலையாய தெய்வமாக வழிபடுதலையும், அத்துடன், பரங்குன்றம், பழனிமலை முருகனையும் முக்கியமாக வழிபடுதலையும் திரு.கா.திருவாசகம் அவர்கள் மதுரை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு நூலில் பதிவு செய்கிறார்.

கோவை மாவட்ட அகமுடையார்களின் இறைவழிபாட்டில் எமன் அரவான் போன்ற தெய்வங்களை அகமுடையார்கள் குலத்தெய்வமாகக் கொண்டிருப்பதைக் கோவை மாவட்ட அகமுடையார் குல மரபும் பண்பாடும் என்ற ஆய்வேட்டில் அதன்

ஆசிரியர் செல்வி.வெ.அ.நாகரத்தினம் அவர்கள் குறிப்பிடுகிறார். மேலும் அவர் இம்மக்களின் வழிபாட்டில் வில்அடித்தல் எனும் சடங்கு தவறாது இடம்பெறுவதையும் இது இம்மக்களிடம் மட்டுமே காணப்படும் சிறப்பு வழிபாட்டு மரபு என்றும் பதிவுசெய்கிறார். அதேபோல் கோவை மாவட்ட அகமுடையார் குலத்தெய்வ வழிப்பாட்டில் பெண்தெய்வங்கள் அதிக எண்ணிக்கையில் இடம்பெறுகின்றன என்றும், அவை கன்னிமார் வழிபாடாக அமைவது குறிப்பிடத்தக்கது என்றும் தெரிவிக்கிறார். மேலும் வெற்றியம்மன், பகவதியம்மன், சிலம்பாத்தாள் ஆகிய அகமுடையாரின் குலத்தெய்வங்கள் கண்ணகி வழிபாட்டுடன் தொடர்புடையதாகவும் குறிப்பிடுகிறார். நல்ல மழை வேண்டியும், விளைச்சலுக்காகவும் நடத்தப்படும் காமண்டி என்ற காமன் திருவிழா, மாசிப்பிறையிலும், பௌர்ணமியிலும் டெல்டா மாவட்டங்களில் அகமுடையார்களாலும் மேற்கொள்ளப்படுகிறது.

**திருமால் தேவருக்குப்பாக்கு வெற்றிலை :**

திருமலைநாயக்கர் காலத்தில், மதுரை, சாப்டூர், சமீனுக்கு உட்பட்ட பகுதியில் மதம்பிடித்த யானையை அடக்கி மக்களைக்காத்தவர் திருமால் தேவர் என்ற அகம்படியர். இந்த வீரச்செயலால் இவருக்கு திருமலைநாயக்க மன்னர் தலைப்பட்டம் கட்டி முதல் வெற்றிலைபாக்குத்தந்து மேல்மன்றத்தின் ஆட்சித்தலைவராக நியமித்தார். இதனால் இவர் பரம்பரையினர் யானைவெட்டி திருமால் தேவன் வகையறாக்கள் என்றே அழைக்கப்பட்டுள்ளனர். இன்று வரை அத்திருமால் தேவரின் வழிவந்தவர்கள் அம்மன்றத்தின் தலைவராக இருந்து வந்துள்ளனர். அவ்வாறு தலைவராக வருபவரை திருமால் தேவர் என்றே அழைப்பர்.

இப்பகுதியில் அகமுடையார் இல்லங்களில் விழாக்கள் நடைபெறும் போது திருமால் தேவர் வழியினருக்கு முதல் வெற்றிலைப்பாக்கு தருவர். அல்லது திருமால் தேவருக்குப்பாக்கு வெற்றிலை என்று முதலில் எடுத்துவைத்துவிட்டு பின்னர் பிறருக்குக் கொடுப்பர் என்று மு.அம்பிகாபதி தனது மதுரை மாவட்டத்து இராசகுல அகமுடையாரின் தெய்வவழிபாடும் திருவிழாக்களும் கட்டுரையில் பதிவு செய்கிறார்.

மேலும் இவர் அகமுடையார்களின் வழக்குகளை விசாரணை செய்யும் மன்றமான மேல்மன்றத்தின் தலைவர் திருமால்

தேவர் இறந்துவிட்டால் அவரின் உடலை எடுக்கும் முன்னர், உறவினர்களும், பெரியோர்களும் அவரின் மூத்த மகனுக்கு பரிவட்டம் கட்டித் திருமால் தேவர் இனி இவரே என்று பறை சாற்றி வெற்றிலைப்பாக்குதருவர். அதன் பின்னரே இதுவரைத் திருமால் தேவராக இருந்த அத்தந்தையின் உடலை எடுப்பர் என்றும் தெரிவிக்கிறார்.

**கீழ்மன்றம் :**

திருமால் தேவர் தொடர்புடைய மேல்மன்றம் போன்று மருதங்குடி ஊரில் கீழ்மன்றம் என்ற அமைப்பு செயல்பட்டு வந்துள்ளது. இந்த மேல்மன்றம். கீழ்மன்றம், அகமுடையார்களின் வழக்குகளை விசாரித்துத் தீர்வு செய்யும் வழக்கு மன்றமாக இருந்துள்ளதையும் மு.அம்பிகாபதி பதிவு செய்கிறார்.

**பதினொரு நாடும் வாசல் வழியும் :**

பேராவூரணி பகுதியில் பதினொரு நாட்டு அகமுடையார்கள் தங்களின் சமூக நடவடிக்கைகளை ஒழுங்கு படுத்துவதற்காக நாட்டுக்கூட்டம், கிராம கூட்டம் மற்றும் வாசல் வழி என்ற கட்டமைப்புகளைக் கொண்டிருப்பதாக மொய்விருந்து குறித்த பார்வையுடன் பேராவூரணி தாலுக்காவின் தனித்த வழக்கங்கள் என்ற ஆய்வேடு தெரிவிக்கிறது.

இதில் வாசல் வழி என்பது பதினொரு நாட்டுப்பகுதிகளை குருவிக்கரம்பை கிராமத்தை மையப்பகுதியாகக் கொண்டு தெற்கு வாசல், வடக்கு வாசல், மேற்கு வாசல், கிழக்கு வாசல் என்ற நான்கு பெரும் பிரிவுகளாகப் பிரித்துச் செயல்படுவதை உணர்த்துவதாக மேற்படி ஆய்வேடு தெரிவிக்கிறது.

**சேத்தி, கரை, காடு வகையறா :**

டெல்டா பகுதிகளில் புவியியல் அடிப்படையிலும், பொது மூதாதையர் அடிப்படையிலும், பங்காளி தொடர்புடைய, வழிபாடு தொடர்புடைய, கோயில் மரியாதை தொடர்புடைய, கோயில் மண்டகப்படி தொடர்புடைய, வகைகளில் அகம்படியர்களிடம் சேத்தி, கரை, காடு வகையறா என்ற பிரிவுகள் காணப்படுகின்றன. இதுபோன்ற பிரிவு பல்வேறு சமூகங்களிடமும் நிலவுவதை பேராவூரணி தொடர்புடைய ஆய்வேடு தெரிவிக்கிறது.

பாண்டிய நாட்டு அகமுடையார்களிடம் கரை என்னும் வகையறாப் பிரிவு அவர்கள் வசிக்கும் ஊர்களில் உண்டு என்றும், அவை சேது ராமு உறங்காப்புளி என்று குடி முன்னோர்களின் பெயரைக் கொண்டு அறியப்படும் என்பதை திரு.கா.திருவாசகம் (மதுரை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு) அவர்கள் பதிவு செய்கிறார்.

**மொய்விருந்து :**

தஞ்சை மாவட்டம் பேராவூரணிப் பகுதிகளில் பதினொரு நாட்டு அகமுடையார்களிடம் இருந்து ஒரு தனித்த பண்பாட்டு நடைமுறையாகத் தோன்றி பின்னர் பல சமூகத்திற்குப் பரவியதாக மொய்விருந்து என்ற வழக்கத்தை பேராவூரணி தொடர்பான ஆய்வேட்டில் அதன் ஆசிரியர் திரு.ஆர்.சுரேஷ் திருமுருகன் பதிவு செய்கிறார் (Unique Customs of Peravourani Taluk with special Reference to Moy Virunthu, A Study by R.Suresh Thirumurugan M.A., M.Phil.,).

**திருக்கோயில் தொண்டு:**

இராமேஸ்வரம் திருக்கோயிலில், பூஜை, ஸ்தானிகம், பரிச்சாரகம் தவிர்த்து ஏனைய திருக்கோயில் சார்ந்த பணிகள் அனைத்திலும் அகமுடையார்கள் ஈடுபடுவதை ‘இராமர் செய்த கோயில்’ என்ற நூல் பதிவு செய்கிறது. குறிப்பாக தெய்வத்திருமேனிகள் வீதியுலா, திருவிழாவிற்கு எழுந்தருளல், மண்டகப்படி ஆராதனைகள் ஆகிய அனைத்திலும், அகமுடையார்கள் ஈடுபடுவதை மேற்படி நூல் சுட்டிக்காட்டுகிறது.

திருப்பரங்குன்றம் திருக்கோயிலில் வாயிற்காவல் பணிக்கும், விளக்கு எரிப்பதற்குமான பணிகளில் அகமுடைய சேர்வைக்காரர்கள் ஈடுபடுவதை திரு நாகப்பா நாச்சியப்பன் அவர்களின் திருப்பரங்குன்றம்கோயில் - வேற்கோட்டம் என்ற நூல் பதிவு செய்கிறது. அதில் அகமுடையார் இனத்தைச்சேர்ந்த நான்கு பங்காளிகள் வாசல் மானியம், தீவட்டிமானியம் என்று அழைக்கப்படும் காவல் விளக்கிடுதல் பணிக்கு ஏற்படுத்தப்பட்டுள்ளனர். அத்துடன் பங்குனி உத்திரத் திருவிழாவில் தேர் நிலைக்கு வந்த பிறகு இவர்கள் சுவாமியின் கிரீடத்தை, எடுத்துக் கொண்டு கோயிலிருந்து வந்து சுவாமிக்கு கொடுப்பார்கள். அதை நம்பியார் வாங்கிச் சுவாமிக்கு சாத்துவார். இதற்கு இவர்கட்கு பரிவட்ட மரியாதை செய்யப்படுகிறது.

அத்துடன் திருக்கை வழக்க மரியாதையும், மரிக்கைப் பரிவட்டமும் இவர்கட்கு அளிக்கப்படுகிறது என்று மேற்படி நூல் பதிவு செய்கிறது.

**அஞ்சாத குலம்:** வெட்டுப்பழி குத்துப்பழி என்று சொல்வார்களே, அதற்கெல்லாம் அஞ்சாத குலமான அகம்படியர் குலம் என்று அகமுடையார் இனத்தைப் பதிவுசெய்கிறார், திரு. நா.சிதம்பரசுப்பிரமணியன் அவர்கள் தனது மண்ணில்தெரியுது வானம் நூலில்.

**திருமணம்:** அகம்படியர் என்பவர்கள் அரசின் மெய்க்காப்பாளராக இருந்த வீரமரபினர். அவருள் பலர் மங்கலநாண் மட்டுமே அணிவது வழக்கம். சிலர் தாலி கட்டுதலை மேற்கொண்டுள்ளனர் என்பார் டாக்டர் மா.இராசமாணிக்கனார். தாலிக்கட்டுதல் என்பது தற்போது அனைத்து அகம்படியர்களும் பின்பற்றக்கூடிய வழக்கமாக அறியமுடிகிறது. நெருங்கிய சுற்றத்துக்குள்ளேயே உறவு கொள்ளுதல் அகமுடையார்களின் பெருவழக்கு என்றும், மணவிழா பெண் வீட்டிலேயே நடைபெறும் என்றும், மண நிகழ்ச்சிக்கு தேவையான மங்கலப் பெருட்களனைத்தும் மணமகன் வீட்டாரே கொண்டுவரவேண்டும் என்றும் பாண்டிய நாட்டு அகமுடையார்களின் திருமண வழக்கத்தை திரு.கா. திருவாசகம் அவர்கள் (மதுரை மாவட்ட வரலாற்றுக்கருத்தரங்கு) பதிவு செய்கிறார்.

**உறவுமுறைக் கேள்வி:**

பாண்டிய நாட்டு அகமுடையார் திருமணத்தில் நிகழும் உறவுமுறைக் கேள்வி, இளவட்டப்பணம் ஆகிய நடைமுறைகளை திரு.கா.திருவாசகம் அவர்கள் மதுரை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு நூலில் பதிவுசெய்கிறார் திருமணச்சடங்கின்போது சபையில் உறவினர்களை நோக்கி திருப்பூட்டலாமா எனக்கேட்ட பிறகு, சபையின் ஆசிபெற்ற மாங்கல்யம் பெண்ணிற்கு அணிவிக்கப்படுதல் உறவுமுறைக் கேள்வி என்பார்.

**இளவட்டப் பணம்:** முன்னர் பெண்ணின் ஊருக்கு மணமகன் வந்தவுடன் இளவட்டக்கல் என்ற உருண்டையான கல்லினைத் தூக்கச் சொல்லி, அவ்வாறு தூங்கிய பின் மணமகனை ஊருக்குள் அழைப்பர். காலமாற்றத்தில், கல் தூக்குவதற்குப் பதில் பணம் பெற்றுக் கொண்டு மாப்பிள்ளை அழைக்கப்படுவது இளவட்டப்பணம் என்பதாகும்.

**மாலைநேர திருமணங்கள் :**

*வேதாரணியம், ஆயக்காரன்புலம் உள்ளிட்ட நாகைமாவட்டத்தின் கடற்கரைப்பகுதிகளில் அகமுடையார்களிடம் மாலை நேரத்தில் திருமணம் செய்வது தற்போது நடைமுறையில் உள்ளது. 1990 களில் தொடங்கிய இந்த வழக்கம் அகமுடையார்களிடம் தொடங்கி இதர சமூகங்களிடம் பரவியுள்ளது. சுயமரியாதைத் திருமணங்களின் நீட்சியாகவும் இதுபார்க்கப்படுகிறது.*

**பிறப்பு இறப்புச்சடங்குகள் :**

*மனித வாழ்வில் பிறப்பு, பூப்பு, இறப்பு, என்ற மூன்று நிலைகளும் முக்கிய கட்டங்களாக தமிழரால் கொண்டாடப்பட்டன என்று பதிவு செய்யும் மனோன்மணி சண்முகதாஸ் (சாதியும் துடக்கும்) பண்பாட்டு நிலையிலே இவை மூன்றும் ஒழுங்குடன் இணையவே தீட்டும் துடக்கும் நடைமுறையாக்கப்பட்டன என்கிறார்.*

*பிறப்பு இறப்புச்சடங்குகள் இதர தமிழ் சமூகங்களிடம் நடைமுறையில் உள்ளதைப் போலவே அகமுடையாரிடமும் உள்ளது. இடத்திற்கு இடம் சிறிய வேறுபாட்டுடன் நடைமுறையில் இருந்தாலும் ஐவழிநாட்டு அகமுடையார்களின் ஒருதரப்பினர் கர்ப்பிணிக்கு நடத்தும் வளைகாப்புச் சடங்கினை மேற்கொள்வதில்லை.*

*அதேபோல் இவர்கள் இறப்புச்சடங்கின் ஒருபகுதியான கருமாதிசடங்கில் தேசிகர் என்பவர்களைக் கொண்டு நிகழ்த்துகின்றனர். அதில் தேவார, திருவாசகப் பாடல்களை பாடி நிகழ்த்துகின்றனர். இந்த வழக்கங்கள் வேகமாக மறைந்து வருகின்றது.*

*வடஆர்க்காடு பகுதிகளில் அகமுடைய வேளாளர், வாழ்வியல் சடங்குகள் குறித்தத் தகவல்களை இந்திய மக்கள் தமிழ்நாடு என்ற ஆங்கில நூலில் கீழ்க்கண்டவாறு பதிவு செய்யப்படுகிறது* (People of India – Tamil Nadu - K.S.Singh) *இவர்கள் சிவகோத்ரம், விஷ்ணு கோத்ரம் என்றப் பிரிவுகளையுடையவர்களாக உள்ளனர். ஏழாம் மாதத்தில் கருவுற்ற பெண்களுக்கு வளைகாப்புச் சடங்கு நடத்துகிறார்கள். பதினாறு நாட்களுக்கு இவர்கள் பிள்ளைபேறு மற்றும் பூப்பு தீட்டு உடையவர்கள். பெண்கள் பூப்பெய்தும் போது ருதுஜாதகம் எழுதும் வழக்கத்தை இப்பிரிவினர் கொண்டுள்ளனர்.*

*திருமணம் தொடர்பான சீர்வரிசை பரிமாற்றத்தின்போது மணமகளின் தந்தை பொன் உன்னது, பெண் என்னது என்றும், மணமகனின் தந்தை பெண் உன்னது பொன் என்னது என்று குறிப்பிட்டு சொல்லும் சடங்கு நடைமுறையை மேலே கண்ட நூல் பதிவு செய்கிறது.*

*மேலும் அகமுடையார் சமூக பஞ்சாயத்துக்குக் கிராம கட்டளை என்றும் அதன் தலைவராகப் பெருந்தனக்காரன் என்ற பரம்பரை வழி தலைவனும், அவருக்கு துணையாக தண்டிக்காரன் என்பவரும் செயல்படுவாதகச் சுட்டிக்காட்டுகின்றார். தங்களுக்கிடையிலான பிரச்சனைகளை இவ்வமைப்பு மூலம் தீர்த்துக்கொள்கின்றனர். இதே நூல் சென்னை, வடஆர்க்காடு, காஞ்சிபுரம் பகுதிகளில் ஆர்க்காடு முதலியார்கள் வாழ்வியலை எடுத்துக்காட்டுகிறது.*

*ஆர்க்காடு முதலியார் குழந்தை பிறப்பின்போது 10 நாட்கள் தீட்டு கடைப்பிடிப்பதாகவும், பத்தாம் நாள் குழந்தைக்குப் பெயர் சூட்டும் விழா நடத்துவதாகவும் பதிவு செய்கிறது. இறப்புத்தீட்டு 16 நாட்கள் கடைபிடிக்கின்றனர்.*

*அதே போல் கிறிஸ்துவத்தை தழுவிய அகமுடையார்களிடம் முந்தய நாட்களில் முக்கந்தா, கோயில் மணியக்காரர் போன்றோர் பரம்பரை பரம்பரையாக இவர்கள் இல்ல நிகழ்ச்சிகள், சமய நிகழ்ச்சிகளில் முக்கியப்பங்குபெற்றனர் என்றும், சில நேரங்களில் இவர்களின் தகராறுகளைத் தீர்த்து வைப்பவர்களாகவும் இருந்துள்ளனர் என்கிறார்.*

*1961 ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பு அறிக்கையில் தஞ்சைப்பகுதிகளில் விளாங்குளம், குன்னலூர் கிராம ஆய்வுகளில் அகமுடையார்களின் பிறப்பு, திருமணம், இறப்புச் சடங்குகள் விரிவாக விளக்கப்படுகிறது. விளாங்குளம் கிராமத்தில் அகமுடைய தேவர்கள் 10 நாட்கள் குழந்தைப் பிறப்பின் போது தீட்டு கடைபிடிக்கிறார்கள். 11ஆம் நாள் நடைபெறும் சடங்கில் தீட்டுக்கழித்தலும், புதிய குழந்தைக்குப் பெயர் சூட்டுதலும் மேற்கொள்வதாகப் பதிவு செய்கிறது. குன்னலூரில் உள்ள அகமுடையார்கள் பதினைந்து நாள் பிறப்புத்தீட்டினை கடைபிடிப்பதாகவும், பதினாறாவது நாள் ஐய்யரைக்கொண்டு புண்ணியாகவாசனம் செய்து தீட்டுக்கழிப்பதையும் பதிவு செய்கிறது.*

*விளாங்குளம் அகமுடையார்கள் பெண்குழந்தை பூப்பெய்கிறபோது 15 நாள் தீட்டு கடைப்பிடிப்பதையும்,*

அதேபோல் குன்னலூர் அகமுடையார்களும் பதினாறுநாள் தீட்டு நடைமுறையைக் கைக்கொள்வதையும் பதிவு செய்வதுடன், விளாங்குளத்தில் அவ்வாறு பூப்பான தீட்டு எய்த பெண் தனிக்குடிசையில் தங்கவைக்கப்படுவதையும், குன்னலூரில் வீட்டின் ஒரு தனிப்பகுதியில் தங்கவைப்பதையும் பதிவுசெய்கின்றனர்.

விளாங்குளம் அகமுடையார் 15 நாள் இறப்புத்தீட்டினை கடைபிடிப்பதாகவும், பதினாறாம்நாள் கருமாதிச்சடங்கு நடத்துவதையும் குறிப்பிடுகிறார். ஆனால் குன்னலூர் அகமுடையார் 15 நாள் இறப்பு தீட்டும் 16ம் நாள் கருமாதியும், எட்டாம்நாள் கல்லு நடுவதையும் பதினாறாம் நாள் கருமாதியில், எட்டாம்நாள் நடப்பட்ட கல் பூஜைக்கு பிறகு ஆற்றில் விடப்படுவதையும் பதிவு செய்கிறார். (Census of India 1961 – Volume IX- Madras- Part VI Village Survey Monographs – Villangulam & Kunnalur – by P.K.Nambiar IAS & N.Krishnamurthy – Census operations Madras -1966).

பாண்டிய நாட்டு அகமுடையார் என்ற கட்டுரையில் (மதுரை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு) திரு.கா.திருவாசகம் அவர்கள், அம்மக்களிடம் நிலவும் இறப்புச் சடங்குகளைப் பட்டியலிடுகிறார். அதில் அவர்,

**கைநிரவுதல்:** இறப்பு வீட்டில் துக்கத்திற்குரியவர் அமர்ந்திருக்க துக்கம் கேட்டுவருவோர், அவரிடம் வந்து இருகரங்களையும் தொட்டு துக்கம் கொள்ளுதல் கைநிரவுதல் ஆகும்.

**பட்டம் சுமத்தல்:** இறந்தவரின் கையில் நெல்லைக் கொடுத்து மீண்டும் மரக்காலில் அதை பெற்று வைத்தல் பட்டம் சுமத்தல் ஆகும்.

**சீதேவி எடுத்தல்:** தட்டில் அரிசியுடன் வந்து இறந்தவரது கையில் வைத்து மீண்டும் வாங்கிச் செல்லுதல் சீதேவி எடுத்தல் ஆகும்.

**இறந்தவரை எடுத்தல்:** பச்சை மூங்கில் கொண்டு பூக்களால் அழகு செய்யப்பட்ட பல்லக்கில் இறந்தவர் எடுத்துச் செல்லப்படுவார். அப்போது உருமி, கஞ்சிரா,தவில், நாயனம் முதலியன வாசிக்கப்படும். உடல் எடுத்துச் செல்லும்போது வீட்டை நோக்கி திசையிலேயே இருக்கும். இரண்டாம் நாள் காடத்துக்குப் பிறகு இடுகாடு / சுடுகாட்டில் நவதானியம், இளநீர், பால், மஞ்சள் போட்டு நீருற்றிப் பிரண்டை நடுவர், சம்பந்தக்காரர்கள் தலைக்கு உருமால் கட்டுவார்.

**நல்ல தண்ணீர் கொடுத்தல்:**

*பத்து அல்லது பதிணைந்தாம் நாள் வீடு வெள்ளையடிக்கப் பெற்று இறந்தவரைப் போன்று உருவம் செய்து இரவு முழுவதும் அதைச் சுற்றி நின்று மாரடித்து ஒப்பாரி வைப்பார். அதில் இறந்தவரது பெருமை பேசப்படும். இறந்தவர் ஆணாயின் பெண்ணிடம் தாலி வாங்கி பாலில் போடப்படும். மாரடித்த கூலி மடிமேலே என்பதற்கு ஏற்ப சீதேவி எடுத்த அரிசி நீரில் ஊறவைக்கப்பட்டு பயறுவகைகளுடன் பெண்களுக்கு மடியில் போடப்படும். பின் வீட்டில் நீர் தெளித்து தூய்மை செய்து பந்திவரிசை வைக்கப்படும்.*

**விமரிசையான இறப்பு நிகழ்வுகள்:** *இறப்பு தொடர்பான நிகழ்வுகள் பிற எந்த ஒரு வாழ்வியல் விழாப்போலவே விமரிசையாக நடத்தப்பெறும்.*

*அகமுடையார்களின் திருமணம், இறப்புச் சடங்குகள் பற்றி திரு.எட்கர் தர்ஸ்டன் அவர்கள் தென்னிந்தியக்குலங்களும் குடிகளும் நூலில் பதிவு செய்கிறார். அதுபோல், இந்திய மக்கள் தமிழ்நாடு என்ற நூலில் திரு.கே.எஸ்.சிங் அவர்களும், 1961 ஆம் ஆண்டு மக்கள் தொகை அறிக்கைகளில், கிராமங்கள் தொடர்பான விபரங்களில் பல செய்திகள் சுட்டிக்காட்டப்படுகிறது.*

*வயது வந்த பிறகு மணம் புரிவித்தலே அகமுடையாரிடையே உள்ள பழக்கம் எனத்தெரிகிறது என்று எட்கர் தர்ஸ்டன் சுட்டிக்காட்டுகிறார். அத்துடன் அகமுடையார்கள் சைவர்கள். ஆகையால் சாவுச்சடங்குகளுக்குப் பண்டாரங்கள் உதவியாக இருப்பர் என்றும், இறந்து போனவரின் ஆவிக்குப் பதினைந்து நாள்களுக்குச் சமைத்த உணவு படைத்துப் பதினாறாம் நாளன்று கருமாந்திரச்சடங்கினை நடத்துவர் அப்போது பிராமணர்களுக்குப் பரிசுகள் வழங்குவர். தூய்மையாக்கும் நீர் தெளித்துச் சாவுத்தீட்டினைப்போக்கிய பின் விருந்து வைப்பர் என்றும் பதிவு செய்கிறார்.*

**நோன்பு:**

*நீடாமங்கலம் பகுதிகளில் வாழும் அகமுடையார், வெள்ளாளர், செட்டியார், நாயக்கர் சமூகத்தைச் சார்ந்த பெண்கள் துரோபதையம்மன் கோயிலுக்கு வருகைபுரிந்து கேதார கௌரி நோன்பு மேற்கொள்வதைத் தமிழர் வழிபாடுகளில் தீமிதி (ஆ.சண்முகம் பிள்ளை) நூல் பதிவு செய்கிறது.*

*முப்பது நாள் தீட்டு: சாதியும் துடக்கும் என்ற நூலில் அதன் ஆசிரியர் மனோன்மணி சண்முகதாஸ் அவர்கள் இலங்கைவாழ் தமிழர்களின் துடக்கு (தீட்டு) நடைமுறைகளை விளக்குகிறார். அதில் அகம்படியர்கள் பிறப்புத்துடக்கு 30 நாட்களும், இறப்புத்துடக்கு 30 நாட்களும், கடைப்பிடிப்பதாகவும், துடக்கு கழிவு 31ஆம் நாள் மேற்கொள்வதாகவும் பதிவு செய்கிறார்.*

**தொழில்:**

*அகம்படித்தொழில் புரிந்தோர் பின்னர் வேளாண் தொழில் மேற்கொண்டு, அதையே தலையாயதாகக் கொண்டு வாழ்கின்றனர் என்று இவர்களின் தொழிலை திரு.கா.திருவாசகம் அவர்கள் சுட்டிக்காட்டுகிறார். மேலும் கள்ளன், மறவன் கணத்திலோர் அகம்படியன் மெல்ல மெல்ல வந்து வெள்ளாளன் ஆனானே என்ற பழஞ்சொல் இத் தொழில் வாழ்க்கை வளர்ச்சி நிலையைக் காட்டுகிறது என்றும் பதிவு செய்கிறார்.*

**உணவு :**

*டெல்டா மாவட்டத்தில் அகமுடையார்களின் ஒருபிரிவினர் சைவசித்தாந்தத்தை பின்பற்றுபவர்கள். இவர்கள் புலால் உணவைத் தவிர்த்தவர்களாக விளங்கியுள்ளனர். சைவ உணவு உண்ணக்கூடியவர்களான இவர்கள் வேதாரணியம் திருத்துறைப்பூண்டி பகுதிகளில் இருந்துள்ளதை டாக்டர் சி.இலக்குவனார் தனது என்வாழ்க்கைப்போர் நூலில் பதிவு செய்கிறார். தமிழர்கள் ஆதியில் மாமி சாதிகளை புசித்தலைக் கொண்டிருந்தனர் என்றும் முதன்முதல் வேளாளரில் பெரும்பாலாரும், அதன்பின் அகம்படியரில் சிலரும், அதன்பின் கள்ளரில் சிலரும், அதன்பின் பள்ளியரில் சிலரும், மாமிசாதி (அசைவம்) புசித்தலை ஒழித்து சீவகாருணியத்தைக் கைக்கொண்டார்கள் என்பார் திருக்களர் மு.சுவாமிநாத உபாத்தியாயர் (சைவசமயமும், தமிழ்ப்பாடையும்).*

*அதேபோல் இப்பகுதியில் உணவருந்தும் பொழுது திரைக்கட்டிக்கொண்டு பிறர் பார்க்காதவாறு உணவருந்தும் பழக்கம் உடையவர்களாக அகமுடையாரில் ஒருதரப்பினர் முன்பு விளங்கியுள்ளனர் என்பதை திரு.புலமை வெங்கடாசலம் வன்னியர் அவர்கள் தனது அகமுடையார் வரலாறு நூலில் பதிவு செய்கிறார்.*

அகமுடையார் உடைத்த முட்டைக்குழம்பு வேலூர் மாவட்டம் வாணியம்பாடிப் பகுதிகளில் கிராமத்து பாரம்பரிய உணவாக விளங்குவதைச் சமையல் குறிப்பு தெரிவிக்கிறது. இந்த உணவு அந்தப்பகுதிகளில் இருக்கும் அகமுடையார் பாணி என்றும் குறிப்பிடப்படுகிறது.

★★★

# 14. சகோதரத்துவமும் சகவாழ்வும்

“தீர்த்தமலைக் கோயில் பெருவிழாவில் துளுவ வேளாளர் குல அகமுடைய உடையார்கள், கொங்கு வேளாளர்கள், ஆரிய வைசிய செட்டியார்கள், இராசகுலசத்திரியர், 24 மனை தெலுங்கு செட்டியார்கள், செங்குந்த முதலியார்கள், வன்னியகுல சத்திரியர், ரெட்டியார்கள், வேளாளர்கள், யாதவர்கள், விசுவபிரம்ம குல மூப்ப நாடார்கள், மஞ்சவாடி வேட்ராய செட்டியார்கள், சாலிவாகன குலத்தினர் ஆகிய பல்வேறு பிரிவினர்கள் ஒருங்கிணைந்து ஒற்றுமையாக பங்கு கொள்கின்றனர்”

தருமபுரி மாவட்டத் திருத்தலங்கள் வரலாறு
(பக்கம் : 281)
இரா.இராமகிருட்டிணன்.

*தமிழகத்தின் பெரும்பாலான மாவட்டங்களில் பரவலாக வாழ்ந்து வரும் அகமுடையர்கள், அண்டை மாநிலமான ஆந்திரா, தெலுங்கானா, கர்நாடகா மற்றும் கேரளாவிலும் வாழ்கின்றனர். இலங்கை, சிங்கப்பூர், மலேசியா உள்ளிட்ட நாடுகளிலும் இருந்துவருகின்றனர். ஆங்காங்கு வாழ்கின்ற இவர்கள் அங்கு நிலவும் சூழ்நிலைகளுக்கு ஏற்ப சகமனிதர்களோடும், சகசமுதாயத்தினரோடும், இணக்கமான ஒரு சகோதர சகவாழ்வினை மேற்கொண்டு வருகின்றனர். போர்மரபுச்*

சமூகமான அகம்படியர்கள், வரலாற்று நெடுகிலும், சிற்றரசர்களாக, அரசியல் தலைவர்களாக, தளபதிகளாக, நிர்வாகிகளாக, நிலக்கிழார்களாக, போர்வீரர்களாக, படைத்தொகுதியினர்களாக நம்பிக்கைக்குரிய அதிகாரிகளாக விளங்கி வந்துள்ளனர்.

மஹாபலி வம்சத்தினரான வாணதிராயர்கள், மலையமான்கள், பொத்தபிச் சோழர்கள், புதுக்கோட்டை பல்லவராயர்கள், போன்றோர் இம்மரபினர் என்பதைக் கல்வெட்டுகளும் வரலாற்று நூல்களும் தெரிவிக்கின்றன. அகம்படி நியாயம் என்ற சோழர் படைப்பிரிவு ஒரு அரசப்படைப் பிரிவினராக விளங்கியதையும், அகப்படை, ஏழகப்படை என்ற படைத்தொகுதியினராக இவர்கள் செயல்பட்டதையும், மெய்க்காவல், அரண்மனைக்காவல் போன்ற பணிகளில் இவர்கள் ஈடுபட்டதையும் முந்தயப்பக்கங்களில் கண்டோம்.

பிற்காலத்தில் ஆங்காங்கு அரசு செலுத்திய பிற சிற்றரசர்களான சம்புவராயர், சேதுபதிகள், தொண்டைமான்கள் ஆகியோரிடம் அகமுடையார்கள் பெரும் ஆளுமைமிக்க அரசியல் தலைவர்களாக விளங்கியுள்ளனர். அகம்படி முதலிகளில் "எழும்போதன் கெங்கையாடி மாதயன்", சம்புவராய அரசர்களிடம் செல்வாக்குப்பெற்ற அரசியல் தலைவராக விளங்கியுள்ளார். வெள்ளையன் சேர்வை, வைரவன் சேர்வை போன்ற அகம்படியர்கள் சேதுபதிகளிடம் தளவாயாக, தளபதிகளாக செல்வாக்கு பெற்று பெரும் ஆளுமைகளாக விளங்கியுள்ளனர். புதுக்கோட்டை தொண்டைமான் அரசர்களிடம் உரியக்கார அகம்படியர்கள் நெருக்கமாகச் செயல்பட்டுள்ளனர்.

சிவகங்கை தனியரசின் நிறுவனர் சசிவர்ணதேவர்க்கு, ஆவரங்காடு என்று அறியப்பட்ட இடத்தில் "குளம்வெட்டி அரண்மனை அமைத்து ஆட்சி செய்வாயாக", என்று அருளாசிவழங்கி இன்றைய சிவகங்கை பகுதியை அடையாளம் காட்டிய தணல் வீரப்பசேர்வை அவர்களின் மகன் சாத்தப்பஞானி என்ற அகம்படியர் இங்கு குறிப்பிடவேண்டிய ஞானியாவர், (இலக்கியத்தில் அகமுடையோர்). பின்பு மருதுபாண்டியர் வரை இந்தத் தொடர்பு நீடித்தது.

அரச காவலர்களாகவும், ஆட்சிக் காவலர்களாகவும், இட்டுவைத்த அரசைக் கட்டிக்காத்தவர்கள் அகம்படியர்கள், இவர்கள் கோட்டைக் காவலர்களாகவும் விளங்கியவர்கள்,

*அரசர்களாகவும் ஆட்சி செலுத்தியவர்கள் அந்நியர்கள் படையெடுப்பு நேர்ந்த காலங்களில் கோட்டைக் கொத்தளங்கள் தாக்கப்பட்டு அழிவு நேர்ந்த சூழல்களில், அகம்படியர்களும் அழிவை எதிர்கொண்டனர். ஒதுங்கி பிழைத்து தலைகுனிந்து வாழாது மன்னர்களுடன் தாங்களும் அழிந்தனர்.*

*"மருதுபாண்டிய மன்னர்கள்" நூலாசிரியர் திரு.மீ.மனோகரன் அவர்கள், மருதுபாண்டியர்கள் ஆட்சி எவ்வாறு "ஒரு சமூக நல்லிணக்கப் பூங்காவாக" திகழ்ந்தது என்பதை பக்கம் 239முதல் 258 வரையிலும், எவ்வாறு அவர்கள் மதச்சார்பின்மையுடன் ஆட்சி நடத்தினார் என்பதை பக்கம் 226 முதல் 238 வரையிலும் எடுத்துரைக்கின்றார்.*

*மருதுபாண்டியர்களும் அவர்களது ஆட்சியும் எவ்வாறு நகரத்தார்களோடு நட்புறவிலும், நாட்டார்களோடு நட்பிலும், எதிர்பிலும், நாடாண்டநாயக்கருடன் நேசத்தையும், வேளாளருடன் தோழமையையும் ஆதிதிராவிடர்களுடன் அரவணைப்பிலும், அன்புவலையில் வலையர்களுடனும், மறவருடன் நல்லுரவிலும், இருந்தது என்பதை மேற்படி நூல் விளக்குகிறது.*

*அத்துடன், நரிக்குடி பள்ளிவாசல், பாசிப்பட்டினம் தர்கா, பெரியகோட்டை பள்ளி வாசல், மேப்பல் அல்லா கோயில், மதுரை மின்னா நூர்தின் பள்ளிவாசல், திருப்பத்தூர் தர்க்கா மற்றும் சருகனிமாதா கோயில் போன்ற பிறமத வழிபாட்டு நிறுவனங்களோடு மருதுபாண்டியர்கள் கொண்டிருந்த இணக்கமான உறவுகளை எடுத்துக்காட்டி, அவர்கள் ஆட்சி எவ்வாறு மதச்சுதந்திரத்துடன் விளங்கியது என்பதையும் மேற்படி நூல் சுட்டிக்காட்டுகிறது.*

*ஆங்கிலேயர்களின் கிழக்கிந்தியக் கம்பெனியின் அடக்குமுறைக்கு எதிராகவும், சுதந்திரத்திற்கும், மருதுபாண்டியார் வெளியிட்ட திருச்சிராப்பள்ளி, ஜம்புதீபப் பிரகடனமும், தங்கள் குடும்பத்தைச் சேர்ந்த மூன்று தலைமுறை ஆண்களும், தங்கள் உறவினர்கள் உடனிருந்தோர் என்று 500 பேர்கள் தூக்கிலிடப்பட்டு உயிர் துறந்ததும், பெருந்திரளான மக்களின் நலன் வேண்டியே நிகழ்ந்த துயரமான முடிவுகளாகும்*

*பின்னாளில் இதே சிவகங்கையில் அகம்படியர் சமூகத்தில் பிறந்த இராமச்சந்திரன் அவர்கள் வழக்கறிஞராகவும், சாதி ஒழிப்பில் முன்னோடியாகவும், திராவிட இயக்கத்தின் தீவிர*

செயற்பாட்டாளராகவும் விளங்கியவர். 1929ல் செங்கற்பட்டில் நடைபெற்ற தமிழ்மாகாணத் தன்மதிப்பு மாநாட்டில் மக்கள் தங்கள் பெயருடன் சாதி அல்லது வகுப்பைக் காட்டும் பட்டங்களை விட்டுவிடவேண்டும் என்று தீர்மானத்தைத் கொண்டு வந்த இவர், அதற்கு முன் உதாரணமாக தம் சாதிப்பட்டமான சேர்வை என்பதையும் துறப்பதாக அறிவித்தார். தாழ்த்தப்பட்டோருக்கான இரவுப்பள்ளிகளைத் திறந்த இவர், கோயிலில் வழிபட உரிமை மறுக்கப்பட்டவர்கள் தடையின்றி சென்று வழிபட பாடுபட்டவர். மேற்படி மாநாட்டில் அதன் தலைவர் திரு.சௌந்தரபாண்டியனுடனும், பெரியாருடனும் இணைந்து செயல்பட்டார்.

நீதிக்கட்சி உருவாவதற்குக் காரணமான முதல் மூவருள் ஒருவரான டாக்டர் சி.நடேசனார் அகமுடையார் சமூகம் தந்த ஆளுமை ஆவார் வைத்திய நிபுணர் என்றும், கைராசிக்காரர் என்றும் மக்களிடம் தன் உயரிய சேவையால் நன்மதிப்பைப்பெற்றார். இவர் 1912 இல் "சென்னைத்திராவிடர் சங்கத்தை" உருவாக்கினார். இவ்வமைப்பு சென்னையின் பொதுமக்களின் அமைப்பாகச் செயல்பட்டுவந்தது. இவ்வமைப்பு பிராமணரல்லாதவர்கள் சந்திக்கும் இடர்பாடுகளைப் பேசித்தீர்வு காண உதவியது. இதில் சிந்தனையாளர் சிங்காரவேலர், பேராசிரியர் லட்சுமிநரசு, எல்.டி.சாமிக்கண்ணு, திரு.வி.க. போன்ற அறிஞர்கள் சொற்பொழிவுகளையும், கருத்துப் பரிமாற்றங்களையும் அவ்வப்போது நடத்தினர். இதில் "முன்னேற்றத்துக்கான சூழ்நிலைகள்" என்ற தலைப்பில் அன்னிபெசண்ட் அம்மையார் இங்குச்சொற்பொழிவை நிகழ்த்தியுள்ளார்.

1919இல் இங்கிலாந்து நாடாளுமன்றக் கூட்டு ஆய்வுக்குழுவினர் திராவிடர்களின் நிலைபற்றி எடுத்துக்கூறுவதற்கென ஒரு பிரதிநிதியை அனுப்பிவைக்குமாறு இச்சங்கத்தினரைக் கேட்டுக்கொண்டதன் பேரில் சர்.கே.வி.ரெட்டி நாயுடு அனுப்பிவைக்கப்பட்டார் (இந்து தமிழ்திசை நாளிதழ், நாள்.18.02.2020). இதேபோல் திராவிடர் இல்லம் என்கிற மாணவர் விடுதியைத் தொடங்கி அங்கே ஏழை மாணவர்கள் பணம் செலுத்தாமல் உணவருந்த ஏற்பாடு செய்தார்.

காங்கிரஸ் மனச்சார்வு கொண்ட பிட்டி தியாகராயரும், டாக்டர் டி.எம்.நாயரும் அதன் செயல்பாடுகளில் திருப்தியற்ற நிலையில் இருந்தபோது அவர்களை அணுகி, திராவிடர்கள் இழிநிலையைப்

போக்கிட ஓர் அரசியல் அமைப்பை ஏற்படுத்திட முனைந்தார். அதன் விளைவே நீதிக்கட்சியின் தோற்றம். டாக்டர் நடேசனாரின் முயற்சி இல்லையானால் நீதிக்கட்சி என்ற பிராமணரல்லாதார் இயக்கம் ஏற்பட்டிருக்க முடியாது. நடேசனார் பல மாநாடுகளை ஏற்பாடு செய்தார். அதற்கு தனது கைப்பொருளைச் செலவழித்தார். நீதிக்கட்சியின் குறிக்கோள்களுக்காகவும், வகுப்புரிமைக்காகவும் சட்டமன்றத்தில் வாதாடினார்.

சட்டமன்றத்தில் இவர் கொண்டு வந்து நிறைவேற்றிய தீர்மானங்களிலேயே மிகச் சிறந்தது "பார்ப்பனர்அல்லாதார் யார்" என்பதைப்பற்றிய வரைவுதான் என்று பதிவுசெய்கிறார் திரு.க.திருநாவுக்கரசு அவர்கள். அதேபோல் இவரின் தீர்மானம்தான் சென்னைப்பல்கலைக்கழகத்தில் தாய்மொழிப் படிப்பை அறிமுகப்படுத்தியது.

சுதந்திர இந்தியாவின் முதல் நிதிஅமைச்சராக விளங்கிய திரு.ஆர்.கே.சண்முகம் செட்டியார், நீதிபதி எஸ்.சுப்பிரமணியன் மற்றும் துணைவேந்தர் திரு.நாராயணசாமி போன்ற ஆளுமைகளைச் சென்னைத்திராவிடர் சங்கம் நாட்டுக்களித்தது. திராவிட இல்லம் என்ற மாணவர் விடுதியை இரவீந்திரநாத்தாகூரால் உருவாக்கப்பட்ட "சாந்தி நிகேதன்" போல் உருவாக்கிட ஆசைப்பட்டார்.

இதே போன்ற விருப்பத்துடன் செயல்பட்ட மற்றொருவர், அகமுடையார் சமுதாயத்தைச்சேர்ந்தவர் தமிழ்வேள் உமாமகேஸ்வரன் பிள்ளை அவர்கள் ஆவார். தஞ்சையில் கரந்தைத் தமிழ் சங்கத்தை நிறுவிய இவர், தமிழ் மொழியினை செம்மொழியாக அறிவித்திட 1919ஆம் ஆண்டிலேயே தீர்மானம் நிறைவேற்றிய முன்னோடி, அதேபோல் தமிழுக்கு தனியே ஓர் பல்கலைக்கழகம் வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றியவர், தொழிற்கல்வியின் இன்றியமையாமையை உணர்ந்த இவர், செந்தமிழ் கைத்தொழிற் கல்லூரியைத் தொடங்கினார். தஞ்சையில் கூட்டுறவு அச்சகம், கூட்டுறவு நிலவள வங்கி போன்றவற்றினை நிறுவி கூட்டுறவு அமைப்புகள் செயல்பட வழிகோலினார்.

தஞ்சை வட்டக் கழகத்தின் தலைவராக இருந்த போது பல்வேறு கிராமங்களுக்குச் சாலை வசதிகள், தொடக்கப்பள்ளிகளின் எண்ணிக்கை போன்றவற்றை உயர்த்தினார். தாகூரின் சாந்திநிகேதன் போன்று தம்மால் உருவாக்கப்பட்ட கரந்தை தமிழ் சங்கமும் விளங்கிடவேண்டும் என்று எண்ணி அதற்காக

கொல்கத்தா சென்று சாந்தி நிகேதனைப் பார்வையிடச் சென்று அங்கேயே மறைந்தார். அப்போதைய மாவட்டக் கழகத் தலைவர் திரு.ஏ.டி.பன்னீர்செல்வத்துடன் இணைந்து செயல்பட்டார்.

அகமுடையார் சமூகம் அளித்த மற்றொரு ஆளுமை சிறந்த தமிழ் அறிஞர், பொறியியலாளரான பா.வே.மாணிக்க நாயக்கர். இவர் தமிழ் வேர்ச்சொற்களில் இருந்து பல அறிவியல் சொற்களை உருவாக்கியவர், பொறியியல் துறையில் 60க்கும் மேற்பட்ட கண்டுபிடிப்புகளை நிகழ்த்தியவர் மேட்டூர் அணைக்கான வரைமுறையை அமைத்தவர்.

திருவொற்றியூரான் அடிமை என அழைக்கப்படும் த.ப.இராமசாமி பிள்ளையின் ஆதரவில் அகம்படியர் குலத்தைச் சேர்ந்த சிவானந்த யதீந்திர சுவாமிகள் அவர்கள் வேதங்களைத் தமிழில் மொழிப்பெயர்த்தார். டெல்டா அகமுடையாரான டாக்டர் சி.இலக்குவனார் அவர்கள் தொல்காப்பியத்தை ஆங்கிலத்தில் மொழிப்பெயர்த்த முன்னோடிகளில் ஒருவர்.

அகமுடையார் சமூகத்தின் இரட்டையர்கள், ஆற்காடு சகோதரர்கள் என்று அறியப்படும் சர் இராமசாமி முதலியார், சர் இலட்சுமணசாமி முதலியார் சிறந்த கல்வியாளர்கள். திரு.இராமசாமி முதலியார் நீதிக்கட்சியின் மூளையாகச் செயல்பட்டவர். ஐக்கிய நாடுகள் பொருளாதார சமூகமன்றத்தின் தலைவராகச் செயல்பட்டவர். உலக சுகாதாரமையத்தில் செயற்குழுத் தலைவராக சர் இலட்சுமணசாமி முதலியார் செயல்பட்டார்.

சிங்கப்பூரில் திராவிட தேசியத்திற்கான அரசியல் கட்டமைப்பு சிங்கப்பூர் அகம்படியர் மகாஜன சங்கத்திலிருந்து தொடங்குவதாக, மேற்கு மலேசியாவில் வகுப்பு, இனம், காலணியத்துவம் என்ற ஆங்கில நூல் பதிவு செய்கிறது. (Class, Race and Colonialism in west Malaysia by M.Stenson, Page : 78) 1920களில் சிங்கப்பூர் அகம்படியர் மகாஜன சங்கம், பின்னர் தமிழ் சீர்திருத்த சங்கமாக (Tamil Reform Associations) உருப்பெற்று, பின்னர் தமிழர்களுக்கான அரசியல் முன்னெடுப்புகளை மேற்கொண்டுள்ளது. இந்த சிங்கப்பூர் அகம்படியர் மகாஜன சங்கம் பின்னாளில் சிங்கப்பூர் ஆதிதிராவிடர் சங்கம் தோன்றுவதற்குக் காரணமாக இருந்ததாக சிங்கப்பூர்வாழ் இந்திய வம்சாவளிகளின் துணைநிலை வரலாறு என்னும் நூல் (A Subaltern History of the Indian Diaspora in Singapore by John Solomon) பதிவுசெய்கிறது.

மிகவும் இக்கட்டான சூழலில் பிரசவவலியில் துடித்த அகம்படியர் இன பெண்ணுக்கு வேளார் இனமக்கள் உதவிசெய்ததால் அதற்கு நன்றியாக வேளார் என்ற பட்டத்தை அகம்படியர் இனத்தைச் சேர்ந்த சிலர் சூடிக் கொள்கின்றனர். இவ்வாறான நடைமுறை தஞ்சாவூர் மாவட்டம் பேராவூரணி பகுதியில் உள்ளதாகக் கூறுகின்றனர்.

அகமுடையார சமூகம் தந்த வள்ளல் பட்டுக்கோட்டை ஸ்ரீமான் நாடிமுத்துப்பிள்ளை அவர்கள் தனது தாலுக்கா போர்டு, ஜில்லா போர்டு தலைமைப்பதவி மற்றும் அரசியல் ஆளுமையின் வழிப் போக்குவரத்து வசதிகள், சாலை வசதிகள், பாலங்கள், மருத்துவ வசதி, இரயில்வே, தொடக்கப்பள்ளிகள், மாணவர் விடுதிகள், உயர்நிலைப் பள்ளிகள், நீர்பாசனங்கள், கூட்டுறவு அமைப்புகள், நூல் நிலையம் என்று பல்வேறு வசதிகளைச் செய்து கொடுத்துள்ளார். முன்னாள் குடியரசுத்தலைவர் உயர்திரு ஆர்.வெங்கட்ராமன் அவர்களின் அரசியல் ஆசானாக விளங்கியவர்.

நேதாஜி சுபாஸ் சந்திரபோஸ் அவர்களின் இந்திய தேசிய இராணுவத்தில் முக்கிய பங்காற்றிய ஜானகி தேவர் என்ற அகம்படியர் சுதந்திர வேட்கையுடன் செயல்பட்டவர். அதே இராணுவத்தில் பணியாற்றிய வாட்டாகுடி இரணியன், பின்னாளில் மணலி கந்தசாமி, சாம்பவன் ஒடை சிவராமன் ஆகிய பொதுவுடமைப் போராளிகளுடன் இணைந்து தாழ்த்தப்பட்ட மக்களின் உரிமைக்காகப் போராடியவர் ஆவார். கருப்பக்கிளார் சு.அ.இராமசாமிப்புலவர் அவர்கள் அகம்படியர் இனம் தந்த தமிழறிஞர். இவர் எவ்வித வேறுபாடும் கருதாமல் பல்வேறு சமூகங்களைச் சேர்ந்த ஆயிரக்கணக்கான தமிழ் அறிஞர்களின் வாழ்கை மற்றும் புலமையைத் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் வாயிலாக “தமிழ் புலவர் வரிசை” என்னும் பெயரில் 31 தொகுதிகளாகப் பதிவுசெய்துள்ளார். மேலும் இவர் தமிழ்ப்புலவர் அகரவரிசை என்ற அடிப்படையில் தமிழ்ப் புலவர்களின் வரலாற்றைப் பதிவு செய்துள்ளார்.

“மாவட்ட வரலாறு” நூல்கள் மூலம் அகமுடையார்கள் பற்றிய வரலாற்றுக் குறிப்பை ஆங்காங்கு வழங்கிச் சென்ற சோமலெ மற்றும் மணிமேகலைப் பதிப்பகத்தார் போன்ற நகரத்தார்கள், மற்றும் சிவகங்கைச் சீமை திரைப்படம் மூலம்

மருதுபாண்டியர்கள் புகழ் பரப்பிய கவிஞர் கண்ணதாசன் போன்றோர் அகம்படியர்களின் நன்றிக்கு உரியவர்கள்.

அகமுடையார் சமூகத்தைச் சேர்ந்த பச்சையப்ப முதலியார் செய்த தானதர்மம் மற்றும் அறக்கொடையும், எத்திராஜ் முதலியார், வலிவலம் தேசிகர் போன்ற அகமுடையார்கள் உயர்கல்வி மற்றும் தொழிற் கல்வி வாய்ப்புகளை ஏற்படுத்தியது ஒருபுறம் என்றால், கள்ளர் சமுதாயம் தந்த பெருந்தனக்காரரான பூண்டி ஸ்ரீமான் வீரையா வாண்டையார் அவர்களால் தஞ்சையில் ஏற்படுத்தப்பட்ட பூண்டி ஸ்ரீபுட்பம் கல்லூரி எவ்வித வேறுபாடும் கருதாமல் பல ஆயிரக்கணக்கானவர்களுக்கான உயர்க்கல்வி வாய்ப்பை வழங்கியது. அதில் பயன் பெற்றவர்களில் அகம்படியர்களும் அடங்குவர்.

அதேபோல் கல்வித்தந்தை ஹாஜி எஸ்.எம்.எஸ். ஷேக் ஜலாலுதின் அவர்களினால் ஏற்படுத்தப்பட்ட அதிராம்பட்டினம் கல்லூரியும் அப்படிப்பட்ட உயர்க்கல்வி வாய்ப்புக்களை அகம்படியருக்கும் அளித்தது.

இதேபோல் உயரியநோக்கோடு பல்வேறு சமூகத்தவர்கள் தொடங்கிய கல்வி நிறுவனங்களால் அகம்படியர் உயர்க்கல்வி வாய்ப்பினை பெற்றனர். 1947 ஆம் ஆண்டு வரையில் கல்லூரிகளே இல்லாத முகவை மாவட்டத்தில், 03.07.1947 ஆம் ஆண்டு அடையாற்றில் பெசண்ட அம்மையார் நூற்றாண்டு விழாவிற்கு தலைமை தாங்கிய சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் ஆ.இலட்சுமணசாமி முதலியார் “புதிய கல்லூரிகள் நிறுவப் பலர் முன்வரவேண்டும்” என்று ஆர்வத்தோடு வேண்டுகோள் விடுத்தார். உடனே டாக்டர் அழகப்பச்செட்டியார் எழுந்திருந்து இராமநாதபுரம் மாவட்டத்தில் ஒரு கல்லூரி நிறுவுவேன் என்று உரைத்தார். ஒரு திங்களுக்குள் 11.08.1947 இல் காரைக்குடியில் அழகப்பா கல்லூரி உதயமாயிற்று.

இதேபோல் முகவை மாவட்டத்தில் காரைக்குடி, திருப்பத்தூரில் நகரத்தார்களின் கொடையாலும் இராமநாதபுரம் மற்றும் சிவகங்கையில் அங்குள்ள அரச குடும்பத்தின் ஏற்பாட்டிலும், விருதுநகர் சிவகாசியில் நாடார் பெருமக்களின் ஏற்பாட்டிலும் பல்வேறு உயர்க்கல்வி நிறுவனங்கள் தோற்றம் பெற்றன. இந்த நிறுவனங்கள் வழி அகமுடையார்கள் உயர்க்கல்வி பெறும் வாய்ப்பினை அடைந்து பயன்பெற்றுள்ளனர்.

கோவை மாவட்ட அகமுடையார் குலமரபும், பண்பாடும் என்ற முனைவர்பட்ட ஆய்வேட்டில் அதன் ஆசிரியர் செல்வி. வெ.அ.நாகரத்தினம் அவர்கள், அகமுடையர் கோவைப் பகுதியில் சக சமூகத்தினருடன் கொண்டுள்ள இணக்கமான வாழ்வியலைக் கீழ்க்கண்டவாறு எடுத்துக்காட்டுகிறார்.

அகமுடையார்கள், வேளாளர் (கொங்கு), பிள்ளை, கோனார் போன்றோரிடம் நட்புரிமையுடன் பழகுகின்றனர். வேளாளர்கள் (கொங்கு) அதிகமாகக் காணப்படும் இடங்களில் அவர்களுடைய பழக்கவழக்கங்களைப் பெற்றவர்களாய் உள்ளனர் என்று பதிவு செய்கிறார்.

குடும்பங்களில் நடக்கும் அனைத்துக்காரியங்களுக்கும் அவர்களுக்கு (கொங்கு வேளாளர்) முன்னுரிமை கொடுக்கின்றனர். பிறப்பு தொடங்கி, இறப்பு வரையிலான திருமணம், குழந்தைப் பிறப்பு, இழவு உள்ளிட்ட சடங்குகளில் அகமுடையாருக்கும், (கொங்கு) வேளாளருக்கும் இடையில் வியத்தகு வேறுபாடுகள் இருந்தபோதிலும் மனதால் இணைந்தவர்களாகப் பிணக்கின்றி, போராட்டமின்றி ஒன்றுபட்ட நெஞ்சத்தோடு வாழ்வதாகக் குறிப்பிடுகிறார். மேலும் இவர்,

காடைக்கவுண்டன் கூட்டம், கணக்கன் கூட்டம் ஆகிய (கொங்கு வெள்ளார்) கூட்டங்களிலிருந்து ஒருவருக்கொருவர் கொண்ட தொடர்பினை அறியலாம் என்றும், கொடுமணல், தங்கம்மாள் கோயிலில் ஏற்கனவே இருந்த, சேரன், பாண்டியன், பனங்காடை, பயிரன் என்ற நான்கு காணியளருடன் ஐந்தாம் காணியாளராக அகமுடையார் ஏற்றுக்கொள்ளப்பட்டு இறைவழிபாட்டில் இணைந்து செயல்படுவதாகவும் சுட்டிக்காட்டுகிறார். பண்டாரம், நாவிதர், வண்ணார், சக்கிலியர், பறையர் உள்ளிட்ட பல்வேறு சமூகங்களுடன் அகமுடையோர் கொண்டுள்ள இணக்கமான வாழ்வியல் முறைகளை மேற்படி ஆய்வேட்டில் செல்வி. வெ.அ.நாகரத்தினம் தெளிவுபடுத்துகிறார்.

முனைவர் ஆ.சண்முகம்பிள்ளை அவர்கள் எழுதிய "தமிழர் வழிபாடுகளில் தீமிதி" (தமிழ்ப் பல்கலைக்கழகம் தஞ்சாவூர்) என்ற நூலில், வாழ்வியல் நிலையிலும், வழிபாட்டு நிலையிலும் அகமுடையார் சமூகம் இதர சமூகத்துடன் இணைந்து செயல்படுவதைக் கீழ்க்கண்டவாறு பதிவுசெய்கிறார்.

“தஞ்சாவூருக்கு அருகில் அமைந்த வல்லம் பேரூராட்சிப்பகுதியில் அமைந்த பல்வேறு தெருக்களில், செட்டியார், மூப்பனார், அகமுடையார், வெள்ளாளர், உடையார், முஸ்லீம், கிறித்தவர்கள், ஆதிதிராவிடர்கள் எனப்பல சமூகத்தைச் சார்ந்த மக்களும் ஒன்றுபட்டு வாழ்ந்து வருகின்றனர். ஒரு குறிப்பிட்ட சமூகத்தைச் சார்ந்தவர் சுக துக்க நிகழ்வுகளில் பிற சமூகத்தைச் சார்ந்தவர்களும் பங்கேற்று, பங்களிப்புச் செய்து சமூக ஒற்றுமைக்கும், மத நல்லிணக்கத்துக்கும் சான்றாகக் கூறுமளவுக்கு மன ஒருமைப்பாட்டோடு மக்கள் இவ்வூரில் வாழ்ந்து வருவதைக் காணமுடிகிறது”.

அதேபோல் திருவாரூர் மாவட்டம் நீடாமங்கலத்தில் அகமுடையார் இதர சமூகங்களுடன் இணைந்த வாழ்வியலைக் கீழ்க்கண்டவாறு பதிவு செய்கிறார்.

“நீடாமங்கலத்தில் கீழராஜவீதி, மேலராஜவீதி, வடக்கு ராஜவீதி, தெற்குராஜவீதி, மோதிலால் தெரு போன்ற பல தெருக்கள் காணப்படுகின்றன. ஊரில் பழமையான சந்தானராமசாமி கோயிலும் அமைந்துள்ளது. அகமுடையார், வெள்ளாளர், நாடார், செட்டியார், கள்ளர், உடையார், கோனார், வண்ணார், அம்பலக்காரர், வேளார், ஆதிதிராவிடர்கள், முதலான சமூகத்தைச் சார்ந்த மக்கள், இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர். அனைத்துச் சமூகத்தைச் சார்ந்தமக்களும் மனவேறுபாடுகளின்றி ஒற்றுமை உணர்வோடு வாழ்ந்து வருகின்றனர்”.

மேலும் இந்த நீடாமங்கலத்தில் அமைந்துள்ள திரௌபதியம்மன் வழிபாட்டில், நீடாமங்கலம் எல். திருவேங்கடம் செட்டியார் வகையறாக்கள், கோரையார்படுகை, தட்டித்தெருவாசிகள், நீடாமங்கலம் யாதவர் சங்கம், பெரியார்தெரு அம்பாள் பக்தர்கள், நீடாமங்கலம் அகமுடையார்கள், நீடாமங்கலம் வெள்ளாளர் சங்கம், ஐயப்ப சேவா சங்கம் ஆகிய அமைப்பினர் மற்றும் தனிப்பட்டவர்கள் செலவில் உபயதாரர்கள் மண்டகப்படி வழிபாடுகளில் இணைந்து செயல்படுவதை மேற்படி நூலில் அதன் ஆசிரியர் சுட்டிக்காட்டுகிறார். அத்துடன், அகமுடையார்களின் குலத்தெய்வமாகவும், உரிமையுடையதாகவும் உள்ள இந்த திரௌபதியம்மன் கோயில் பூசாரியாக வேளார் சமூகத்தைச் சார்ந்தவர்கள் தலைமுறை தலைமுறையாகக் கோயிலில் பூசகராகப் பணியாற்றி வருவதையும் குறிப்பிடுகிறார். அத்துடன் இக்கோயிலின் தீமிதி திருவிழாவின் போது, தீ உண்டாக்கும்

பணிகளை ஆசாரி சமூகத்தினர் மேற்கொள்வதையும் பதிவு செய்கிறார்.

சமூக ஒற்றுமைக்கு எடுத்துக்காட்டாகத் திகழும் மாறநாடு கறுப்பணசாமி பற்றி "தமிழ்நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு" நூலில் அதன் ஆசிரியர் முனைவர் திரு.அ.பிச்சை அவர்கள் கீழ்க்கண்டவாறு விவரிக்கிறார். சுமார் 20000க்கு மேற்பட்ட மக்கள்கூடி விழா நடைபெறும், சிவகங்கை மாவட்டம் மானாமதுரை வட்டத்திலுள்ள மாறநாடு கிராமத்தில் அருள்பாலிப்பவர் கறுப்பணசாமி ஆவார். இத்தெய்வத்தால் இப்பகுதியில் மோதலிலும் சமூக ஒற்றுமையே நிகழ்கிறது. தேவேந்திரரின் குலத்தெய்வமாகக் கறுப்பணசாமி விளங்குவதையும், தேவேந்திரகுலபெண்ணால் நிர்மாணிக்கப்பட்டதால் இக்கோயில் உரிமை இவர்களிடம் இருக்கிறது என்பதையும் அகம்படியார், பறையர் இக்கோயில் வழிபாட்டில் சில உரிமைகளுடன் பங்கு பெறுவதையும், இந்த மூன்று சமூகங்களும் சேர்ந்து இக்கோயில் வழிபாட்டை நடத்துவதாகச் சுட்டிக்காட்டுகிறார். இத்தெய்வம் தென்மாவட்டத்தில் நகரத்தார், அகமுடையார், கள்ளர், தேவேந்திரர் பறையர், போன்ற பல சாதியினருக்கு குலத்தெய்வமாகத் திகழ்வதையும் பதிவு செய்கிறார்.

மதுரைக்கு அருகில் உள்ள குலமங்கலம் என்னும் ஊரில் பங்குனி மாதம் முருகன் திருக்கல்யாணம் என்னும் நாளில் வருடம் தோறும் ராவுத்தர்பட்டி என்ற இசுலாமியக் சமாதிக்காக சல்லிக்கட்டு நடத்தப்படுகிறது. இதனை அகமுடையார் இனத்தினர் நடத்துகின்றனர்.

சல்லிகட்டு நடத்தும் முன்னர் ராவுத்தர்பட்டி என்ற இசுலாமியச் சமாதிக்குச் கொட்டுமேளத்துடன் சென்று இந்து மத முறைப்படி வணங்கிவிட்டு வந்து சல்லிக்கட்டை அகமுடையார்கள் நடத்துவதாக திரு.ஆர்.சிவக்கொழுந்து அவர்களின் சல்லிக்கட்டு, மதுரை மாட்டம் நூல் தெரிவிக்கிறது.

திரு.ப்ரிஜிட் செபஸ்தியா கூற்றுப்படி ஆகஸ்ட் 29 முதல் செப்டம்பர் 10 வரையிலான வேளாண்கன்னி மாதா கோயில் மண்டகப்படியில் ஆகஸ்ட் 30 ஆம் தேதி மண்டகப்படியில் அகம்படிய தேவர்களின் மண்டகப்படியும் அடங்கியிருந்தது என்பதையும் அறியமுடிகிறது.

நிலம் உழுபவரின் சுதந்திரம் (Land for Tillers Freedom – LAFTI) என்ற அமைப்பின் நிறுவனர்களும், ஆகச்சிறந்த காந்தியவாதிகளும், பூதான இயக்க தலைவர்களும் கடல்சார் சூழலில் செயல்பாட்டாளர்களும், 10,000 ஏக்கருக்கு மேற்பட்ட நிலங்களை நிலமற்ற ஏழைவிவசாயிகளுக்கு பகிர்ந்தளித்தவர்களும் என்ற விரிவான பெருமைக்கு உரியவர்கள், திருமதி. கிருஷ்ணம்மாள், திரு.ஜெகன்நாதன் தம்பதியர் ஆவர். இவர்களின் சேவையைப்பாராட்டி பத்மஸ்ரீ, சுவாமி பிரனவானந்தா அமைதிப்பரிசு, ஜமன்லால் பஜாஜ் விருது, பகவான் மகாவீரர் விருது, சம்மிட் விருது, ரைட்டுலிவ்லிகுட் விருது போன்ற பெருமைமிகு விருதுகள் இவர்களுக்கு வழங்கப்பட்டும் பாராட்டப் பெற்றுள்ளனர்.

இந்தத்தம்பதியரில் அகம்படியர் சமூகத்தில் பிறந்த திரு.ஜெகன்நாதன் அவர்கள் தனது இளமைப்பருவத்தில் தன் அப்பா பர்மாவிலிருந்து அனுப்பிய சட்டையை தீயிட்டுக்கொழுத்தியவர், ஆங்கில ஆட்சியில் தனது அண்ணன் இராணுவத்திற்கு ஆள்சேர்க்க தம்பி இவர் ஆங்கிலேயருக்கு எதிராக சத்தியாகிரகப் போராட்டத்தை மேற்கொண்டார்.

நவநாகரிக ஆடை அணிந்தவர் திடீரென ஆன்மீகப்பாதையில் பயணித்ததும், கல்லூரிப்படிப்பை கைவிட்டு காந்திய இயக்கத்தில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டது, ஜாதி மறுப்புத் திருமணமாக காந்தியவாதி பூதான இயக்கச் செயல்பாட்டாளர் கிருஷ்ணம்மாள் அவர்களை மணந்தது என்று இவருடைய வாழ்க்கையை “அழகிய முரண்கள் நிறைந்த உறவு முடிச்சுகள் கொண்ட வாழ்க்கை” என்பதாக ஆய்வாளர்கள் சித்தரிக்கின்றனர்.

சகமனிதர்கள் மீது கொண்ட அன்பும், அக்கறையும் இந்தத் தம்பதியரை ஒரு அர்த்தமுள்ள வாழ்வை வாழச்செய்திருக்கிறது. சகோதரத்துவம், சகவாழ்வு இவற்றையெல்லாம் தாண்டி மனித நேயமாண்புகளின் சங்கமமாக இவர்களின் வாழ்க்கை அமைந்துள்ளது. இந்தத் தம்பதியரின் வரலாற்றை, இத்தாலிய ஆய்வாளர் திரு.லாராகோப்பா அவர்கள் எழுதியுள்ளார். அது தமிழில் “சுதந்திரத்தின் நிறம்” என்ற பெயரில் தன்னறம் பதிப்பகம் மூலம் வெளியிடப்பட்டுள்ளது.

இவ்வாறு பொதுச்சமூகத்தைச் சேர்ந்தவர்களின் தொலைநோக்குப் பார்வையாலும், செயல்பாட்டாலும் அகமுடையார்களும்,

அகமுடையார் சமூகத்தில் பிறந்த ஆளுமைகளின் வழி பொதுச் சமூகமும் பயன்பெற்று சகோதரத்துவத்துடன் சகவாழ்வு வாழ்ந்துள்ளனர், வாழ்ந்து வருகின்றனர். இன்னும் பல ஆளுமைகளையும், அவர்களின் செயல்பாடுகளையும் விவரித்தால் பக்கம் கூடும், ஆகவே புரிதலுக்காக ஒரு சில உதாரணங்கள் மட்டுமே மேலே கொடுக்கப்பட்டுள்ளது.

★★★

# 15.
# கனத்ததோர் / கணத்ததோர் அகமுடையார்

"ஆதியில் அரசு எனும் அமைப்பின் கீழ் இயங்கும் முன்பு கனம் எனும் குழு அமைப்பின் கீழ் வாழ்ந்த ஏதோ ஒரு பழங்குடியினர் வழிவந்தோர் என்பதனால் கனம் எனும் அடைமொழி அகம்படியர் முன் சேர்க்கப்பட்டு கனத்ததோர் அகம்படியர் என்றாயிற்று என்று கருதிக்கொள்வதற்கு இடமளிக்கும் அனுமானம் கனம் பற்றிய சமூகவியல் ஆய்வுக்கு உதவக்கூடும்."

மீ.மனோகரன்

மருதுபாண்டிய மன்னர்கள் (பக்கம் : 587).

வேறெந்த சமூகத்திற்கும் இல்லாத முன்னொட்டாக கனம், கனத்ததோர் என்ற அடைமொழி அகமுடையாருக்கு மட்டுமே இருந்து வந்துள்ளது. "கனம்" என்பதற்குப் பாரம், பருமை, வன்மை, திரட்சி, செறிவு, உறுதி, பெருமை, சீர்மை, ஞாட்பு என்றும் இதில் ஞாட்பு என்பதற்குப் போர், போர்க்களம், படை, கூட்டம் அகலம் என்று தமிழ் அகராதிகள் பொருள் தருகின்றன. அதே போல் "கணம்" என்பதற்கு நொடி, கூட்டம், இனம், சேணைப்பிரிவு என்று அகராதிகள் விளக்கம் தருகின்றன.

"கனம்" என்பதற்கு தடிமன் என்றும், "கணம்" என்பதற்கு பிரமதேய ஊர்களிலும் கோயில்களிலும் ஒரு நிர்வாகக்குழு என்று தமிழ்க் கல்வெட்டுச் சொல்லகராதி குறிப்பிடுகிறது.

கணப்பெருமக்கள் என்பதற்கு ஊர்க்காரிய நிர்வாகிகள் என்றும், கணபோகம் என்பதற்கு அவர் அவர் தனித்தனிப்பகுதிகளை அனுபவிக்காமல் முழுவதையும் கூட்டாக அனுபவித்து மொத்தத்தில் அவர் அவருக்கு உரிய பங்கைப் பெறுதல் என்று தென்னிந்திய கோயிற் சாசனங்கள், சாசனச்சொல் அகராதி குறிப்பிடுகிறது. மேலும் வீரகணத்தர் என்பதற்கு வீரர் சமூகம் என்றும் அந்நூல் குறிப்பிடுகிறது.

திரு.அ.சிதம்பரனார் தனது சேரர் வரலாறு நூலில் கணம் என்பதற்கு அந்தந்த நாட்டுக்குரிய மக்கள் என்று குறிப்பிடுவார். தமிழர் கணம் (தமிழ் நாட்டவர்) ஆரியர் கணம் (காக்கேசியா மலைநாட்டினர்), அவுணர் கணம் (மங்கோலிய நாட்டினர்), நிருதர் கணம் (ஆப்பிரிக்க நாட்டு நிகிரோவர்), அரக்கர் கணம் (அமெரிக்க நாட்டு செவ்விந்தியர்) என்று கணங்களைக் குறிப்பிட்ட மக்கள் தொகுதியைச் சுட்டுவதாக விளக்கிச்செல்கிறார்.

கணம் என்பதற்கு ஊரின் நிர்வாகச்சபை என்றும், ஊர் ஆள்வார்கள் என்றும் தென்னிந்திய அரசியல் (Southindian Polity) குறிப்பிடுகிறது. கனம் மற்றும் கணம் இரண்டும் கூட்டம் என்ற பொருளைத் தருகிறது. அதேபோல் கணம் என்பதற்கு இனம் என்றும், சேணைப்பிரிவு என்றும் பொருள் உள்ளதும் இங்கு கவனிக்கதக்கது.

போர்மரபு இனக்குழுவான அகமுடையார்கள் சோழராட்சிக்குப்பின்பு வேளாண்தொழில் நோக்கி சென்ற பின்பும் தங்கள் மரபுத்தொடர்சிக்காக கணம் என்பதான அடைமொழியைக் கொண்டிருந்திருக்கலாம்.

தேவாரம் பதினொன்றாம் திருமுறைக்கு உரை எழுதிய சி.அருணை வடிவேல் முதலியார் பாடல் எண்.47இல் "தண்டர்தங் கோனக் கணத்துக்கு நாயகம் பெற்றவன்காண்" என்பதில் கணம் என்பதற்குக் கூட்டம் என்றும் இது சிவகணத்தையேயன்றிப் பதினெண் கணங்களையும் குறித்தது என்று குறிப்பிடுகிறார். "உருத்திர கணம்" என்பதற்கு சிவகணம் என்றும், சிவனடியார் என்றும் அகராதிகள் பொருள் தருகின்றன.

சர்வமங்களம் தரும் ஸ்ரீசிவலிங்கபுராணம் (பக்கம் : 92) சிவபெருமானின் மூர்த்தி வடிவமாக நந்திகணமூர்த்தி மற்றும் பூதகணமூர்த்தி போன்ற மூர்த்தங்களைக் குறிப்பிடுகிறது.

துறைமங்களம் சிவப்பிரகாச சுவாமிகள் அருளிச்செய்த பிரபுலிங்கலீலை நூல், சிவகணம் என்பதற்குச் சிவனடியார் கூட்டம் என்று பொருள்தருகிறது. தமிழ் ஒளியின், தமிழர் சமுதாயம் நூல் சிவனைச் சார்ந்து வாழ்ந்த கணங்கள் சிவகணங்கள் என்றே அழைக்கப்பெற்றன என்று குறிப்பிடுகிறது.

மேலுலகத்திற்கு சிவபிரான்மாட்டு அணுக்கராய் நிற்குந் தூய தொண்டர்கள் சிவகணங்கள் என்று வழங்கப்படுவர். அச்சிவகணங்களுள் தலைவராய் நிற்குஞ் சிலர்க்கு நந்திகள் என்ற பெயர் என்பதாக "மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்" என்ற நூலில் மறைமலையடிகள் குறிக்கிறார்.

சிவஞான சுவாமிகள் அருளிய காஞ்சிப்புராணம் பகுதி 1, பாயிரப்பாடலில் திருநந்தித் தேவர் அவர்களின் சிறப்பு சொல்லப்படுகிறது. அதில் "

"அங்கணன் கயிலை காக்கும் அகம்படித் தொழின்மை பூண்டு

நம்குரு மரபிற்கெல்லாம் முதற்குருநாதனாகிப்

பங்கயம் துலபநாடும் வேந்திரப்படைபொறுத்த

செங்கையெம் பெருமான் நந்தி சீரடி கமலம் போற்றி"

என்று நந்தித்தேவர் சிவபெருமானின் திருக்கயிலையைக் காவல்காக்கும் அகம்படித்திருத்தொழிலை, அகம்படிக் காவல் தொழிலை, மேற்கொண்டது சுட்டிக் காட்டப்படுகிறது.

"அருள் தரு நந்திதேவர் வழிபாடு" என்ற நூலில் அதன் ஆசிரியா டாக்டர் தி.பாலசுப்ரமணியன் அவர்கள் நந்தித்தேவர் வழிபாடு பற்றிக் கீழ்க்கண்டவாறு பதிவுசெய்கிறார்.

பொதுவாகவும், சிறப்பாகவும் சிவனருள் பெற்று சிவஞானம் பெற்று சிவானந்தப் பேரின்பத்துள் மூழ்கித் திளைத்தவர்கள் சிவஞானமயமாகி சிவனருளையே சிந்தித்துக்கொண்டிருக்கும் அடியார்கள் பக்தர்கள் அருளாளர்கள் யாவரும் நந்தி எனப்படுவர். நந்தி கணத்தினர் யாவரும் தேவவடிவினர், இவர்களுடைய தலைவர் நந்திதேவர். இவர் திருக்கயிலாயத்தில் சிவபெருமானின் திருமாளிகையின் திருவாயிலைக் காக்கும் அதிகாரம் பெற்றவர். நந்தித்தேவரும், இடபதேவரும் வேறு வேறானவர்கள், இடபர் காளை, எருது, இடபர் என்று அழைக்கப்படுவர் சிவபெருமானின் வாகனமாக இருப்பவர். பூசாபத்ததி நூல்கள் கூறும் அட்ட பரிவாரங்களில் திருநந்தித்தேவர் கிழக்கிலும்

இடபதேவர் மேற்கிலும் இருப்பதாகக் கூறப்படுகிறது. ஆனால் காளை வடிவில் இருக்கும் இடபதேவரை மக்கள் நந்திதேவர் என்று தவறான புரிதலைக் கொண்டு வழிபடுகின்றனர் என்று பதிவு செய்கிறார்.

மேருமலை (கைலை) காவலன், அகம்படியத் தொண்டு செய்த நந்தி தேவர், அகமுடையோர்களின் மூலவராவர். 18 சித்தர்களுக்கும் மூத்தவர், அறிவொளி அருளியவர், என்றவராக நந்தித்தேவரைப்பற்றி "இலக்கியத்தில் அகமுடையோர்" நூலில் திரு.வி.ஆ.ஆண்டியப்பத்தேவர் பதிவு செய்கிறார்.

ஆதியில் உணவுப்பொருள்கள் உள்ளிட்டவற்றைப் பாதுகாத்திட ஏற்படுத்தப்பட்ட காவல் முறையைக் கண ஆட்சிமுறை என்னும், கூட்டாட்சி முறையாகக் குறிப்பிடுகிறது, அகமரபும் ஆதிக்குடியும் நூல். அத்துடன் கண ஆட்சியின் காவலர்கள் கணத்தார்கள் என்றும், கணநாதர்கள் என்றும் அழைக்கப்பட்டனர் என்கிறது மேற்படி நூல்.

பல்லவர்காலக் கல்வெட்டுகளின் அடிப்படையில் "கணம்" என்பதற்கு ஆட்சிப்பொறுப்பேற்ற மக்களின் சேர்க்கையைக் குறிப்பதாக வரலாற்றாசிரியர் சி.மீனாட்சி அவர்கள் தமது பல்லவர்கால ஆட்சி நிர்வாகம் மற்றும் சமூகவாழ்க்கை என்ற நூலில் குறிப்பிடுகிறார். (Administration and social life Under Pallavar), மேலும் ஒரு குறிப்பிட்ட செயலுக்காகத் தேர்ந்தெடுக்கப் பெற்ற ஒரு குழு என்றும் குறிப்பிடுகின்றனர்.

ஆய்வாளர்கள் "கணம்" என்பதை மனுநீதிமக்கள் என்றும், பொது நோக்கமுடைய அமைப்பு என்றும் கருதுகின்றனர் (கல்வெட்டில் வாழ்வியல் டாக்டர் அ.கிருட்டிணன் பக்கம் 178). இதே பொருளில் வேதங்களிலும் "கணம்" என்ற பதம் குறிப்பிடப்படுவதாக அறியமுடிகிறது.

கணங்கள் என்பதைப் புராதன கூட்டாட்சி அமைப்பாகக் கொள்ளலாம் என்பதுடன் தானே செய்யக்கூடியதும், ஆயுதம் தரிப்பதுமான அமைப்பு என்றும் முடிவுக்கு வரமுடிகிறது (அகமரபும், ஆதிக்குடியும் திரு.வீராச்சாமி அகமுடையார்). இதற்கு ஏற்ப பண்டைய தமிழகத்தில் மக்கள் சிறுசிறு குலங்களாகவும், குடிகளாகவும், இணைப்புகளாகவும் சிதறிக்கிடந்து தங்களுக்குள் ஓயாத போரில் ஈடுபட்டிருந்தனர் என்பதை அறியமுடிகிறது (பண்டையத் தமிழர் வாழ்வும் வழிபாடும் கலாநிதி க.கைலாசபதி). சங்ககாலத்திற்கு முன்பு சிறுசிறு அமைப்புகளாக இருந்த

கணங்களாகிய குழுக்களே பின்பு கட்டமைக்கப்பட்ட அரசுகளாக மெல்லமெல்ல உருவெடுக்கின்றன. இந்த உருமாற்றம் திடீரெனத் தோன்றிவிடவில்லை ஓயாதபோர், படையெடுப்பு, ஊர் அழிப்பு, உரிமைச்சண்டை இவற்றின் அடிப்படையிலேயே தோன்றுகின்றன.

சங்க காலத்தில் ஆட்சி மற்றும் அரசு செலுத்திய வேளிர்கள் மற்றும் மூவேந்தர்கள், தொடக்கத்தில் சிறுசிறு கூட்டமாக கணமாகிய குழுக்களாக இருந்து பின் சண்டை, போர், ஆக்கிரமிப்பு, இடப்பெயர்ச்சி இவற்றினூடாக, நன்கு ஏற்பெடுத்தப்பெற்ற அரசுகளாக மாற்றம் பெற்றனர். (அகமரபும் ஆதிக்குடியும் வீராச்சாமி அகமுடையார் - பக்கம் 23).

இந்த தொடக்ககாலக் குழுக்களாகிய “கணம்” என்றதன் தொடர்ச்சி அகம்படியர்கள் இனக்குழுவாக மாறிய பின்னரும் இவர்களுக்கு தொடர்கிறது என்ற ஊகம் ஆய்வுக்கு உதவக்கூடும்.

பண்டைய மரபுத்தொடர்ச்சியாகக் “கணம்” என்பது அகம்படியருக்கு தொடர்வதுபோல, தனிப்பட்ட மனிதர்களால் உருவாக்கப்பெற்ற கணங்களைப் பற்றிச் சமண சாத்திரங்கள் குறிப்பிடுகின்றன. அதேபோல் சமயம் சார்ந்த கணங்களாக ஸ்ரீகிருஷ்ணகணத்தார், வீரகணத்தார், சாளி கணத்தார், சட்டகணத்தார் போன்றவை தமிழ்நாட்டில் இருந்ததை அறியமுடிகிறது. (சோழர் வரலாறு நீலகண்ட சாஸ்திரியார் - பக்கம் 102).

பல்லவர் காலத்தில் திருவொற்றியூர் கோவில்களில் தனிப்பட்ட முறையில் அமிர்தகணம் என்ற சிறப்பான அமைப்பு காணப்பட்டதைக் கல்வெட்டுகள் மூலம் அறியமுடிகிறது. கணத்தில் இன்றியமையாதவரைக் குறிக்க கணப்பெருமக்கள் என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. பல்லவ மன்னன் நிருபதுங்கனின் பதினாறாவது ஆட்சியாண்டில் பரமேசுவரமங்கலம் கோவிலுக்கு அவர் கொடுத்த கொடைப்பொன் கணப் பெருமக்களிடம் ஒப்படைக்கப்பெற்றது. (கல்வெட்டில் வாழ்வியல் டாக்டர் அ.கிருட்டிணன்).

அக்காலத்தில் கணப்பெருமக்கள் கோவில்களுடன் மிகுந்த தொடர்பில் இருந்துள்ளனர். கோவில்களுக்கு வழங்கப்பெற்ற கொடைகளைப் பாதுகாப்பது, கோவில் நிர்வாகத்தில் பங்கேற்பது போன்ற வகையில் கணமும் கணப்பெருமக்களும் செல்வாக்குடன் விளங்கியுள்ளனர். மேலும் கணப்பெருமக்கள்

ஊர்ச்சபையின் ஓர் முக்கியமான அங்கமாக இருந்து குறிப்பிட்டச் செயல்களை இனிதே நிறைவேற்றியுள்ளனர்.

ஆளுங்கணம் என்பது ஓர் ஆட்சிக்குழு என்றும் கோவில் மற்றும் கொடைகள் பற்றிய பணிகளைக் இக்குழு செய்துவந்தது என்றும் கல்வெட்டுகளில் வாழ்வியல் நூலாசிரியர் திரு.டாக்டர் அ.கிருட்டிணன் குறிப்பிடுகிறார்.

ஆகவே பண்நெடுங்காலத்திற்கு முன்பு குழு என்ற கணநிலையில் இருந்து படிப்படியாக வளர்ச்சிபெற்று நன்கு கட்டமைக்கப்பெற்ற அமைப்புகளாக, அரசின் அங்கங்களாக, நிர்வாக அமைப்பின் கூறுகளாக, இதன் உட்சபட்ச வளர்ச்சியாக அரசு என்ற நிறுவனமாக அகம்படியர்கள் பரிணாம வளர்ச்சி அடைந்ததைக் கணத்ததோர் அகம்படியர் என்பதின் கணம் என்ற முன்னொட்டு உணர்த்துவதாக முடிவுசெய்யலாம்.

★★★

# 16. வலங்கை வகைப்பாடு

“வலங்கை என்பது சோழமன்னனான முதலாம் இராஜராஜனுடைய காலத்திலிருந்தே, வலங்கைப்பழம் படைகளிலார், பெருந்தனத்து வலங்கைப் பழம்படைகள், அழகிய சோழத்தெரிந்த வலங்கை வேளைக்காரப்படைகள் இராஜராஜத்தெரிந்த வலங்கை வேளைக்காரர் என்பன போலச் சோழர் படைகளின் பிரிவுகளிலே காணப்படுகிறது. வலங்கை வேளைக்காரர் என்ற பிரிவைப் பலபடைகளிலும் காண்கிறோம். ராஜசேவகத்தில் நிரந்தரமாகவும், எந்த சமயத்திலும் சேவைக்கு தயாராக இருந்த படையினர் என்று அவர்களைப் பொதுவாகக் கொள்வர்”.

தி.நா.சுப்பிரமணியன்

தென்னிந்தியக் கோவிற் சாசனங்கள்.

*வலங்கை வேளைக்காரர் என்பது சோழர் படையின் ஒரு முக்கிய பிரிவு. இதை ஸ்ரீராஜராஜ தேவர் படை ஜனநாதத் தெரிஞ்ச வலங்கை வேளைக்காரரில் (தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி 17, பக்கம்238) என்பதைக் கொண்டு அறியலாம். மேலும், முதலாம் இராசராசனுடைய படையில் இராசராசத்தெரிஞ்ச வலங்கை வேளைக்காரர், அரிதுர்க்க லங்கன தெரிஞ்ச வலங்கை வேளைக்காரர், மூர்த்த விக்ரமாபரணத் தெரிஞ்ச வலங்கை வேளைக்காரர். இரணமுகராமத் தெரிஞ்ச வலங்கை வேளைக்காரர், இரஜைகண்டிவத் தெரிஞ்ச வலங்கை வேளைக்காரர், சத்ருபுஜங்கத் தெரிந்த வலங்கை வேளைக்காரர்,*

அழகிய சோழத்தெரிந்த வலங்கை வேளைக்காரர், சத்திரிய சிகாமணித் தெரிந்த வலங்கை வேளைக்காரர், வத்தாண்ட தெரிந்த வலங்கை வேளைக்காரர், ஜனநாத தெரிஞ்ச வலங்கை வேளைக்காரர் போன்ற படைப்பிரிவுகளைத் தமிழ்நாட்டு வரலாறு சோழர் பெருவேந்தர் காலம் நூல் குறிப்பிடுகிறது. மேலும் முதலாம் இராஜேந்திரனின் படைப்பிரிவிலும் அவனுடைய அரசு அதிகாரிகளாக வலங்கையர் விளங்கினர் என்பதைத் தமிழ்நாட்டு வரலாறு சோழப்பெருவேந்தர் காலம் இரண்டாம் தொகுதி நூல் கீழ்க்கண்டவாறு பட்டியலிடுகிறது.

பங்கலநாட்டு ஜனநாதத் தெரிந்த வலங்கை வேளைக்காரர், சத்திரியமல்ல தெரிந்த வலங்கை வேளைக்காரர், நித்தவேனோதத் தெரிஞ்ச வலங்கை வேளைக்காரர் சிறுதனத்து எதிரிலிச் சோழத் தெரிந்த வலங்கை வேளைக்காரர், சிறு தனத்து இளையராச உத்தம சோழத்தெரிந்த வலங்கை வேளைக்காரர், சிறு தனத்துச் சோழ சிகாமணி தெரிந்த வலங்கை வேளைக்காரர் என்று கல்வெட்டுகள் வழி பதிவுசெய்கிறது. இவ்வலங்கை வேளைக்காரர்கள் சோழப்பெருவேந்தர்களது பெரும் படையின் புகழ் வாய்ந்த ஒரு பிரிவைச்சார்ந்தவர்கள் என்பதை அறியமுடிகிறது.

நாகப்பட்டினம் திருக்காரோணமுடையார் கோயில் கல்வெட்டு (கல்வெட்டு ஆண்டறிக்கை 154/1956-57) அகம்படி நியாயம் என்ற படைப்பிரிவில் இராஜராஜன் வேளைக்காரர், இராஜேந்திர சிங்கன் வேளைக்காரர், குலோத்துங்க சோழன் வேளைக்காரர் ஆகிய படைப்பிரிவினரைக் குறிப்பிடுகிறது. இதனை நாகப்பட்டினத்தில் நிலை கொண்டிருந்த அரசப்படையாக ஆய்வாளர்கள் குறிக்கின்றனர்.

சோழர் ஆட்சியில் தோன்றிய இந்த வலங்கை என்ற படைப்பிரிவு பின்னர் தொழில் குடிகளுக்குள் ஏற்பட்ட பாகுபாடாய் வலங்கை இடங்கை பிரிவுகளாக உருப்பெற்று பூசல் போட்டி, சச்சரவுகளுக்கு இடம் அளித்தது. அது ஆங்கிலேயர் ஆட்சிவரை நீடித்துள்ளது. வலங்கை இடங்கை என்ற பிரிவுகளின் தோற்றம் தெளிவானதாக இல்லை. பெரும்பாலும் படை அரசனின் வலக்கைப்புறத்தும், இடக்கைபுறத்தும் வகுத்து நிறுத்தப்பட்டதிலிருந்து இது தோன்றியிருக்கலாம் என்று ‘‘மதராசபட்டினம்’’ நூலில் அதன் ஆசிரியர் திரு.கே.ஆர்.ஏ.நரசய்யா தெரிவிக்கிறார். இத்துடன் சிறந்த திறன்மிக்கப்போர் புரிவோர் அரசனின் வலப்புறத்தும், அவர்களுக்கு படைக்கலங்களை அளிப்போர் இடப்புறத்திலும் நிறுத்தப்பட்டிருக்கலாம்.

அந்தவகையில் இந்த வலங்கை இடங்கை பிரிவு தோற்றம் பெற்றிருக்கலாம் என்கிறார். கரிகால்சோழன் வலங்கை இடங்கை பாகுபாட்டைத் தோற்றிவித்தான் என்பார்கள்.

காஞ்சிபுரத்தில் உள்ள கல்வெட்டு ஒன்று சோழமன்னன் கரிகாலனிடம் (மூன்றாம் குலோத்துங்கன்) வலங்கை இடங்கை பிரிவினர் தங்கள் வழக்கை எடுத்துரைக்க வந்தனர் என்றும் அவர்களுள் ஒரு பிரிவினர் மன்னனின் வலங்கை பக்கமிருந்தும் மற்றொரு பிரிவினர் மன்னனின் இடங்கை பக்கமிருந்தும் வழக்காடினர் என்றும் இதனடிப்படையில் இப்பிரிவினர் தோன்றினர் என்பர்.

வலங்கை, இடங்கை என்பது முறையே வேளாண்மை தொடர்புடையதாகவும் தொழில்சார்வு வகுப்பினர் தொடர்புடையதாகவும் பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் அவர்களும் விவசாயத்தொழில் மற்றும் கைவினைத்தொழில் சார்ந்த குழுக்கள் என்று பேராசிரியர் பர்ட்டன் ஸ்டெயின் (Burton Stein) அவர்களும் கருதுகின்றனர்.

பேராசிரியர் எ.சுப்பராயலு அவர்கள் இந்த வலங்கை இடங்கை என்பது முற்காலச் சோழர்காலத்தில் இராணுவப்பிரிவாகவும் காலப்போக்கில் சாதிய சமூகப்பிரிவாகவும் மாற்ற மடைந்ததாகக் குறிப்பிடுவார்.

வலங்கை என்பது சாம்ராஜ்யத்தின் நிலையான படைப்பிரிவையும் இடங்கை என்பது வணிகர்களின் போர்ப்படைப்பிரிவையும் குறிப்பதாகக் கொள்ளலாம் என்பார் திரு.தி.நா.சுப்பிரமணியன் (தென்னிந்தியக் கோயிற் சாசனங்கள்) அவர்கள். வலங்கை வேளைக்காரர்கள் என்ற அரச மெய்க்காப்பாளர்களைச் சோழர்கள் பணியில் வைத்திருந்தனர் என்று தமிழ்நாட்டு வரலாறு பாண்டியப் பெருவேந்தர் காலம் நூல் (பக்கம்; 79). பதிவு செய்கிறது.

வலங்கை என்பது முதலாம் இராசராச சோழரின் காலத்தில் உருவாக்கப்பட்டிருந்த தொழில் சார்ந்த பாதுகாப்பு அங்கம் என்றும், இது முதலாம் இராசராச சோழரின் ஆட்சியின் பொழுது அரசரும், அரசகுடும்பத்தவர்களும் திருக்கோயிலுக்கு செல்கின்ற பொழுது அவர்களுடைய பாதுகாப்பு படையாகவும், திருக்கோயிலில் பணிபுரிகின்ற மெய்க்காவலராகவும் இருந்துள்ளதாகக் கருதமுடிகிறது என்பதுடன் இதனை வலங்கை வேளைக்காரர் என்பது மூலம் அறியமுடிகிறது என்கிறது, தமிழ்

கல்வெட்டுகள் வெளிச்சமிடுகின்ற அரிய உண்மைகள் என்ற நூல்.

விசயநகர ஆட்சிக்காலத்தில் வெளிப்படையான சாதிப்பிரிவுகள் அடங்கிய தொகுதிகளாக வலங்கை, இடங்கை மாற்றமடைந்துள்ளது. சோழர்காலக் கல்வெட்டுகளில் வலங்கை என்ற இந்த மெய்க்காவல் பாதுகாப்புப்படையும், இடங்கை என்ற படையும் கால ஓட்டத்தில் சாதியச் சமூகங்களில் தொகுப்பாக மாற்றமடைந்துள்ளது.

இந்த வலங்கைப்பிரிவில் வெள்ளாளர், அகம்படியர், இடையர், கவரை, கோமுட்டி, கைக்கோளர், சேடர், சேனியர் ஆகியோர் இடம் பெறுகின்றனர். இந்த வலங்கை பிரிவினர் சவளக்கழி பிடிக்கவும், வெள்ளைக்குடைபிடிக்கவும், வெள்ளைக்குதிரை ஏறவும், அஞ்சுசொம்பு கட்டவும் உரிமையுடையவர்களாக இடங்கைவலங்கை வரலாறு நூல் குறிப்பிடுகிறது. அத்துடன் வலங்கைப்பிரிவில் 98 சாதிகளையும், இடங்கைப்பிரிவில் 98 சாதிகளையும் இந்நூல் பதிவு செய்கிறது.

★★★

# 17. அகம்படியர் தொடர்பான பாடல்கள்

“முன்னோர் ஒழுகிக்காட்டிய உயர்ந்த நெறிகளையும், அன்னோர் கொண்டிருந்த சிறந்த பண்பினையும், பின்னோர்க்கு நினைப்பூட்டி அவர்களை நல்வழிப்படுத்துவன நாட்டின் பழைய சரிதங்களே எனலாம். ஒருநாட்டின் சரித்திரம் அந்நாட்டின் மக்களது தாய்மொழியில் எழுதி வெளியிடப்பெற்றால், அஃது அன்னோரது அறிவு வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் உதவிபுரியும் என்பது தேற்றம்”.

டி.வி.சதாசிவபண்டாரத்தார்
பிற்காலச்சோழர் சரித்திரம்.

*தமிழ்நாடு அரசின் தொல்பொருள் ஆய்வுத்துறையின் வெளியீடான குரு பரம்பரைப்புராணத்தில் (தொகுதி 2), திருமங்கையாழ்வாரின் திருவவதார அத்தியாயம் என்ற தலைப்பில் அவர் பிறந்த அகம்படியர் குலம் பற்றிய பாடல் இடம் பெற்றுள்ளது.*

நிறையு மாமதி முகத்திய ரிளநகை நிலவான்,
நறைகொ ளாம்பலின் நாண்மலர் நனைமுருக் கவிழும்,
நிறையு நீர்மலித் தடங்களும் வயல்களும் நிரம்பும்,
குறைய லூரதன் பெருமையைக் கூறுத லரிதால்.

அந்த மாநக ரந்தனிற் சிவனடி யவரில்

வந்து வாழகம் படியர்தங் குடிவளம் பெறவே

செந்தி ருப்பதி யானநா ரணன்திரு வடியைச்

சிந்தை கொண்டுல கோர்தொழச் செயும்பர காலன்.

*இந்த பாடல்களில், குறையலூரின் சிறப்பு கூறப்படுகிறது. சந்திரனைப் போன்ற முகமுடைய பெண்கள் புன்னகையிலிருந்து புறப்படுகிற நிலா வெளிச்சத்தால் ஆம்பல் மொட்டுக்கள் மலரும், வளத்தையுடைய இவ்வூரில் அகம்படியர் குலத்தில் நல்லறிவு அணுகிடவும், மாயை, புவியை விட்டு ஓடவும், கார்த்திதை மாதத்தில் கார்த்திகை நட்சத்திரத்தில் ஒன்பது கோள்களும் உச்சத்தில் விளங்க, ஞானத்தின் கொழுந்து எழுந்தது போன்று நாராயணன் பெருமையை உணராதவர்களைப் பிளக்கும் கோடாரிபோல் பரகலன் (திருமங்கையாழ்வார்) தோன்றினார்.*

**வைணவ உரைநூல்கள் குறிப்பிடும் அகம்படியர்கள் பற்றிய பாடல் குறிப்புகள்**

“அவ்வவர்க்குரிய அகம்படியரானவர்கள்.....

நெய்யாடல் போற்றிக் கொண்டு திரியுமாப் போலே”

(திருப்பா4 மூவா)

“அகம்படியர் கிளர்ந்தால் அரச னாலும்

அடக்கப் போகாதிறே”

(திருப்பா4 மூவா)

**கவிச்சக்ரவர்த்தி ஒட்டக்கூத்தர் இயற்றிய தக்கயாகப்பரணி நூலில் காணப்படும் பாடல்**

“வெளிபடப்பட முகிழ்த்தெயி றெறிக்குநிலவார்

வழிபடக் குழை சுடச்சுட றெறிக்கும்வெயிலார்..

அளிவளர்த்தன வெறிக்குழ லெறிக்குமிருளா

றறுமுகத்ரிபுர பயிரவி யகம்படியரே”.... 431

“அடையாள முளரித் தலைவியாதி மடவா

ருடையா டிருவகம் படியில் யோ கினிகளே” .....95

**கம்ப இராமாயணம், சுந்தர காண்டம், பாசப்படலம் பாடல்**

“நுகம் படுதேர் அவை நூற்று இருகோடி,
யுகம் பிறிது ஒன்று வந்து உற்றது என்ன
அகம்படு காவில் அரக்கர்கள் இன்னம்
அகம்படி வீரர்கள் ஐ இரு வெள்ளம்”

**அரசினர் கீழ்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி 2 தரும் பாடல்**

“குகனையீன்ற பச்சைக் குயிலகத் துற்ற வாற்றால்
அகமுடையவர் களென்று மவனியிலுரித்த சீரால்”

*உமாபதி சிவாச்சாரியாரின் கோயிற்புராணம் மூலமும் உரையும் நூலில் இடம்பெறும் அகம்படிமைப்பதினாராயிரவர் துதி*

“மல்குபுகழ் நடராசன் வளர்கோயில கலாது
பல்கிளைஞரு டனரிமைப் பணிசெய்யும் பரிவினராய்க்
கல்விகளின் மிகுமெல்லைக் கருத்தினரை நிருத்தனருட்
செல்வமலியகம்படிமைத் திரலினர்தம் பதம் போற்றி”

**“ஐவர் ராசாக்கள் கதை” நூலில் இடம்பெறும் பாடல்**

உள்ளுடையர், அகம்படியர், துறைக்காரர்,
எட்டார், காளையார் கூட்டமும்,
காளாஞ்சி, திருகை பரிசையுடைவாளும்
கலசப் பானையேந்தி வருவாரும்
ஆளடி மை தேவாரத் துடன்
அடங்கலு முன்னெ சேவிக்கவே
தூசி வான மெட்டுமடையவே, கதிரவன்
சுடரொளி கண்களை மறைக்கவே
வில்லும் வாளும் பரிசைக் சுருக்கை பட்டயம்
வானவெடி வானமிடியென முழங்கவே....680

**மணிமன்ற அடிகள் இயற்றிய "மீனாட்சி திருப்புகழ்" பாடல் தொகுப்பில் இடம்பெறும் பாடல்**

"வாகை சூடும் சுகுண தேவராகும்
தமிழர் வானவ அகம்படியர் குல தேவி
வாணி மாதங்கி
திருகூடலூர் தங்கி வளர்வாம்
மீனாம்பிகை என் உமையாளே"

**சிவஞான சுவாமிகள் அருளிய காஞ்சிப்புராணம் பாயிரப்பாடலில் இடம்பெறும் பாடல்**

"அங்கணன் கயிலை காக்கும் அகம்படித்தொழின்மை பூண்டு
நம்குரு மரபிற்கெல்லாம் முதற்குரு நாதனாகி
பங்கயம் துலபநாடும் வேந்திரப்படை பொறுத்த
செங்கையெம் பெருமான் நந்தி சீரடி கமலம் போற்றி"

**இலங்கையில் வையாபுரி ஐயரின் வையப்பாடல் தொகுப்பில் இடம்பெறும் பாடல்**

திட்டமுறு சாவகச்சேரி தன்னில்றிடமுடனே யகம்படியார் .... 44

குச்சிலிய ரகம்படியார் குறவர்மிக்க கோபாலராகியதோர் குடிகள்தாமும்........... 66

அறிவுமிகு மகம்படியார் ரணிமிகுந்த கோவிடைய ராணிக்காரர் ...95.

**பழமொழிகள்**

1. "கள்ளர் மறவர் கனத்ததோர் அகமுடையார்
மெல்ல மெல்ல வந்து வேளாளராயினர்"

2. "அகமுடையக் குடியில் ஒரு குடியும்,
அவரைக்கொடியில் ஒரு கொடியும்
இருந்தால் உலகெல்லாம் படர்ந்துவிடும்"

★★★

# 18. அகம்படியர் தொடர்பான குறிப்புகள்

வரலாற்று நூல்கள் பல எழுதப்பட்டுள்ளன, வரலாறு செய்தித்தொகுப்பன்று, சமுதாய மாற்றங்களின் திசைவழியை அறிய உதவும் விஞ்ஞானம், இந்திய வரலாற்றைப் பல கண்ணோட்டங்களோடு கடந்த இருநூற்றாண்டுகளாக பல தத்துவசார்புடைய ஆசிரியர்கள் எழுதியுள்ளனர். இக்கண்ணோட்டங்கள் சம்பவங்களை வெவ்வேறு விதங்களில் மதிப்பிடுகின்றன.

நா.வாணமாமலை.

## யாவரும் கேளீர்

*“சங்ககால மக்களிடம் பல்வேறு வகையான கூறுபாடுகள், தனித்தனியாக ஒன்றையடுத்து ஒன்று இருத்தல் போன்ற இயல்பான நிலையிலிருந்து, ஒன்றோடொன்று கலந்து ஒன்றிப்போதல் போன்ற நிலையிறுதியாக வெவ்வேறு படித்தரத்தில் இருந்தன. தென்னிந்தியாவில் இன்றுள்ள எண்ணிடலங்காத சாதிகள் அனைத்தும் பண்டைய இனங்களின் எச்சங்களே எனலாம். பல்வேறு குடிகளினுடைய கூட்டுறவே சமூகம் ஆகும் என்பது இனச்சிக்கல் முறைமையைத் தவிர்த்தது எனலாம். இனக்கூட்டுறவு ஒற்றுமையை நாடுவதாகும். பல்வேறு அரச குடும்பங்களும் பல்வேறு குடிகளையும் இனங்களையும் சார்ந்தன எனினும், முடிவில் அவையனைத்தும் யாவரும் கேளீர்*

என்ற கொள்கையால் தாம் ஒரே இனம் என்னும் நோக்கம் கொண்டனவேயாகும்.

**டாக்டர் மொ.அ.துரைஅரங்கசாமி**

**சங்க காலச் சிறப்புப் பெயர்கள்**

**தமிழ்நாட்டு வரலாறு:**

"தமிழ்நாட்டின் வரலாறு, தம் சொந்த பூமியிலேயே தமிழர் ஓரங்கட்டப்பட்டதன் வரலாறுதான், அரசியலமைப்பில் அவர்கள் அந்நியத்தலைமையைச் சார்ந்திருக்கின்றனர். தமிழர் அடையாளத்திற்கு அந்நியமாயுள்ள ஒரு தலைமையை பொருளாதாரத்தில் உயர்த்திடுத்தலுக்கான போராட்டத்தில் உழல்கின்றனர். மாநிலத்தில் நிலைகொண்ட சமூகத் தலைவருடன் ஒப்பிடுகையில் மேலும் சமூகத்தில் அவர்கள் இழிவுபடுத்தப்படுகின்றனர், பிரிக்கப்படுகின்றனர்.

தொல்பழங்காலங்களில் தமிழர் விரிந்ததும் செல்வமிகுந்ததுமான பிரதேசத்தைக் கொண்டிருந்தனர். திராவிட, சமண, பௌத்தம் என்னும் மூன்று மத அமைப்புகள் பாண்டிய சேர, சோழர் என்னும் மூன்று மரபார்ந்த அரசுகள், சேவை, தியாகம், நீதியில் பொதுவான நம்பிக்கை, தமிழ் என்னும் பொதுமொழி ஆகியவை அவர்களுக்கென்று தனித்த அடையாளத்தை அளித்தன. விரிவான வெற்றிகள், கடல் கடந்த வணிகம், இலக்கியச் சாதனைகள் என்பன அவர்தம் கீர்த்திக்கு கூடுதல் மெருகேற்றின".

**பேராசிரியர், கே.ராஜய்யன்,**

**தமிழ்நாட்டு வரலாறு**

**(மொழிபெயர்வு ச.தேவதாஸ்).**

**அங்கம் போரா, தற்காப்புக்கலையும் அகம்படியரும்:**

அகம்படியர்கள் என்பவர்கள் அரசகுலத்தினரைப் பாதுகாக்க அவ்வரச குடியினர்களின் நெருங்கிய உறவினர்களால் உருவாக்கப்பட்ட படைப்பிரிவு. இவர்கள் அரசர்களையும் அரச குடும்பத்தினரையும் மெய்க்காவல் செய்ய கடமைப்பட்டவர்கள். இவர்கள் அணுக்கத்தில் பாதுகாப்பு அளித்ததால் அணுக்கத்தில் சண்டையிடும் பயிற்சி முறைகளில் தேர்ந்தவர்கள். இதுவே

இவர்கள் வர்மக்கலை மற்றும் தற்காப்புப் பயிற்சிகளை உருவாக்க காரணியாக இருந்துள்ளது. வெட்டுமாவலி அகம்படியர் எனப்பட்ட அகம்படிய இனத்தவர்கள் "அங்கக்காரன்" என்ற பட்டத்தைப் புனைந்திருந்தனர். சோழப்படையெடுப்பில் இலங்கை சென்ற அகம்படியர்கள் இலங்கையில் அங்கம்போரா என்ற பெயரில் சிங்கள அரசுகளுக்குப் பாதுகாப்பையும், கேரளத்தில் களரிப்பயிற்று என்ற பெயரில் இந்தத் தற்காப்புக் கலையைப் பின்பற்றினர்.

**அகமுடையர் ஒற்றுமை இணையதளம்**

www.agamudayarotrumai.com

**(திரு.சக்திகணேஷ்)**

**மலையமான்கள்:**

சோழ பாண்டியர் தம் தன் நாட்டு எல்லையை விரிவுபடுத்த நில அமைப்பு இடம் தந்தது. நீண்ட கடற்கரை எல்லையால் சேரர் தமது நாட்டை மேற்கு நோக்கி விரிவுபடுத்த முடியவில்லை. எனவே அவருள் ஒரு கிளையினர் கிழக்கு நோக்கி சேலம், தென்னார்காடுகளில் சிலமலைப்பகுதிகளில் குடியேறினர். இங்கு தான் சேரர் சார்பு சிற்றரசர்கள் உருவாகினர் என்று சுட்டுவார் என்பதை அறியமுடிகிறது. சேரன் குடியின் ஒழுகலாற்றின்படி இவர்கள் மலையர் என்று அழைக்கப்பெற்றனர். பிற்காலத்தில் இவர்கள் மலையமான்கள் ஆயினர்.

**கோவை மாவட்ட அகமுடையார் (தேவர்) குல**

**மரபும், பண்பாடும், ஆய்வேடு**

**செல்வி வெ.அ.நாகரத்தினம்.**

**திருமணம்:**

"அகம்படியர் என்பவர் அரசரின் மெய்க்காப்பாளராக இருந்த வீரமரபினர், அவருள் பலர் மங்கல நாண் மட்டுமே அணிவது வழக்கம். சிலர் தாலிகட்டுதலை மேற்கொண்டுள்ளனர்".

**"தமிழர் திருமணத்தில் தாலி"**

**டாக்டர் மா.இராஜமாணிக்கனார்.**

**சிறப்புரிமைகள்:**

*“சோழர் காலத்தில் தமிழரின் சமுதாயத்தில், கண்மாளர் கைக்கோளர், அகம்படியர் ஆகிய குலத்தினருக்குச் சில சிறப்புரிமைகள் வழங்கப்பட்டது. அவற்றின் அடிப்படையில் அவர்கள் மாடிவீடு கட்டிக்கொள்ளவும், குடைபிடித்தல் தமக்கு முன் சங்கு எக்காளம் ஊதுவித்தல் போன்ற விருதுகளைப் பெற்றார்கள்.*

டாக்டர் கே.கே.பிள்ளை,

தமிழக வரலாறும் மக்களும், பண்பாடும்.

**வலங்கைப்பிரிவு:**

*“வலங்கைப்பிரிவில் வெள்ளாளர், அகம்படியர், இடையர் கவரை, கோமுட்டி, கைக்கோளர், சேடர், சேணியர் ஆகியோர் இடம் பெற்றிருந்தனர். இவர்கள் சவளக்கழி பிடிக்கவும், வெள்ளைக்குடை பிடிக்கவும், வெள்ளைக் குதிரை ஏறவும், அஞ்சுசொம்பு கட்டவும் சுதந்திரமுடையவர்கள்”.*

இடங்கை வலங்கை வரலாறு

எஸ்.சவுந்தரபாண்டியன் - நடன காசிநாதன்

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நிலையம்.

**அகமுடைய துளுவ வேளாளர்:**

*விஜயநகர துளுவ வம்ச மன்னர்களின் ஆட்சி இப்பகுதிகளில் நிலவியபோது இங்கு வாழ்ந்த வேளாளர்கள் தங்களின் விசுவாசத்தையும் அரசபதவி உரிமைகளையும் அடையாளம் காட்டிக்கொள்ள துளுவ வேளாளர்கள் என அழைத்துக்கொண்டனர். அகமுடையர், துளுவ வேளாளர் ஆகிய இருபிரிவினரும் தங்களுக்குள் கொள்வினை, கொடுப்பினை செய்துகொள்கிறார்கள். இவ்விரு பிரிவினருக்கும் பொதுவான பட்டங்களாக நாயக்கர், முதலியார், உடையார், பிள்ளை ஆகிய பட்டங்கள் உள்ளன.*

டாக்டர் இல.தியாகராஜன்

“வேட்டவலம் வரலாறு” பக்கம் : 92.

**மாவலிவாணர்:**

*மாவலிவாணர் போன்ற மறக்குல அகம்படியர் பிரிவினர் ஷத்திரியர் என்று கல்வெட்டுகளிலும் இலக்கியங்களிலும்*

*குறிப்பிடப்பட்டுள்ளனர். கி.பி.13ஆம் நூற்றாண்டு அளவில் கூட இவர்கள் அரசு புத்திரர் (ராஜபுத்திரர்) என்று குறிப்பிட்டுக் கொண்டதைக் காணமுடிகிறது.*

*தமிழினி / ஜுன் 2011*

*அசுரகுலச் சத்திரியரான மாவலிவாணர் வம்சத்து மறக்குல அகம்படியர் வைதீக சமயத்திலும், பௌத்த சமயத்திலும் தமது வருண அந்தஸ்தினை தக்கவைத்துக் கொள்ள இயன்றது.*

*தமிழினி / ஜுன் 2011*

**வாணர் தொடர்ச்சி:**

*இராமநாதபுரம் பகுதியில் சேதுபதி அரசு ஏற்படக்காரணங்களில் ஒன்று அப்பகுதிகளில் சில பாண்டியர் கால்வழியினர் வாணதிராயரின் கால்வழியினர், தும்பிச்சிநாயக்கர் போன்ற சில குறு நிலத்தலைவர்கள் மதுரைநாயக்கர் ஆட்சிக்குக் கட்டுப்படாமல் தனி அரசு செலுத்த சமயம் வாய்க்கும் போது முற்பட்டனர்.*

**புலவர் செ.இராசு,**
**சேதுபதிகள் செப்பேடுகள்.**

## Service to Death :

"After completing his advanced training in the weapons to which he was suited, a youth might be pledged to military service at the local or district level or serve a ruler directly as a part of a rajah's retinue **(Akampadi)** by taking a vow of service-to-death on his behalf a tradition and organization dating from at least the period of cera rule"

**Akampadi :** A ruler's retinue, constituted by those martial practitioners who took a vow to death on behalf of the ruler.

Philip B.Zarrilli
When the body becomes all Eyes.

## Guards :

"The **Agamudaiyars** were, as the name Indicates, Palace guards or Kings guards"

B.S.Baliga
Madras District Gazetteers : Pudukkottai District.

## Business in Temple and Palaces :

**"Akampadiyar :** Those who attend to any Business in the Interior of Temples and Palaces"

John Ferguson
Ceylon in 1783.

## Military Caste :

"Another group of warriors of South Indian origin was the **Akampatiyar** (Agampadi). These warriors seems to have originated as bodyguards in the inner apartments of the royal palace and later evolved in to a military caste"

Karttikecu Intirapala
The evolution of an ethnic Identity
The Tamils in Srilanka.

## VELAIKKARAN AGAMPADAI PIDITHA PALLAYIRAVAR :

"They have taken under their Protection the Tiruvalisvaram temple Precincts (Thirumukkalvattam), The Devadana endowments of the temple and the many service tenure holders, the treasury, The Sivabrahmanas, the artisans and carpenters, smiths and the watchmen all under the Protection of VELAIKKARAN AGAMPADAI PIDITHA PALLAYIRAVAR. They undertake to Protect for all time. The charities without destruction, even if they in the act of Protection, get killed or fall on evil days (Pattum, Kettum) and such Protections who perish shall be granted blood grant endowments (Udirappatti) and honoured with elephants and garlands and get other remissions of land dues (Pariharas)…."

## Agaparivaram:

The king's or the chief's entourage of the house **(Agaparivaram or Agampadi)** who have set up shrines or Installed an image of Senapati Alvar (Bisvaksena) at mannarpadaividu.

R.Thirumalai, IAS (Rted.)
The Pandyan Townships, PART-II.

## Tirumeykappar – Velaikkaras – Tennavan Apattudavigal:

The King had always by their side a number of chieftains, who constituted as it were their Permanent bodyguard, and contributed much to the Pomp and Pageantry of the royal court. They are referred to in cola Inscriptions a Tirumeykappar.

Referring to this body in the Pandyan court, Marco Polo observes: "And there are about the king a number of Barons in attendance up on him. These ride with him and keep always near him and have great authority in the kingdom, they are called the king's Trusty Lieges."

Further Marco Polo gives the following pieces of Interesting Information about the bodyguards: “You must know that when the king dies, and they put him on the fire to burnt him, these Lieges cast themselves in to the fire round about his body and suffer to be burnt along with him, for they say they have been his comrades in this world, and that they ought also to keep his company in the other world”. Though the above description may be on the face of it unbelievable, it must be noted that it is Partially confirmed by a few epigraphical references.

A class of Persons known as the Tennavan Apattudavigal apparently meaning “helpers of the Pandya (King) in times of distress” Corresponding to the “King’s own Regiment” of the Present day is mentioned in some Tamil Inscriptions, Probably they were similar to the Velaikkaras of cola epigraphy.

The Velaikkaras were Personal body guards of a chieftain who banded themselves to protect their master both in the battle field and outside it, and to die along with him in Case of his death. The lenka, bentu, aparika, anugujivita and sahavasis mentioned in some Inscriptions of the Deccan were the same as this group of Servants.

T.V.Mahalingam

“South Indian Polity”.

## Land forces - Agampadi:

“The coastguard service initiated in the fifth century and extended in the ninth century was further developed and strengthened by vijayabahu I. Naval forces (Navani) as opposed to land forces **(Agampadi)** are mentioned in the Nikaya-sangraha……….. Among the military forces, those named agampadi figure prominently in the records of the period they are contrasted with the naval forces, and seem to have been Territorial units.”

Cyril wace Nicholas

Senarat Paranavitana

A Concise History of Ceylon.

## Military Corporations:

“In The polonnaruva epoch, aside from the Spectacular trauma of the Colo Emperor Rajaraja Is Virtual Conquest and remaining of the capital as Jananathapura, There were other more cordial and more Symbiotic interactions with and incorporations of South Indian People at the Level of military Settlements (Military Corporations Known as **Agampadi and Velakkara** that were Settled in Villages).”

Stanley Jeyaraja Tambiah

Srilanka – Ethnic Fratricide and

The Dismantling of Democracy (Page: 94).

